





ஸ்ரீ வியாச முனிவர் அருளிய

# பிரம்ம சூத்திரம்

5

எளிய தமிழில்
ராஜா சுப்ரமணியன்

வர்த்தமானன்



பூஜ்ய ஸ்ரீ ஸ்வாமீ ஓங்காராநந்தர்

மெய்ப்பொருளை அறிபவனுக்கு வாழ்க்கையில் நிறைவு கிடைக்கிறது. உண்மையை அறியாதவனாலும் மகிழ்ச்சியாக வாழ முடியும். மகிழ்ச்சி என்பது ஒவ்வொரு ஜீவனுக்கும் கிடைக்கத்தான் செய்கிறது. எனினும், அது நிலையானதல்ல. மேலும், அத்தகைய மகிழ்ச்சி துக்கத்துக்குக் காரணமாகவும் அமைகிறது. மகிழ்ச்சிக்கான உண்மைக் காரணம் தெரியாததால் மனிதர்கள், வெளிஉலகப் பொருட்களிலிருந்து மகிழ்ச்சி கிடைப்பதாக நம்புகிறார்கள். எனவே அவர்கள் மகிழ்ச்சிக்காக வெளி உலகத்தைச் சார்ந்திருக்கிறார்கள். இந்த உலகம் ஒரு மாயை. அது தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கிறது. நமக்கு இன்று மகிழ்வைத் தரும் பொருள் நாளை இருக்கும் என்பதற்கு எந்த உத்தரவாதமும் இல்லை. இது நமக்கு துக்கத்தை ஏற்படுத்துகிறது. எனவே, உண்மையான மகிழ்ச்சி குறித்த அறிவைப் பெறாதவர்கள் துக்கத்தை அடைகிறார்கள். சுக-துக்கம் என்ற சுழற்சி பிறவிதோறும் நம்மைத் தொடர்கிறது.

இறுதிப்பேருண்மை குறித்து அறிந்த மனிதன் இந்தச் சுழலில் இருந்து விடுபடுகிறான். அவன் நிலையான பேரின்பத்தில் திளைக்கிறான்.

மெய்ப்பொருளை அறிவதற்கு மனிதர்கள் பல்வேறு விதங்களில் முயற்சிக்கிறார்கள். அவர்களை 'பற்றுடையோன், முக்திவிழைவோன், முற்றுணர்ந்தோன்' என்று மூன்று வகையாகப் பிரித்து, அவர்கள் ஒவ்வொருவரும் இந்தப் படைப்பை எவ்வாறு அணுகுகிறார்கள் என்பதை நூலின் இறுதியான, இந்தத் தொகுதி விளக்குகிறது. ஒவ்வொருவரும் தான் இருக்கும் நிலையிலிருந்து அடுத்தக் கட்டத்துக்குச் செல்ல இது மிகவும் உதவும்.

மெய்ப்பொருள் பற்றிய அறிவை அடைவதால் ஏற்படும் பலன்களைப் பற்றிய வர்ணனையுடன் இந்தத் தொகுதி நிறைவடைகிறது.

- ஸ்வாமீ ஓங்காராநந்தர்

# பிரம்ம சூத்திரம்

## ஐந்தாம் தொகுதி

பரமானந்தம்

ஸ்ரீ வியாச முனிவர் அருளிய

# பிரம்ம சூத்திரம்

## ஐந்தாம் தொகுதி

## பரமானந்தம்

பூஜ்ய ஸ்ரீ ஸ்வாமீ ஓங்காரானந்தர்
அவர்களின்
அருளாசியுடன்

எளிய தமிழில்

**ராஜா சுப்ரமணியன்,** *B.Com., AICWA*
*Cost Accountant, Management Consultant*

வர்த்தமானன் பதிப்பக வெளியீடு

# பொருளடக்கம்

## தொகுதி 5

ஸ்ரீ வியாச முனிவர் அருளிய

# பிரம்ம சூத்திரம்

## ஐந்தாம் தொகுதி

## பரமானந்தம்

### இத்தொகுதியில் அமைந்துள்ள

### நான்காம் அத்தியாயத்தின் அமைப்பு

'நான் பரமன்' என்ற பரமரகசியம்தான் நான்கு வேதங்களின் சாரம் என முதல் அத்தியாயம் நிலைநிறுத்தியது. இரண்டாம் அத்தியாயம் மற்ற மதங்களையும், வேறுபட்ட கருத்துக் களையும் மறுத்து பரமன் மட்டுமே சத்தியம் என்பதை நிரூபித்தது.

மூன்றாம் அத்தியாயம் கர்மயோகம், ஞானயோகம் என்று இரண்டு பாகங்களைக் கொண்டது. பரமனை அடையத் தேவையான செயல்களை கர்மயோகமும், பரமனை அறியத் தேவையான செய்திகளை ஞானயோகமும் தந்தன.

நான் பரமன் என்ற உண்மையை அறிந்துகொண்டால் ஏற்படும் பலனை இந்த நான்காம் அத்தியாயம் சித்தரிக்கிறது.

நான்காம் அத்தியாயம் நான்கு பாதங்களைக் கொண்டது.

முதல் பாதம் ஞானம் ஏற்பட்டவுடன் ஞானியின் வாழ்வு மற்றவர்களது வாழ்வைவிட எந்த விதங்களில் சிறந்து இருக்கும் என்று வர்ணிக்கிறது. மேலும் மனிதர்களை மூன்று பிரிவாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவினரும் பயணிக்க வேண்டிய பாதையைக் காட்டித்தருகிறது.

இரண்டாம் பாதம் ஞானம் ஏற்பட்டவுடன் ஞானிக்குள் ஏற்படும் மாற்றங்களை வரிசைப்படுத்தி ஞானி மற்றவர்களை விட எந்த விதங்களில் சிறந்தவன் என்பதை விளக்குகிறது.

மூன்றாம் பாதம் ஞானியின் பார்வையில் உலகம் எப்படி இருக்கும் என்பதை மூன்று ஞானிகளின் போதனைகளை பகிர்ந்து கொள்வதன் மூலம் தருகிறது. மேலும் விஞ்ஞானிகளின் பார்வை ஞானிகளின் பார்வையுடன் ஒத்துப்போகிறது என்ற உண்மை யையும் எடுத்துக் காட்டுகிறது.

நான்காவது பாதம் ஞானிக்கு ஞானம் அடைந்ததால் ஏற்பட்ட நிறைவை பகவத்கீதை, அஷ்டவக்ரக்கீதை, அவதூத கீதை, யோகவாசிஷ்டம், உபதேச சாஹஸ்ரீ முதலிய நூல்கள் தரும் கருத்துக்களை பகிர்ந்துகொள்வதன் மூலம் சித்தரிக்கிறது.



# 154 ஞானத்தின் பலன்

அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 478 - 479

*"பரமனை அறிந்தவர்கள் பரமனை தொடர்ந்து சிந்தித்து தியானம் செய்தால்தான் உண்மை புலப்படும்"* என்றும் *"பரமனை அடைய ஆசைப்படுபவர்கள், பரமனைப் பற்றி மட்டுமே நினைத்து ஞானத்தைப் பெற வேண்டும்"* என்றும் பிருஹதாரண்யக உபநிஷத மந்திரங்கள் (2.4.5, 4.4.21) கூறுகின்றன. எனவே ஞானத்தின் பலனை அடைய ஆசைப்படும் முக்திவிழைவோர்கள் பரமன் மேல் தொடர்ந்து தியானம் செய்ய வேண்டும் என்று இந்தப் பாடம் வலியுருத்துகிறது.

பரமனின் மாயாசக்தியின் தொடர்ந்த மாற்றம்தான் உலகில் நடக்கும் வெவ்வேறு நிகழ்வுகளாகவும், மனிதர்களின் செயல்பாடு களாகவும் தோற்றமளிக்கிறது என்ற உண்மையை உணர்ந்த முற்றுணர்ந்தோர்கள் துன்பத்திற்கு ஆளாவதில்லை. பரமரகசியத்தை அறியமுயலும் முக்திவிழைவோர்கள் பரமன் மேல் தொடர்ந்து தியானம் செய்யாவிடில் பற்றுடையோர்கள் போலத் துன்பப் படுவதை தவிர்க்க முடியாது.

## வாழ்வின் நிகழ்வுகள்

'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள். இருவரும் மணம் புரிந்து கொண்டு இனிதே வாழ்ந்தார்கள்' என்பதுதான் கதை என்றால் இராமாயணம் எழுதப்பட்ட அன்றே மறக்கப்பட்டி ருக்கும். இளவரசப் பட்டாபிஷேகம், கைகேயின் வரம், மரவுரியுடன் காட்டுக்குப்பயணம், பரதன், சூர்ப்பனகை, மாரீசன், ஜடாயு, இராவணன், விபீஷணன் ஆகியோரின் வருகை முதலிய

ஏற்ற இறக்கங்களுடன் கூடிய வாழ்க்கைச்சித்திரமாக வரையப்பட்ட தாலேயே அது எல்லோரும் சுவைக்கும் ஒரு காவியமாக இன்று வரை திகழ்கிறது.

ஒவ்வொரு தனிமனிதனின் வாழ்வும் இராமாயணத்தைப் போன்ற ஒரு சுவையான கதையே. இதனாலேயே இன்றளவும் பக்கத்து வீட்டு நிகழ்வுகளை அக்கறையுடன் அனைவரும் கவனிக் கிறோம். யார் யாரைக் காதலிக்கிறார்கள், யாருடைய பெண் வீட்டைவிட்டு ஓடினாள், எதற்காக விவாகரத்து நடந்தது என்பது போன்ற ஊர்க் கதைகள் சுவாரசியமாக இருந்தாலும் அதே நிகழ்வு நம் வீட்டில் நடப்பதை எதிர்கொள்ளப் பெரும்பாலோர் தயாராக இருப்பதில்லை. பதவி உயர்வு, புதிய கார் வாங்குதல் முதலிய நிகழ்வுகள் ஒருபோதும் தனித்து நடப்பதில்லை. பகல் வந்தால் தொடர்ந்து இரவு வருவதைப்போல அனைவரது வாழ்வும் ஏற்ற இறக்கங்களுடன் கூடியதாகவே இருக்கும். இது வாழ்வின் நியதி.

மேலும் இது படைப்பின் ரகசியம். இவ்வுலகம் இராவணனை யும் இராமனையும் உள்ளடக்கிய இராமாயணமாக இல்லாவிட்டால் துன்பம் கலவா இன்பமாகவும் எவ்வித மாற்றத்திற்கும் ஆளாகாமல் என்றும் இருக்கும் பரமன், 'நான் பலவாக மாறுவேன்' என்று சங்கல்பம் செய்ததற்குப் பொருள் இல்லாமல் போய்விடும்.

### மனித மனங்களில் வேறுபாடுகள்

ஒன்றிலிருந்து ஒன்று மாறுபடுவதுதான் படைப்பு. எல்லா விதத்திலும் ஒன்றுபோல் இருக்கும் இருபொருள்கள் இவ்வுலகில் கிடையாது. மாமர இலைகள் மற்ற மரத்தின் இலைகளிலிருந்து வேறுபடுவதுமட்டுமில்லாமல் ஒரே மரத்தின் இலைகள் கூட ஒன்று போல் ஒன்று அமைவதில்லை. ஒரே வீட்டில் வளரும் சகோதரர்கள் ஒருவருக்கொருவர் முற்றிலும் வேறுபட்டே இருப்பார்கள். பொது வாகத் தெரியும் ஒற்றுமைகளைக் கூர்ந்து கவனித்தால் வேற்றுமைகள் வெளிப்படும்.

### உலக நிகழ்வுகளில் உள்ள ஒற்றுமை

இடம், பெயர், தேதி ஆகிய மூன்றையும் கவனிக்காவிட்டால் செய்தித்தாள்களில் புதிதாக எவ்விதச் செய்தியும் வருவதேயில்லை என்பது தெரியவரும். பூமியில் மனிதன் தோன்றிய நாள் முதல் இன்றுவரை ஒவ்வொருவர் வாழ்வின் நிகழ்வுகளும் எவ்வித மாற்ற முமின்றி அதே ஏற்ற இறக்கங்களுடன்தான் அமைந்து வருகிறது.

நீர் அருவியில் எந்த நீர்த்துளியும் ஒரு இடத்தில் தொடர்ந்து இருப்பது இல்லை. ஆனாலும் ஒரு நீர் அருவி தொடர்ந்து இருந்து வருகிறது. அதுபோல மாறும் நிகழ்வுகளை உள்ளடக்கிய 'உலக நிகழ்வுகள்' எப்போதும் மாறாமல் தொடர்ந்து இருந்து வருகிறது.

### மனிதர்கள் நிகழ்வுகளை எதிர்கொள்ளும் விதம்

உலக நிகழ்வுகளில் எவ்வித மாற்றமும் இல்லையென்றாலும் மனித மனங்கள் மாறுபடுவதால் நிகழ்வுகள் அவற்றில் ஏற்படுத்தும் பாதிப்புகள் வேறுபடுகின்றன. கர்ப்பத்தில் தோன்றுதல், பிறத்தல், வளர்தல், முதிர்தல், மங்குதல், மறைதல் என்ற ஆறு நிகழ்வுகளும் மனித வாழ்வில் தொடர்ந்து நடந்தாலும் ஒவ்வொரு நிகழ்வும் ஏதோ தனக்கு மட்டும்தான் நிகழ்வதாக மனித மனம் கற்பனை செய்து கொள்கிறது. பல காலம் கழித்துப் பிறந்த குழந்தைக்கு ஜுரம் ஏற்பட்டு உயிர் பிழைக்குமா என்ற நிலையில், பிறப்பவர்கள் அனைவரும் ஒரு நாள் இறந்துதான் ஆகவேண்டும் என்ற தத்துவத்தைக் கூறி அதன் பெற்றோர்களின் கவலையைப் போக்க முடியாது. குழந்தை எப்படியாவது பிழைக்க வேண்டும் என்று அவர்கள் மனம் தவித்துக்கொண்டுதான் இருக்கும். குழந்தை இறந்துவிட்டால் துக்கம் ஏற்படுவதையும் தவிர்க்க முடியாது.

ஆனால் மனதில் ஏற்படும் தவிப்பு, துக்கம் போன்ற உணர்வுகள் அவர்களையும் அவர்களைச் சுற்றியுள்ளவர்களையும் எவ்வாறு பாதிக்கின்றன என்பது அவரவரின் ஆளுமையைச் சார்ந்து மாறுபடும். இனிநான் இருக்க மாட்டேன் என்று தற்கொலை செய்துகொள்ள முயலும் தாய், குழந்தையைக் காப்பாற்றாத மருத்துவரைத் தாக்கும் தந்தை, நடந்தது நடந்துவிட்டது இனி நடக்க வேண்டியதைக் கவனிக்கலாம் என்று அமைதியாக இருப்போர் என மனிதர்கள் பல வகைப்படுகிறார்கள்.

### மனிதனின் ஆளுமை

நகையின் தன்மை அதில் அடங்கியுள்ள உலோககலப்பின் தன்மையைச் சார்ந்து இருப்பது போல, ஒரு தனிமனிதனின் ஆளுமை அவன் மனம் செய்யப்பட்ட விதத்தைப் பொறுத்து மாறுபடும். ஒளி, சக்தி, ஜடம் ஆகிய தனிமங்கள் கலந்துள்ள விகிதம் மனிதனின் ஆளுமையை நிர்ணயிக்கிறது.

அனைவரிடமும் கலகலப்பாகப் பேசுபவன், அமைதியாக இருப்பவன், தீர்க்கமாக யோசித்தபின் செயல்படுபவன், உடனுக்

குடன் செயல்செய்து முடிப்பவன், அஞ்சா நெஞ்சம் கொண்டவன், ஜாக்கிரதையாக இருப்பவன், விரும்பியதைச் செய்பவன், புலன்களை அடக்கியாளுபவன் என ஆளுமைகளில் பல வகைகள் உண்டு. இவற்றில் எது சரி எது சரியில்லை என்ற விவாதம் தவறு. ஒவ்வொரு மனிதரும் மற்றவரிடமிருந்து வேறுபட்டுதான் இருக்க வேண்டும் என்பது படைப்பின் நியதி என்பதால் அனைத்து வகையான ஆளுமைகளும் சரியானவையே. ஆளுமையை மாற்றியமைக்கவேண்டும் என்பது தவறான முயற்சி. இதுதான் சரியான குணம் என்று வரையறுத்து அனைவரையும் இயந்திரங்களைப்போல மாற்ற முயல்வது அறிவீனம். மேலும் மனித ஆளுமைகளை யாராலும் மாற்றவே முடியாது. பேசுபவனை மௌனமாக இருக்கச்செய்வதோ, பேசாதவனைக் கட்டாயப்படுத்தி பேசவைப்பதோ முடியாது. ஏனெனில் ஆளுமை உடன் பிறந்தது. மாறாதது.

ஆளுமையின் வகை மாறாது என்றாலும் ஆளுமையின் தரம் தொடர்ந்து வளரும். பாவ-புண்ணியங்கள் தரும் சூழ்நிலைகேற்ப வாறு வாழ்வில் நிகழும் நிகழ்வுகள், அவரவரின் விருப்பு- வெறுப்புகளையும் அறிவுத்திறனைத் தொடர்ந்து வளர்க்க உதவுகின்றன. அறிவு வளர வளர அதற்கேற்ப ஆளுமையும் வளர்ச்சியடையும்.

ஒவ்வொரு மனிதனும் செயல்களைச் செய்பவன், பலன்களை அனுபவிப்பவன், அறிவைப் வளர்த்துக் கொள்பவன் என்ற மூன்று விதங்களில் வாழ்கிறான். இவற்றில் அறிவை பெறத் தனியாகச் செய்யும் முயற்சியைத்தவிர அனைத்துச் செயல்களைச் செய்யும்பொழுதும் அவற்றின் பலனை அனுபவிக்கும்பொழுதும் தொடர்ந்து அறிவை வளர்த்துக்கொள்ள முயற்சி செய்பவனின் ஆளுமை வேகமாக வளரும்.

ஆளுமை வளர்வதால் வாழ்வின் ஏற்றத்தாழ்வுகளை ஏதிர் கொள்ளும் திறன் அதிகரிக்கும். இன்பத்தில் துள்ளுவதும் துன்பத்தில் துவளுவதும் படிப்படியாகக் குறைந்து இறுதியில் முக்தியடையும் வாய்ப்பையும் இவர்கள் பெறுவார்கள்.

### *பற்றுடையோன்*

நான் பரமன் என்ற பரமரகசியத்தை அறியாத பாமரர்கள் அனைவரும் பற்றுடன் செயலாற்றுபவர்கள். நான் இந்தப் பலனுக்காக இந்தச் செயலைச்செய்கிறேன் என்று ஒவ்வொரு செயலைச் செய்யும்பொழுதும் இவர்கள் தெளிவாக இருப்பார்கள். எதிர்

பார்த்த பலன் கிடைத்தால், 'நினைத்ததை நடத்தியே முடிப்பவன் நான்' என்று பெருமிதம் கொள்வார்கள். இந்த நிலை யார் வாழ் விலும் தொடராது. ஏமாற்றம், தடங்கல், தோல்வி, போன்றவற்றைத் தவிர்க்கமுடியாதபொழுது தன்னம்பிக்கை குறைந்து கடவுள் நம்பிக்கை அதிகரிக்கும்.

உண்மை, உழைப்புடன் செயல்களைத்திறன்பட செய்து அதனுடன் ஆண்டவன் அருளின் அவசியத்தை அறிந்து அவனிடம் மன்றாடிப் பிரார்த்தித்த பின்னும் தோல்வியைச் சந்திக்க நேரும்பொழுது மனிதன் ஏன், எப்படி என்று யோசிக்க ஆரம் பிக்கிறான். கடமையைச்செய், பலனை எதிர்பார்க்காதே என்ற பகவானின் அறிவுரைக்கு அர்த்தம் தெரியத்தொடங்குகிறது. வாழ்வில் செயலைச் செய்வதற்கு மட்டுமே தனக்கு அதிகாரம் இருக்கிறது என்றும் பலனைப் பெறும் உரிமையில்லை என்றும் உணர ஆரம்பிப்பார்கள்.

பலனுக்காக அல்லாமல் செயலைச் செவ்வனே செய்து முடிப்பது மட்டுமே தன் குறிக்கோள் என்ற அணுகுமுறையுடன் தொடர்ந்து செயலாற்றிவருபவர்களின் மனம் பக்குவப்பட்டு அவர் களின் ஆளுமை மேலும் வளர்ச்சியடையும்.

தன்னம்பிக்கை, கடவுள் நம்பிக்கை, கர்மயோகம் எனப்படிப் படியாக உயர்ந்து முக்திவிழைவோனாக மாறாதவர்கள் தொடர்ந்து பற்றுடையோர்களாகவே இருப்பார்கள். காகித ஓடம் கடலலை மேலே ஓடுவது போல இவர்கள் வாழ்வில் நிகழும் ஏற்ற இறக்கங் களினால் அலைக்களிக்கப்பட்டு இவர்கள் தொடர்ந்து துன்பத்திற்கு ஆளாவார்கள். எலிப்பொறியில் வைக்கப்பட்டுள்ள வடையைக் கண்டதும் எலிக்கு உண்டாகும் ஆனந்தம் வெகு விரைவில் துன்பமாக மாறுவதுபோல வாழ்வின் இனிமையான நிகழ்வுகள் பற்றுடையோர்களைத் தொடர்ந்து துன்பத்தில் ஆழ்த்தும்.

இன்பத்திற்காகச் செயல் செய்தால் துன்பத்தை அனுபவித்துத் தான் ஆகவேண்டும் என்ற அறிவு ஏற்படும்பொழுது ஆளுமை வளர்ந்து துன்பம் கலவா இன்பம் பெற முக்திவிழைவோனாக மாற வேண்டிய அவசியத்தை இவர்கள் உணர்வார்கள்.

### *முக்திவிழைவோன்*

துன்பம் கலக்காத இன்பத்துடன் வாழ உலகை மாற்றிய மைத்து எப்பொழுதும் எல்லாமும் தங்கள் எதிர்பார்ப்பின்படியே

நடக்க வைக்கவேண்டும் என்ற தவறான அறிவை மாற்றிக் கொண்டு, வாழ்வில் ஏற்ற இறக்கங்களைத் தவிர்க்கவே முடியாது என்றும், அமைதியாக வாழ ஒரே வழி முக்தியடைவதுதான் என்றும் அறிந்தவர்கள் முக்திவிழைவோர்கள்.

மற்றவர்களைப்போல் தொடர்ந்து பல்வேறு வேலைகள் செய்து பணம் ஈட்டி குடும்பப்பொறுப்புகளை நிர்வகித்தாலும் இவர்களின் ஒரே குறிக்கோள் முக்தி என்பது மட்டுமே. முறைப்படி வேதத்தை ஆசிரியரிடம் பயின்று பரமரகசியத்தை அறிந்துகொண் டிருந்தாலும் குழந்தைக்கு உடல் நிலை சரியில்லை என்ற செய்தி இவர்களையும் உலுக்கவே செய்யும். இவர்களது ஆளுமை பற்றுடையோர்களை ஒப்பிடும்பொழுது பெரிதும் வளர்ச்சியடைந் திருக்கும் காரணத்தால் இதுபோன்ற சோக நிகழ்வுகளை இவர்கள் எதிர்கொள்ளும் விதம் பண்பட்டிருக்கும்.

நான் பரமன், இருப்பதுபோல் தோன்றும் இவ்வுலகம் என்னால் உண்டாக்கப்பட்ட கனவு என்று தொடர்ந்து தியானம் செய்வதால்மட்டுமே இவர்களால் தங்கள் ஞானத்தில் நிலைபெற முடியும். கணவன் மேல் தீராக் காதல் கொண்டிருக்கும் மனைவி அவன் வெளியூர் சென்றால் அவன் திரும்பிவருவரை வெவ்வேறு வீட்டுவேலைகள் செய்துகொண்டிருந்தாலும் சதா சர்வகாலமும் மனதினுள் அவனையே நினைத்துக்கொண்டிருப்பதுபோல, முக்திவிழைவோன் பரமன் மேல் தியானம் செய்யவேண்டும். எவ்வளவு தரம் அல்லது எவ்வளவு நேரம் அரிசியை உலக் கையால் குத்தவேண்டும் என்ற கேள்விக்கு உமி அரிசியிலிருந்து பிரியும்வரை என்பதுதான் சரியான பதில். அதுபோல எவ்வளவு தரம் அல்லது எவ்வளவு நேரம் பரமன் மேல் தியானம் செய்ய வேண்டுமென்பதற்கு உடலும் மனமும்தான் நான் என்னும் எண்ணம் உதிர்ந்து, நான் பரமன் என்பதை உணரும்வரை என்று பிருஹதாரண்யக மந்திரம் பதில் கூறுகிறது.

நான் முக்தியடையவேண்டும் என்ற ஆசை நான் பணக் காரானாக வேண்டும் என்ற தீவிர ஆசையைபோல இருந்தால் அது நிறைவேற வாய்ப்பில்லை. எப்பொழுது 'நான்' என்பதற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் 'பரமன்' மேல் மட்டும் தியானம் செய்யமுடிகிறதோ அப்பொழுதுதான் அகங்காரம் தொலைந்து நான் பரமன் என்ற ஞானம் உதிக்கும். முக்தியடைவது தானாக நடக்கும்.

## *முற்றுணர்ந்தோன்*

நான் பரமன் என்ற ஞானத்தில் நிலைபெற்ற முற்றுணர்ந் தோர்களுக்கு உலகம் இருப்பதுபோல் தெரியும் ஒரு மாயை என்பது தெளிவாகத்தெரிந்திருப்பதால் உலக நிகழ்வுகள் அவர் களைப் பாதிப்பதில்லை. குழந்தையின் உடல்நிலை மிகவும் மோச மடைந்துவிட்டது என்ற செய்தி அவர்கள் மனதையும் ஆட்டு விக்கும். ஆனால், மனம் நான் அல்ல என்ற அறிவு உறுதியாக இருப்பதால் இவர்கள் வாழ்வின் ஏற்ற இறக்கங்களை குறையாத இன்பத்துடன் தொடர்ந்து அனுபவிப்பார்கள். தன் குழந்தை இறந்துவிட்டது என்பதை அறிந்தபின் இவர்கள் எப்படிச் செயல் படுவார்கள் என்பது அவரவரின் ஆளுமையைப் பொறுத்து மாறுபடும். செயல்பாட்டின் அடிப்படையில் ஒருவரை முற்றுணர்ந் தோன் அல்லது முக்திவிழைவோன் என்று வகை பிரிக்கமுடியாது.

கயிற்றைப் பாம்பாகப் பார்த்துப் பயப்படுபவன் பற்றுடை யோன். அது பாம்பல்ல வெறும் கயிறுதான் என்பதை அறிந்திருந் தாலும் சுற்றியிருக்கும் எல்லோரும் அதற்குப் பயப்படுவதால் மனம் குழம்பியிருப்பவன் முக்திவிழைவோன். கயிற்றை மட்டும் பார்ப்பதால் தெளிவாக இருப்பவன் முற்றுணர்ந்தோன்.

உலக நிகழ்வுகளும் மற்ற மனிதர்களின் செயல்பாடுகளும்தான் தங்களது சோகத்திற்குக் காரணம் என்று பற்றுடையோர்கள் துன்பமடைவர். அதே நிகழ்வுகள் முக்திவிழைவோன் வாழ்வில் ஏற்படும்பொழுது அவன் தன் துன்பத்திற்கு ஒரே காரணம் முக்தியடையாதது மட்டுமே என்று அறிவான். நிகழ்வுகளும் அவை மனதில் ஏற்படுத்தும் சலனங்களும் பிரிக்கமுடியாதவை என்றும் இவ்விரண்டிற்கும் தனக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லை என்று உணர்ந்தவன் முற்றுணர்ந்தோன்.

தான் செயல் செய்பவன் என்றும், பலனை அனுபவிப்பவன் என்றும் நினைப்பவன் பற்றுடையோன். செயல் மட்டும் செய் பவன் நான் என்று பலனைத்தியாகம் செய்பவன் முக்திவிழை வோன். தான் எவ்விதச் செயலையும் செய்வது கிடையாது என்று உணர்ந்தவன் முற்றுணர்ந்தோன். எனவே நடந்த நிகழ்வுகள் வேறு விதமாக நடந்திருக்கலாமென்றோ அல்லது தான்வேறுமாதிரி செயல்பட்டிருந்தால் சோகநிகழ்வைத் தவிர்த்திருக்கலாமென்றோ அவன் தன் மனதில் நினைத்துத் துயரப்படமாட்டான். தன் விதி என்று தன்னைச் சமாதானபடுத்திக்கொள்ள வேண்டிய தேவையும்

அவனுக்கில்லை. ஏனெனில்தான் இதுவரை பாவம் எதையும் செய்யவில்லை என்று அவனுக்குத் தெளிவாகத்தெரியும். தான் எதனுடனும் சம்பந்தமில்லாதவன் என்றுணர்ந்ததால் அவன் எதனாலும் பாதிக்கப்படுவதில்லை.

### சாராம்சம்

*மனித ஆளுமைகளைப் பல்வேறு அடிப்படையில் வகைப்படுத்துபவர்கள் ஆளுமை உடன் பிறந்தது என்ப தால் அதன் தனித்தன்மையை மாற்றவேமுடியாது என்று உணர்வது அவசியம். அப்பொழுதுதான் ஆளுமையின் தரத்தை உயர்த்தத் தேவையான அறிவை அடைவதில் முழுமுயற்சியுடன் ஈடுபட முடியும்.*

*செயல் செய்வதன் மூலமாகவும் பலனை அனுப விக்கும் பொழுதும் தொடர்ந்து அறிவை அதிகப்படுத்திக் கொள்பவனால் மட்டுமே ஒருவன் தனது ஆளுமையை மேம்படுத்திக்கொள்ள முடியும்.*

*இன்பத்தையும் துன்பத்தையும் தரக்கூடிய நிகழ்வு களை மாற்றி மாற்றி வழங்கும் வகையில்தான் இந்த உலகம் உருவாக்கப்பட்டுள்ளது. இந்த ஏற்ற இறக்கங் களைச் சரியாக எதிர்கொள்ள ஆளுமையின் தரத்தை உயர்த்திக்கொள்ளுவது அவசியம்.*

*ஞானத்தின் பலன் துன்பத்திலிருந்து விடுதலை. பாவபுண்ணியங்கள் வாழ்வில் நிகழும் நிகழ்வுகளுக்குக் காரணமாக மட்டுமே அமைகின்றனவேயன்றி நம்மை இன்பத்திலோ துன்பத்திலோ ஆழ்த்தும் சக்தி அவற்றுக்குக் கிடையாது. அறிவு அதிகமாக அதிகமாக நம்மால் துன்பப் படுவதைப் படிப்படியாகக் குறைத்து இன்பமாக வாழலாம். எப்பொழுது பரமனைப்பற்றிய முழுமையான அறிவை அடைகிறோமோ அப்பொழுது துன்பத்திலிருந்து முழுமை யாக விடுதலை அடைகிறோம்.*

*நிகழ்வுகள் எப்பொழுதும் நல்லதாகவே இருக்க வேண்டும் என்று எதிர்பார்த்து ஏமாந்தபடி இருப்பவன் பற்றுடையோன். ஏற்ற இறக்கங்கள் இல்லாமல் படைப்பு*

இருக்கமுடியாது என்பதையும், அனைவரும் பாவபுண்ணி யங்கள் செய்திருப்பதால் வாழ்வின் இருமைகள் மாறிமாறி தான் வரும் என்பதையும் அறிந்தவன் முக்திவிழைவோன். இவனும் வாழ்வின் துன்பங்களில் இருந்து தான் விரைவில் முக்தி பெற வேண்டும் என்ற எதிர்பார்ப்புடன்தான் இருப்பான்.

உலகம் உண்மையானது என்று மனதில் பதிந்து இருக்கும் தவறான எண்ணத்தை பரமன் மேல் தொடர்ந்து தியானம் செய்வதன் மூலம் நீக்கவேண்டும். உலகம் நாம் காணும் கனவு என்று உறுதியாக உணரும்வரை தியானம் தொடர்ந்தால் முக்திவிழைவோன் முற்றுணர்ந்தோனாக மாறுவான்.

உலகில் ஏற்படும் மாற்றங்களுக்கேற்ப மாற்ற மடைவதுதான் மனதின் வேலை என்பதையும் மாறும் மனம் நான் அல்ல என்பதையும் அறிந்தவன் முற்றுணர்ந்தோன்.

### பயிற்சிக்காக

1. வாழ்வின் நியதி அல்லது படைப்பின் ரகசியம் என்று குறிப்பிடப்பட்ட கருத்து என்ன?
2. மனிதர்கள் வாழ்வில் பொதுவாக ஏற்படும் ஆறு நிகழ்வுகள் என்னென்ன?
3. மனிதர்கள் நிகழ்வுகளை எதிர்கொள்ளும் விதம் மாறுபடுவதற்குக் காரணம் என்ன?
4. மனித ஆளுமையை நிர்ணயிப்பது எது?
5. மனித ஆளுமையை மாற்றியமைக்க முடியுமா?
6. ஆளுமையின் வளர்ச்சிக்கு எது அவசியம்?
7. மூன்று வாழ்க்கை விதங்கள் என்று பிரித்து ஆராயக் காரணம் என்ன?

8. பற்றுடையோன் முக்திவிழைவோனாக மாறச் செய்ய வேண்டிய செயல்கள் யாவை?

9. முக்திவிழைவோன் முற்றுணர்ந்தோனாக மாறச் செய்ய வேண்டிய ஒரே செயல் என்ன?

10. ஞானத்தின் பலன் என்ன?

## சுயசிந்தனைக்காக

❖ *வாழ்வில் ஏற்ற இறக்கங்கள் இருப்பதற்கான காரணங்களை ஆராய்க.*

❖ *கடந்த இரண்டாயிரம் வருடங்களில் உலக நிகழ்வுகளில் எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை என்ற கூற்றின் உண்மையை ஆராய்க.*

❖ *மனித ஆளுமைகளின் வகைகளை ஆய்க.*

❖ *மனிதர்களை ஆளுமை வகைகளாகப் பிரிப்பதன் பயன் என்ன?*

❖ *முற்றுணந்தோர்களின் மனம் சோக நிகழ்வினால் கலக்கமடையுமா?*



# 155 பரமன் நான் என்று தியானிப்பதன் பலன்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 480**

**பி**ருஹதாரண்யக உபநிஷத மந்திரம் (1.4.10) கூறும் *'நான் பரமனாக இருக்கிறேன்'* என்ற உண்மையை ஆழ்மனதுக்குள் ஆழ்த்த 'நான் பரமன்' என்று தியானம் செய்வது அவசியமென்று கூறுகிறது. இவ்வாறு தியானம் செய்வதால் நிலைபெறும் ஞானத்தின் பலனை இந்தப் பாடம் விளக்குகிறது.

இயற்கையின் சீற்றம், நோய், வயோதிகம், விபத்து போன்ற உடலைப் பாதிக்கும் நிகழ்வுகளும் நெருங்கியவரின் மரணம், பணநஷ்டம், குடும்பத்தில் குழப்பம் போன்ற மனதைப் பாதிக்கும் நிகழ்வுகளும் அனைவரது வாழ்விலும் ஏற்படும். ஒருவர் அறிவாளி என்பதால் அவருக்கு இதுபோன்ற பிரச்சனைகள் வராமல் இருக்காது. ஆனால் இவற்றால் எவ்வளவு தூரம் பாதிக்கப்படு கிறோம் என்பது அவரவரின் அறிவின் ஆழத்தையும், தரத்தையும் பொறுத்தது.

அறிவு என்று இங்கு குறிப்பிடப்படுவது புத்தக அறிவோ, தொழிற்கல்வி அறிவோ அல்ல. மனிதனுக்கும் கடவுளுக்கும் உள்ள உறவு, படைப்பின் நோக்கம் முதலிய வாழ்வியல் அறிவைப் பெறாமல் வெறும் பல்கலைக்கழகத்தில் பெற்ற அறிவு வாழ்வின் சோக நிகழ்வுகளை எதிர்கொள்ளத் துணை புரிவதில்லை. வாழ்க்கை அனுபவங்கள் மனப்பக்குவத்தை மட்டும்தான் கொடுக் குமே தவிரச் சரியான அறிவைக் கொடுக்காது. இதனால்தான் வயதானவர்கள் சரியான அறிவுரைகளைக் கூறினாலும் அவற்றின் விளக்கங்களை அறிவதில்லை. வாழ்வின் சோகங்களை எதிர் கொள்ளத் தேவையான அறிவு வேதத்தில் மட்டுமே இருக்கிறது.

கல்லூரிகளில் பெறும் அறிவும், வயதாகும்பொழுது கிடைக்கும் அனுபவ அறிவும் பொருளாதார அடிப்படையில் முன்னேறப் பெரிதும் உதவும். ஆனால் எவ்வளவு அறிவை அடைந்தாலும் வாழ்வின் ஏற்ற இறக்கங்களைக் கட்டுப்படுத்த முடியாது என்பதால் பிரச்சனைகளைச் சமாளிக்கக் கடவுளைச் சார்ந்திருப்பது அவசியமாகிறது. நான் வேறு கடவுள் வேறு என்ற அறிவுடன் செயல்படும் பற்றுடையோன், நானும் கடவுளும் ஒன்று என்று அறிந்துகொண்டபின்னும் நிகழ்வுகளால் பாதிக்கப்படும் முக்தி விழைவோன், இருப்பது நான் மட்டும்தான் என்றறிந்த முற்றுணர்ந் தோன் ஆகியோரின் செயல்பாட்டை ஆராய்வதன் மூலம் நாம் நமது தற்போதைய நிலையை அறிந்துகொண்டு விரைவில் முன்னேறி முக்தியடைய முயலலாம்.

### பற்றுள்ளோர்கள்

நான், உலகம், கடவுள் ஆகிய மூன்றும் வேறுபட்டவை என்ற தவறான அறிவுடன் உலகம் நமக்குத் துன்பத்தைத் தருவதாகவும் அதிலிருந்து விடுபடக் கடவுள் அவசியம் என்று எண்ணும் பற்றுள் ளோர்களால் ஏற்ற இறக்கங்களுக்கேற்ப இன்பத்தையும், துன்பத் தையும் மாறி மாறி அனுபவிப்பதைத் தவிர்க்க முடியாது. ஆளுமை தரத்தின் அடிப்படையில் ஆராய்ந்து இவர்களை முக்திவிழை வோர்களாக மாற்றத் துணைபுரியும் கருத்துக்கள் இங்குத் தரப்பட்டுள்ளது.

**தவறான பக்தி:** தன்னுடைய துன்பத்தை நீக்க முயலாமல் தனக்குத் துன்பம் ஏற்படுத்தியவர்களைத் தண்டிப்பதற்காக மாச்சரியம், எரிச்சல், கோபம், பொறாமை, அதிருப்தி ஆகிய உணர்வுகளுடன் கடவுளைப் பிரார்த்திப்பவர்கள் முக்தியடைய வாய்ப்பேயில்லை. இவர்களுக்கு இன்பத்தைவிட துன்பம்தான் அதிகமிருக்கும்.

**பக்தியின்மை:** தர்மசிந்தனையுடன் சுயமுயற்சியால் உலகை மாற்றிவிடலாம் என்று முயலுபவர்களுக்கு ஆரம்பத்தில் கடவுள் நம்பிக்கையில்லாவிட்டாலும் வெகு விரைவில் வேதம் தரும் வாழ்க்கையறிவை பெறும் மனப்பக்குவம் ஏற்பட்டுவிடும்.

**சுயநலப் பக்தி (முதல் நிலை):** மற்றவர்களின் மனதை மாற்றி தன் விருப்பப்படி அவர்களைச் செயல்படவைக்க வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்திப்பவர்கள் யாரையும் திருத்தவோ

மாற்றவோ முடியாது என்பதை அறியாதவர்கள். நடக்கும் அனைத்து நிகழ்வுகளும் தனது வினைகளுக்கேற்பதான் நடக்கின்றன என்று இவர்கள் அறிந்துகொள்ளும்பொழுது அடுத்த நிலைக்கு முன்னேறு வார்கள்.

**சுயநலப் பக்தி (முதிர்ந்த நிலை):** துன்பம் தரும் நிகழ்வுகளைச் சரியான வகையில் ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்திப்பவர்கள் முக்தியடையும் தகுதியை மிகவிரைவில் பெறுவார்கள். தன் ஆளுமையின் தரத்தை உயர்த் துக்கொள்வது தன்னால் மட்டும்தான் முடியும் என்பதை இவர்கள் உணரும் பொழுது படிப்படியாக உயர்ந்து சோக நிகழ்வுகளால் அதிகம் பாதிக்கப்படாமல் இருக்கும் சக்தியைப் பெறுவார்கள்.

**பொதுநலப் பக்தி:** செய்த வினைக்கேற்ற அனுபவங்களைப் பெற்றுத்தான் ஆக வேண்டும் என்ற கட்டாயத்திலிருந்து கடவுள் கூடத் தன்னைக் காப்பாற்ற முடியாது என்பதை அறிந்தவுடன், சர்வ உயிரினங்களின் நலத்திற்காக மட்டுமே கடவுளைப் பிரார்த்திப்பவர்கள் விரைவில் சுகதுக்கம் கலந்த அனுபவங்களை அனைவருக்கும் அளிப்பது கடவுள்தான் என்பதை உணர்ந்து, கடவுள் யார் என்பதை அறிய வேதம் படிக்க ஆரம்பிப்பார்கள். உலகப்பற்றைத் துறந்து முக்தியை விரும்புவார்கள்.

## முக்திவிழைவோர்கள்

வாழ்வில் ஏற்படும் நிகழ்வுகளை இது வேண்டியது அது வேண்டாதது என்று பிரித்துப் பார்க்காததால் கடவுளிடம் எதையும் பிரார்த்தித்துக் கேட்கும் அவசியம் இவர்களுக்குக் கிடையாது. மேலும் தானும் கடவுளும் உண்மையில் ஒருவரே என்பதை அறிந்திருக்கும் காரணத்தால் இவர்களால் பிரார்த்திக்கவும் முடியாது.

உலக விவகாரங்களில் ஈடுபடும்பொழுது ஏற்படும் சோக நிகழ்வுகளுக்குக் காரணத்தை ஆராய்வதில் எவ்விதப் பயனும் இல்லை என்பதை இவர்கள் அறிந்தவர்கள். சாலைவிபத்தில் அடி பட்டால் உடலளவில் ஏற்பட்ட துன்பங்களை நிவர்த்திசெய்வதில் இவர்கள் முனைவார்களே தவிர விபத்திற்கு யார் காரணம் என்ற சச்சரவில் ஈடுபட்டு மனதளவில் யாருக்கும் துன்பம் ஏற்படுத்த மாட்டார்கள்.

தான் செய்த தீவினை காரணமாகத்தான் தனக்கு இந்த விபத்து ஏற்பட்டது என்று மனதைத் தேற்றிக்கொள்ளும் கட்டத்தையும்

இவர்கள் தாண்டிவிட்டிருப்பார்கள். எனவே நடந்தது யாவையும் நல்லதாகவே நடந்தது என்றும், நடக்கவேண்டியது நல்லதாகவே நடக்கும் என்றும் இவர்கள் உறுதியாக இருப்பார்கள்.

இருப்பது பரமனாகிய நான் மட்டும்தான் என்ற அறிவு ஏற்பட்டபின்னும் உலக நிகழ்வுகள் தன்னைப் பாதிப்பதாக ஒருவர் நினைத்தால் அவர் தொடர்ந்து வேதத்தின் மையக்கருத்து புரியும் வரை படிக்கவேண்டும். நான் பாதிக்கப்படவில்லை என்றாலும் என் மனம் பொய்யான நிகழ்வுகளால் அலைபாய்கிறது என்றால் அவர் தொடர்ந்து நான் பரமன் என்ற தியானம் செய்யவேண்டும்.

பரமன் மட்டும்தான் இருக்கிறான் என்பதை உணர்வதுபோல் உலகம் இருப்பதுபோலத் தோன்றும் மாயை என்பதை மனம் தெளிவாக அறியாமல் இருப்பதற்கு இருகாரணங்கள் இருக் கின்றன. உலகம் உண்மையாக இருந்தால்தான் அதை தெளிவாக விளக்கமுடியும். மாயை என்ற சொல்லுக்கு மனதால் புரிந்து கொள்ள முடியாதது என்று பொருள். மேலும் மனமே மாயை. ஆகவே, மனதால் உண்மையில் தான்இல்லை என்பதை ஏற்றுக் கொள்ள முடிவது சிரமம். எனவேதான் திரும்பத் திரும்ப நான் பரமன் என்று தியானம் செய்து நான் மனம் அல்ல என்ற உண்மையை அறிவில் ஆழ்த்தி மனதைக் கட்டுக்குள் கொண்டுவர வேண்டும். எப்பொழுது 'நான் பரமன்' என்ற தியானம் செய்ய வேண்டிய அவசியமில்லாமல் போகிறதோ அப்பொழுது முக்தி விழைவோன் முற்றுணர்ந்தோனாகிறான்.

### *முற்றுணர்ந்தோர்கள்*

வாழ்வில் துயரமான சம்பவங்கள் நிகழும் பொழுது கோபம், பயம், வெட்கம், குற்ற உணர்வு, கவலை, வெறுப்பு போன்ற உணர்ச்சிகள் முற்றுணர்ந்தோர்களின் மனதைத் தாக்குவதில்லை. விபத்து ஏற்பட்டால் உடலில் ஏற்படும் வலியை ஏற்றுக்கொள்வது போலக் குடும்பத்தில் ஒருவர் இறந்து விட்டால் மனதில் ஏற்படும் துயரத்தை இவர்கள் சகித்துக்கொள்வார்கள். இது ஏன் நடந்தது, என்ன காரணம் முதலியவை அர்த்தமற்ற கேள்விகள் என்பதை இவர்கள் அறிவர்.

செய்யவேண்டிய செயல்கள் அனைத்தையும் செவ்வனே செய்து முடித்த திருப்தி இவர்களிடம் எப்பொழுதும் இருப்பதால் இவர்களது மனம் பொதுவாக அமைதியாகவேயிருக்கும். தனது

இயல்பான அமைதியை அனுபவிக்க இவர்கள் அயல்நாடுகளுக்குப் பயணம் செய்யவேண்டிய அவசியமோ செயற்கையாக ஒரு பிரச்சனையை ஏற்படுத்தி அதை தீர்க்க வேண்டிய கட்டாயமோ இருப்பதில்லை. பிரபஞ்சம் முழுவதற்கும் நான்தான் ஆதாரம் என்ற அறிவு இவர்களிடம் நிலைபெற்று இருப்பதால் யாரையும் இவர்கள் அந்நியர்களாகக் கருதுவதில்லை. பிரச்சனைகள் தோன்றும் பொழுதும் தீரும்பொழுதும் இவர்களது மனம் ஒரே சீராகச் செயல்படும்.

நான் பரமன் என்பதை உணர்ந்தபின் கூட 'நீ முட்டாள்' என்று யாரேனும் கூறினால் அவருக்குச் சரியான பதில் கொடுக்க வேண்டிய கட்டாயம் நமக்கு ஏற்படலாம். நம் ஆளுமையைப் பொறுத்து நமது பதில் வெவ்வேறு விதத்தில் அமைந்தாலும் இந்த நிகழ்வு நமது மனதைச் சலனப்படுத்தாமல் இருக்காது. ஆனால் நடப்பது நாடகம் என்ற உண்மை நம் மனதில் திடமாக இருப்பதால் அவருடன் எப்படி உரையாடலைத் தொடர்வது அல்லது தவிர்ப்பது என்ற அளவில் மட்டும்தான் நம் மனம் சலனப்படும். அவரும் பரமன் என்பதால் அவர் மீது கோபம் அல்லது காழ்ப்புணர்ச்சி ஏற்படாது. திரும்பத் திரும்ப இதுபோல் உலக நிகழ்வுகளில் நான் பரமன் என்ற அறிவுடன் பங்கேற்கும்பொழுது நமது ஆளுமையின் தரம் தொடர்ந்து அதிகரித்து மனதில் ஏற்படும் சலனம் வெகுவாகக் குறையும்.

உலகம் உண்மை என்ற தவறான அறிவுடன் பலகாலம் இவ்வுலக நிகழ்வுகளில் பங்கேற்றுச் சேர்த்துவைத்த மனப்பதிவுகளை அழிக்க நான் பரமன் என்ற சரியான அறிவுடன் பல காலம் செயலாற்ற வேண்டியது அவசியமாகலாம். மனதை அமைதிப் படுத்தவேண்டும் என்ற முயற்சியை முற்றுணர்ந்தோர்கள் மேற்கொள்வதில்லை.

### சாராம்சம்

*பூமி சூரியனைச் சுற்றும் ஒரு கிரகம் என்ற உண்மை அறிவு நமது மனதில் பதிந்திருப்பதால் அது கிழக்கில் தோன்றி மேற்கே மறைவதாகக் கண்காட்டுவதை நாம் நம்புவதில்லை. அதுபோல நான் பரமன் என்ற உண்மையைத் தியானத்தின் மூலம் நம் ஆழ்மனதில் அழுத்தியபின்*

இந்த உலகம் உண்மையில் இருப்பதாகக் காட்டும் ஐம்புலன்களை நம்பி நாம் ஏமாறமாட்டோம்.

பட்டாம்பூச்சியின் முட்டையிலிருந்து வெளிவரும் புழுவைப் பார்த்தால் அது ஒரு காலத்தில் பட்டாம்பூச்சியாக மாறும் என்ற நம்பிக்கை நமக்கு ஏற்படாது. அது போல எப்பொழுதும் அங்கும் இங்கும் அலைமோதி என்ன தேடு கிறோம் என்பதைக் கூட யோசிக்க நேரம் இல்லாமல் தொடர்ந்து தேடலில் ஈடுபட்டிருக்கும் சாதாரண மனிதனைப் பார்க்கும்பொழுது அவன், மெள்ள மெள்ள மனப்பக்குவம் பெற்று, தான் தேடுவது மனநிறைவை என்று உணர்ந்து அதன் பின் வேதம் படித்து நான் பரமன் என்பதை உணர்ந்து முற்றுணர்வோனாக மாறுவான் என்பதை நம்புவதும் கடினம்.

இந்த மாற்றம் ஏற்பட எவ்வளவு காலமாகும் என்பது ஆளுக்கு ஆள் மாறுபடும். ஒருசிலருக்கு முற்றுணர்ந் தோனாக மாறுவதற்கு முன்பேயே எவ்விதத் தேடலிலும் ஈடுபடாமல் என்றும் அமைதியுடனும் நிம்மதியுடனும் வாழும் மனப்பக்குவம் ஏற்பட்டிருக்கலாம். வேறு சிலருக்கு நான் பரமன் என்ற அறிவு ஏற்பட்ட பின்னும் பழக்கத் தோஷத்தால் தொடர்ந்து உலகத்தில் பரபரவென்று செயல் படும் மனப்பதிவு மாறாமல் இருக்கலாம். எது எப்படி யிருப்பினும் ஒருவரின் நடவடிக்கையை வைத்து அவரின் முக்திநிலையை தீர்மானம் செய்யமுடியாது. உலக நிகழ்வு கள் மனதில் கோபம், பயம், எரிச்சல், ஏமாற்றம், பொறாமை முதலிய உணர்வுகளை ஏற்படுத்துவதைத் தவிர்ப்பதுதான் நான் பரமன் என்ற ஞானத்தின் இறுதி நோக்கம். இந்த நோக்கம் ஞானம் ஏற்பட்டவுடன் நிறைவேறவில்லை யென்றால் அது நிறைவேறும் வரை 'நான் பரமன்' என்ற தியானத்தைச் செய்யவேண்டும்.

நான் பரமன். உலகில் நிகழும் அனைத்து நிகழ்வு களுக்கும் நானே ஆதாரம் என்ற அறிவு மனதில் ஆழமாகப் பதிந்துவிட்டால் குன்றாத அமைதியுடன் நிலையான ஆனந்தத்துடன் உடலும் மனதும் ஒத்துழைக்கும்வரை

*தொடர்ந்து வாழ்க்கையை அனுபவிக்கலாம். மரணம் என்பது இந்த அனுபவத்திற்கு ஒரு முற்றுப்புள்ளி. நான் என்றும் இருப்பவன் என்ற ஞானம் மரணபயத்திலிருந்தும் நம்மை விடுவிக்கும்.*

### பயிற்சிக்காக

1. இருவகை அறிவுகளை விவரிக்கவும்.
2. உலக அறிவை எந்த இரு விதங்களில் பெறலாம்?
3. பற்றுள்ளோர்களின் பக்திநிலைகள் யாவை?
4. உலகம் இருப்பதுபோல் தோன்றும் மாயை என்பதைப் புரிந்து கொள்வதில் இருக்கும் சிரமத்திற்குக் கூறப்பட்ட இரு காரணங்கள் யாவை?
5. நான் பரமன் என்ற ஞானத்தின் நோக்கம் என்ன?

### சுயசிந்தனைக்காக

❖ *பெரியவர்கள் கூறும் அறிவுரைகளை ஏன் பின்பற்றவேண்டும் என்று ஆராய்க.*

❖ *பொருளாதார அடிப்படையில் வெற்றி பெற வேதம் வழி சொல்கிறதா?*

❖ *வாழ்க்கை அறிவைப் பெற என்ன செய்ய வேண்டும்?*

❖ *பற்றுள்ளோர்கள் படும் துன்பத்தின் அளவு அவர்களின் கர்மவினைகளைப் பொறுத்ததா அல்லது அவர்களின் பக்திநிலையை பொறுத்ததா?*

❖ *பற்றுள்ளோர்களைத்தவிர மற்றவர்களுக்குக் கடவுள் நம்பிக்கை கிடையாதா?*

- *முற்றுணர்ந்தோர்களின் மனம் சலனப்படுமா?*
- *முற்றுணர்ந்தோர்களுக்கும் முக்திவிழைவோர்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்க.*
- *விதியை மதியால் வெல்லலாம் என்ற கூற்று உண்மையா?*



## 156 மூன்று வகை தியானங்கள்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 481**

***"மனம்தான் பரமன்"*** என்று சாந்தோக்கிய உபநிஷத மந்திரம் **(3.18.1)** கூறுவதால், நான் மனம் என்று தியானம் செய்ய வேண்டும் என்று நினைப்பது தவறு என்ற கருத்தை விளக்கும் வகையில் மூன்று வகை தியானங்களை விவரித்து, இவ்வகை தியானங்களைச் செய்பவன் அடையும் பலன்களையும் இந்தப் பாடம் கூறுகிறது.

படிப்படியாக மக்களின் மனதைப்பண்படுத்தி யாரும் எவ்விதச் செயலையும் செய்வதில்லை என்ற உண்மையை மக்களுக்கு உணர்த்தி அனைவரையும் துன்பத்திலிருந்து முழுமையாக விடுவிக்கும் வகையில்தான் உலகத்தில் உள்ள அனைத்து மக்களின் அனைத்துச் செயல்பாடுகளும் அமைந்துள்ளன. ஆரம்ப கட்டத்தில் இதற்காகத்தான் செயல்களைச் செய்கிறோம் என்று உணராமல் மக்கள் பற்றுடையோர்களாக இருந்தாலும், நாளடைவில் மெதுவாக உண்மை புரிபட முக்திவிழைவோர்களாக மாறி வேதம் படித்து முழு அறிவையும் பெற்று முற்றுணர்ந்தோர்களாகி முக்தியடைகிறார்கள்.

தியானம் என்ற பெயரில் ஓரிடத்தில் அமர்ந்து பயிற்சி செய்யாவிடினும் மனதில் ஓடும் எண்ணங்களின் அடிப்படையில் அனைவரும் எப்பொழுதும் தியானம் செய்து கொண்டுதான் இருக்கிறார்கள் என்று கூறலாம். படிப்பில் நாட்டமுள்ள பள்ளி மாணவர்கள் பண்டிகைகளைக் கொண்டாடும் பொழுதும் பரிட்சையில் நல்ல மதிப்பெண் வாங்கவேண்டும் என்ற கலையாத கவனத்துடன் இருப்பதும் ஒரு தியானம்தான். அதுபோல் பதவி உயர்வு அல்லது

வியாபரத்தில் அதிக லாபம் முதலிய குறிக்கோள்களில் மனதைக் குவித்து வேலை செய்வதும் தியானம்தான். எதில் தியானம் செய் கிறார்கள் என்பது அவரவரின் அறிவை பொறுத்து மாறும். நிரந்தர அமைதியும் குறையாத இன்பமும்தான் அனைவரது இறுதி குறிக் கோள் என்றாலும் பணம் அதைத்தரும் என்ற நம்பிக்கையில் வேலை செய்வதும் நல்ல வேலை கிடைக்கப் படிக்க வேண்டும் என்ற நினைப்பில் படிப்பதும் இதுபோன்ற தியானங்களுக்குக் காரணம்.

*தியானங்களைப் பற்றுடையோர்கள் செய்யும் இருமை தியானம், முக்தி விழைவோர்கள் செய்யும் ஒருமை தியானம், முற்றுணர்ந்தோர்கள் செய்யும் இரண்டற்ற தியானம் என்று மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்.*

## இருமை தியானம்

நான் வேறு, நான் இன்பமாயிருக்க அடையவேண்டிய பொருள்கள் வேறு என்ற அறிவுடன் படிப்பு, நல்ல வேலை, பணம், குடும்பம் எனப் படிப்படியாக வெவ்வேறு பொருள்களை நாடி அவை கிடைக்கத் தன்னிடமிருந்து வேறுபட்ட கடவுளைப் பிரார்த்திக்கும் பற்றுள்ளோர்கள் செய்வது இருமை தியானம்.

இருமை தியானத்தின் ஒரே பலன், தான்வேண்டுவது உலகத்திலிருந்து தனக்குக் கிடைக்காது என்ற உண்மையை உணரும் மனப்பக்குவம். தொடர்ந்து வெவ்வேறு பொருள்களை நாடி அவை கிடைத்தபின்னும் மனம் நிம்மதியடையாமல் மேலும் இருமை தியானத்தில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறது என்ற உண்மை புலப்பட்டதும் பற்றுடையோர்கள் வேதம் படிக்க ஆரம்பித்து முக்திவிழைவோர்களாக மாறுவார்கள். எனவே ஒருமை தியானம் செய்யத் தேவையான முதல் படிக்கட்டு இருமை தியானம் ஆகும். அதன் பின் இரண்டற்ற தியானம் செய்து முற்றுணர்ந்தோர்களாக மாறுவார்கள். மக்களுக்கு இருக்கும் அறிவின் அடிப்படையில் இந்தப்பயணத்தை நான்குக் கட்டங்களாகப் பிரிக்கலாம்.

### 1. மாறும் உலகில் மாறாத பரமன் இல்லை

காணும் உலகம் முழுதும் தொடர்ந்து மாறுகிறது. மாற்ற மடையாத எதையும் நாம் அறிவதில்லை. அனைத்து உயிரினங் களும் பிறந்து, வளர்ந்து முடிவில் மரணம் அடைவதால் என்றும் இருக்கும் ஒருபொருள் என்று எதுவும் இருக்க முடியாது. இது போன்ற அறிவுடன் இருக்கும் வரை என்றும் மாறாமல் நிலையாக

இருக்கும் பரமன் இருக்கிறான் என்று வேதம் கூறும் உண்மையை ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் மக்களுக்கு வருவதில்லை.

### 2. பரமன் ஒருவன் இருக்கலாம்

உலகில் இருந்து இன்பம் கிடைக்கும் என்று தீவிரமாக இருமை தியானம் செய்த பின்னும் பலன் கிடைக்காததால் வேறு வழியின்றி வேதம் படிக்க ஆரம்பித்தவுடன் மாறாத பரமன் இருப்பது சாத்தியம் என்ற எண்ணம் மக்களுக்குத் தோன்றுகிறது.

இவ்விருகட்டங்களை தாண்டும் வரை மக்களின் தியானம் இருமை தியானமாகவே அமையும். வேதம் கூறும் கருத்துக்களைக் கவனிக்கவும், புரிந்துகொள்ளவும் தேவையான மனப்பக்குவம் ஏற்பட்டபின் இருமைதியானம் குறையத்துவங்கும்.

### 3. பரமன் நிச்சயமாக இருக்கிறான்

வேதங்களை முறைப்படி பலகாலம் தொடர்ந்து இடைவிடாமல் தகுந்த ஆசிரியரின் அருளுடன் படித்ததன் பயனாக, மாறாத பரமன் ஒருவன் நிலையாக இருக்கிறான் என்ற அறிவு ஏற்பட்டபின் மக்கள் ஒருமை தியானம் செய்யத்துவங்குவர்.

### 4. நான் பரமன்

எவ்வித மாற்றத்திற்கும் உட்படாமல் என்றும் நிலையாக இருக்கும் பரமன் நான் என்ற அறிவு நிலைபெற இரண்டற்ற தியானம் உதவும். இந்த நான்கு கட்ட அறிவையும் மூன்று வகை தியானங்களையும் கடந்தவர்கள் முக்தியடைகிறார்கள்.

இந்த நான்கு கட்டங்களில் ஏற்படும் அறிவு தியானத்தினால் நேரடியாக ஏற்படாது. தியானத்திற்கு மனதைப் பக்குவப்படுத்தும் சக்தி மட்டுமே உள்ளது. வேதத்தை முறையாக ஆசிரியரிடம் படிப்பதால் மட்டுமே அறிவு வரும். வேதம் படிக்காமல் அனுபவத்தின் மூலமோ புத்தகங்கள் படிப்பதனாலோ சரியான அறிவு ஏற்படாது.

### ஒருமை தியானம்

கடவுளின் நற்குணங்களின் மேல் கவனம் செலுத்தி இருமை தியானம் பலகாலம் செய்ததால் ஏற்பட்ட மனப்பக்குவத்தின் உதவியால் வேதம் கூறிய 'நான் பரமன்' என்ற உண்மை புரியும். அதன்பின் நானும் பரமனும் ஒன்றே, இவ்வுலகம் முழுதும் என்னை

அடிப்படையாகக் கொண்டு படைக்கப்பட்ட மாயத் தோற்றம் என்ற அறிவுடன் செய்யப்படும் தியானம் ஒருமை தியானம்.

நான் பரமன் என்ற அறிவு ஏற்பட்டவுடனேயே முக்தியடைய வேண்டும். ஆனால் பெரும்பாலோருக்கு இது நடப்பதில்லை. எனவேதான் ஒருமை தியானம் அவசியமாகிறது. இருப்பது பரமன் மட்டும்தான் என்றால் 'நான் பரமன்' என்று தியானம் செய்வது யார் அல்லது பரமன் எதற்காக 'நான் பரமன்' என்று தியானம் செய்யவேண்டும் முதலிய கேள்விகள் நியாயமானவை.

பள்ளியில் கணித ஆசிரியர் சொல்வது தெளிவாகப் புரிவது போல இருந்தாலும் வீட்டுப்பாடத்தைச் செய்யும் பொழுது விடை தெரிகிறதே தவிர அந்த விடை எப்படி வரும் என்று தெரியாத பொழுது ஆசிரியர் கொடுத்த உதாரணத்தைப் பலமுறை எழுதி மனப்பாடம் செய்வதன்மூலம் விடை கண்டுபிடிக்கும் வழியைப் புரிந்துகொள்ளலாம்.

கணிதம் புரிந்து விட்டால் விடைகாணும் வழி முறைகளை மனப்பாடம் செய்ய வேண்டிய அவசியமில்லை. ஆனால் மனப் பாடம் செய்வது புரிந்துகொள்ள உதவும் காரணத்தால் மனப்பாடம் செய்வது தவறில்லை. அதுபோல நான் பரமன் என்ற ஒருமை தியானம், தான் தியானம் செய்யத்தேவையில்லாத பரமன் என்பதை முடிவில் உணர்த்துவதால் அதை தவறான தியானம் என்று தடை செய்யக்கூடாது.

'இது முல்லை மலர்' என்ற அறிவு ஏற்பட்டவுடன் அதற்கு முன் இருந்த 'இது மலர்' என்ற அறிவைத் தவறான அறிவு என்று கூறமுடியாது. 'இது மலர்' என்ற சாதாரண அறிவு 'இது முல்லை மலர்' என்ற விசேஷ அறிவைப் பெற ஒரு படிக்கட்டாக உதவுவது போல 'நான் பரமன்' என்ற உண்மையை உணர 'நான் பரமன்' என்று ஒருமை தியானம் செய்வது உதவும். எனவே ஒருமை தியானம் தவறில்லை.

தன்னை ஒரு எலி என்று நினைத்துக்கொண்டிருக்கும் மனநோயாளியைக் குணப்படுத்த அவரது மருத்துவர் அவனிடம், 'நான் மனிதன்' என்று தியானம் செய்யும்படி கூறலாம். 'அவன் மனிதன்தானே, அவன் ஏன் நான் மனிதன் என்று தியானம் செய்யவேண்டும்?' என்ற கேள்வி நியாயமானது என்றாலும் அவனைக் குணப்படுத்த வைத்தியருக்கு இருக்கும் சரியான வழி அது ஒன்றுதான்.

தன்னை ஒரு மனிதன் என்று நினைத்துக்கொண்டிருக்கும் முக்திவிழைவோனை முற்றுணர்ந்தோனாக மாற்ற 'நான் பரமன்' என்ற ஒருமை தியானம் மட்டுமே உதவும். எனவே ஒருமை தியானத்தைத் தொடர்ந்து செய்வது அவசியம்.

பரமன் மாறாதவன், என்றும் இருப்பவன், அறிவுருவானவன், ஆனந்தமயமானவன் முதலிய வர்ணனைகளைக் கேட்டவுடன் ஏற்படும் 'பரமன் இருக்கிறான்' என்ற அறிவு 'நான் பரமன்' என்ற அறிவாக மாறாவிட்டால் மக்கள் கடவுளைப் போற்றி புகழ்ந்து பக்தி செய்வது மட்டும்தான் தங்கள் கடமை என்ற அளவில் வேதம் படிப்பதை நிறுத்திக்கொள்வார்கள். நீதான் பரமன் என்று பலமுறை கூறி அந்த அறிவை நிலைப்படுத்த ஒருமை தியானம் செய்வது அவசியம்.

கடின உழைப்பு, விடாமுயற்சி போன்றவை வெற்றிக்கு வழி வகுக்கும் என்பது உண்மையல்ல என்றாலும் இளைஞர்களுக்கு இவற்றைப் போதிப்பது முடிவில் அவர்களுக்கு நன்மையை ஏற்படுத்தும். அதுபோல நான் பரமன் என்று ஒருமை தியானம் செய்வது தவறு என்றாலும் இறுதியில் அது முக்தியடைய உதவுவதால் வேதம் அதை மக்களுக்குப் போதிக்கிறது.

கண்ணுக்குத் தெரியும் ஒளிக்கதிரை வெறும் ஒளிக்கதிராக பார்க்காமல் வைரமாகப் பார்ப்பவன் அந்த ஒளிக்கதிரின் ஆதாரத்தைத் தேடி வைரத்தைக் கண்டுபிடிப்பான். ஒளிக்கதிரை வெறும் கண்ணாடியென்று உதாசீனபடுத்தியவன் ஏழையாகவே இருப்பான். அதுபோல் தன்னில் இருக்கும் உயிர்சக்தியை வெறும் மனிதன் என்று நினைப்பவன் என்றும் பற்றுள்ளவனாக இருந்து துன்பப்படுவான். அவ்வாறின்றி அதை பரமன் என்று தியானிப்பவன் பரமனாகவே ஆகிவிடுவான்.

கற்சிலையைக் கடவுள் என்று வழிபடுபவன் கடவுள் வெறும் கல் என்று எப்படி நினைப்பதில்லையோ அதுபோல நான் பரமன் என்று ஒருமை தியானம் செய்பவன் பரமனாக ஆகாமல் போனாலும் பரமன் தன்னிடமிருந்து வேறுபட்டவன் என்ற தவறான முடிவுக்கு வரவேமாட்டான்.

## ஒருமை தியானம் செய்யும் முறை

சில காலம் மட்டுமே இருக்கும் உடலாலும், மாறும் மனதாலும் கட்டுப்பட்டிருக்கும் நான் உண்மையில் எல்லாவற்றிற்கும் ஆதார

மாக என்றும் இருப்பவன், அறிவுருவானவன், ஆனந்தமய மானவன் என்றோ அல்லது வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதவன், எவ்வித உருவமோ பெயரோ இல்லாதவன், எதனுடனும் தொடர் பில்லாதவன் நான் என்றோ தொடர்ந்து நினைப்பது ஒருமை தியானம்.

## ஒருமை தியானம் வெற்றிபெறத் தடைகள்

கல்லைக் கடவுளாகக் கும்பிட்டாலும் கடவுள் கல்அல்ல என்று அறியும் அறிவு பரவலாகப் பொது மக்களிடையே இருந்தாலும் கடவுளும் நானும் ஒன்று என்பதை ஆராய்ந்து ஏற்றுக்கொள்ளும் அறிவுக்கூர்மை பெரும்பாலோருக்கு இருப்பதில்லை. கடவுளுக்கு ஆறு முகங்களும், பன்னிரு கைகளும் இருக்கின்றன என்பதை எளிதாக ஏற்றுக்கொள்ளும் மனதிற்கு உருவமில்லா பரமனைக் கற்பனை செய்து பார்க்கும் திறன் இல்லாததால் புத்தியின் முடிவுக்கு அது கட்டுப்படுவதில்லை. நீயே அது என்ற வேத வாக்கியத்திற்கு நீ பரமனைப்போன்றவன் என்று அர்த்தம் சொல்லும் ஆசிரியரிடம் படிப்பவர்களுக்கு ஒருமை தியானம் பயன்தருவதில்லை.

சரியான ஆசிரியர், தீர ஆராய்ந்து உண்மையை அறியும் புத்திக்கூர்மை, புத்தியின் முடிவுக்குக் கட்டுப்பட்டு உண்மையை ஏற்றுக்கொள்ளும் மனம் ஆகியவை மூன்றும் இல்லாமல் 'நான் பரமன்' என்ற நம்பிக்கையுடன் எவ்வளவு காலம் ஒருமை தியானம் செய்தாலும் அது பலனளிக்காது.

## இரண்டற்ற தியானம்

நான் பரமன் என்ற நம்பிக்கையுடனும் நான் பரமனாக மாற வேண்டும் என்ற ஆசையுடனும் முக்திவிழைவோர்களால் செய்யப்படும் தியானம் ஒருமை தியானம். நான் பரமன் என்ற உண்மையை எவ்விதச் சந்தேகமும் இல்லாமல் தெரிந்துகொண்ட பின் அந்த அறிவைத் தங்கள் ஆழ்மனதிற்குள் ஆழ்த்தவும், ஐம் புலன்கள் மூலம் நான் இருக்கிறேன் என்று தொடர்ந்து சொல்லிக் கொண்டிருக்கும் உலகம் மாயை என்று மனதிற்கு அவ்வப் பொழுது ஞாபகப்படுத்தவும் முற்றுணர்ந்தோர்கள் செய்யும் தியானம் இரண்டற்ற தியானம் ஆகும்.

உடல் நிலையானது அல்ல என்ற அறிவு இருப்பினும் உடற் பயிற்சி செய்து அதை நலமாக வைத்துக்கொள்வது போல மனதின்

சலனங்கள் என்னைப் பாதிக்காது என்ற அறிவு இருப்பினும் மனதை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ள இரண்டற்ற தியானத்தை முற்றுணர்ந்தோர்கள் செய்வார்கள். நான் பரமன் என்று கற்பனை செய்துகொண்டு அது உண்மையாக இருக்க வேண்டுமே என்ற ஏக்கத்துடன் செய்யப்படுவது ஒருமை தியானம். நான் பரமன் என்ற உண்மையை உணர்ந்தபின் அது உள்ளத்தில் உறுதிப்படச் செய்யப்படுவது இரண்டற்ற தியானம்.

அயல்நாட்டிற்கு முதல் முறையாக உல்லாசப்பயணம் செய்வதற்குமுன் அந்த நாட்டைப்பற்றிய புத்தகங்களைப் படித்து, படங்களைப்பார்த்து, அங்கு சென்று வந்தவர்களுடன் உரையாடித் தான் பெறப்போகும் அனுபவத்தைக் கற்பனை செய்து பார்ப்பது போன்றது ஒருமை தியானம். அந்த அயல் நாட்டில் உல்லாசப் பயணம் செய்யும்பொழுது இரவு படுப்பதற்கு முன் தான்பெற்ற அனுபவங்களை அசை போடுவதும் மறுநாள் எழுந்ததும் நான் இப்பொழுது வேறு நாட்டில் இருக்கிறேன் என்று ஞாபகப்படுத்திக் கொள்வதும் இரண்டற்ற தியானம்.

அயல் நாடு செல்லும்வரைதான் அதைப்பற்றிய கற்பனைகள் இருக்கும். சென்றபின் கற்பனை செய்வது நின்றுவிடும். அது போல நான் பரமன் என்பதை உணரும் வரைதான் ஒருமை தியானம். உணர்ந்தபின் அது நின்றுவிடும்.

அயல் நாடு செல்வது சிலநாட்கள் நீடிக்கக் கூடிய உல்லாசப் பயணம் என்றால்தான் அங்கு சென்றதும் அனுபவங்களை அசைபோடுவதும், அயல் நாட்டில் இருக்கிறேன் என்று ஞாபகப் படுத்திக்கொள்வதும் நடக்கும். அந்த நாட்டுக்குக் குடிமாற்றம் செய்து விட்டு நிரந்தரமாகச் சென்றவர்கள் இவற்றைத் தொடர்ந்து செய்வதில்லை.

நான் பரமன் என்பதை உணர்ந்தபின் சிலகாலம் மட்டுமே இரண்டற்ற தியானம் நடக்கும். நான் பரமன் என்ற அறிவு நிலை பெற்றபின் மாறும் உலகைத் தொடர்ந்து அனுபவித்தாலும் இரண்டற்ற தியானத்தைச் செய்யவேண்டிய அவசியம் இருக்காது.

## இரண்டற்ற தியானம் செய்யும் முறை

அதிர்ச்சியூட்டும் சம்பவங்களைக் கேட்டவுடன் மனம் சலனப் படும்பொழுது தனக்குத் தானே இது நான் காணும் கனவில் ஒரு காட்சி என்று ஞாபகப்படுத்திக்கொள்வது இரண்டற்ற தியானம்.

இந்தத் தியானம் செய்வதற்கு என்று ஒரு குறிப்பிட்ட வழி முறைகள் கிடையாது. வீட்டுச்சாவி பையில் இருக்கிறதா என்று தொடர்ந்து தொட்டுப்பார்த்துக்கொண்டேயிருக்கவேண்டும் என்ற அவசியமில்லை. அதுபோல இரண்டற்ற தியானத்தைத் தொடர்ந்து செய்யவேண்டிய அவசியமில்லை.

இருக்கும் சொத்தின் அளவு, உறவாடும் மனிதர்களின் எண்ணிக்கை, வகிக்கும் பொறுப்புகளின் தன்மை ஆகியவற்றைப் பொறுத்து ஒருவர் உலகுடன் உறவாடும் அளவு தீர்மானிக்கப் படும். இவை அனைத்தும் அதிக அளவில் இருந்தால் அவர் இரண்டற்ற தியானத்தை அதிக நாட்கள் செய்யவேண்டியிருக்கும்.

## இரண்டற்ற தியானம் வெற்றி பெறத் தடை

ஆசிரியர் சொல்லிகொடுத்தது சரியாகப் புரிந்திருந்தாலும் வகுப்பு முடிந்ததும் செல்லவிருக்கும் திரைப்படம் பற்றிய எண்ணங்கள் மனதை ஆக்ரமித்துகொண்டு இருக்கும் காரணத்தால் ஆசிரியர் கேள்வி கேட்கும்பொழுது சரியான பதிலைச் சொல்ல முடியாமல் போகலாம். மறுநாள் மனம் தெளிவான பின் எவ்வித மான முயற்சியும் செய்யாமல் பதிலைத் தெளிவாகச் சொல்ல முடியும். அதுபோல நான் பரமன் என்ற அறிவில் எவ்விதச் சந்தேகமும் இல்லாமல் இருந்தாலும் மனம் வேறு நினைவுகளில் ஆழ்ந்திருக்கும்பொழுது நான் பரமன் என்பதை மறந்துவிடலாம்.

ஏதாவது ஒரு மனிதரையோ தொழிலையோ அளவுக்கு மீறிய ஈடுபாடுடன் விரும்பி பலகாலம் செயல்பட்டிருந்தால் அதன்பின் நான் பரமன் என்ற அறிவு ஏற்பட்டாலும் பழைய நினைவுகள் அடிக்கடி மனதை அலைக்களிக்கும். உதாரணமாக உளமாற காதலித்த வாழ்க்கைத்துணைவரின் முதல் நினைவு நாளன்று நான் பரமன் என்பது மறந்து போகலாம். கிணற்றிற்குச் செல்லப் பலபேர் பலகாலம் தொடர்ந்து நடந்ததால் ஏற்பட்ட ஒத்தையடிப்பாதை கிணறு மூடப்பட்டவுடன் மறைந்துவிடாது. நான் பரமன் என்ற அறிவு நிலைபெற வாழ்க்கையில் உள்ள பிடிப்பு மறைய வேண்டும்.

## நான் பரமன் என்ற அனுபவமும் அறிவும்

தங்கப்புதையல் இருக்கும் நிலத்தின்மேல் குடிசைபோட்டு வசிக்கும் ஏழைக்குத் தன் நிலத்தின் மதிப்பு தெரியாது. புதையல் இருக்கிறது என்ற அறிவு அவனுக்கு ஏற்பட்டபின் அவன்

தேவையான முயற்சிகள் செய்து அந்தத் தங்கத்தைத் தோண்டி எடுத்தால்தான் அவன் ஏழ்மை நீங்கும். அதுபோல நான் பரமன் என்ற அனுபவம் அனைத்து மனிதர்களுக்கும் இருந்தாலும் நான் பரமன் என்ற அறிவு பொதுவாக யாருக்கும் இருப்பதில்லை. அந்த அறிவு ஏற்பட்டவுடன் தொடர்ந்து முயற்சி செய்து தியானம் மூலம் நான் பரமன் என்ற அறிவை மனதிற்குள் ஆழ்த்தினால்தான் முக்தியடைந்து துன்பம் கலக்காத இன்பத்துடன் வாழ முடியும்.

சாதாரண மனிதன் பரமனாக மாறக் கடக்கவேண்டிய படிக் கட்டுகளை, இந்த ஏழை பணக்காரனாக மாறும் உதாரணத்தின் அடிப்படையில் ஆராயலாம்.

**1.** துன்பப்படுவதை உணர்தல்: ஏழை தான் ஏழை என்பதை உணராதவரை பணம் சம்பாதிக்க ஆசைப்படமாட்டான். பற்றுடை யோன் தன் வாழ்வில் இன்பமும் துன்பமும் மாறிமாறிவருகிறது என்றும், ஒவ்வொரு இன்பமும் பின்வரும் துன்பத்திற்கு வித்து என்றும் உணராதவரை முக்தியடைய ஆசைப்பட மாட்டான்.

**2.** துன்பம் இயற்கை என்று ஏற்றுக்கொள்ளுதல்: கடவுள் தனக்குப் படியளந்தது அவ்வளவுதான் என்று வாழ்க்கைத் துன்பத்தை ஏற்றுக்கொள்ளும் ஏழை, பணம் வேண்டும் என்று ஏங்க மாட்டான். இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவதுதான் வாழ்க்கை என்று நினைக்கும் பற்றுள்ளவன் துன்பத்தை அகற்ற முயலமாட்டான்.

**3.** துன்பத்தை முற்றிலும் அழிக்கக்கூடிய சாதனம்: ஏழைக்குத் தன் நிலத்தின் கீழ் தங்கம் இருக்கிறது என்றும், அது தன் வறுமையை மாற்றக்கூடிய சாதனம் என்றும் அறியும் வரை அதைப்பெற முயற்சி செய்யமாட்டான். மாறாத பரமன் ஒருவன் தன் மனதின் எண்ணங்களுக்கு அடியில் புதைந்துள்ளான் என்றும், அது தன் துன்பத்தை அழிக்கக்கூடிய சாதனம் என்றும் அறியும்வரை பற்றுடையோன் அதை அடைய முயலுவதில்லை.

**4.** இருக்கிறது என்ற உண்மை துன்பத்தை மாற்றாது: வீட்டில் கிடைத்த கொள்ளுத் தாத்தாவின் உயில், நிலத்தினடியே தங்கம் இருக்கிறது என்ற உண்மையை அவனுக்குக் கூறினாலும் பூமியைத் தோண்டி தங்கத்தை எடுக்காதவரை அவனது ஏழ்மை மாறாது.

பற்றுடையோன் முறையாக வேதத்தைப் படித்து நான் பரமன் என்பதை அறிந்தாலும் கூட தியானம் செய்வதன் மூலம் மனதைத் தூய்மைப்படுத்தினால்தான் புத்தி கூர்மையடைந்து முக்தியடையும் வாய்ப்புகிடைக்கும்.

**5.** தேடுதல் மட்டும்தான் துன்பத்தை மாற்றும்: மண்ணைத் தோண்டி தேடாதவரை தங்கம் கிடைக்காது. நான் பரமன் என்ற உண்மையைத் தீர ஆராயாத வரை துன்பம் தீராது.

**6.** கூரிய ஆயுதம் இல்லாமல் தேட முடியாது: கடப்பாரை போன்ற கூரிய ஆயுதம் இல்லாமல் தங்கத்தைத் தோண்டி எடுக்க முடியாது. புத்திக்கூர்மை இல்லாதவர்களால் நான் பரமன் என்பதைப் புரிந்து கொள்ள முடியாது.

**7.** மேலாகத்தேடினால் துன்பம் மாறாது: மேல் மண்ணை நீக்கினால் தங்கம் கிடைத்துவிடாது. நான் உடல் அல்ல என்று ஆராய்ந்து அறிவதனால் மட்டும் பயன் கிடைக்காது.

**8.** சிறிது ஆழமாகத் தேடினாலும் போதாது: கட்டிப் போயிருக்கும் நிலத்தைச் சிறிது வெட்டியதும் தங்கம் கிடைக்காது. நான் மனம் அல்ல என்று அறிந்து கொள்வதனால் மட்டும் முக்தி கிடைக்காது

**9.** பற்றை நீக்குவது அவசியம்: தங்கத்தைச் சுற்றி இறுக்கமாகப் பற்றிக்கொண்டிருக்கும் மண்ணை நீக்கினால்தான் தங்கம் வெளிப்படும். உலகத்தின் மீது கொண்டிருக்கும் பற்றை நீக்கினால்தான் மனதினால் பரமனை அறிந்து கொள்ள முடியும்.

**10.** தொடர்ந்த முயற்சி அவசியம்: ஒருமுறை கடப்பாரையால் நிலத்தைக் குத்தினால் தங்கம் கிடைத்துவிடாது. தங்கம் கைக்குக் கிடைக்கும்வரை தொடர்ந்து முயற்சி செய்யவேண்டும். நான் பரமன் என்று கேட்டதும் முக்தியடைய முடியாது. அது தெளிவாகப் புரியும் வரை தொடர்ந்து வேதத்தைப் படிக்க வேண்டும்.

**11.** முயற்சி வீண்போகாது: ஒருநாள் முழுவதும் தொடர்ந்து உழைத்துவிட்டு இரவில் ஓய்வெடுத்துக்கொண்டாலும் அடுத்த நாள் விட்ட இடத்திலிருந்து குழி தோண்ட முடிவது போல, நான் பரமன் என்பதைப் புரிந்து கொள்ளச் செய்யும் முயற்சியின் பலன் பிறவிதோறும் நம்மைப் பின் தொடரும். எனவேதான் மனம்

பக்குவமடைந்த ஒரு சிலர் சிறிதளவு முயற்சி செய்தவுடன் முக்தியடைகிறார்கள்.

**12.** வெற்றி துன்பத்தைப் போக்கும்: தங்கக் காசுகள் கிடைத்த மறுகணம் ஏழை பணக்காரானாக மாறிவிடுவது போல நான் பரமன் என்பது புரிந்தவுடன் வாழ்வின் துன்பங்கள் மறைந்துவிடும்.

**13.** அனுபவம் மாறுபடும்: தங்கக் காசுகள் என் தாத்தா வினுடையது. அவற்றைச் செலவு செய்யாமல் அவர் ஞாபகமாகப் பத்திரமாக வைத்துக்கொள்வேன் என்று முரண்டுபிடிப்பவன் தொடர்ந்து ஏழையாகத்தான் இருப்பான். நான் பரமன் என்பது உண்மையென்றாலும் வாழ்க்கையில் வெற்றிபெற்றால்தான் எனக்கு இன்பம் கிடைக்கும் என்று போராடுபவர்களால் துன்பத்தைத் தவிர்க்க முடியாது.

## முக்தி அனுபவம்

அனைத்து அனுபவங்களும் உடலையும் மனதையும் சார்ந்தவை. பரமனால் எவ்வித அனுபவத்தையும் பெறமுடியாது. தான் பரமன் என்று உணர்ந்ததும் தன் உடலையும் மனதையும் எந்த அளவுக்கு உலக விவகாரங்களில் ஈடுபடுத்துவது என்பதைப் பொறுத்துத்தான் முக்தி அனுபவம் ஒருவனுக்கு அமையும். எவ்வளவு தங்கக் காசுகளைச் செலவளிக்கிறான் என்பதைப் பொறுத்துத்தான் ஏழைக்குப் பணக்கார அனுபவம் கிடைக்கும்.

எவ்வித வேலையும் செய்யாமல் எந்த மனிதர்களுடனும் உறவாடாமல் காட்டில் கிடைப்பதை உண்டு உயிர் வாழும் முற்றுணர்ந்தோனின் மனம் பெரும்பாலும் அமைதியாக இருக்கும். வழிப்போக்கன் பரிதாபப்பட்டுக் கொடுத்துவிட்டுபோன இட்டிலி யைச் சாப்பிட ஆரம்பிக்கும்பொழுது பறவையின் எச்சம் அதில் விழுந்து விட்டால் அவன் மனம் சலனப்படத்தான் செய்யும். இந்தச் சலனத்தையும் தவிர்க்க வேண்டுமென்றால் தொடர்ந்து சமாதி நிலையில்தான் இருக்கவேண்டும்.

ஒரு பெரிய நிறுவனத்தின் தலைவராகவும் அரசியல் கட்சியின் தலைவராகவும் பொறுப்புக்களை வகிக்கும்பொழுது தொடர்ந்து மனம் அலைபாய்வதை எவ்விதக் கவலையும் இன்றி ஏற்றுக் கொண்டு, என்னாளும் இன்பமாக வாழத் தொடர்ந்து தியானம் எதையும் செய்யவேண்டிய அவசியமில்லை. அரண்மனையில்

இதுபோல வாழும் முற்றுணர்ந்தோன் மீது வழக்குப் பதிவுசெய்து சிறையில் அடைத்தாலும் எவ்வித அவமானமோ, குற்ற உணர்வோ இன்றி அவன் இனிதாக வாழ்வான்.

முக்தி என்பது அவரவரின் தனிப்பட்ட அனுபவம். முக்தி யடைந்தவனாகத் தன்னைப் பாவித்துக்கொள்வதன் மூலம்தான் ஒருவனால் முக்தி அனுபவத்தைப் பெற முடியும்.

### சாராம்சம்

*மனதுக்குப் பிடித்த சிறுகதையை எழுதிய எழுத்தாளரைச் சந்திக்க ஆவல் இருக்கலாம். நம் நெருங்கிய நண்பர்தான் அந்தக் கதையை எழுதியவர் என்று தெரிந்தவுடன் எழுத்தாளரைச் சந்திக்கும் ஆவல் அடங்கிவிடும். ஏனெனில் அவர் நமக்கு ஏற்கெனவே பழக்கமானவர். அதுபோல நான் பரமன் என்பதை அறிந்தவுடன் பரமனாக மாற வேண்டும் என்ற ஆசை அடங்க வேண்டும். இல்லையெனில் நான் பரமன் என்ற உண்மை நமக்கு இன்னும் சரியாகப் புரியவில்லை என்று பொருள்.*

*ஆனால் நான் பரமன் என்ற அறிவு ஏற்பட்டபின்கூட முக்தி அனுபவம் ஏற்படாமல் இருக்கலாம். முக்தி அனுபவம் என்பது ஒருவருக்குப் படிப்படியாகத்தான் ஏற்படும். பட்டதாரியான அன்றே பணக்காரனாக முடியாது. வேலை செய்து சிறிது சிறிதாகப் பணம் சேர்ப்பதுபோல நான் பரமன் என்ற அறிவு ஏற்பட்டவுடன் எந்த அளவு இரண்டற்ற தியானம் செய்கிறோமோ அந்த அளவு முக்தியனுபவம் அதிகரிக்கும். எவ்வளவு பணம் போதுமானது என்பதற்கு ஒரு அளவே கிடையாது. அதுபோல எவ்வளவு முக்தி அனுபவம் வேண்டும் என்பதற்கும் அளவு கிடையாது. வாழ்நாள் முழுவதும் வேலை செய்து பணம் சேர்க்கலாம். அல்லது போதும் என்று ஒரு அளவில் நிறுத்திக்கொண்டு இருப்பதற்குள் வாழலாம். அதுபோல வாழ்நாள் முழுவதும் இரண்டற்ற தியானம் செய்து மனதைச் செம்மைபடுத்தலாம். அல்லது இருக்கும் முக்தி அனுபவம் போதும் என்று இரண்டற்ற தியானம் செய்வதை நிறுத்திக்கொள்ளலாம்.*

*நான் பரமன் என்பதை அறிந்து கொள்ளவும் முக்தி அனுபவத்தைப் பெறுவதற்கும் நமது முயற்சி தேவை. பரமனின் அனுபவம் எவ்வித முயற்சியும் இல்லாமல் அனைவருக்கும் எப்பொழுதும் கிடைத்துக்கொண்டிருக்கிறது.*

*வேதம் படிக்க வேண்டும் என்ற மனப்பக்குவத்தை இருமை தியானம் கொடுக்கும். நான் பரமன் என்ற வேதத்தின் மையக்கருத்தைப் புரிந்துகொள்ளத் தேவையான மன ஒருமைப்பாட்டை ஒருமை தியானம் கொடுக்கும். முக்தி அனுபவத்தின் அளவையும் தரத்தையும் உயர்த்த இரண்டற்ற தியானம் உதவும்.*

**பயிற்சிக்காக**

1. மக்களின் செயல்பாடுகளின் நோக்கம் என்ன?
2. மக்களின் செயல்பாடுகளைத் தியானம் என்று, எந்த அடிப்படையில் கூறப்பட்டது?
3. எதன் அடிப்படையில் தியானங்கள் மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன?
4. இருமை தியானம் என்றால் என்ன?
5. இருமைதியானத்தின் ஒரே பலன் என்ன?
6. மக்களின் அறிவின் அடிப்படையில் அவர்கள் முக்தியடையச் செய்யும் பயணம் எந்த நான்கு கட்டங்களாகப் பிரிக்கப்பட்டது?
7. ஒருமை தியானம் செய்யவேண்டிய அவசியம் என்ன?
8. ஒருமை தியானம் வெற்றி பெறத் தடையாக இருக்கும் மூன்று என்னென்ன?
9. ஒருமை தியானத்திற்கும் இரண்டற்ற தியானத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்க.

10. இரண்டற்ற தியானம் வெற்றி பெறத் தடையாக இருப்பது எது?

11. பற்றுடையோன் முக்தியடையக் கடக்க வேண்டிய பதின்மூன்று படிகள் யாவை?

**சுயசிந்தனைக்காக**

- *முக்தியடைந்த மகான்களின் வாழ்க்கை சரிதங்களைப் படிக்கவும்.*
- *நான் பரமன் என்ற அனுபவத்திற்கும், நான் பரமன் என்ற அறிவிற்கும் உள்ள தொடர்பை ஆராய்க.*
- *நான் பரமன் என்ற அறிவிற்கும், முக்தி அனுபவத்திற்கும் உள்ள தொடர்பை ஆராய்க.*
- *முக்தியடைந்தவர்கள் இரண்டற்ற தியானம் என்ற முயற்சியை மேற்கொள்வதால் அவர்களை முக்தியடைந்தவர்களாகக் கருத முடியாது என்ற கருத்தை ஆராய்க.*
- *முக்தி அனுபவம் என்றால் என்ன?*
- *வாழ்வில் வரும் ஒவ்வொரு இன்பமும் பின்வரும் துன்பத்திற்கு வித்து என்று எந்த அடிப்படையில் கூறலாம்?*



157

# கல்லைக் கடவுளாகக் காண்பதன் பலன்

அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 482

**க**ல்லைக் கடவுளாக வழிபடுதல் மனிதர்கள் முக்தியடைய உதவும் என்றும் கடவுளைக் கல் என்று எண்ணுபவர்கள் வாழ்வில் துன்பத்தைத் தவிர்க்க இயலாது என்றும், விளக்கும் வகையில் படிப்படியாகத் துன்பத்தைக் குறைத்து முழுமையான இன்பத்தை அடையும் பாதையை இந்தப் பாடம் விவரிக்கிறது.

ஓட்டப்பந்தயத்தில் வெற்றிபெறவேண்டுமானால் தனக்கு முன் ஓடுபவனை முன் மாதிரியாகக்கொண்டு அவனைவிட வேகமாக ஓட பிரயத்தனம் செய்யவேண்டும். தனக்குப் பின்னால் வருபவர் களைவிட்டுவிட்டு போக மனமில்லாமல் அவர்களுடன் அவர் களுடைய வேகத்தில் ஓடினால் தோல்வி நிச்சயம். மேலும் பந்தயத்தில் முன்னே ஓடுபவர்களைவிட பின்தங்கியிருப்பவர் களின் எண்ணிக்கை அதிகம்.

அதுபோல வாழ்விலும் மேல்படியில் உள்ளவர்களின் எண்ணிக்கையைவிட கீழ்படியில் மிகப்பலர் இருப்பார்கள். முக்தி விழைவோர்களின் எண்ணிக்கையைவிட பற்றுடையோர்களின் எண்ணிக்கை மிக அதிகம். முற்றுணர்ந்தோர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. எனவே நம் போல இருக்கும் பலருடன் பின்தங்கிவிடாமல் நமக்கு முன் இருக்கும் சிலரின் நிலைக்கு நாமும் முன்னேற முயற்சி செய்ய வேண்டும். இந்த முயற்சியின் முதல் கட்டம் அடுத்த படியில் இருக்கும் சிலரை இனம் கண்டுபிடித்து அவர்கள்போல நாமும் ஆக வேண்டும் என்ற எண்ணத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும். இரண்டாவதாக அவர்களைப்போல

நாமும் இருப்பதாகக் கற்பனை செய்து கொண்டு அவர்களைப் போல் செயலாற்ற முயலவேண்டும். மூன்றாவதாக முடிந்தவரை மேல்படியில் இருப்பவர்களின் தொடர்பை வளர்த்துக்கொள்வதன் மூலம் பேசும் சொற்களும், கேட்கும் சொற்களும் நம் முன்னேற்றத் திற்கு உதவும் வகையில் அமைத்துக் கொள்ள வேண்டும். இதுபோல் நம் எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றையும் தொடர்ந்து பண்படுத்துவதன் மூலம் விரைவில் படிப்படியாக முன்னேறித் துன்பம் கலக்காத இன்பத்துடன் வாழலாம். தனக்குப் பின் இருப்பவர்களுக்கு உண்மையிலேயே உதவவேண்டுமானால் முதலில் தான்முன்னேற வேண்டும். பிச்சைக்காரர்கள் மேல் பரிதாபப்பட்டு அவர்களுடன் தானும் அமர்ந்து பிச்சையெடுப் பதில் அர்த்தமில்லை. நம் வாழ்வில் துன்பத்தை முழுவதும் அகற்றியபின்தான் மற்றவர்களின் துன்பத்தைத் துடைக்கும் தகுதி நமக்கு ஏற்படும்.

*1. நல்லவன்*

மதுபானம் அருந்துதல், புகைபிடித்தல், சூதாடுதல் போன்ற தீயபழக்கங்கள் மூலம் இன்பத்தைத் தேடுபவர்கள் தங்களுக்கு எது நல்லது என்பதைத் தீர்மானிக்கும் சக்தியை இழந்துவிடுவார்கள். எனவே தர்மம் தவறாமல் வாழ்வதன் அவசியத்தை உணராமல் எப்படிவேண்டுமானாலும் பணம் சம்பாதித்து இன்பத்தை அடையலாம் என்ற தவறான பாதையில் பயணிக்க ஆரம்பித்து விடுவார்கள். இறை நம்பிக்கை, சுற்றுச்சூழலை மதிப்பது, மற்றவர்களுக்குத் துன்பம் ஏற்பட நாம் காரணமாக இருக்கக் கூடாது என்ற எண்ணம் ஆகியவை இவர்களுக்கு ஏற்படும்பொழுது சரியான பாதையின் முதல் படியில் ஏறும் தகுதியை இவர்கள் பெறுவார்கள்.

தவறுகளைத் திருத்தி நல்லவனாக வாழவேண்டும் என்று உறுதியாக முடிவெடுத்த மறுகணமே மனம் நிம்மதியடைய ஆரம்பித்துவிடும்.

*2. வல்லவன்*

வகுப்பில் முதல் மதிப்பெண் எடுக்கவேண்டும் என்று முயல்பவர்களைவிட அது நம்மால் முடியாது என்ற முடிவுடன் யாரையும் படிக்கவிடக்கூடாது என்று செயல்படும் மாணவர்கள் தான் அதிகம். கல்விதிட்டம் தவறு, ஆசிரியருக்கு ஒன்றும் தெரி

யாது, கல்விக்கட்டணம் அதிகம் என்று ஏதாவது காரணம் சொல்லி அரசியலில் ஈடுபட்டுத் தங்கள் அறியாமையைச் சமூகபொறுப்பு என்ற போர்வைக்குள் புதைக்க முயல்பவர்களால் துன்பத்தைத் தவிர்க்க முடியாது. படிப்பதே தவறு என்று முழக்கமிட்டுத் தங்களால் படிக்க இயலாது என்ற உண்மையை மறைக்க முயலும் இவர்களுடன் சேர்ந்து பின் தங்கிவிடாமல், கிடைக்கும் வாய்ப்பு களை முழுதும் பயன்படுத்தி முன்னேறுவதில் கவனம் செலுத்த வேண்டும்.

ஒவ்வொருவரும் தங்களுக்குள் மறைந்துள்ள தனித்திறமையை வளர்த்துக்கொண்டு நல்லவனாக மட்டுமில்லாமல் வல்லவனாகவும் வளர, கடுமையாக உழைக்க வேண்டும். இந்தச் சம்பளத்திற்கு இவ்வளவு உழைப்பு போதும் என்று கூலிக்கு மாரடிக்காமல் எடுத்துக்கொண்ட வேலைகள் அனைத்தையும் தன் முழுத் திறமையைப் பயன்படுத்திச் செவ்வனே செய்வதால் மட்டுமே மனதிட்பமும், அறிவுக்கூர்மையும் அதிகரிக்கும். இதன் பயனாக வாழ்வில் ஏற்படும் துன்பங்களை ஓரளவு குறைத்துப் பெரும் பாலும் இன்பமாக வாழலாம். மேலும் அடுத்த படிக்குச் செல்ல உலகை மாற்ற வல்ல திறமைசாலிகளால் மட்டுமே முடியும்.

*3. அறிவாளி*

உலகத்தை மாற்ற முயற்சிசெய்து தன் செயல் திறனை அதிக ரித்துக்கொள்பவன் வல்லவன். எவ்வளவு முயன்றாலும் உலகம் நம் விருப்பத்திற்கேற்ப மாறுவதில்லை என்ற உண்மையைப் புரிந்துகொள்ளும் பொழுது அவன் அறிவாளியாகிறான். சாலையில் செல்லும் எல்லா வாகனங்களும் நாம் எதிர்பார்க்கும்படிதான் செல்ல வேண்டும் என்று எதிர்பார்ப்பவன் ஏமாற்றமடைவான். யார் எப்படி ஓட்டினாலும் தன் வண்டியைத் திறமையாகச் செலுத்துபவனே புத்திசாலி. அதுபோல் உலகத்தை மாற்ற முயலாமல் நம் மனதை மாற்ற முற்படுபவனே இந்தப்படியை கடப்பான்.

தன் முயற்சியாலும், பணபலத்தாலும் தன்னைச் சுற்றியுள்ள மனிதர்களையும் நிகழ்வுகளையும் முற்றிலுமாகக் கட்டுப்படுத்தி நம் எதிர்பார்ப்புகளுக்கிணங்க இயங்கவைத்தாலும் இன்றுபோல என்றும் இருப்போமா என்ற பயம் மனதை ஆக்ரமிப்பதைத் தவிர்க்கமுடியாது. எனவே மனதின் குறைகளை நிவர்த்தி செய்து

அதை நிறைக்கும் போராட்டம் உலகத்தை மாற்றுவதால் முடிவுக்கு வராது.

மனதில் தோன்றும் ஆசைகளை மூன்றுவிதங்களில் தீர்த்துக் கொள்ளலாம். உலகில் உள்ள பொருள்களை அடைவதன் மூலம் ஆசைகளைத் தீர்த்துக்கொள்வது முதல் விதம். ஆனால் இந்த விதத்தால் ஆசை முழுவதுமாகத் தீர்வதில்லை. புதிய ஆசைகள் மனதில் தோன்றி மீண்டும் நம்மைத் தேடலில் தள்ளிவிடுகின்றன. நாய் வாலை நிமிர்த்த முடியாது என்ற அறிவு ஏற்பட்டதும், போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து என்று மனதை அடக்கி ஆசையை அகற்றுவது இரண்டாவது வழி.

கயிற்றை அறுத்துவிட்டு ஓடும் கன்றுகுட்டியை குச்சியால் அடித்தோ துரத்திப் பிடித்தோ மீண்டும் கட்டிப்போடும் முயற்சிக்குப் பதிலாக அன்பான வார்த்தை பேசி பச்சைப்புல்லை சாப்பிடகொடுத்து அதை அரவணைத்துக் கட்டிக்கொண்டு வருவது புத்திசாலித்தனம். அதுபோல மனதுடன் போராடி அதிலுள்ள ஆசைகளை அகற்றுவதற்குப் பதில் சரியான ஞானத்தால் மனதை அமைதிப்படுத்துவதுதான் ஆசைகளை நிரந்தரமாகத் தீர்க்கும் மூன்றாவது விதம்.

பக்கவாதத்தால் பாதிக்கப்பட்ட கால்களைக் குணபடுத்த அவற்றை நல்ல கால்களைபோல உபயோகித்துப் பழகவேண்டும். அதுபோல் உலக அறிவுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் மனதை ஞானத்தின்பால் திருப்ப ஞானிகளுடன் தொடர்பு கொண்டு அவர் களைப்போல் தானும் நடந்து கொள்ள முயற்சி செய்ய வேண்டும்

*4. ஞானி*

மனதின் நிறைவின்மையும், இன்பம் வேண்டும் என்ற தேடலும் மறையும்வரை வேதம் படிக்கவேண்டும். வேதத்தின் மையக்கருத்தான நான் பரமன் என்பது புரிந்த பின்கூட மனதின் அலைபாயும் தன்மை உடனடியாக நின்றுவிடாது. புத்திக்குப் புரிந்த அறிவு மனதில் மாற்றத்தை ஏற்படுத்தச் சிலகாலம் ஆகும். பின்வரும் மூன்று பயிற்சிகள் ஞானியின் முக்தி அனுபவத்தின் தரத்தை உயர்த்தும்.

**முதல் பயிற்சி:** நான் பரமன் என்ற அறிவிற்கும் நம் மனதில் ஏற்படும் பொறாமை, எரிச்சல், கோபம் போன்ற உணர்வுகளுக்கும் உள்ள தொடர்பை ஆராயவேண்டும். உதாரணமாக எதையாவது

எதிர்பார்த்திருக்கும் ஏக்கம் மனதில் இருந்தால் எதிர்காலம் என்று ஒன்று உண்மையில் இல்லை என்றும் இருப்பது நிகழ்காலம் மட்டும்தான் என்றும் நமக்கு நாமே ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும்.

**இரண்டாம் பயிற்சி:** சிறுவர்களுக்கு மனதில் பக்தி இல்லா விட்டாலும் அவர்களைக் கடவுளின் சிலைமுன் விழுந்து வணங்கு வதுபோல் பாவனைசெய்ய வைத்தால் அவர்களுக்கு நாளடைவில் உண்மையான பக்தி ஏற்பட்டுவிடும். அது போல ஞானம் பெற்ற பின் முக்தியனுபவம் அதிகம் இருப்பதுபோல் பாவனை செய்து வந்தால் முக்தியனுபவம் அதிகமாகும். உதாரணமாக ஒரு பொருள் மிக நன்றாக இருக்கிறது என்று கேள்விப்பட்டால் அதை அனுப விக்கவேண்டும் என்று மனதில் தோன்றும் ஆவலைச் சொல் லாலும் செயலாலும் வெளிப்படுத்தக்கூடாது.

**மூன்றாம் பயிற்சி:** உலகமெனும் நாடகமேடையில் நாமேற்றுக் கொண்டிருக்கும் மகன், சகோதரன், கணவன், தந்தை, பொருள் சம்பாதிக்கும் தொழிலாளி போன்ற அனைத்துப் பாத்திரங்களையும் செவ்வனே செய்வது அவசியம். ஆனால் அதே சமயம் நம் மனம் இவையனைத்தும் உண்மையென்றும், நான் செயல் செய்கிறேன் என்றும் தவறாக நம்பிவிடாமல் இருக்க தேவைக்கு அதிகமாக இந்தச் செயல்களில் ஈடுபடுவதோ, அவற்றைப் பற்றி சிந்திப்பதோ, மற்றவர்களுடன் பேசுவதோ கூடாது. இதனால் இது நடக்கும் என்ற காரண காரியத் தொடர்பு இல்லவேயில்லை. அது இருப்பது போலத் தோன்றும் மாயை என்பதை மனதுக்கு நினைவுபடுத்தும் வகையில் வேதாந்தகருத்துக்களை மற்றவர்களுடன் பரிமாறிக் கொள்ளவேண்டும்.

முக்தியனுபவம் திடீரென்று ஏற்படுவதல்ல. படிப்படியாக நம் பயிற்சியின் தரத்திற்கு ஏற்ப நம் முக்தியனுபவத்தின் தரமும் தொடர்ந்து அதிகரிக்கும்.

### சாராம்சம்

*மாறுவது மனம். மாறாதவன் நான். இந்த உண்மை புரியும்வரை அமைதியாக இருக்க மனதின் சலனங்கள் அடங்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு இருக்கும். கடல் அலைகள் ஓயாது என்று அறிந்தவர்கள் அவற்றின்மேல்*

சருக்கிவிளையாட கற்றுக்கொள்வார்கள். அதுபோல் மனம் அடங்காது என்று அறிந்தவர்கள் வாழ்வில் எவ்விதப் பயனோ எதிர்பார்ப்போ இல்லாமல் பல்வேறு சாகசங்களைச் செய்வார்கள்.

நிம்மதியாக இருக்க பணம் வேண்டும் என்று அதர்மமான முறையில் வாழ்பவர்கள் பணம் நிம்மதியைக் கொடுக்காது என்று உணர்ந்தபின் நல்லவர்களாக மாறு வார்கள். அதன்பின் அவ்வப்பொழுது அமைதியடையும் மனதில் நீடித்த அமைதியை ஏற்படுத்த நல்லவர்கள் வல்லவர்களாக மாறி உலகில் பல சாதனைகளைச் செய்யத் தொடங்குவர். அதன்பின்னும் மனம் முழு அமைதியைப் பெறாததால் ஆசையே துன்பத்திற்குக் காரணம் என்றுணர்ந்து உலகை மாற்றும் முயற்சியைக் கைவிட்டு மனதை மாற்றும் முயற்சியில் அவர்கள் ஈடுபடுவார்கள். இவர்களில் தீர்க்கமான அறிவுடையவர்கள் மனதை அடக்கும் முயற்சி அதன் இயற்கைக்கு மாறானது என்றும், மனம் உலகை அனுபவிக்க நமக்குக் கிடைத்துள்ள உன்னதமான கருவி என்பதையும் உணர்ந்து வேதத்தின் உட்கருத்தான அமைதி எனது உண்மை வடிவம் என்பதைப் புரிந்துகொள்வார்கள். சத்தம் ஏற்பட முயற்சி செய்யவேண்டும். அமைதியாக இருக்க ஒன்றும் செய்யத் தேவையில்லை என்ற உண்மை புலப்பட்டவுடன் மனதின் சலனங்களைப் பொருட்படுத் தாமல் ஏற்ற இறக்கங்களுடன் கூடிய வாழ்வை அமைதியாக அனுபவிக்க ஆரம்பிப்பார்கள்.

நல்லவன், வல்லவன், அறிவாளி, ஞானி என்ற ஒவ்வொருபடியில் இருப்பவர்களும் தொடர்ந்து முன்னேறத் தங்களுடன் இருக்கும் பெரும்பாலோரின் தொடர்பைத் தவிர்த்து அடுத்தபடியில் இருக்கும் சிறுபான்மையினரின் உறவை நாடவேண்டும். அமைதியையும் ஆனந்தத்தையும் அனைவரும் தேடினாலும் பெரும்பாலோர் தவறான இடத்தில் தேடிக்கொண்டிருக்கிறார்கள். இந்த உண்மையை உணர்ந்து பரமரகசியத்தை அறிய வேதம் காட்டும் பாதையில் நாம் பயணிக்க வேண்டும்.

*பரமரகசியத்தை அறிந்தபின் நம்மிடம் இருக்கும் மனம் என்னும் அற்புதமான கருவியை முழுமையாக உபயோகப்படுத்தி வாழ்வின் ஒவ்வொருகணத்தையும் அமைதியாகவும் ஆனந்தத்துடனும் களிக்கலாம்.*

### பயிற்சிக்காக

1. இந்தப் பாடத்தில் விளக்கப்பட்ட நான்கு படிகள் யாவை?

2. ஒவ்வொரு படிக்கட்டிலிருந்தும் அடுத்த படிக்கட்டுக்குப் பயணிக்கச் செய்யவேண்டிய மூன்று செயல்கள் என்னென்ன?

### சுயசிந்தனைக்காக

❖ *நாம் இருக்கும் படிக்கட்டு எது என்றும், அடுத்து செய்யவேண்டிய செயல் என்ன என்பதையும் ஆராய்க.*

❖ *ஞானம் பெற்றபின் நிரந்தரமான அமைதியும் குறையாத இன்பமும் ஏற்படுமா?*



# 158 ஞானத்தினால் விளையும் முக்தியனுபவம்

அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 483

**த**ன்னைப் பரமன் என்று அறிந்து கொள்வதற்காக மட்டுமே தியானத்தினால் மனதைப் பண்படுத்தவேண்டும் என்ற கருத்தை வலியுருத்தும் வகையில் முக்தியனுபவம் பெற ஞானம் மட்டும் போதும் என்ற விளக்கத்தை இந்தப் பாடம் தருகிறது.

எப்பொழுதும் இன்பமாக இருக்கவேண்டும், சிறிது நேரம் கூடத் துன்பத்தை அனுபவிக்கக்கூடாது என்பதுதான் அனைத்து உயிரினங்களின் ஒரே ஆசை. இந்த ஆசை நிறைவேறுவதுதான் முக்தி. கர்ம காண்டம், ஞான காண்டம் என்ற இருபிரிவுகளின் மூலம் முக்தியடைய இருக்கும் ஒரே வழியை வேதம் காட்டுகிறது.

***கர்ம காண்டம்***

முக்தியடையும் தகுதியைப் பெற மனிதன் உடலாலும் மனதாலும் செய்யவேண்டிய செயல்களை வேதத்தின் கர்ம காண்டம் முதலில் விவரிக்கிறது. மேலும் மனதில் வளர்த்துக்கொள்ள வேண்டிய நற்சிந்தனைகளையும் சரியான பாவனைகளையும் இது போதிக்கிறது. உலகில் உள்ள அனைத்து மனிதர்களையும் அவர்களது ஆளுமையின் அடிப்படையில் நான்கு பிரிவாகப் பிரித்து மேலும், அவர்கள் வாழ்வையும் நான்கு கட்டங்களாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவினரும் ஒவ்வொரு கட்டத்தில் செய்ய வேண்டிய செயல்களை தர்மம் என்றும், செய்யக்கூடாத செயல்களை அதர்மம் என்றும் வேதத்தின் கர்ம காண்டம் விளக்கியுள்ளது.

தெரிந்தோ தெரியாமலோ அதர்மத்தைத் தவிர்த்துத் தர்மமாக வாழ்பவர்களுக்கு இவ்வுலக சுகத்தையும் மரணத்திற்குபின்

சொர்க்கம் செல்லும் வாய்ப்பையும் வழங்குவதாக வேதம் உறுதி மொழி அளிக்கிறது. மேலும் ஞானகாண்டத்திற்கு செல்லத் தேவையான மனப்பக்குவத்தையும், புத்திக்கூர்மையையும் தர்மப் படி வாழ்பவர்கள் மட்டுமே பெறுவார்கள் என்ற உண்மையையும் கூறுகிறது.

### ஞான காண்டம்

செயல்கள் செய்வதால் முக்தியடைய முடியாது என்று அறிந்தவர்களுக்கு நான் பரமன் என்ற உண்மையை ஞான காண்டம் போதிக்கிறது. இந்த உண்மையைப் புரிந்துகொண்ட வர்கள் முக்தியடைகிறார்கள். அதன்பின் அவர்களை கர்மகாண்டம் கட்டுப்படுத்தாது என்றாலும் அவர்கள் தொடர்ந்து தர்மமாகவே வாழ்வார்கள்.

### வேதம் காட்டும் பாதை

முக்தி என்பதன் பொருள் பலகோடி வருடங்கள் கழிந்தாலும் மாறாது என்பதால் முக்தியடைய இருக்கும் ஒரேவழியை காட்டும் வேதம் நித்தியமானது. மேலும் அறிவுக்கும் தர்க்கத்திற்கும் அப்பாற்பட்ட ஒரு குழந்தையின் மழலைச் சொற்களின் பொருளை அதன் தாய் புரிந்துகொள்வதுபோல, மனிதர்களின் திக்கற்ற தேடலின் நோக்கத்தை அறிந்து அவர்களின் தேவைகளை நிறைவேற்றிக்கொள்ள வேதம் உதவுகிறது. எவ்வளவுதான் உதவினாலும் அந்த உதவியை ஏற்றுக்கொள்ளும் தகுதி தர்க் கத்தின் துணையுடன் வேதத்தின் சாரத்தை ஜீரணிக்கும் திறன் படைத்த ஒரு சிலருக்கே வாய்க்கிறது. மற்றவர்கள் நான் பரமன் என்ற ஞானம் எனக்கு முக்தியைக் கொடுக்கவில்லை என்றும் விருப்புவெறுப்புகளை அகற்றி மனதின் எண்ணங்களை அழித்துச் சமாதி நிலையில் கிடைப்பதுதான் உண்மையான முக்தியனுபவம் என்றும் தேடலில் தொடர்ந்து ஈடுபட்டுக்கொண்டிருப்பார்கள்.

ஞானத்தினால் ஏற்படும் முக்தியனுபவத்தின் தரம் மனதின் தன்மையைபொறுத்து மாறுபடுமென்றாலும், ஞானம் ஏற்பட்ட வுடன் முக்தியடைந்துவிடுவதால் அதன்பின் மனதை ஒடுக்கவோ விருப்புவெறுப்புகளை அகற்றவோ அவசியமில்லை. உடலில் வயிற்று வலி இல்லை என்று அனைத்து மருத்துவப் பரிசோதனை களின் முடிவுகளும் காட்டினாலும் வயிற்றுவலியால் துடிப்பவன் நிம்மதியடைய மாட்டான். அதுபோல நான் ஆனந்தமயமான

பரமன் என்பதை அறிவுபூர்வமாக உணர்ந்தாலும் மனதின் அலை பாயும்தன்மை மாறாத காரணத்தால் பலர் முக்தியடைந்தபின்னும் தங்கள் தேடலை நிறுத்திக்கொள்வதில்லை. இதுபோன்றவர்களுக்கும் உதவிசெய்யும் நோக்குடன் வேதம் பின்வரும் கருத்துக்களை உபதேசித்துள்ளது.

**1.** சுற்றியுள்ள பொருள்களைக் கண்ணாடி பிரதிபலிப்பது போல உலகைப்பற்றிய எண்ணங்கள் மனதில் ஏற்படுவது அதன் இயற்கை. எண்ணங்களின் சேர்க்கை உணர்வுகள். அறிவின் அடிப்படையில் நாம் உணர்வுகளை வேண்டியது, வேண்டாதது என்று பாகுபாடு செய்கிறோம். வேண்டாத உணர்வுகளுக்குத் துன்பம் என்று பெயர். நான் பரமன் என்ற அறிவு ஏற்பட்டதும் துன்பங்கள் முழுமையாக மறைந்துவிடும். ஏனெனில் மூற்றுணர்ந்தோன் வேண்டாத உணர்வுகள் என்று எதற்கும் பெயரிடுவதில்லை. கோபம், எரிச்சல் போன்ற உணர்வுகள் சிலசமயம் அவர்கள் மனதில் தோன்றினாலும் அவை வந்தசுவடு தெரியாமல் மறைந்துவிடும். எனவே அவை ஞானியின் மனதில் எவ்விதப் பாதிப்பையும் ஏற்படுத்தாது.

**2.** சாப்பிடும்பொழுது நாக்கைக் கடித்துவிட்டதால் ஏற்படும் வலியில் நம்மை மறந்து பற்களைக் கண்டிப்பதோ அல்லது நீ ஏன் பற்களின் நடுவே சென்றாய் என்று நாக்கைத் திட்டுவதோ தவறில்லை. நம்முடன் பழகும் அனைத்து மனிதர்களின் வடிவில் இருப்பது நானே என்ற அறிவு இருந்தாலும் அவர்களில் சிலர் மேல் கோபப்படுவதில் தவறில்லை. ஆனால் அவர்களை வருத்தப் பட வைக்கவேண்டும் என்ற எண்ணம் இருக்காது. பல் செய்த தவறுக்கு அதை சுத்தியலால் அடிக்கவேண்டும் என்று தோன்றுவதில்லை.

**3.** யாருக்கும் எவ்விதத் துன்பமும் கொடுக்கும் எண்ணத்தைத் தவிர்த்துத் தர்மமாக வாழ மனக்கட்டுப்பாடு மிக அவசியம். தர்மமாக வாழ வேண்டும் என்று கர்ம காண்டம் விதித்திருப்பதற்கு ஒரே காரணம் இந்த மனக்கட்டுப்பாட்டை மக்களுக்கு ஏற்படுத்திக் கொடுப்பதுதான். தர்மமாக வாழத் தேவையான அளவு மனக்கட்டுப்பாட்டை கடவுள் பக்தி கொடுக்கும். அதன் பின்தான் அவர்கள் ஞானம் பெறத் தகுதியடைவார்கள். எனவே நான் பரமன் என்ற ஞானத்தைப் பெற்ற அனைவருக்கும் தேவையான மனக் கட்டுப்பாடு ஏற்கெனவே இருக்கும் காரணத்தால் கோபம்,

எரிச்சல் போன்ற உணர்வுகளைத் தவிர்க்க எவ்வித முயற்சியும் செய்யவேண்டிய அவசியமில்லை.

**4.** வாகனத்தைச் சுத்தமாக நல்ல நிலையில் பராமரிப்பது அவசியம் என்றாலும் எந்த இடத்திற்கும் போகாமல் அதை கொட்டகையில் அடைத்து வைத்திருக்கக் கூடாது. வெளியில் எடுத்துச்சென்றால் அது அழுக்காவதையும், பழுதடைவதையும் தவிர்க்க முடியாது. அதுபோலக் கோபம், எரிச்சல், ஏமாற்றம் ஏற்படாமல் இருக்க யாருடனும் பேசாமல் கண்ணை மூடி தவம் செய்து வாழ்நாட்களை வீணடிக்கக் கூடாது. நான் பரமன் என்பதைப் புரிந்துகொள்வது எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாமல் எல்லா உலக இன்பங்களையும் அனுபவிப்பதற்காக மட்டுமே என்பதை மறக்கக் கூடாது.

**5.** கால்பந்தாட்டத்தில் இரண்டு நிமிடத்திற்கு ஒரு முறை ஒரே அணி தொடர்ந்து கோல் போட்டுக்கொண்டிருந்தால் எவ்விதச் சுவாரசியமும் இருக்காது. வெற்றியும் தோல்வியும் மாறி மாறி ஏற்பட்டு நம்முடைய அணி வெற்றி பெறவேண்டுமே என்ற ஏக்கமும் எதிர்பார்ப்பும் நம் மனதில் ஏற்பட்டால்தான் முடிவில் கிடைக்கும் வெற்றி சுவையாக இருக்கும். ஆனால் அதே நேரத்தில் நம் அணி தோற்றால் ஏற்படும் ஏமாற்றத்தையும் வருத்தத்தையும் ஏற்றுக்கொள்ளவும் தயாராக இருக்க வேண்டும். வெற்றி தோல்வி மாறிமாறி ஏற்பட்டால்தான் வாழ்வு சுவைக்கும். தோல்விக்குப் பயந்து எந்த அணியின் கட்சியிலும் சேராமல் இருப்பதுபோல் கோபம் எரிச்சல் போன்ற உணர்வுகளுக்குப் பயந்து வாழ்க்கையைத் தவறவிட்டுவிடக்கூடாது.

**6.** கால்பந்தாட்ட ரசிகர்களில் பலர் அதை ஒரு விளையாட்டு என்று அறியாமல் தவறாக ஆடியவனைக் கொலை செய்யும் வெறியுடன் இருப்பார்கள். இதனால் அணிகளின் வெற்றிதோல்வி ரசிகர்களிடையே மோதல்கள் மட்டுமின்றி சில சமயம் உயிர் சேதங்கள் ஏற்படக்கூட காரணமாக அமையலாம். வாழ்க்கையே ஒரு விளையாட்டு என்றும், அதில் வெற்றி, தோல்வி ஆகிய இரண்டும் ஒன்றுடன் ஒன்று பின்னிப்பிணைந்துள்ளவை என்றும் உணர்ந்த முற்றுணர்ந்தோர்கள் துன்பம் கலவா இன்பத்தை எப்பொழுதும் அனுபவிப்பார்கள்.

**7.** வாழ்வில் ஏற்படும் வெற்றி-தோல்வி, வரவு-செலவு போன்ற இருமைகள் மனதில் ஏற்படுத்தும் ஏற்றஇறக்கங்கள்

அனைத்தையும் துன்பம்கலவா இன்பம் என்று அறிபவன் முற்றுணர்ந்தோன். வாழ்வில் தோல்வியே ஏற்படக்கூடாது என்று எதிர்பார்க்கும் பற்றுடையோர்கள் தொடர்ந்து தர்மமாக வாழ்ந்து மனதைக் கட்டுக்குள் கொண்டுவரவேண்டும். வேதம் படிக்கும் முக்திவிழைவோர்கள் இருமை கலந்த உலகம், அதை பிரதி பலிக்கும் மனது, இன்பம், துன்பம் போன்றவற்றின் சரியான பொருளைப் புரிந்துகொள்ள முயற்சிக்கவேண்டும்.

**8.** அதர்மமாக வாழ்ந்தால் அதற்கான தண்டனையை நிச்சயம் அனுபவித்துத்தான் ஆகவேண்டும் என்று ஆரம்பகாலத்தில் வேதத்திலிருந்து பெற்ற அறிவின் உண்மைப்பொருளை உணர வேண்டும். நாம் நம் கடமையைச் சரியாகச் செய்யாமல் இருப்பது, மற்றவர்களுக்குத் துன்பம் தர ஆசைப்படுவது போன்ற செயல்கள் நம் மனதின் நிம்மதிக்குத் தடைக்கற்கள். நமக்கு எதிரிகள் என்று யாரேனும் இருந்தால் அவர்கள் எப்பொழுது நம்மைத்தாக்குவார்கள் என்ற பயம் இருந்து கொண்டேதான் இருக்கும். நாம் யாரை யாவது ஏமாற்றினால் அந்த உண்மை வெளிப்பட்டுவிடுமோ என்ற எண்ணம் நம்மைத் தொடர்ந்து வாட்டும். எனவேதான் தர்மமாக வாழ வேதம் கட்டளையிட்டுள்ளது. இதையறிந்த முற்றுணர்ந் தோர்கள் பாவபுண்ணியங்களுக்கு அப்பாற்பட்டவர்கள். எனவே அவர்கள் தங்கள் செயல்களால் மற்றவர்கள் துன்பம் அடைய நேரிட்டது குறித்துக் கவலைப்படமாட்டார்கள்.

**9.** உலகத்துடன் உறவாடுவதால் மட்டுமே நம்முடைய இயல்பான இன்பத்தை அனுபவிக்கமுடியும். மேலும் ஒரே எண்ணம் தொடர்ந்து நம் மனதில் இருக்கவும் முடியாது. எனவே வாழ்வில் ஏற்படும் அனைத்து அனுபவங்களையும் இன்பம் துன்பம் என்று வகைப்படுத்தாமல் அப்படியே ஏற்றுக்கொண்டால் முக்திக்காக உலகை நாடி ஓடவோ அதிலிருந்து விலகியிருக்க முயல்வதோ தேவையில்லை.

**10.** உலகத்தின் மீது பற்றுடையோர்கள் மட்டுமே துன்பத்தை அனுபவிப்பார்கள். எதன் மீதும் பற்றுவைக்காததால் ஒரு சுவர் எவ்விதத் துன்பத்தையும் அனுபவிப்பது கிடையாது. ஆனால் சுவராக இருப்பதைக்காட்டிலும் பற்றுடன் துன்பப்படுவது மேல் என்று சுவாமி விவேகானந்தர் சுட்டிக்காட்டுகிறார். துன்பத்தைத் தவிர்க்க ‘நான் மட்டுமே இன்பத்தின் ஒரே இருப்பிடம்’ என்ற அறிவு அவசியம். இந்த அறிவு ஏற்பட்டவுடன் பற்றுவைத்த

பொருள் கிடைக்காமல் போனால் இன்பம் பறிபோய் விட்டது என்று பதறவேண்டிய நிலை ஏற்படாது. வேறு ஒருபொருள் மேல் பற்றுக் கொண்டு நம்மிலிருந்து கிடைக்கும் இன்பத்தைத் தொடர்ந்து அனுபவிக்கலாம்.

**11.** பற்றிலிருந்து விடுதலையடையும் சக்தியில்லாதவர்கள் பற்றுடையோர்கள். உலகப்பொருள்களின் மேல் உள்ள பற்றைத் தற்காலிகமாகக் குறைத்துக்கொண்டு வேதம் படிப்பவர்கள் முக்தி விழைவோர்கள். உலகப்பொருள்களுக்கு நம்மைப் பாதிக்கும் சக்தியில்லை என்பதை உணர்ந்த முற்றுணர்ந்தோர்கள் உலகத்துடன் ஏற்படும் பற்றிலிருந்து வேண்டும்பொழுது விடுதலைபெறும் சக்தியுள்ளவர்கள்.

**12.** நான் ஆனந்தமயமான பரமன் என்ற அறிவு எவ்வித ஆனந்தத்தையும் கொடுக்காது. உலகுடன் உறவாடுவதால் மட்டுமே ஆனந்தத்தை அனுபவிக்க முடியும். மனதில் பல எண்ணங்கள் மாறிமாறி ஏற்பட்டுக்கொண்டிருந்தால் அது இல்லாத உலகத்திற்கு ஒரு இருப்பைக் கற்பித்து இருக்கும் ஆனந்தத்தை அனுபவிக்க விடுவதில்லை. நாம் விரும்பும் ஒரு பொருளைப் பார்த்ததும் அதைப்பற்றிய எண்ணம் மட்டும் மனதை ஆக்ரமிக்கும் பொழுது பிரியம் என்ற முதல்நிலை இன்பம் நமக்குக் கிடைக்கிறது. அந்தப்பொருளை நாம் அடைந்தபின் அடுத்த நிலையான மோதம் பிறக்கிறது. அதை அனுபவிக்கும்பொழுது அதனுடன் ஐக்கியமாகி உலகை மறந்து பிரமோதம் என்ற உயர்ந்த நிலை இன்பத்தை அனுபவிக்கிறோம்.

**13.** பிரியம், மோதம், பிரமோதம் ஆகிய மூன்று வகை இன்பங்களும் உலகப் பொருள்களிலிருந்து கிடைப்பதாக நினைப்பவன் பற்றுடையோன். இது தவறு என்ற அறிவுடன் உலக உறவைக் குறைத்துக்கொண்டு பரமனை நாடுபவன் முக்திவிழைவோன். பரமன்தான் உலகமாகக் காட்சியளிக்கிறான் என்பதை உணர்ந்த முற்றுணர்ந்தோன் எவ்விதத் தடையுமில்லாமல் உலகுடன் உறவாடுவான்.

**14.** மனதில் தோன்றும் எந்த ஒரு எண்ணமும் நிலைத்து நிற்காது. மாறுவது மனம். காதலில் மூழ்கிக் காலம் முழுவதையும் கழித்துவிடமுடியாது. மோதல் கலந்த காதல், ஊடல் கலந்த கூடல் முதலிய மாற்றங்கள்தான் தடைபடாத இன்பம்.

**15.** இருமைகளிடையே ஊசலாடும் மனதின் நிலைக்கேற்ப இன்பத்திற்கும் துன்பத்திற்கும் இடையே ஊசலாடுபவன் பற்றுடையோன். வெளியுலகத் தொடர்பைத் தவிர்த்துப் பரமனை அறிவதன் மூலம் துன்பம் கலக்காத இன்பத்தைப் பெறலாம் என்று நினைப்பவன் முக்திவிழைவோன். தன் உண்மை இயல்பான இன்பத்தை மனதில் தோன்றும் எண்ணங்களால் மாற்ற முடியாது என்பதை உணர்ந்த முற்றுணர்ந்தோன் உலகில் கிடைக்கும் பிரிய, மோத, பிரமோத சுகங்களைத் தடையில்லாமல் அனுபவிப்பான்.

**16.** விடுமுறை நாட்களில் வெகு வேகமாகப் பணம், நேரம், முயற்சி ஆகியவற்றைச் செலவிட்டு எங்காவது சுற்றுப்பயணம் செய்து இன்பத்தைத் தேடுபவர்கள் பற்றுடையோர்கள். கோவிலுக்குச் சென்று உபன்யாசம் கேட்டல் அல்லது புத்தகங்கள் படித்தல் போன்ற செயல்களினால் நிம்மதியைத் தேடுபவர்கள் முக்திவிழைவோர்கள். இன்பமும் நிம்மதியும் தன்னிடம் எப்பொழுதும் இருப்பவை என்பதை உணர்ந்த முற்றுணர்ந்தோர்கள் தங்களது ஆளுமைக்கும் பணவசதிக்கும் ஏற்றபடி உலகை வலம் வந்து தன் இயல்பான இன்பத்தை உலகச் சுகங்களாக அனுபவிப்பார்கள்.

**17.** கயிற்றின் மீது ஏறி மலையின் சிகரத்தை எட்டிப் பிடித்ததும் ஏற்படும் இன்பம் எவ்வளவு சிரமத்துக்கு ஆளானோம் என்பதைப் பொறுத்து மாறுபடும். இது போன்ற சாதனைகளைச் செய்வதால் மனதின் எண்ணங்கள் அகன்று நமது இயல்பான இன்பத்தை வெளிக்காட்டுகிறது என்பதை அறிந்த முற்றுணர்ந்தோர்கள் உலக மக்களுக்கு நன்மையேற்படும் செயல்களில் இன்பமடைவார்களே தவிரத் தனது உடல், மன ஆரோக்கியத்திற்கு ஆபத்து ஏற்படுத்தக்கூடிய செயல்களைச் செய்யமாட்டார்கள். தங்கள் சக்திக்கு மீறிய சமூகப்பணிகளை ஏற்றுக்கொண்டு அவற்றை வெற்றிகரமாக நடத்த முயல்வதால் கிடைக்கும் வெற்றி தோல்விகளை அவர்கள் அனுபவிப்பார்கள்.

**18.** பிரியம், மோதம், பிரமோதம் ஆகிய இன்ப அனுபவங்கள் நிலையானவை அல்ல. மனதின் எண்ணங்கள் ஒடுங்கிய நிலையில் தன் உண்மை உருவான ஆனந்தம் வெளிப்படுவதை அறியாதவர்கள் இன்னும் இன்னும் என்ற வெறியுடன் அதிகப்படியான புலன் இன்பங்களைத் தேடுவதிலும் புதிய புதிய பொருள்களையும் உறவுகளையும் அடைவதிலும் தங்கள் கவனத்தைச் செலுத்தித் துன்புறுவார்கள். இன்பத்தின் வற்றாத

ஊற்று தன்னிடம் உள்ளதை அறிந்தவர்கள் புதிய பிரிய, மோத, பிரமோதங்களை பெற எவ்விதத் துன்பத்தையும் அனுபவிப் பதில்லை.

**19.** இன்பத்தைத்தேடி உல்லாசப்பயணம் செல்பவனின் வாகனம் பாதிவழியில் பழுதடைந்து வேறுவழியில்லாமல் மாட்டு வண்டியில் பயணம் செய்ய நேரிட்டால் மிகுந்த வருத்தமடை வான். தன் சுய இன்பத்தைப் பிரிய, மோத, பிரமோதங்களாக அனுபவிக்க உல்லாசப்பயணம் செல்பவன் மாட்டுவண்டியில் செல்லும் வாய்ப்பு கிடைத்ததை எண்ணி மகிழ்வான்.

**20.** தான் குறைவுள்ளவன் என்றும் தன் குறையை நிறைக்கும் சக்தி இந்த உலகத்திற்கு இருக்கிறது என்றும் எண்ணு பவன் பற்றுடையோன். தன் குறையை நிறைக்க வேதம் பயில வேண்டும் என்று முயலுபவன் முக்திவிழைவோன். தான் நிறைவு டையவன் என்றும், இந்த உலகமே தன்னை ஆதாரமாகக் கொண்டுதான் சுழல்கிறது என்றும் உணர்ந்த முற்றுணர்ந்தோன் தன் உடலையும் மனதையும் ஆரோக்கியத்துடன் வைத்துக் கொண்டு உலக இன்பங்களை அனுபவிப்பான்.

**21.** தான் உடல் அல்ல என்று தெரிந்திருந்தாலும் உடற் பயிற்சி செய்து உடலை ஆரோக்கியமாகவும் திடமாகவும் வைத் திருப்பது போலத் தியானம் செய்து மனதை ஆரோக்கியமாகவும் உறுதியாகவும் வைக்கத் தொடர்ந்து முயற்சி செய்யவேண்டும். கத்தியைத் தீட்டுவதற்கு எவ்வளவு முயற்சி செய்யவேண்டு மென்பது அதை எப்படிப் பயன்படுத்தபோகிறோம் என்பதைப் பொறுத்துத் தீர்மானிக்கப்படவேண்டும். அதுபோல உடலையும் மனதையும் எப்படி உபயோகப்படுத்தப்போகிறோம் என்பதைப் பொறுத்து அவற்றைச் சரியாகப் பராமரிக்கவேண்டும். யாருடனும் பேசாமல் தனியே வாழ்வைக் கழிப்பதாயிருந்தால் தியானம் செய்யவேண்டிய அவசியமேயில்லை.

**22.** தர்மமாக வாழ்வதன் மூலம் ஞானம் பெறத்தேவையான மன உறுதியையும், மனப்பக்குவத்தையும் பற்றுள்ளோர்கள் பெறவேண்டும். தியானம் செய்வதன் மூலம் முக்திவிழைவோன் நான் பரமன் என்ற அறிவை நிலைநிறுத்திக்கொள்ள வேண்டும். முற்றுணர்ந்தோன் தன் வாழ்நாள் முழுவதும் உடலையும் மனதையும் ஆரோக்கியமாக வைத்திருக்கத் தேவையான பயிற்சி களை மட்டும் செய்வான்.

**23.** எவ்வளவுதான் முயன்றாலும் உடலின் எடை குறைய வில்லையென்றால் அதை குறித்துக் கவலைப்பட்டுப் பயன் இல்லை. அதுபோல் எவ்வளவுதான் முயன்றாலும் அவ்வப் பொழுது மனதில் கோபம் எட்டிப்பார்ப்பதைத் தவிர்க்கமுடிய வில்லை என்று முற்றுணர்ந்தோன் வருத்தப்படமாட்டான். மேலும் எடை கூடாமல் இருக்க முயற்சி செய்வதுபோல அவ்வப்பொழுது ஏற்படும் கோபம் அதிகரிக்காமல் இருக்க அவன் முயற்சிப்பான். அவ்வாறு செய்யாவிடிலும் அவன் முற்றுணர்ந்தோனே.

**24.** தேவைகளும் போகங்களும் அவரவரின் அறிவுக்கேற்ற படி மாறும். அனைத்துப் போகங்களையும் தேவைகளாக மாற்று பவன் பற்றுடையோன். தேவைகளைக் குறைத்துக்கொண்டு போகங்களைத் தவிர்த்து வேதம் பயில நேரம் ஒதுக்குபவன் முக்தி விழைவோன். அனைத்துத் தேவைகளையும் போகங்கள் என்றுணர்ந்த முற்றுணர்ந்தோன் எத்தனை கோடி இன்பம் தந்தாய் என்ற மனப்பாங்குடன் கைகால்கள் சரிவர இயங்குவதற்கும், சூரியன் கிழக்கே உதித்து மேற்கே மறைவதற்கும் கடவுளுக்கு நன்றி செலுத்துவான். அதே சமயம் தன் உடலையும் மனதையும் ஆரோக்கியமாக வைக்கும்பொருட்டு செய்யும் வேலைகளின் உபபயனாக கிடைக்கும் வசதிகளையும் அவன் அனுபவிப்பான்.

**25.** ஞானிகள் தாங்களறிந்த முக்திநிலையை எடுத்துக் கூறினால் அனைவராலும் விளங்கிக்கொள்ள முடியாமல் இருக் கலாம். ஆனால் புரியாமல் பேசினால்தான் ஞானி என்று பொருள் அல்ல. கனவில் நடந்த நிகழ்வுகளைப்பற்றிப் பேசுவதுபோல ஞானி உலக நிகழ்வுகளைப் பற்றி மற்றவர்களுடன் உரையாட லாம். இதுபோன்ற சமயங்களில் அவரது பேச்சு பற்றுடையோர் களைப்போல் இருப்பதைவைத்து அவர் முற்றுணர்ந்தோன் அல்ல என்று முடிவெடுப்பது தவறு. முற்றுணர்ந்தோன் என்பதற்கு மூன்று காலங்களையும் அறிந்தவன் என்றோ தூரதேசத்தில் நடப் பதைப் பார்க்கும் சக்தி கொண்டவன் என்றோ பொருள் அல்ல. வாழ்வில் நடப்பது அனைத்தும் தான் காணும் கனவு என்பதை அறிந்தவர்கள் மட்டுமே முற்றுணர்ந்த ஞானிகள்.

**26.** வெண்ணையை கையில் வைத்துக்கொண்டு நெய்க்கு அலைவதுபோல வெளி உலகில் இன்பத்தைத் தேடுபவன் பற்றுடையோன். வெண்ணைக்குள் நெய்யைத் தேடுவதுபோலப் பக்தி, தியானம் மூலம் அகவுலகில் இன்பத்தைத்தேடுபவன் முக்தி

விழைவோன். வெண்ணையை உருக்கி நெய்யைப் பெறுவது போல் ஞானத்தை உருக்கி மனதுக்குள் கரைத்த முற்றுணர்ந்தோன் தானே இன்பமயமானவன் என்றும், தன்னை ஆதாரமாகக் கொண்டு உருவான இவ்வுலகும் மனமும் இன்பத்தை அனுப விக்கக் கிடைத்துள்ள கருவிகள் என்றும் அறிவான்.

**27.** இவ்வுலக அனுபவம் ஒரு குறிப்பிட்ட காலம் வரைதான் நீடிக்கும். கனவுகள் தொடர்வதோ முடிவதோ நம் வாழ்வைப் பாதிக்காது. அது போல நித்தியமாக இருப்பவன் நான் என்று உணர்ந்த முற்றுணர்ந்தோன் தன் உடலாலும் மனதாலும் அனு பவிக்கும் இந்த வாழ்வு தொடரவோ முடியவோ ஆசைப் படுவதில்லை.

### சாராம்சம்

*உலகின் இருமைகளுக்கிடையே ஊசலாடும் மனது வேதம் படிக்கத் தயார் நிலையில் இருக்காது. சூழ்நிலையைக் கட்டுப்படுத்தித் துன்பத்தைத் தவிர்த்து இன்பமாக வாழலாம் என்ற முயற்சி தொடர்ந்து தோல்வியை மட்டுமே தருகிறது என்று புரிய ஆரம்பிக்கும்பொழுது வெளியுலகுடன் நடக்கும் போராட்டம் குறையும். வேதம் கூறும் கருத்துக்கள் புரிய ஆரம்பிக்கும். பின் தீவிரமான தியானத்தால் மனதைச் செம்மைப்படுத்தி நான் பரமன் என்ற உண்மையை ஆழ்மனதில் புதைத்தபின் மேற்கொண்டு மனதை அடக்க எவ்விதச் செயலையும் செய்யவேண்டியதில்லை.*

*தன் மனமும் உலகின் இருமைகளின் பிரதிபலிப்பாக அதில் தெரியும் ஏற்ற இறக்கங்களும் தன்னுடைய இயல்பான இன்பத்தை இம்மியளவும் குறைக்க முடியாது என்பதை உணர்ந்தபின் வாழ்வில் துன்பம் கலவா இன்பம் பிறக்கும்.*

### பயிற்சிக்காக

1. முக்தி என்றால் என்ன?
2. முக்தியடையக் கர்ம காண்டம் எவ்வாறு உதவுகிறது?

3. பிரியம், மோதம், பிரமோதம் ஆகியவற்றை விளக்குக.

## சுயசிந்தனைக்காக

- *குணம் எனும் குன்றேறி நின்றார் கோபம் கணமேனும் காத்தல் அரிது என்ற திருக்குறளின் பொருளை ஆய்க.*
- *முக்தியடைந்தபின் மனதின் அலைபாயும் தன்மை மாறிவிடுமா?*
- *பேசும் சொற்கள், செய்யும் செயல்கள் ஆகியவற்றின் அடிப்படையில் ஒருவரை முக்தியடைந்தவர் என்று அடையாளம் காண முடியுமா?*



## 159 அலைபாயும் அமைதி

அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 484 - 487

தியானம் என்பது மனதை அமைதிப்படுத்த மனதால் மட்டுமே செய்யப்படும் வேலை என்பதால் உடல் ஓய்வு நிலையில் இருப்பது அவசியமா என்ற கேள்விக்கான பதில் நம் நோக்கத்தைப்பொறுத்து மாறும் என்று இந்தப் பாடம் பதிலளிக்கிறது.

உடல் இயங்கிக்கொண்டிருக்கும்பொழுது மனதை அமைதிப் படுத்த முடியாது. நடப்பது, ஓடுவது, ஆடுவது போன்ற காரியங்களைச் செய்யும்பொழுது மனம் அமைதியில்லாமல் அலைபாய்ந்து கொண்டிருப்பதைத் தவிர்க்க முடியாது. எனவே செயல்கள் எதையும் செய்யாமல் உடலை அமைதிப்படுத்தினால் தான் மனதை அடக்க முயற்சிச்செய்ய முடியும். அதே சமயம் எவ்வித வேலையும் செய்யாமல் உயிர் வாழவோ உலகவாழ்வை அனுபவிக்கவோ முடியாது.

பணம் சம்பாதிப்பது முக்கியமா, செலவழிப்பது முக்கியமா என்ற கேள்விக்கான பதில் செலவழிப்பதற்காகத்தான் பணம் சம்பாதிக்க வேண்டும் என்று சொல்வதுபோல ஞானம் பெறும் வரை உடலைக் கட்டுப்படுத்தித் தியானம் செய்யவேண்டும் என்றும், ஞானம் பெறுவது உலகச் சுகங்களைத் துன்பம் கலக்காமல் அனுபவிப்பதற்காகத்தான் என்றும் உணர்ந்துகொள்ள வேண்டும்.

ஊர் சுற்றி உலக இன்பங்களை அனுபவிக்கத்துடிக்கும் மாணவர்கள் தேர்வு எழுதுவதற்காகத் தங்கள் மனதின் தேடல்

களைக் கட்டுப்படுத்திப் பாடத்தில் கவனம் செலுத்துவதன் ஒரே நோக்கம் நல்ல மதிப்பெண்களுடன் தேறினால்தான் நிறைய பணம் சம்பாதிக்கும் வாய்ப்பு கிடைக்கும் என்பதுதான். மாணவப்பருவம் முடிந்து வேலை பார்க்கத்துவங்கியவுடன் எவ்விதக் கட்டுப்பாடும் இன்றி மனம் போன போக்கில் வாழ்க்கையை வாழ ஆரம்பிக்கும் இளைஞர்கள் போல மனதைக் கட்டுப்படுத்தி வேதம் படிப்பதன் ஒரே நோக்கம் ஞானம் பெற்றதும் எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாமல் இன்பமாக வாழலாம் என்பதுதான்.

பணம் உலகச் சுகங்களையும் ஞானம் குறையாத இன்பத் தையும் தரவல்லவை. பெற்ற ஞானம் அழியாது. உலகப் பொருள்களை அனுபவிக்க ஒரு எல்லையில்லை. எனவே ஞானம் பெற்றபின் உடலிலும் மனதிலும் திறமை இருக்கும்வரை தொடர்ந்து முயற்சி செய்து நிறைய பணம் சேர்த்து வாழ்க்கைத் தரத்தை அதிகரித்துக்கொள்ளுவதன் மூலம் மனம் விரும்பியபடி வாழ்வை அனுபவிக்கலாம்.

### உலகப்பொருள்கள் செய்யும் மூன்று செயல்கள்

அறியாத பொருள் மேல் ஆசை வைக்க முடியாது. இன்பம் என்றால் என்ன என்று அறியாதவர்களால் எப்பொழுதும் இன்ப மாக இருக்க வேண்டும் என்று ஆசைப்பட முடியாது. இந்த ஆசை எல்லோருக்கும் இருப்பதால் அனைவரும் தங்கள் வாழ்வில் இன்பத்தை அவ்வப்பொழுது அனுபவிக்கிறார்கள் என்பது தெளி வாகிறது. உலகில் உள்ள பொருள்கள்தான் மக்களுக்கு இன்ப அனுபவத்தைப் பெறும் வாய்ப்பைக் கொடுத்துள்ளன. உலகப் பொருள்கள் இல்லாவிட்டால் இன்பம் என்பது என்ன என்பதை அறியாதவர்களாகத்தான் எல்லோரும் இருந்திருப்பார்கள்.

சிறுவயதில் முதன் முதலாக விளையாட்டுப்பொம்மைகள் மூலம் இன்பத்தை அனுபவித்ததால் பொருள்களில்தான் இன்பம் இருக்கிறது என்ற தவறான அறிவு அனைத்து மனிதர்களுக்கும் ஆரம்பத்திலிருந்தே ஏற்பட்டுவிடுகிறது. ஆயினும் இன்பம் என்றால் என்ன என்று தெரியாமல் இருப்பதைவிட தவறான அறிவுடன் இன்பத்தை அனுபவிப்பது மேல்.

தாஜ்மஹாலைப் பார்க்க ஆக்ரா செல்லவேண்டும் என்று சரியான அறிவுரை சொல்பவர் தவறான பாதையைக் காண்பிப்பது போல, வாழ்வின் குறிக்கோள் இன்பமாக இருப்பதுதான் என்று

சரியாகச் சொல்லிக்கொடுத்த உலகப்பொருள்கள் இன்பத்தை அடையத் தவறான பாதையைக் காட்டிக்கொடுக்கின்றன. எனவே தான் இன்பமாக இருக்கப் பணம் தேவை என்ற தவறான அறிவு டன் இன்பத்தைத் தியாகம் செய்து பணம் சம்பாதிக்கும் செயல்களில் பலர் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

இருப்பது நான் மட்டும்தான். என் மனமும் இவ்வுலகப் பொருள்களைப்போல் இருப்பதுபோல் தோன்றும் மாயை என்பதை அறியாத பற்றுடையோர்கள் பிரியம், மோதம், பிரமோதம் ஆகிய இன்பங்களை அனுபவிக்கும்பொழுது அவை உலகத்திலிருந்து கிடைக்கின்றன என்று நினைப்பார்கள். இது தவறான அறிவு என்று உணரும்பொழுது அவர்கள் முக்திவிழை வோர்களாகிறார்கள். இதுபோல் அவர்களின் முன்னேற்றத்திற்கு வழி வகுப்பதும் உலகத்தில் உள்ள பொருள்களே. எனவே இன்பம்தான் வாழ்வின் குறிக்கோள் என்று மனிதர்களுக்கு உணர்த்தி அவர்களை இன்பத்தைப் பெற பொருள்களை நாடும்படி செய்து அந்தத் தேடலில் அவர்கள் தோற்கும்பொழுது ஏற்படும் மனப்பக்குவத்தின் காரணமாக இன்பத்தின் சரியான இருப்பி டத்தைத்தேட அவர்களை வேதத்தைப் படிக்க வைப்பது ஆகிய மூன்று செயல்களையும் உலகப்பொருள்கள் செய்கின்றன.

## உலகப்பொருள்கள் படைக்கப்பட்டதன் நோக்கம்

எல்லையில்லா ஆனந்தங்களை உள்ளடக்கிய இந்த உலகம் படைக்கப்பட்டதன் ஒரே நோக்கம் நாம் அதில் எல்லாச் சுகங் களையும் அனுபவித்துத் துன்பம் கலக்காத இன்பத்துடன் வாழ வேண்டும் என்பதுதான்.

முதன்முதலில் சைக்கிள் ஓட்டும்பொழுது கீழே விழுந்து முட்டியில் காயம்படும் என்பதால் சைக்கிள் வாங்கக் கூடாது என்று முடிவெடுப்பது முட்டாள்தனம். காயம்படாமல் ஓட்டக்கற்றுக் கொள்ளவேண்டும். அதுபோலத் துன்பங்களுக்குக் காரணம் உலகத்தில் உள்ள பொருள்கள் என்று நினைப்பது அறியாமை. இன்பமாக வாழத் தேவையான அறிவைப் பெற்றால் துன்பம் கலக்காத இன்பத்துடன் வாழலாம்.

சைக்கிள் ஓட்டுவதைக் கற்றுக்கொள்ள சைக்கிளின் உதவி தேவை. அதுபோல் இன்பமாக வாழத் தேவையான அறிவைப் பெற மேற்குறிப்பிட்ட மூன்று செயல்கள் மூலம் உலகப்

பொருள்கள் நமக்கு உதவுகின்றன. எனவேதான் இவ்வுலகம் கர்ம பூமி என்றும், முக்தியடைய வழிவகுக்கும் ஒரே இடம் என்றும் வேதம் கூறுகிறது. சுவர்க்கம் முதலிய பல உலகங்களை வேதம் வர்ணித்தாலும் அவை தற்காலிகமானவை என்ற காரணத்தால் நிரந்தரமான இன்பத்தைத் தரக்கூடிய ஒரே வழி பூமியில் மனித னாகப்பிறப்பது மட்டுமே என்றும், அரிதாகக் கிடைத்திருக்கும் இந்த வாய்ப்பைத் தவறவிடக்கூடாது என்றும் வேதம் எடுத்து ரைக்கிறது.

சைக்கிள் ஓட்டத்தெரிந்தவுடன் நடந்து செல்வது நின்றுவிடும். சைக்கிள் இல்லாமல் எங்கும் செல்வது முடியாதகாரியம் என்று தோன்ற ஆரம்பித்துவிடும். சிறிது காலத்தில் சைக்கிளை விட்டு விட்டு மோட்டர் சைக்கிள் வாங்கவேண்டும் என்ற ஆசை ஏற்படும். அதன் பின் உடன் செல்ல ஒரு துணை மீது நாட்டம் ஏற்படும். இதுபோல ஒரு முடிவேயில்லாமல் ஒன்றன்பின் ஒன்றாக உலகச் சுகங்களை அனுபவிக்கும் ஆசையையும் வாய்ப்பையும் தரும் வண்ணம் எண்ணற்ற பொருள்கள் இவ்வுலகில் படைக்கப் பட்டுள்ளன. முடிந்தவரை அனைத்தையும் அனுபவிக்கவேண்டும் என்ற ஆசை நியாயமானது. முற்றுணர்ந்தோர்கள் இது போன்ற ஆசைகளை நிறைவேற்றிக்கொள்ள முயற்சி செய்யும்பொழுதும் இன்பமாகச் செயல்படுவார்கள். மேலும் முயற்சி செய்த பின்னும் இந்த ஆசைகள் நிறைவேறாவிட்டால் அதைகுறித்து வருத்த மடைய மாட்டார்கள். துன்பம் கலவா இன்பத்துடன் மென்மேலும் உலகச் சுகங்களை அனுபவிப்பதற்காகவே உலகில் உள்ள அனைத்துப் பொருள்களும் படைக்கப்பட்டுள்ளன.

### உலகப்பொருள்களைப் படைத்தவன்

உலகைப்படைத்தவன் ஆண்டவன் என்று நம்புபவன் பற்று டையோன். பரமனின் மாயாசக்தி உலகமாகப் பரிணமித்துள்ளது என்று நினைப்பவன் முக்திவிழைவோன். இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் படைத்தவன் தான்தான் என்ற உண்மையை அறிந்தவன் முற்றுணர்ந்தோன்.

இது என்று சுட்டிக்காட்டகூடிய உடல் மனம் உள்ளடங்கிய உலகப்பொருள்கள் அனைத்தையும் அறிபவன் அவற்றைப் படைத்தவனாகத்தான் இருக்கவேண்டும் என்பதைத் தர்க்கத்தின் துணையுடன் நிருபிக்கலாம். இதுவும் அதுவும் ஒன்று என்பது

உண்மையாக இருக்கவேண்டுமானால் இது அது என இரு பொருள்கள் இருக்கவே முடியாது. ஒரே மனிதரை வேறு ஒருவர் என்று தவறாக நினைக்கும்பொழுதுதான் அவர்தான் இவர் என்ற சரியான அறிவைப் பெற முடியும். அதுபோல் இவ்வுலகம் உண்மை என்ற தவறான அறிவைச் சரிசெய்தால் உண்மையில் இருக்கும் ஒரே பொருளான நான்தான் இவ்வுலகைப் படைத்தவன் என்பது தெளிவாகும்.

இடம், பொருள், காலம் ஆகிய மூன்றும் இருப்பதுபோலத் தோன்றும் மாயை என்பதால் இவற்றின் ஆதாரமாக இருக்கும் உண்மை என்னைத்தவிர வேறு யாராகவும் இருக்க முடியாது. ஏனெனில் எவ்வித மாற்றமுமில்லாமல் எப்பொழுதும் இருக்கும் என்னைத்தவிர வேறு எதுவும் கிடையாது என்பதால் இவ் வுலகைப் படைத்தவன் நானே. மேலும் ஒன்றிலிருந்து மற்றது வேறுபட்டது என்று முடிவு செய்ய இரண்டிற்கும் இடையே இடம், வடிவம், காலம் என்ற அடிப்படையில் ஏதேனும் வேற் றுமை இருக்கவேண்டும். எதனுடனும் சம்பந்தப்படாமல் எவ்விதக் குணங்களும் இல்லாமல் என்றும் இருக்கும் நான், ஒருவனே என்பதால் என்னால் அறியப்படும் உலகைப் படைத்தவன் நான் தான் என்பது உறுதியாகிறது.

என்னால் படைக்கப்பட்ட உலகில் நான் எப்படித் துன்பப்பட முடியும் என்ற கேள்விக்கு நாம் காணும் கனவுலகை நனவுலகுடன் ஒப்பிட்டு விடைகாணலாம்.

*1. படைத்தல்*

கனவில் தோன்றும் மனிதர்கள் உள்ளிட்ட அனைத்துப் பொருள்கள், பொருள்களை அனுபவிக்கும் உடல், அந்த உடலில் அமர்ந்து செயல்படும் மனம் ஆகிய மூன்றும் என்னால் என்னை ஆதாரமாகக் கொண்டு எனக்குள் உருவாக்கப்பட்டவை. எனக்கு அந்நியமான எதுவும் கனவுலகில் இல்லை.

*2. கனவினுள் புகுதல்*

கனவுலகக் காட்சிகளைக் காணும் நான் என்னால் உருவாக்கப் பட்ட ஒரு குறிப்பிட்ட உடலுக்குள் புகுந்து அந்த மனதுடன் என்னை ஐக்கியப்படுத்திக்கொண்டு கனவை அனுபவிக்க ஆரம் பிக்கிறேன்.

*3. உண்மையை மறத்தல்*

கனவுலகை படைத்தவன் என்ற நிலையில் இருந்து இறங்கி படைக்கப்பட்ட ஒரு பாத்திரம்தான் நான் என்று நம்ப ஆரம்பித்து விடுகிறேன். கனவுலகம் இருப்பதற்கே நான்தான் ஆதாரம் என்பது கனவு ஆரம்பித்தவுடன் மறந்துவிடுகிறது. அனைத்துப் பாத்திரங் களையும் ஏற்று நடிக்கும் ஓரங்க நாடகத்தின் நாயகனாக இல்லாமல் ஒரு பாத்திரத்தோடு ஒன்றி நடித்து அந்தப் பாத்திரமாகவே மாறிவிடுகிறேன்.

*4. பொய்யை உண்மை என்று நினைத்தல்*

இல்லாத உலகம் இருப்பதுபோல் தோன்றி அதில் கிடைக்கும் அனுபவங்களைப் பெற ஆரம்பித்ததும் அதை உண்மை உலகமாகப் பார்க்கத் தொடங்கிவிடுகிறேன். கனவுகாணும் பொழுது அது கனவு என்று தெரியாமல் உண்மை என்று நம்பி அதில் நிகழும் நிகழ்வுகள் நிஜமாக நடப்பவை என்று ஏற்றுக் கொள்கிறேன்.

இதற்குப்பிறகு நான் படைத்த கனவுலகிற்கு என்னைத் துன்புறுத்தும் சக்தி கிடைத்துவிடுகிறது. கனவுலகில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளுக்கேற்ப நான் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் இடையே அலைக்களிக்கப்படுகிறேன். இருப்பது நான் மட்டும் தான் என்பதை மறந்து, இல்லாத கனவுலகத்தை உண்மையில் இருப்பதாக நினைப்பதால் துன்பத்திலிருந்து விடுதலையடையப் பற்பல செயல்களைக் கனவுலகில் செய்ய முயன்று தோல்வியைச் சந்திக்கிறேன். விழித்துக்கொள்வது மட்டுமே கனவுலகத் துன்பங் களிலிருந்து விடுதலைபெற நாம் செய்யவேண்டிய ஒரே செயல் என்பது விழித்த பிறகே தெளிவாகிறது.

கனவுலகைப் படைத்து அதில் இன்ப துன்பங்களை அனுப விப்பதுபோல்தான் நனவுலகை படைத்து அதில் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். கனவில் தோன்றும் ஒவ்வொரு மனிதனும் தனித்தனியானவர்கள் என்பது எப்படி உண்மையில்லையோ அதுபோல நாம் சந்திக்கும் அனைத்து மனிதர்களும் என்னால் உருவாக்கப்பட்டு எனக்குள் செயல்படுபவர்கள் என்பதை அறிந்தவன் முற்றுணர்ந்தோன்.

விபத்தில் அடிபட்டு வலியுடன் துடித்துக்கொண்டிருக்கும் ஒரு மனிதனுக்கு நாம் உதவி செய்வதுபோல் கனவு காணும்பொழுது

அவனுடைய வலியை நாம் அனுபவிப்பது இல்லை. அவன் நம் கற்பனையில் உருவானவன் என்பதால் அவனுக்கு உதவாமல் அவனைச் சாகடிப்பதால் யாருக்கும் எவ்விதப் பாதிப்பும் ஏற்படாது. அந்த மனிதன் நம்முடைய நெருங்கிய நண்பன் என்றாலும் அவனுக்கு உதவ வேண்டிய அவசியம் ஏதுமில்லை. அவனை அப்படியே விட்டுவிட்டு நம் வேலையை நாம் கவனித்தால் அதில் தவறு ஏதுமில்லை. ஆனால் நம் மனம் பதறி எப்படியாவது அவனைக் காப்பாற்ற வேண்டும் என்ற துடிப்புடன் செயல்படுவதற்குக் காண்பது கனவு என்ற அறிவு இல்லாதது மட்டுமே காரணம். விபத்து, அந்த மனிதன், அவனது வலி ஆகிய அனைத்தும் நமது கற்பனை என்பது கனவு முடிந்து விழித்த பிறகே நமக்குப் புரிகிறது, கனவுகாணும்பொழுதே இவை பொய் யான தோற்றம் என்பது தெரிந்திருந்தால் நம்மால் முடிந்தவரை அவனுக்கு உதவி செய்ய முற்பட்டாலும் மனம் அளவுக்கு மீறிப் பதற்றமடையாது.

இந்த உலக அனுபவங்களும் இது போன்ற ஒரு கனவுதான் என்பது பின்வரும் உண்மைகளை ஆராய்வதன் மூலம் அறிந்து கொள்ளலாம்.

**1. காலம் நமது கற்பனை:** நடக்கும் நிகழ்வுகளை மனதில் பதித்து வைத்து அதில் ஒரு கோர்வையைக் கண்டுபிடித்து நேற்று, இன்று, நாளை ஆகியவற்றைக் கற்பனை செய்வதால் உலகம் நம்மிலிருந்து வேறுபட்டு இருப்பதாகத் தோன்றுகிறது.

**2.காரண காரியம் நமது கற்பனை:** இதனால்தான் இது நடந்தது என்று ஓரிரு படிகளை மட்டும் ஆராய்ந்து எல்லா நிகழ்வுகளுக்கும் ஒரு காரணம் இருப்பதாகத் தவறான முடிவெடுக்கிறோம். நான் எப்படி இந்த உலகிற்குள் வந்தேன் என்ற கேள்விக்கு இறுதியான விடையைக் கண்டுபிடிக்க முடியாது என்பதால் இது ஒரு கனவு என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

**3.மாற்றமடையாதது எதுவுமில்லை:** கனவில் யானை திடீரென்று பூனையாக மாறிவிடுவதைப் போல்தான் உலகில் உள்ள அனைத்துப் பொருள்களும் தொடர்ந்து மாறிக்கொண்டு வரு கின்றன. அறிவியல் சோதனைகள் மூலம் திடப்பொருள்கள் என்று எதுவுமில்லை என்றும் எல்லாம் மாயா சக்தியின் நடனம் என்றும் தெளிவாக நிரூபிக்கப்பட்டுவிட்டது. இருந்தாலும் நம் மனம், இன்றி ருப்பார் நாளையிங்கே இருப்பதென்ன உண்மை என்பதை

வாயளவில் ஏற்றுக்கொண்டு உண்மையில் நிலையான உலகில் வாழ்வதாகவே நம்பிக்கொண்டிருக்கிறோம்.

இடம்,பொருள், காலம் ஆகிய மூன்றுமே மாயை என்பதால் இவை உலகம் உண்மையில் இருப்பதாகக் கூறும் சாட்சி பொய் சாட்சியாகும். கனவை உண்மையென நம்பி இவ்வுலகில் வாழ் பவர்கள் பற்றுடையோர்கள். இந்த வாழ்வு வெறும் கனவு என்று வேதம் கூறுவதை அறிந்தபின்னும் உலகின் பிடியிலிருந்து விடுபட முயன்றுகொண்டிருப்பவர்கள் முக்திவிழைவோர்கள். உலகம் தன்னை ஆதாரமாகக் கொண்டு படைக்கப்பட்டுத் தன்னுள் இயங்கும் ஒரு கனவு என்பதை உணர்ந்து விழித்துக்கொண்ட வர்கள் முற்றுணர்ந்தோர்கள்.

### உலகப்பொருள்களின் தன்மை

நம்முடைய ஜடசக்தியால் கனவுகளைப்படைப்பதுபோல் நம் மாயா சக்தியால் உலகைப் படைத்துள்ளோம். இருத்தல், அறிதல், ஆனந்தம் என்ற மூன்றும் நம் இயல்பு. இந்த இயல்பை ஆதாரமாகக் கொண்டு உருவான மாயா சக்தியால் இந்த உலகை உருவாக்கியுள்ளோம்.

நெருப்பின் சூடும் தன்மையை மட்டுமே தண்ணீரால் ஏற்றுக் கொள்ளமுடியும். அது போல இருத்தல் என்ற நம் ஒரு தன்மையை மட்டும் பிரதிபலிக்கும் பொருள்கள் ஜடப்பொருள்கள். சுடும் தன்மை, ஒளிரும் தன்மை ஆகிய இரண்டையும் பிரதி பலிக்கும் இரும்புகுண்டைப்போல் இருத்தல், உணர்தல் ஆகிய இரு தன்மைகளையும் பிரதிபலிப்பவை உயிரினங்களாகக் காட்சி யளிக்கின்றன. நெருப்புடன் ஒன்றாகக் கலந்து தன்னை மட்டுமல்லாமல் மற்ற பொருள்களையும் ஒளிரவைக்கும் சக்தி மரக் குச்சிக்கு மட்டும் இருப்பதுபோல இன்பம் என்ற நம் மூன்றாவது தன்மையையும் ஏற்கும் சக்தியுள்ளவர்கள் மனிதர்களாகத் தென் படுகிறார்கள்.

மனிதர்களின் மனம், உடல் உள்ளிட்ட அனைத்து உலகப் பொருள்களும் இதுபோல் நம் மாயாசக்தியான ஜடம், சக்தி, ஒளி என்ற மூன்று தனிமங்களின் கலவை என்பதால் அவை தோற்றம், மாற்றம், மறைவு என்ற விதிக்குக் கட்டுப்பட்டவை. நிலையாக மாறாமல் இருக்கும் என்னை ஆதாரமாகக் கொண்டு தொடர்ந்த மாற்றங்களுக்குட்பட்ட உலகம் இயங்கிக் கொண்டிருக்கிறது என்ற

உண்மை நம் மனதிற்குப் புரியும்பொழுது நாம் இந்தக் கனவிலிருந்து விழித்துக்கொள்கிறோம்.

இதுபோல் விழிப்படைய நம் மனம் பண்பட வேண்டும். எனவே உலகப்பொருள்களுள் ஒன்றான நம் மனம் மீது தனிக் கவனம் செலுத்தவேண்டும்.

## *மனதின் தன்மை*

ஈரமான மரக்குச்சியால் முழுவதும் எரிந்து நெருப்புடன் ஒன்றாக முடியாது. அதுபோல உலகப்பொருள்களிலிருந்து இன்பம் கிடைப்பதாக நினைக்கும்வரை துன்பம் கலக்காத இன்பத்தை அனுபவிக்க முடியாது. மரக்குச்சியை வெயிலில் உலர்த்திக் காயவைப்பதுபோல மனிதர்கள் சில காலம் உலக இன்பத்திலிருந்து பெறும் இன்பத்தைத் தவிர்த்து மனதைக் குவிக்கும் சக்திபெற்றவுடன் வேதத்தைப் படித்துத்தான் நிலையானவன் என்றும் மாறும் மனம் உலகப்பொருள்களில் ஒன்று என்றும் அறிந்துகொள்ள முடியும்.

தண்ணீர் திடம், திரவம், வாயு என்ற மூன்று நிலைகளில் இருப்பதுபோல் மனதும் ஆழ்ந்த உறக்கம், கனவு, நினைவு என்ற மூன்று நிலைகளில் அனுபவங்களைப் பெறுகிறது. நீராவி கட்டுக்கடங்காமல் எல்லா இடங்களிலும் வியாபிப்பதுபோல் மனம் வெளியுலகில் சஞ்சரித்து இவ்வுலக அனுபவங்களையும், திரவ நிலையில் தண்ணீர்தான் இருக்குமிடத்திற்குள் அலைபாய்வது போல் மனம் தன்னில் அடங்கிக் கனவுலக அனுபவங்களையும், முழுவதும் உறைந்த பனிக்கட்டியின் நிலை போல, தான் முழுவதும் அடங்கிய அனுபவத்தை ஆழ்ந்தஉறக்கத்திலும் மனம் பெறுகிறது. மனம் அனுபவிக்கும் இந்த மூன்று நிலைகளிலும் அனுபவங்களின் ஆதாரமாக இருப்பவன் நான் என்று முற்றுணர்ந்தோர்கள் மட்டுமே அறிவார்கள்.

உலகம் என்று ஒன்று இருக்கிறது என்று நமக்குக் காட்டிக் கொடுப்பவை நமது ஐந்து புலன்கள் மட்டுமே. இவை இல்லா விட்டால் உலகம் அந்தக்கணமே மறைந்துவிடும். உறங்கும் பொழுது உலகம் மறைந்துவிடுகிறது. நமது புலன்களுக்கு உலகை அறியும் திறனைக்கொடுப்பது மனம். வகுப்பில் அமர்ந்து பாடம் கேட்கும்பொழுது மனம் ஊர்சுற்றிக்கொண்டிருந்தால் ஆசிரியர் பேசுவது காதில் விழாது. மனம் ஒரு ஜடப்பொருள். ஐந்து

புலன்களுக்கு உலகை உணரும் சக்தியைக் கொடுக்க அது என்னைச் சார்ந்துள்ளது. கடன் வாங்கிய இந்தச் சக்தியை ஆழ்ந்த உறக்கத்தில் அது இழந்து விடுவதால் உலகம் இல்லாமல் போய்விடுகிறது.

உலகம் பார்க்கப்படும் பொருள். ஐந்து புலன்களும் மனமும் உலகைப் பார்க்க உபயோகப்படும் கருவிகள். பார்ப்பவன் நான். என்னால் மனதின் துணையின்றி உலகை அனுபவிக்கமுடியாது. தான் மாறிக்கொண்டே இருக்கும் ஒரு பொய்யான ஜடப்பொருள் என்பதையும் தான் செயல்பட ஆதாரமாக இருக்கும் உணர்வு மாறாமல் என்றும் இருக்கும் உண்மை என்பதையும் மனம் அறிவதில்லை.

### சாராம்சம்

*உலகம் மாறிக்கொண்டே இருக்கிறது. இருத்தல் என்பது மாறாத நான். மாறுகின்ற பொருள்களுக்குத் தனித் தனிப்பெயரிட்டு நிலையான உலகைக் கற்பனை செய்து அதை உண்மை என்று நினைத்து வாழ்வது அறியாமை. இந்த அறியாமையை அகற்ற மனதின் கவனத்தை மாறும் உலகிலிருந்து திருப்பி மாறாத இருத்தலின் மேல் செலுத்தவேண்டும்.*

*அலை மேல் தோன்றும் நீர் குமிழி போன்ற கனவையும் வந்துபோகும் அலைகள் போன்ற வாழ்வையும் அறியும் நான் இவ்விரண்டிற்கும் ஆதாரமான நீர் போன்று நிலையானவன்.*

*நிலையாக இருக்கும் நான்தான் மாறும் உலகமாகத் தோற்றமளிக்கிறேன் என்ற அறிவு நம் மனதில் ஏற்பட்டதும் ஆனந்தத்தைத்தேடி அலையும் ஏக்கம் ஒரு முடிவுக்கு வந்துவிடும்.*

*எப்பொழுதும் இன்பமாக இருக்கவேண்டும், சிறிது நேரம் கூட துன்பத்தை அனுபவிக்கக்கூடாது என்பதுதான் அனைத்து உயிரினங்களின் ஒரே ஆசை. இந்த ஆசை முடிவுக்கு வருவதுதான் முக்தி. நான் அறிவுருவாக என்றும் இருப்பவன் என்ற ஞானம் மனதில் நிலை பெறும்வரை உலகுடன் உறவாடுவதைக் கட்டுப்படுத்தி*

மனத்தை அமைதிப்படுத்தவேண்டும். அதற்குப்பின் எவ்வளவு செயல்கள் செய்துகொண்டிருந்தாலும் அலைபாயும் மனதின் ஆதாரம் ஆனந்தமயமான நான் என்ற அறிவு நிலையான அமைதியைக் கொடுக்கும். தொடர்ந்து ஆட்டம் போடும் அலைகளால் ஆழ்கடலின் அமைதியைக் கெடுக்கமுடியாது. அதுபோல இவ்வுலகின் நிரந்தர மாற்றங்கள் மனதில் ஏற்படுத்தும் ஏற்றஇறக்கங்கள் முற்றுணர்ந்தோனின் நிம்மதியைப் பாதிக்கும் சக்தியற்றவை.

தூங்கப்போகும்பொழுது கனவு ஏற்படலாம் என்று நாம் அறிந்திருந்தாலும் கனவு காணும்பொழுது விழித்தெழு வோம் என்று எதிர்பார்ப்பதில்லை. ஏனெனில் கனவு நிஜமாகக் காட்சியளிப்பதால் விழிக்கவேண்டும் என்று முயற்சி செய்வதில்லை. அதுபோல இந்த வாழ்க்கை என்பது வெறும் கனவு என்பதை நம்பாமல் இருப்பதால் வேதம் நம்மை விழிக்கவைக்கச் செய்யும் முயற்சிகள் எளிதாகப் பலிப்ப தில்லை. இந்த உலகம் உண்மையாக இருக்கிறது என்பதை நிரூபிக்கவே முடியாது என்ற மனப்பக்குவம் ஏற்பட்டதும் முக்தியடையும் வாய்ப்புகிடைக்கும்.

### பயிற்சிக்காக

1. முக்தி என்றால் என்ன?
2. உலகப்பொருள்கள் செய்யும் மூன்று செயல்கள் யாவை?
3. உலகம் படைக்கப்பட்டதன் காரணம் என்ன?
4. அறிபவன் படைத்தவனாகத்தான் இருக்கவேண்டும் என்பதைத் தர்க்கம் மூலம் நிரூபிக்கவும்.
5. கனவு பற்றி விளக்கப்பட்ட நான்குக் கட்டங்கள் யாவை?
6. உலகம் உண்மையாக இருக்கிறது என்று நாம் நம்ப எவை காரணம்?

7. உலகப்பொருள்களின் தன்மை என்ன?

8. மனம் எந்த மூன்று நிலைகளில் அனுபவங்களைப்பெறுகிறது?

9. நீர்க்குமிழி, அலை, நீர் ஆகிய மூன்றினால் விளக்கப்பட்டவை யாவை?

**சுயசிந்தனைக்காக**

❖ *மனதை அமைதிப்படுத்த உடலை ஓய்வு நிலையில் வைத்திருப்பது அவசியமா?*

❖ *முக்தி அடைவது எப்படி என்ற கேள்விக்குச் சென்ற பாடத்தில் கூறப்பட்ட பதிலுக்கும், இந்தப்பாடத்தில் இடம் பெற்ற பதிலுக்கும் உள்ள வேறுபாட்டை ஆய்க.*

❖ *உலகத்தைப் படைத்தது யார்?*

❖ *மற்ற மனிதர்கள் என்னை அறிவதனால் நான் எப்படி இந்த உலகைப் படைத்தவனாக இருக்க முடியும்?*

❖ *மனதின் தன்மை எப்படியிருந்தால் முக்தியடைய முடியும்?*

❖ *மனதின் தன்மையை மாற்ற என்ன செய்யவேண்டும்?*

❖ *பார்ப்பவை, பார்க்கப்படுபவை பற்றி குறிப்பிட்ட நான்கு பொருள்களை முறைப்படி வரிசைப்படுத்தவும். (திருக்-திருஷ்ய விவேகம் என்ற நூலைப் படிக்கவும்)*



## 160

# இடமும் காலமும் அமைதிக்குத் தடையல்ல

**அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 488**

தியானம் செய்ய எந்த இடத்தில் எந்த திசையை நோக்கி அமரவேண்டும், எந்த நேரத்தில் தியானம் செய்யவேண்டும் என்ற கேள்விக்கு இடம், திசை, நேரம் ஆகியவற்றால் நம் அமைதியைப் பாதிக்கமுடியாது என்றும் ஏனெனில் இவை அனைத்தும் மாயை என்றும் இந்தப் பாடம் சுட்டிக்காட்டுகிறது.

உலகில் இன்பம் இல்லை என்று அதை ஒதுக்கிவிட்டு வேதம் படித்து இந்த உலகம் என்னால் எனக்காகப் படைக்கப்பட்டு என்னை ஆதாரமாகக் கொண்டு இயங்குவது என்று அறிந்து கொண்டதும் உலகைத் தவிர்க்கவேண்டிய அவசியம் இருப்ப தில்லை. மன அமைதிக்காக எதையும் நாடி ஓட வேண்டாம். எதைக்கண்டும் அஞ்சி அகல வேண்டாம்.

நண்பர்களைத்தேடி அவர்கள் வீட்டுக்குச் செல்லமாட்டோம் என்றோ அங்கு நமக்குப் பிடிக்காதவர்கள் இருந்தால் வெகுவிரை வில் அங்கிருந்து வெளியேற மாட்டோம் என்றோ இதற்குப் பொருள் அல்ல. கனவில் தோன்றும் அனைத்துக்காட்சிகளும் தானாக நடப்பவை. அதுபோல இவ்வுலகில் நடக்கும் அனைத்து நிகழ்வுகளும் தானாக நிகழ்பவை. கனவில் என் செயல்பாடுகளுக்கு நான் எப்படிப் பொறுப்பேற்க முடியாதோ அதேபோல் இவ்வாழ்விலும் நான் எதையும் செய்வதில்லை. நாடி ஓடுவதோ அஞ்சி அகலுவதோ வெறும் காட்சிப்பிழைகள். இவற்றுடன் எவ்வித உறவும் இல்லாமல் என்றும் அமைதியுடனும் ஆனந்தத் துடனும் இருப்பவன் நான்.

என்னால் எவ்விதச் செயலையும் செய்யமுடியாது. என் மனதில் என்ன எண்ணங்கள் தோன்றுகின்றன என்பதை என் னால் எப்படித் தீர்மானிக்க முடியாதோ, அதேபோல அவற்றில் எந்த எண்ணம் செயலாக மாறப்போகிறது என்பதுவும் என் கையில் இல்லை. ஒரு காரியத்தைச் செய்யலாமா வேண்டாமா அல்லது எப்படிச் செய்வது முதலிய எண்ணங்கள் எவ்வளவு காலம் என் மனதில் அலைபாயும் என்று என்னால் தீர்மானிக்க முடியாது. அதேபோல் எப்பொழுது ஒரு தீர்மானத்திற்கு வந்து என்ன செயலை எப்படிச் செய்வேன் என்றும் எனக்கு தெரியாது.

உன்னால் முடியும் என்று பற்றுடையோர்களை ஊக்குவிக்கும் வேதம் நான் என்ற அகங்காரம் நம் மனதில் தோன்றும் வெறும் எண்ணம் என்பதால் நாம் எந்தச்செயலையும் செய்யமுடியாது என்று முக்திவிழைவோர்களுக்கு போதிக்கிறது.

### நான் எதையும் செய்வதில்லை

நம் கனவில் ஒருவர் முட்டாள்தனமாக நடந்துகொண்டால் அதற்கு நாம் எப்படிப் பொறுப்பேற்றுக்கொள்வதில்லையோ அது போல நிஜவாழ்வில் நம் செயல்களுக்கு நாம் காரணமல்ல. ஏனெனில் நம்மால் எதையும் செய்யமுடியாது. செய்வதாக நினைத்துக்கொள்ளும் அகங்காரம் கூட நம் மனதில் தோன்றும் ஒரு எண்ணமே.

அகங்காரம் என்ற எண்ணம் இல்லாமல் எல்லா உயிரினங் களும் இவ்வுலகில் இயங்கி வருகின்றன. மனிதன் மட்டும்தான் தான் இயற்கையிலிருந்து வேறுபட்டு இருப்பதாகத் தவறாக எண்ணிக்கொண்டிருக்கிறான். இல்லாத உலகத்தை இருப்பது போலக் காட்டும் ஒரு ஒளி-ஒலிகாட்சியில் நமது எண்ணங்கள் வெறும் ஒலிவடிவம். எனவே அகங்காரம் தான்செயல் செய்வதாக நினைப்பது அறிவீனம்.

கனவில் இந்தியாவிலிருந்து அமெரிக்காவுக்கு ஒரு நொடியில் செல்லமுடிவதற்குக் காரணம் இடமும் காலமும் நமது கற்பனை என்பதுதான். இதே உண்மையை அறிவியலின் அடிப்படையில் ஐன்ஸ்டீன் நிரூபித்துள்ளார். எனவே இவ்வுலகில் நாம் காண்பதாக நினைக்கும் இடமும் காலமும் உண்மையில் இல்லை என்பதை உணர்ந்தால் நம்மால் எதையும் செய்யமுடியாது என்பது தெளிவாகும். கனவில் இந்தியாவிலிருந்து அமெரிக்கா சென்றது

எப்படி உண்மையில்லையோ அதுபோல் இந்த உலகமும் நமது மாயாசக்தியால் உருவான கனவு என்பதால் நாம் அதில் செயல் செய்வதாக நினைப்பதும் அந்தக்கனவின் ஒரு பகுதியே.

நான் பரமன் என்ற அறிவு நிலைபெற்ற பின்தான் என்னால் கவலைப்படாமல் இருக்க முடியும் என்பது தவறு. ஏனெனில் எதையுமே செய்ய இயலாத என்னால் அறிவை நிலைபெறச் செய்ய முயற்சிக்க முடியாது. இறந்துபோன ஒருவரை கனவில் சந்திக்க நேரிடலாம். அவரிடம் 'நீங்கள் எப்படி இன்னும் உயிரோடு இருக்கிறீர்கள்?' என்ற கேள்வியைக் கேட்டால் அவர் 'நான் உன் மனதினால் உருவாக்கப்பட்ட கற்பனை உருவம்' என்ற பதிலைக் கூறினால் அதுதான் உண்மை. அது போல் நான் யார் என்பதை நமக்கு அறிவிக்கும் நமது குருவும் நம்மால் உருவாக்கப்பட்ட ஒரு கனவுலக வடிவமே. இதனாலேயே உலகம் உருவானபொழுதே வேதமும் உடன் தோன்றியது என்று கூறப்படுகிறது. என்னால் படைக்கப்பட்ட பல்வேறு மனிதர்களுடன் உறவாடும்பொழுது நான் அவர்களிடமிருந்து வேறுபட்டவன் என்ற எண்ணம் எப்படித் தானாக நம் மனதில் தோன்றியதோ அது போல மனம் பண்பட்டபின் என் எதிரில் குரு தோன்றி நான் யார் என்று எனக்கு அறிவித்தபின் தானாக அந்த எண்ணம் மனதில் நிலை பெறும்.

## முக்தி என்பதன் பொருள்

எப்பொழுதும் இன்பமாக இருக்கவேண்டும், சிறிது நேரம் கூடத் துன்பத்தை அனுபவிக்கக்கூடாது என்பதுதான் அனைத்து உயிரினங்களின் ஒரே ஆசை. இந்த ஆசையை நிறைவேற்றிக் கொள்ள உலகில் உள்ள பொருள்களை நாடி ஓடுபவன் பற்றுடை யோன். அதில் பயன் இல்லை என்பதைப் புரிந்துகொண்டதும் வேதம் படித்து ஆனந்தமயமான பரமன் நான் என்ற அறிவில் நிலைபெற முயற்சி செய்பவன் முக்திவிழைவோன். யாரும் எதையும் செய்வதில்லை என்று அறிந்துகொண்டதால் அந்த ஆசையே மனதிலிருந்து அகன்று முக்தியடைந்தவன் முற்று ணர்ந்தோன்.

## இயற்கையும் செயற்கையும்

கனவில் தோன்றும் அனைத்தும் நமது எண்ணத்தால் ஆனவையே. அதுபோல, இவ்வுலகில் தென்படும் ஆறு இயற்கை யென்றும், அதன்மேல் கட்டப்பட்டிருக்கும் பாலம் செயற்கை

யென்றும் தரம் பிரிக்க முடியாது. ஏனெனில் திடமான பொருள்கள் என்று எதுவுமே இல்லை. அனைத்தும் ஒளிக்கதிர்களால் உரு வான வடிவங்களே. இவற்றை காடு இயற்கை, நாடு செயற்கை என்று பிரிக்க முடியாது. மனிதனால் எதையும் செய்யமுடியாது என்பதால் அவனால் உருவாக்கப்பட்டதாகக் கருதப்படும் அனைத்தும் இயற்கையைச் சேர்ந்தவை.

மனிதனால் மட்டும்தான் முக்தியடையமுடியும் என்று வேதம் சொல்வதற்குக் காரணம் மனிதனுக்கு மட்டுமே முக்தியடைய வேண்டிய தேவை இருப்பதால்தான். மற்ற உயிரினங்களோ ஜடப்பொருள்களோ தங்களுக்குச் செயல்படும் சுதந்திரம் இருப்ப தாகவோ செயல்படுவதாகவோ தவறாக எண்ணிக்கொள்வதில்லை. எனவே மாறும் உலகின் மாற்றத்தின் ஒரு பகுதியாக மனதில் ஏற்படும் மாற்றங்களை வேண்டியது வேண்டாதது என்று வகைபிரிக்காமல் அப்படியே ஏற்றுக்கொண்டு நடக்கும் ஒலி-ஒளி காட்சியை நிம்மதியாகப் பார்ப்பவன் முக்தியடைகிறான். அவன் மனதில் எவ்விதத் தேடலும் இல்லாததால் துன்பம் கலவா இன்பத்துடன் இருப்பான்.

### சரியும் தவறும்

கனவில் நிகழும் நிகழ்வுகளைச் சரி, தவறு என்று பாகு படுத்தமுடியாது. அதுபோல இவ்வுலகத்தின் இயக்கம் ஒன்றுடன் ஒன்று இறுக்கமாக இணைந்த ஒன்றுபட்ட நடனம். இந்த ஒளி-ஒலி காட்சியில் எதுவும் தவறாக நடக்க வாய்ப்பேயில்லை என்பதால் எதையும் போற்றவோ இகழவோ தேவையில்லை. முட்டை யிலிருந்து வெளிவந்த கோழிக்குஞ்சைப் பருந்து தன் அலகால் குத்திக் கொல்வது தவறு அல்ல.

பள்ளி செல்லும் மாணவனை ஒருவன் கடத்திச்சென்று கொன்றுவிட்டான் என்பதும் இயற்கையாக நிகழும் நிகழ்வு. அந்தக் குற்றவாளியைத் தூக்கில் போட்டுத் தண்டிப்பது அந்தக் காட்சியின் தொடர்ச்சி. இந்தக் குற்றத்திற்குத் தூக்குதண்டனை சரியா தவறா என்று நம் மனதில் நிகழும் பட்டிமன்றம் அந்தக் காட்சியின் வர்ணனை.

### செயல்களில் அகங்காரத்தின் பங்கு

நாம் செய்யும் அனைத்துச் செயல்களும் இயற்கையில் நிகழ்பவை. செயல்கள் செய்யாமல் நம்மால் இருக்கவே முடியாது.

எதுவும் செய்யாமல் சும்மா இருக்கும் பொழுதும் உடலுக்கு வயதாகிக்கொண்டிருப்பது போல மனதிலும் தொடர்ந்து மாற்றங்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. மாறும் எண்ண ஓட்டங்களில் நம் மனதில் தோன்றும் அகங்காரமும் ஒன்று. மாற்றங்களுக்கு நிகழ்வுகள் என்று பெயரிட்டு 'நான் சும்மா இருக் கிறேன்' என்று வர்ணனை செய்வதன் மூலம் மற்ற நேரங்களில் ஏதோ செயல் செய்வதாக அகங்காரம் கற்பனை செய்து கொள்கிறது.

கால்பந்தாட்டத்தில் பந்தின்பின் ஓடும் விளையாட்டுவீரனின் மனதில் அகங்காரம் முழுவதுமாக ஒடுங்கியிருக்கும். இயற்கை யோடு முழுவதும் ஒன்றிப் பந்தை அடித்து அது கோலில் விழுந்த வுடன் வர்ணணையாளர் அந்தக் காட்சியை விவரிப்பதுபோல் அகங்காரம் தான் ஏதோ சாதித்துவிட்டது போன்று உணர்வதும் உடல் துள்ளிக் குதித்து அங்குமிங்கும் ஆடி கொண்டாடுவதும் இயற்கைகாட்சியின் ஒரு பகுதியே.

கோல்போடுவதற்குமுன் நான் இப்படி நினைத்தேன் என்று கடந்தகாலத்தையும் இதுபோல் விளையாடி அடுத்த கோலைப் போடப்போவதாக எதிர்காலத்தையும் கற்பனையில் உருவாக்கி கொள்ளும் அகங்காரத்திற்கு நிகழ்காலத்திற்குள் எட்டி பார்க்கும் சக்தி கிடையாது. கோல் போடும் தருணத்தில் காணாமல் போயி ருந்த அகங்காரம் தான்தான் கோல்போட்டவன் என்று தவறாக நம்பிவிடுகிறது.

அதுபோல் நாம் செய்யும் வேலைகளில் ஒன்றிச் செயல்படும் பொழுது நான் இந்த வேலையைச் செய்துகொண்டிருக்கிறேன் என்று அகங்காரம் வர்ணனை செய்யாது. ஒரு செயலைச் செய்வதற்கு முன்னும் பின்னும் இருக்கும் ஓய்வு நேரங்களில் மனதில் எண்ணங்கள் தோன்றுவது இயற்கையானது. பொம்மை யில் உள்ள விசைவில்லை சாவிகொடுத்து முறுக்கேற்றியபின்தான் அதை இயங்கவைக்க இயலுவதைப்போல் உயிரினங்கள் இயங்க அவற்றின் மனதில் எண்ணங்கள் உருவாவது அவசியம். எனவே அகங்காரத்தை அகற்ற வேண்டும் என்ற முயற்சி வெற்றிபெறாது.

### அகங்காரம் தரும் நேர்முக வர்ணனை

இடமும் காலமும் நமது மாயாசக்தியின் கற்பனையான வெளிப்பாடு. நிகழ்காலத்தில் தொடர்ந்து நடக்கும் நாட்டியத்தை மனம் வர்ணிக்கும்பொழுது கடந்த காலம் பிறக்கிறது. கற்பனைக்

கதைகளுக்கும் சரித்திரத்திற்கும் எவ்வித வேறுபாடும் கிடையாது. ஏனெனில் இருப்பது நிகழ்காலம் மட்டும்தான்.

மாயா சக்தியின் ஒளி-ஒலி காட்சியில் ஒளியில் ஏற்படும் மாறுதல்கள் பிரபஞ்சத்தின் தோற்றமாகத் தெரிகிறது. தனிப்பட்ட பொருள்கள் என்று எதுவும் இல்லாமல் அதே சமயத்தில் அவை இருப்பதுபோல் காட்டும் ஒளி காட்சியை நம் மனம் ஒலி வடிவில் வர்ணனையாகப் பதிவுசெய்துகொள்கிறது. ஒலி ஒளியைவிட மெதுவாகத்தான் பயணம் செய்யும் என்பதால் ஒலிவடிவான எண்ணங்களால் நிகழ்காலத்தில் செயல்பட முடியாது. நேற்று இரவில் நிலவைப்பார்த்தேன் என்பது நிகழ்காலத்தில் மனதினுள் ஏற்படும் ஒலி வர்ணனை. இது போன்ற ஒலிவர்ணனைகள் அனைவரது மனதிலும் ஏற்படுவதால் அதற்கு ஒரு உண்மைத்துவம் வந்துவிடுகிறது.

கனவில் நமக்கு எதிரே வரும் அழகான பெண்ணை எல்லோரும் கவனிப்பதால் அவள் உண்மையில் உயிருடன் இருக்கும் ஒரு பெண்ணாக மாறிவிடமாட்டாள். பிறந்த தேதி, வளர்ந்த இடம் என்பதுபோன்ற சரித்திரம் கனவில் வரும் எல்லா மனிதர்களுக்கும் இருக்கும். ஆனாலும் அவையாவும் கற்பனையே. அதுபோல வாழ்வில் நிகழும் நிகழ்வுகளையும் சந்திக்கும் மனிதர்களையும் உண்மையற்றவை என்று அறிபவன் முற்றுணர்ந்தோன்.

ஞானம் நிலைபெற்ற பின்தான் இதுபோன்ற உறுதியான எண்ணம் ஏற்படும் என்று நினைத்து 'நான் பரமன்' என்ற தியானத்தில் மூழ்கி உலகைத் தவிர்ப்பதனால் எவ்விதபயனும் ஏற்படாது. நடந்தால் பூதம்போலத் தென்படும் நிழல் நம்மைத் துரத்திப் பயமுறுத்துகிறது என்பதற்காக எங்கும் செல்லாமல் வீட்டில் படுத்துக்கொண்டு நிழலை அழிக்கவேண்டிய அவசியமில்லை. நிழல் பூதமல்ல என்ற அறிந்து கொண்டால் மட்டும் போதும். அதுபோல் துன்பம் தரும் எண்ணங்கள் மனதில் ஏற்படுவதைத் தவிர்க்க செயல்களைத் தவிர்க்கவேண்டிய அவசியமில்லை. துன்பம் தரும் நிகழ்வுகளைப் படம்பிடித்துக்காட்டும் எண்ணங்கள் மனதில் ஏற்பட்டாலும் காலம் என்பதே நமது கற்பனை என்பதால் நிம்மதியாக இருக்கலாம். எண்ணங்கள் என்னும் ஒலி வடிவமான சக்தி நிகழ்கால மாற்றங்களைக் கடந்தகாலம், எதிர்காலம் என்று இரண்டு கூறுபோடுகிறது. நிகழ்காலம் துன்பம் கலவா இன்பம்.

***காலம் நமது கற்பனை***

மாறும் உலகை மாயை என்று புரிந்து கொள்ளாமல் மாற்றங்களை முன் பின் என்று வரிசைப்படுத்தி மூன்று காலங்களைக் கற்பனை செய்ததன் மூலம் அதற்கு ஒரு உண்மைத்துவத்தை ஏற்படுத்தி கொடுத்திருப்பது நமது மனம். நாம் அறியாத ஒன்று நம் கனவில் இருக்க முடியாது. இருத்தல் என்பதற்கு அறிதல்தான் ஆதாரம் என்று வேதம் கூறும் உண்மையை அணுவை ஆராயும் அறிவியல் அறிஞர்கள் நிரூபணம் செய்துள்ளார்கள். எனவே கனவை உருவாக்குவதுபோல்தான் இந்த உலகத்தையும் நாம் பார்ப்பதனாலேயே உருவாக்கியுள்ளோம். இல்லாத இவ்வுலகத்திற்கு இடம், பொருள், காலம் என்ற பரிமாணங்களைக் கொடுத்து உண்மையாக இருப்பதுபோலக் கற்பனை செய்துகொண்டு அதில் சிக்கி தவிப்பது நமது அகங்காரம்.

ஒருபொருளுக்கும் மற்றொருபொருளுக்கும் இடையே இடைவெளி இருப்பதாக நாம் நினைப்பதும் ஒரு கற்பனையே. ஒன்றுடன் ஒன்று தொடர்பில்லாமல் ஒரு எலக்ட்ரான் கூட உலகில் இல்லை என்று அறிவியலின் அடிப்படையில் நாம் அறியும் உண்மை நாம் மற்றவர்களிடமிருந்து வேறுபட்டவர்கள் இல்லை என்பதைத் தெளிவுபடுத்துகிறது. ஒலிவர்ணனையுடன் கூடிய மாயாசக்தியின் ஒளிநடனத்திற்கு உலகம் என்று பெயரிட்டு அதன் மாற்றங்களுக்குக் கற்பனையான காலத்தால் இடம் கொடுத்துக் கனவை நனவாக நம்பித்துன்பப்படுவது நமது அகங்காரம்.

துன்பத்தைத் தவிர்க்க உலகத்தை மாற்றியமைக்க முயலுபவன் பற்றுடையோன். துன்பத்தைத் தவிர்க்கத் தன் மனதை மாற்ற முயற்சிப்பவன் முக்திவிழைவோன். துன்பம் வெறும் கற்பனை என்பதால் அதை தவிர்க்கவேண்டிய அவசியம் இல்லை என்று உணர்ந்தவன் முற்றுணர்ந்தோன். இன்பத்தைப் பெறுவதற்காகத் துன்பத்தை அனுபவிப்பவன் பற்றுடையோன். துன்பத்தைத் தவிர்ப்பதற்காக இன்பத்தைத் துறக்கத் தயாராக இருப்பவன் முக்திவிழைவோன். இன்ப அனுபவமும் துன்ப அனுபவமும் தனது மாயாசக்தியால் உருவான கனவு என்பதை உணர்ந்த முற்றுணர்ந்தோன் இது வேண்டும் அது வேண்டாம் என்ற பாகுபாடு எதையும் செய்யாமல் நடக்கும் ஒளி நடனத்தையும், ஒலி வர்ணனையையும் ஒருங்கே அனுபவிப்பான்.

இப்படி இருந்தால்தான் சரி என்ற எதிர்பார்ப்பு எதுவும் இல்லாததால் ஒளி நடனத்தின் வடிவ மாற்றங்களையும், அவற்றிற்கு அகங்காரம் கற்பிக்கும் பெயர் மாற்றங்களையும் எவ்வித மறுப்போ தடங்கலோ இல்லாமல் முழுமனதுடன் ஏற்றுக்கொள்ளும் முற்றுணர்ந்தோன் நிரந்தரமான அமைதியை அனுபவிப்பான்.

### *காரண காரியம் நமது கற்பனை*

அஜீரணத்தால் உடல்நிலை பாதிக்கப்பட்டால் அதற்குக் காரணம் என்ன என்று ஆராய்ந்து தரம் குறைந்த சாலையோர உணவகத்தில் உணவு உண்டது என்று கண்டுபிடித்துவிட்டோமானால் ஒரு குற்ற உணர்வு நம்மை ஆட்கொள்ளும். எந்த ஒரு காரணமும் கண்டுபிடிக்கமுடியவில்லை என்றால் நாம் நம்மை நிரபராதி என்று எண்ணிக்கொண்டு செய்யாத குற்றத்துக்குத் தண்டனை அனுபவிப்பதுபோல் உடல்நிலைக்குறைவை ஏற்றுக் கொள்வோம். அஜீரணம் என்பது எல்லோருக்கும் எப்பொழுதாவது ஏற்படத்தான் செய்யும். தொடர்ந்து மாறும் உடலில் இது போன்ற துன்பங்கள் ஏற்படுவது இயற்கை. தினம் உண்ணும் உணவைச் செரிப்பதற்கு நாம் காரணம் இல்லை. அதுபோல் அவ்வப்பொழுது ஏற்படும் அஜீரணத்திற்கும் நாம் காரணம் அல்ல.

உடலைப்போல் மனதும் தொடர்ந்த மாறுதலுக்கு உட்பட்டது. மனதில் ஏற்படும் எண்ணங்கள் இப்படித்தான் இருக்கவேண்டும் என்று நாம் எதிர்பார்த்தால் ஏமாற்றம் நிச்சயம். உலகில் ஏற்படும் மாறுதலுக்கு ஏட்ப மனதில் ஏற்படும் எண்ணங்களுக்கு நாம் பொறுப்பு அல்ல. கோபம், எரிச்சல் போன்ற உணர்வுகள் திடீரென ஏற்பட்டால் அதற்கு காரணத்தை ஆராய்ந்து தான்தான் குற்றவாளி என்று தீர்ப்பு எழுதுவதில் எவ்வித அர்த்தமும் இல்லை. கோல் போடத் தவறியதை வர்ணிக்கும் வர்ணனையாளர் மீது கோபப் படுவது நியாயமல்ல. உலக ஒளி நடனத்தை ஒலியாக வர்ணனை செய்யும் மனதின் இயல்பை மாற்றமுடியாது என்பதால் அகங்காரம் தன்னைத்தானே நொந்துகொள்வதில் பயன் இல்லை.

**சாராம்சம்**

*இங்கிருந்து அங்கே போகவேண்டுமானால் காலமும் முயற்சியும் அவசியம். இங்கு அங்கு என்பதெல்லாம் வெறும் கற்பனை என்று அறிவியல் நமக்கு அறிவிக்கிறது.*

எனவே இந்த மாய உலகத்தில் மாற்றங்களை ஏற்படுத்த நாம் எவ்வித முயற்சியும் செய்யவேண்டாம். செய்ய வேண்டிய அவசியமும் இல்லை.

இப்படி இருக்கும் நான் அப்படி ஆகவேண்டும் என்பது இல்லாததை இருப்பதாக நினைக்கும் அகங்காரத்தின் ஆசை. இடம், பொருள், காலம், காரணகாரியம் போன்றவற்றை உண்மை என்று நம்பும் அறியாமை இருக்கும்வரை படிப்பறிவில்லாத ஏழைமக்களை ஏமாற்றும் அரசியல்வாதிபோல அகங்காரம் மனதை ஆட்டுவிக்கும்.

எப்பொழுதுமே எவ்வித வேலையும் செய்யாமல் அனைத்தையும் சாதித்தது நான் என்று பறைசாற்றிக் கொண்டிருக்கும் அகங்காரத்தின் பிடியிலிருந்து விடுபட இடம், பொருள், காலம் போன்ற அனைத்தும் நம் கற்பனை என்ற உறுதியான அறிவு நமக்கு ஏற்படவேண்டும். அகங்காரத்தின் கொடுங்கோல் ஆட்சியிலிருந்து மனம் விடுதலையடைந்தபின் அதை நாடுகடத்த வேண்டிய அவசியமில்லை.

முப்பரிமாணத்தைக் காட்டும் கண்ணாடியை அணிந்து திரைப்படத்தைப் பார்த்தால் அதில் தோன்றும் புலி நம் அருகில் வந்து பயமுறுத்துகிறது என்று கண்ணாடியைக் கழற்றவேண்டிய அவசியமில்லை. அகங்காரம் அனைத்து வேலைகளையும் செய்வதுபோலத் தோன்றுவது வெறும் காட்சிப்பிழை என்பதைப் புரிந்துகொண்டபின் அதன் விருப்பத்திற்கு ஆடவிட்டு அதன் ஆட்டத்தை ரசிக்கலாம்.

பற்றுடையோர்கள் மனம் பண்படாத மனம் என்பதால் அவர்கள் செய்யவேண்டிய செயல்களையும், செய்யக் கூடாத செயல்களையும் பட்டியலிட்டுக் கொடுக்கும் வேதம் மனம் பண்பட்டபின் அறிவை அடையும் முக்திவிழைவோர்களுக்கு உண்மை எது, பொய் எது என்று விளக்குகிறது. அகங் காரம் எவ்விதச் செயலையும் செய்வதில்லை என்ற உண்மையை உணர்ந்த முற்றுணர்ந்தோர்கள் தாங்கள் சுதந் திரமாக செயல்படுபவர்களும் அல்ல, கடவுளின் அடிமை களும் அல்ல என்ற அறிவுடன் நிம்மதியாக வாழ்வார்கள்.

## பயிற்சிக்காக

1. முக்தி என்றால் என்ன?
2. இயற்கைக்கும் செயற்கைக்கும் உள்ள வேறுபாடு என்ன?
3. ஒளி எது, ஒலி எது?
4. செயல்களில் அகங்காரத்தின் பங்கு என்ன?
5. அகங்காரத்தால் ஏன் நிகழ்காலத்திற்குள் வரமுடியாது?

## சுயசிந்தனைக்காக

*1. முக்திவிழைவோருக்கும் பற்றுடையோருக்கும் வேதம் கற்றுத் தரும் பாடம் ஏன் வேறுபடுகிறது?*

*2. ஒளி-ஒலியைத்தவிர உலகில் வேறு எதுவுமேயில்லையா?*






# வாழ்நாள் முழுவதும் தியானம் செய்யவேண்டும்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 489**

**மு**க்தியடையாதவர்கள் சாகும்வரை தொடர்ந்து தியானம் செய்யவேண்டும் என்ற வேதத்தின் கட்டளையை விளக்கிக் கடவுளைக் குறித்துச் செய்யப்படும் தியானத்தால் ஏற்படும் பலனை ஞானத்தினால் கிடைக்கும் பலனுடன் இந்தப்பாடம் ஒப்பிடுகிறது.

நான் பரமன் என்ற அறிவு ஏற்படும்வரை தியானம் செய்தால் போதும் என்று முக்திவிழைவோர்களுக்குக் கூறும் வேதம் இந்த அறிவை அடையாதவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் தியானத்தைத் தொடரவேண்டும் என்று அறிவுறுத்துகிறது.

எவ்விதக் குணமும் இல்லாமல் எதனுடனும் சம்பந்தப்படாமல் என்றும் இருப்பவன் நான் என்று அறியாதவர்கள் ஒளி, சக்தி, ஜடம் ஆகிய மூன்று தனிமங்களின் கலவையான மாயா சக்தியுடன் கூடிய பரமனைத் தங்கள் மனதுக்குப் பிடித்த ஈஸ்வர வடிவத்தில் தியானம் செய்யலாம். ஒளியைப் பிரதானமாகக் கொண்ட காக்கும் கடவுளான விஷ்ணு, அவரது துணைவரான செல்வங்களைக் கொடுக்கும் லக்ஷ்மி, சக்தியைப் பிரதானமாகக் கொண்ட படைக்கும் கடவுளான பிரம்மன், அவரது துணைவரான அறிவைக் கொடுக்கும் சரஸ்வதி, ஜடத்தைப் பிரதானமாகக் கொண்ட அழிக்கும் கடவுளான சிவன், அவரது துணைவரான சக்தியைக் கொடுக்கும் பார்வதி ஆகியோரின் வடிவங்களான எண்ணிலடங்காக் கடவுளர்களில் யாரேனும் ஒருவரை தங்கள் இஷ்ட தெய்வமாகத் தேர்ந்தெடுத்து வாழ்நாள் முழுவதும் அவர் மேல் தொடர்ந்து தியானம் செய்ய வேண்டும்.

சாகும்பொழுது கடைசித் தருணத்தில் கடவுளைப்பற்றிய எண்ணங்கள் மனதில் இருக்கவேண்டுமென்றால் இப்பொழுதிலிருந்து தொடர்ந்து தியானம் செய்வது அவசியமாகிறது. ஏனெனில் எப்பொழுது மரணம் ஏற்படும் என்று அறிந்துகொள்ள முடியாது என்பதால் தியானம் செய்வதை ஒத்திவைக்க முடியாது. மேலும் எதன் மீது நமது நாட்டம் இருக்கிறதோ அதை பற்றிய எண்ணங்கள்தான் மனதில் நிறைந்து இருக்கும் என்பதால் இறக்கப்போகிறோம் என்று தெரிந்தாலும் திடீரென்று கடவுளைப் பற்றிய தியானம் செய்யமுடியாது. எனவே மரணத்திற்குப் பிறகு முக்தியடைய வேண்டும் என்று விரும்பும் இவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் தியானம் செய்ய வேண்டியது அவசியமாகிறது. மேலும் இவ்வகை தியானம் முக்தியடைவதற்கு ஈடான பலனை இந்தப்பிறவியிலேயே கொடுக்கும்.

### இருவகை தியானங்கள்

பற்றுடையோர்கள் முக்தியடைவதேயில்லை. முக்தி விழைபவர்கள் அனைவரும் முக்தியடைவதில்லை. அவர்களில் தகுதி வாய்ந்த ஒரு சிலர் மட்டுமே தீவிர முயற்சிக்குபின் முக்தி வேட்கை அகன்ற முற்றுணர்ந்தோர்களாக மாறுவார்கள். மற்றவர்கள் தங்களுக்கு இந்தப்பிறவியில் முக்திகிடையாது என்று முடிவெடுத்து மறுபிறவியில் நற்கதி கிடைக்கவேண்டும் என்று தங்களுடைய இஷ்டதெய்வத்தைத் தொழுவதில் திருப்தியடைந்துவிடுவார்கள்.

தீவிர முயற்சியும் ஆர்வமும் உள்ள முக்திவிழைவோர்கள் குணங்களற்ற பரமனைத் தான் என்று தியானம் செய்து தங்கள் முயற்சியில் வெற்றிபெறுவார்கள். தான் பரமன் அல்ல என்ற உறுதியுடன் இருப்பவர்கள் சர்வக் குணங்களுடன் கூடிய இறைவனைத் தியானம் செய்து மரணத்துக்குப்பின் முக்தியடைய முயற்சிப்பார்கள். முதல் வகை தியானம் முக்தியடைந்தபின் முடிவுக்கு வந்துவிடும். இரண்டாம் வகை தியானம் வாழ்நாள் முழுவதும் தொடரப்பட வேண்டும்.

### முதல் வகை தியானம்

ஐந்து புலன்களால் அறியப்படும் உலகப்பொருள்கள் அனைத்தும் தொடர்ந்து மாறிக்கொண்டிருந்தாலும் அவற்றின் மாறாத இருத்தலில் கவனம் செலுத்தித் தனது இருத்தல் என்ற தன்மைதான் உலகின் இருப்பிற்கு ஆதாரம் என்ற எண்ணம் முதல்

வகை தியானம். வடிவங்கள், பெயர்கள் என்ற ஒளி-ஒலி காட்சியாகிய இந்தப் பிரபஞ்சத்தின் ஆதாரமாக இருப்பது மாறாத இருத்தல் என்கிற நான் என்று தியானம் செய்ய வேண்டும். இது கனவில் காணும் பொருள்கள் எல்லாம் என்னைச்சார்ந்து இருப்பது போல இவ்வுலகம் முழுவதற்கும் நான்தான் ஆதாரமாக இருக் கிறேன் என்ற உண்மையை ஆழ்மனதில் பதியவைக்கும்.

எதிரில் தெரியும் நாற்காலியாக இருப்பதும் நான். அதன் மீது அமர்ந்து என்னுடன் பேசிக்கொண்டிருக்கும் மனிதரும் நான் முதலிய எண்ணங்களை மனதில் நிலைநிறுத்தினால் என்னைத் தவிர வேறு ஒன்றும் இல்லை என்ற உண்மை மனதில் பதியும்.

ஐந்து புலன்கள் சித்தரிக்கும் உலகத்தைப் பற்றிய எண் ணங்கள் மனதில் தொடர்ந்து மாறிக்கொண்டிருந்தாலும் அவற்றின் மாறாத ஆதாரமான உணர்வின் மீது கவனத்தைச் செலுத்தி அந்த உணர்வுதான் நான் என்று தியானம் செய்தால் அறியும் சக்தியை மனது என்னிடமிருந்து கடன்வாங்கிப் புலன்களை இயக்குகிறது என்ற அறிவு நிலைத்து அறிபவனாகிய நான் என்றும் அமைதி யானவன் என்பது புரியும்.

அறிபவனான நான் அறியும் பொருளாகவும் தென்படுகிறேன் என்ற உண்மையைத் தியானிப்பதால் இந்த அறிவு மனதில் நிலைபெற்று ஆனந்தம் வேண்டும் என்று அலைபாயும் தவிப்பு ஒரு முடிவுக்கு வந்துவிடும். வெளியே இருக்கும் உலகமும் உள்ளே தோன்றும் எண்ணமும் மாற்றத்திற்குட்பட்டது என்பதால் மாறாத எனக்கு உலகத்தை மாற்றவேண்டும் என்ற ஆசையோ மனதின் எண்ணங்களை மாற்ற வேண்டும் என்ற அவசியமோ கிடையாது. எது நடக்கிறதோ அது நல்லதாகவே நடக்கிறது என்று அனைத்தையும் அப்படியே ஏற்றுக்கொண்டு ஆனந்தமாக இருப்ப வர்கள் மேற்கொண்டு தியானம் செய்ய வேண்டிய அவசிய மில்லை.

### இரண்டாம் வகை தியானம்

இறந்தபின் மீண்டும் பிறவா வரம் வேண்டும் என்று கேட்கும் முக்திவிழைவோர்கள் நடப்பது அனைத்தும் நாரணன் விளை யாட்டு என்று தன்னிலிருந்து வேறுபட்ட ஒரு கடவுளின் மீது அனைத்துப் பாரங்களையும் போட்டுவிட்டு எனக்கென்ன மனக் கவலை என்று உலகதுன்பங்களிலிருந்து முழுதும் விடுபடுவார்கள்.

தனது உடல் மனது உட்பட்ட உலகில் உள்ள அனைத்தும் காணும் இடமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் கடவுளின் சொத்து என்றும், அவனன்றி ஒரு அணுவும் அசையாது என்றும் உறுதியாக நம்புவதால் தினமும் தனது இஷ்ட தெய்வத்தைப் போற்றி வழிபட்டு இவர்கள் செய்வது இரண்டாம் வகை தியானம்.

வாழ்வில் ஏற்படும் துன்பங்களை தங்கள் முன்னேற்றத் திற்காகக் கடவுள் வைக்கும் சோதனைகள் என்று ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் தொடர்ந்து செய்யும் தியானத்தால் இவர்களுக்கு ஏற்படும். முக்தியடையத் தகுதியானவனாக தன்னை மாற்றும் பொறுப்பையும் இவர்கள் இறைவனிடம் ஒப்படைத்துவிட்டதால் எவ்விதக் கவலையும் இன்றி இவர்கள் தியானத்தைத் தொடரலாம். கடவுளின் கருணையைத் தவிர வேறு ஒன்றும் வேண்டாம் என்று உலகப்பொருள்களின் மேல் இருந்த பற்று அனைத்தையும் துறந்த காரணத்தால் துன்பத்திற்குக் காரணமான ஆசை ஏற்படாது. செய்யும் செயல்கள் அனைத்தையும் ஆண்டவன் கட்டளையாகக் கருதி அவனுக்குத் தொண்டு செய்யும் மனப்பாங்குடன் செய்வ தால் பற்றுடையோர்கள் படும் துன்பம் இவர்களுக்கு இருக்காது. கிடைக்கும் பலன் அனைத்தும் அவனது பிரசாதம் என்று வேறு எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் இவர்கள் ஏற்றுக்கொள்வார்கள். எனவே வாழ்வில் ஏற்படும் அனைத்து ஏற்றத்தாழ்வுகளுக்கு நான் பொறுப்பு அல்ல என்று அனைத்தையும் அப்படியே ஏற்றுக் கொண்டு இவர்கள் நிம்மதியாக வாழ்வார்கள்.

## இருவகை தியானங்களுக்கு இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகள்

வெளியுலகில் முயற்சி செய்து துன்பம் கலவா இன்பத்தைப் பெற முடியாது என்று உணர்ந்த பற்றுடையோர்கள் முக்திவிழை வோர்களாக மாறுவது ஒருவழிப்பயணம். எவ்வளவு முயன்றும் முக்திகிடைக்கவில்லை என்று மீண்டும் உலகின் மேல் பற்று வைத்து இவர்கள் பற்றுடையோர்களாக மாறமாட்டார்கள். முக்தி விழைவோர்கள் அனைவருமே ஏதோ ஒருவிதத்தில் முக்தி யடைந்துவிடுவார்கள் என்று கூறலாம். ஏனெனில் முக்தியடையாத வர்கள் கூடக் கடவுள் நிச்சயம் முக்தியளிப்பார் என்ற நம்பிக் கையுடன் நிம்மதியாகவும் இன்ப துன்பங்களைச் சரிசமமாக ஏற்றுக் கொண்டு முக்தியடைந்தவர்களைப் போல் என்றும் இன்பத்துடன் வாழ்வார்கள்.

எதையும் தாங்கும் இதயத்தைக் கொடுக்கின்றன என்ற நோக்கில் பார்க்கும்பொழுது இருவகை தியானங்களும் ஒன்று போலத் தோன்றும். ஆனால் முதல்வகை தியானம் முக்தியடைந்த பின் முடிவுக்கு வந்துவிடும். இரண்டாம் வகை தியானம் வாழ்நாள் முழுவதும் செய்யப்படவேண்டும். முதல் வகை தியானம், நான் இவ்வுலகின் ஆதாரம் என்ற ஒரு அறிவை நம் மனதில் ஏற்ப டுத்துகிறது. இரண்டாம் வகை தியானம் கடவுள் மேல் உள்ள நம்பிக் கையை மனதில் நிலை நிறுத்துகிறது.

### அறிவும் நம்பிக்கையும்

நான் இவ்வுலகின் ஆதாரம் என்ற அறிவு நம் மனதில் ஏற்படுத்தும் மாற்றத்திற்கும், கடவுள் நம்பிக்கை நம் மனதில் ஏற்படுத்தும் மாற்றத்திற்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு. அறிவு மாறாது. நம்பிக்கை மாறாமலிருக்கத் தியானம் அவசியம்.

கடவுள் பார்த்துக்கொள்வான் என்ற எண்ணம் மனதில் நிலைக்கத் தீவிர ஆசையும் முயற்சியும் தேவை. ஆனால் நான் பரமன் என்ற அறிவு எவ்வித ஆசையும் முயற்சியும் இல்லாம லேயே மனதில் நிலைத்து இருக்கும்.

வேலை கிடைத்து நிறையப் பணம் சம்பாதிக்கவேண்டும் என்ற ஆசையால் மிகுந்த முயற்சி செய்து படிப்பை முடிக்கும் பொழுது தானாக அறிவு ஏற்பட்டிருக்கும். அதுபோலத் துன் பங்கள் அகல வேண்டும், குறையாத இன்பத்தைப் பெறவேண்டும் என்ற தீவிர ஆசையுடனும் விடாமுயற்சியுடனும் வேதம் படித்தால் நான் பரமன் என்ற அறிவு மனதில் தானாக ஏற்பட்டு விடும். மனதில் ஏற்பட்ட அறிவை அகற்றத்தான் முயற்சியும் ஆசையும் தேவையே தவிர அறிவு ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது.

நான் மனிதன் என்ற தவறான அறிவை அகற்றுவது சரியான அறிவால் மட்டுமே முடியும். நான் பரமன் என்ற அறிவு சரியான அறிவு என்பதால் அந்த அறிவை மாற்றவோ அழிக்கவோ முடியவே முடியாது. நான் பரமன் என்ற அறிவைப் பெற இயலாதவர்கள் மட்டுமே தான் கடவுளின் கையில் இருக்கும் ஒரு பொம்மை என்ற நம்பிக்கையை மனதில் நிலைநிறுத்தத் தொடர்ந்து தியானம் செய்யவேண்டும்.

கல்லைக் கல்லாகப் பார்ப்பது அறிவு. கல்லைக் கடவுளாகப் பார்ப்பது நம்பிக்கை.

கல்லைக் கல்லாகப் பார்ப்பதில் நமக்கு எவ்விதச் சுதந்திரமும் இல்லை. ஏனெனில் கல் கல்தான். அதுபோல நான்தான் இவ்வுலகமாக காட்சியளிக்கிறேன் என்ற அறிவு ஏற்பட்டதும் உலகை வேறாக நம்மால் பார்க்க முடியாது. ஆனால் எந்தக்கல்லை எந்தக் கடவுளாகப் பார்ப்பது என்பதில் நமக்கு ஒரு சுதந்திரம் இருப்பதால் கல்லில் கடவுளைப் பார்க்கத் தொடர்ந்த தியானம் தேவை.

உலகம் கடவுளால் படைக்கப்பட்டது என்பது ஒரு நம்பிக்கை. இந்த நம்பிக்கையை மனதில் இருத்தத் தியானம் அவசியம். உலகம் என்னால் என்னிலிருந்து எனக்காகப் படைக்கப்பட்டது என்பது அறிவு. இந்த அறிவை மனதிலிருந்து அகற்ற முடியாது.

தன்னிலிருந்து வேறுபட்ட இவ்வுலகம்தான் தனது துன்பத்திற்குக் காரணம் என்ற தவறான அறிவு பற்றுடையோர்களிடம் நிலைத்து இருக்கும். இதற்கு நேர்மாறாக நீதான் உலகம் என்ற சரியான அறிவை முக்திவிழைவோர்களுக்கு நேரடியாக ஏற்படுத்துவது கடினம் என்பதால் உலகத்தைப் படைத்தவன் கடவுள் என்ற கருத்தை ஒரு படிக்கட்டாக வேதம் பயன்படுத்தியுள்ளது. படியைப் பயன்படுத்திச் சரியான அறிவைப் பெற்ற முக்திவிழைவோர்கள் முற்றுணர்ந்தோர்களாகிறார்கள். அவ்வாறு இல்லாமல் அதேபடியில் நின்று கடவுள் நம்பிக்கையுடன் வாழும் மற்றவர்கள் அந்த நம்பிக்கை நிலைக்கத் தியானம் என்ற செயலைத் தொடர்ந்து செய்யவேண்டும்.

### செயல்களின் பலன்

இல்லாத பொருளை அடைவது அல்லது உருவாக்குவது, இருக்கும் பொருளை மாற்றுவது அல்லது தூய்மைப்படுத்துவது போன்றவை செயல்கள் செய்வதால் மட்டுமே சாத்தியமாகும். சமைப்பது பற்றிய அறிவு மட்டும் இருந்து அதை செயல்படுத்தாவிட்டால் சாப்பிடமுடியாது. செயல்கள் செய்வதால் மட்டுமே உலகில் உள்ள பொருள்களை அனுபவிக்க முடியும். படிப்பதனால்தான் அறிவு ஏற்படும் என்றாலும் அறிவினால் நேரடியாகப் பலன் கிடைப்பதில்லை.

செயல்கள் செய்வதால் கிடைக்கும் பலன்கள் எதுவும் நிலையாக இருப்பதில்லை. துடைத்துவைத்த பொருள் மீண்டும் அழுக்காகும். எனவே தொடர்ந்து செயல்களைச் செய்வது அவசியமாகிறது. அறிவு மட்டும்தான் அழிவதில்லை. ஏற்கெனவே

ஏற்பட்ட அறிவைத் தக்கவைத்துக்கொள்ளவோ பாதுகாக்கவோ எந்தவிதச் செயலையும் செய்ய வேண்டாம். அறிவைத்தவிர மற்ற அனைத்தும் அழிந்துவிடும் தன்மையுடையவை என்பதால் உலகை அனுபவிக்கத் தொடர்ந்து செயல் செய்ய வேண்டியது அவசியம்.

## அறிவினால் கிடைக்கும் பலன்

செயல் செய்ய அறிவு வேண்டும். எனவே செயல்கள் மூலம் கிடைக்கும் பலன்கள் அனைத்தும் அறிவினால்தான் எனலாம். பொதுவாக அறிவு நேரடியாக எவ்விதப் பலனையும் கொடுப்ப தில்லை. இந்த விதிக்கு ஒரே ஒரு விதிவிலக்கு உள்ளது. நான்தான் இந்த உலகத்தின் இருப்புக்கு ஆதாரம் என்ற வேதம் கூறும் உண் மையை அறிவதால் மட்டுமே நம்மால் முக்தியடைய முடியும். இதைத்தவிர மற்ற அறிவு எதுவும் செயலாக மாற்றம் பெற்ற பின்தான் பலனை அளிக்கும். எனவேதான் கடவுள் நம்மைக் காப்பாற்றுவார் என்ற அறிவு தொடர்ந்து தியானம் செய்தல் என்ற செயலாக மாறினால்தான் நமக்கு நிம்மதி என்ற பலனைக் கொடுக்கும். ஒரு சில காலம் தியானம் செய்த பின் நிறுத்திவிட்டால் மறுபடியும் நமது நிம்மதி குறைந்து மீண்டும் தியானம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படும்.

பக்கத்தில் படுத்து தூங்கிக்கொண்டிருக்கும் நண்பன் ‘பணம் காணவில்லை’ என்று உளறும்பொழுது ‘காவல் நிலையத்தில் புகார் செய்’ என்று அவனை மேலும் செயல் செய்யத் தூண்டுவதைவிட எழுப்பிவிடுவதுதான் சிறந்தது. அதுபோல உலகத்தில் விரும்பும் பொருள்களை அடையவும் வேண்டாதவற்றைத் தவிர்க்கவும் தொடர்ந்து இங்குமங்கும் அலைந்து திரிந்து செயல் செய்யும் மக்களுக்கு உலகம் இருப்பதாகத் தோன்றுவது மாயை என்ற உண்மை அறிவைக் கொடுத்தால் அவர்களது துன்பங்கள் அனைத்தும் ஒரு நொடியில் மறைந்துவிடும்.

இருக்கும் பொருள்களைக் காப்பாற்றவும் இல்லாத பொருள் களைச் சம்பாதிக்கவும் எவ்விதச் செயல்களும் செய்ய வேண்டிய கட்டாயம் இல்லை என்ற அறிவு நிரந்தர அமைதியைக் கொடுக்கும். இந்த அறிவைப் பெற இயலாத முக்திவிழைவோர்கள் தொடர்ந்து தியானம் என்ற செயலைச் செய்து அதே பலனைப் பெறலாம். கனவில் நம்மைக் குத்தும் கத்தி எண்ணத்தால் உரு

வானது என்ற அறிவு ஏற்படும் வரை அது இரும்பால் செய்யப் பட்ட ஆயுதம் அல்ல என்ற தியானம் அவசியம்.

## இது மாறும்

நிம்மதியாக இருக்கும் நான் எவ்விதச் செயலையும் செய்வ தில்லை என்ற அறிவு கனவின் நிகழ்வுகளைத் தொடர்ந்து அனு பவிக்கும் வாய்ப்பை நமக்குக் கொடுக்கும். நான் என்ற அகங் காரத்தை நாம் ஏற்று நடிக்கும் பாத்திரமாக அறிந்து இந்த உலகம் என்ற நாடகமேடையில் வாழ்வு என்ற நாடகத்தில் நடித்துக் கொண்டே அதை எவ்விதத் துன்பமுமில்லாமல் தொடர்ந்து அனுப விக்கலாம். எவ்வளவு நாட்கள் இந்த நாடகம் நடக்கும் என்பதோ அதில் நிகழும் சுவாரஸ்யமான திருப்பு முனைகள் எந்த வழியில் நம் வாழ்வைத் திருப்பிவிடும் என்பதோ நமக்குத் தெரியாது. ஆனால் 'இது மாறும்' என்பது மட்டும் மாறாத உண்மை. வாழ்க்கை நாடகத்தின் சோகக்கட்டம் வெகு விரைவில் மாறி இன்பத்திற்கு வழிவகுக்கும். எல்லாம் நலம் என்ற நிலையும் விரைவில் மாறும். உச்சகட்டம் என்று பெயரிடப்பட்ட தனிப்பட்ட காட்சி எதுவும் வாழ்வு எனும் நாடகத்தில் கிடையாது. வாழ்வின் ஒவ்வொரு நொடியும் அதன் உச்சகட்டம்தான். எந்த நிலையில் நாம் இருந்தாலும் அந்த நிலையும் விரைவில் மாறிவிடும். 'இது மாறும்' என்ற ஒரே விதியை மாறாமல் பின்பற்றும் இந்த வாழ்வில் அவனும் அவளும் இணைபிரியாமல் இறுதிவரை இனிதே வாழ்ந் தார்கள் என்று நம்ப முடியாத முடிவு காட்சிகள் செயற்கையாக நாம் உருவாக்கும் கற்பனைகதைகளில் மட்டுமே இடம் பெறும்.

இது மாறும் என்ற நியமத்தை ஒரு பொது அறிவாக வார்த்தை யளவில் அனைவரும் ஏற்றுக்கொண்டாலும் அந்த மாற்றம் தான் விரும்பிய மாதிரி நடக்காவிட்டால் என் வாழ்வில் இது எப்படி நிகழலாம் என்று வருத்தப்படுவதைத் தவிர்க்க முடிவதில்லை. இதற்குக் காரணம் 'இது மாறும்' என்பது அறிவாக மனதில் பதியாததுதான். மேலும் உலகின் தொடர்ந்த மாற்றத்திற்கு ஆதாரமாக இருப்பது மாறாமல் இருக்கும் நான் என்பதைப் புரிந்து கொள்ளாததும் இதுபோல் துக்கப்படுவதற்கு ஒரு காரணம். சாத்தான் என்று மற்ற மதங்களால் வர்ணிக்கப்படும் மாயை தன் கவர்ச்சி நடனத்தை ஆடி நம் மனதை மயக்குவதன் மூலம் தான் வெறும் ஒளி-ஒலி காட்சி என்ற அறிவை நம் மனதில் ஏற்படு வதைத் தடுக்கிறது. நான்தான் இந்த ஒளி-ஒலி காட்சியின் ஆதாரம்

என்ற அறிவு ஏற்பட்டபின் மாயையின் நடனத்தை ஆனந்தமாக அனுபவிக்கலாம். நடனத்தின் ஒரு அங்கமாக நம் உடலும் மனதும் ஆடிக்கொண்டிருப்பதால் ஆட்டம் முடியும்வரை அறிவு ஏற்படாது என்று தவறாக முடிவெடுப்பவர்கள் மாயையின் தலைவனான இறைவனைச் சரணடைந்து வாழ்நாள் முழுவதும் தியானம் செய்வதன் மூலம் நிலையான இன்பம் கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் இருப்பார்கள்.

## சாராம்சம்

*கனவில் பணம் தொலைந்ததால் கலவரப்படும் மனம் தான்செயல்பட ஆதாரமாக இருக்கும் மனிதனைத் தானாக அறிந்துகொள்ள முடியாது. கனவிலிருந்து விழித்தால் மட்டுமே படுக்கையில் படுத்திருப்பவனை அறியமுடியும். அதுபோல இவ்வுலகில் தான் செயல்பட ஆதாரமாக இருக்கும் பரமனை மனம் அறிந்துகொள்ள வேதம் குரு மூலமாக உதவுகிறது. வேறுவழியில் இந்த அறிவை மனம் அடையவே முடியாது. ஆழ்ந்த உறக்கத்தில் அமைதியாகவும் ஆனந்தமாகவும் இருந்தேன் என்ற உண்மை விழித்தபின் தான் விளங்குகிறது. அதுபோல் இந்த மாயையின் நடனத்திலிருந்து விழித்துக்கொள்வது மரணத்திற்குப் பின்கூட சாத்தியமில்லை. ஏனெனில் மனம் இல்லாமல் எவ்வித அறிவையும் அடையமுடியாது. மனம் அதில் ஏற்படும் அறிவு ஆகிய இரண்டும் அந்த நடனத்தின் ஒரு பகுதி என்பதால் அந்த அறிவைப் பெற நாம் தயார் நிலையில் இருக்கும்பொழுது குருவின் வாயிலாக உண்மை விளங்கும்.*

*தான் விழிக்கவேண்டும் என்ற எண்ணம் இல்லாமல் உறங்குபவர்களை எழுப்ப முடியாது. அதுபோல அனைத்து முக்திவிழைவோர்களையும் உண்மையை அறிந்த குருவால் எழுப்பிவிட முடியாது. விழிக்கவேண்டும் என்ற எண்ணம் இருப்பவர்கள் மெல்லத்தொட்டால் கூட உடனே எழுந்து விடுவார்கள். மாறாத உணர்வுதான் நான் என்ற வாழ்வின் மிகமுக்கியமான அறிவை அடையத் தயாராக இருப்பவர்கள் குருவின் துணையுடன் மிக எளிதாக முற்றுணர்ந்தோனாக மாறிவிடுவார்கள். மாறும் மாயா நடனத்தில் மூழ்கி*

*உண்மையை அறிய இயலாதவர்கள் மாயையின் தலைவனான இறைவனைத் துதி செய்து துன்பமில்லா வாழ்வை அடைவார்கள்.*

*ஆங்கிலேயர்களின் ஆட்சிமுடிந்து அநேக வருடங்கள் ஆன பின்னும் அவர்கள் ஆளப்பிறந்தவர்கள், நாம் அடிமைகள் என்ற தாழ்வு மனப்பான்மை பலருக்கு இருப்பதுபோல் ஆண்டவன் உலகத்தின் முதலாளி, அவ னிடம் நான் ஒரு தொழிலாளி என்ற மனப்பக்குவத்துடன் இருப்பவர்களால் எண்ணிலடங்கா நட்சத்திரங்களும் கிரகங்களும் கொண்ட இந்தப் பரந்த பிரபஞ்சத்தை உருவாக்கி இயக்குவது நான்தான் என்ற உண்மையைப் புரிந்து கொள்வது கடினம். எனவே இவர்கள் என்றும் இன்பமாக இருக்கும் வாழ்வை இறந்தபின் கொடுக்கும் படி கடவுளிடம் தொடர்ந்து தியானம் செய்து வேண்டிக் கொள்வதைத் தவிர்க்க முடியாது.*

*இது மாறும் என்று புரிந்துகொண்டவர்கள் மாற்றத் திற்கு எவ்வித முக்கியத்துவமும் கொடுப்பதில்லை. மாறாமல் இருக்கும் ஒன்றை அறிந்தவர்கள் முக்தியடைவார்கள்.*

### பயிற்சிக்காக

1. யார் வாழ்நாள் முழுவதும் தியானம் செய்ய வேண்டும்?

2. இறக்கும் தருவாயில் கடவுளைப்பற்றிய எண்ணங்கள் மனதில் இருந்தால் போதாதா? எதற்காக வாழ்நாள் முழுவதும் தியானம் செய்ய வேண்டும்?

3. இந்தப்பாடத்தில் குறிப்பிடப்பட்ட கடவுளர்கள் யார் யார்?

4. இருவகை தியானங்களை விளக்குக.

5. இருவகை தியானங்களுக்கு இடையே உள்ள ஒற்றுமைகள் என்ன?

6. இருவகை தியானங்களுக்கு இடையே உள்ள வேற்றுமைகள் என்ன?

7. நம்பிக்கைக்கும் அறிவுக்கும் இடையே உள்ள வேற்றுமைகள் என்ன?

8. கடவுள் நம்பிக்கையால் ஏற்படும் பலன் என்ன?

9. நான் பரமன் என்ற அறிவால் ஏற்படும் பலன் என்ன?

**சுயசிந்தனைக்காக**

❖ *நான் பரமன் என்று அறிந்தவர்கள் வாழ்நாள் முழுவதும் தியானம் செய்ய வேண்டாமா?*

❖ *அனைத்து மதங்களைச் சேர்ந்த உண்மையான பக்தர்கள் அனைவரையும் முக்தியடைந்தவர்கள் என்று கருதமுடியுமா?*

❖ *முக்தியடைந்தவர்களுக்கும் முற்றுணர்ந்தோர்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்க.*



162

# பாவ புண்ணியங்களிலிருந்து முழுவிடுதலை

அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 490

*"தாமரையிலையில் தண்ணீர் ஒட்டாததைப்போல நான் பரமன் என்று அறிந்தவனைப் பாவம் ஒட்டாது"* என்று சாந்தோக்கிய மந்திரம் (**4.14.3**) கூறுவதன் உள்ளர்த்தத்தை இந்தப் பாடம் ஆழமாக ஆராய்கிறது.

## வேதம் தரும் அறிவு

அறிவு, செயல்படும் திறன் ஆகிய இரண்டின் அடிப்படையில் உலகமக்கள் பெரிதும் வேறுபடுகிறார்கள் என்றாலும் துன்பம் கலவா இன்பத்தை அடைவது என்ற ஒரே குறிக்கோளுடன்தான் அனைவரும் செயல்படுகிறார்கள். இந்த ஒரே குறிக்கோளை அடைய அவரவரின் நிலைக்கு ஏற்ப வேதம் வழிகாட்டுகிறது.

உலகம்தான் தன் இன்ப துன்பங்களுக்குக் காரணம் என்ற அறிவுடன் துன்பத்தைத் தவிர்க்கச் செயல்படுபவர்கள் பற்றுடையோர். எவ்வளவோ முயன்றும் துன்பத்தைத் தவிர்க்கமுடியாததற்கு காரணம் சென்ற பிறவிகளில் செய்த பாவம் என்று வேதம் இவர்களுக்கு சமாதானம் சொல்கிறது. மற்ற உயிரினங்களுக்குத் துன்பம் கொடுப்பது பாவம் என்றும், உதவி செய்வது புண்ணியம் என்றும் பாவபுண்ணியங்களுக்கு வேதம் தரும் விளக்கங்களை எவ்விதக் கேள்வியும் கேட்காமல் ஏற்றுக்கொள்பவர்கள் பாவங்களைத் தவிர்த்து நல்வழியில் செயல்பட்டு அடுத்து வரும் பிறவிகளில் முக்தியடைவது நிச்சயம் என்ற நம்பிக்கையுடன் நிம்மதியாக வாழ்வார்கள்.

வேதம் கூறும் பாவம் புண்ணியம் போன்ற கருத்துக்களை வெறும் நம்பிக்கையின் அடிப்படையில் ஏற்றுக்கொள்ளாமல் அறி வினால் ஆராய ஆரம்பிப்பவர்கள் முக்திவிழைவோர்கள். தனது துன்பத்திற்கு மற்றவர்கள் காரணம் என்ற தவறான அறிவை நீக்கச் சஞ்சித கர்மம், ஆகாமி கர்மம் போன்ற கருத்துக்களை வேதம் அவர்களுக்கு விளக்கி தனது துன்பத்திற்குத் தான் மட்டும்தான் காரணம் என்று அவர்களை உணரவைக்கிறது. நான்தான் என் துன்பத்திற்குக் காரணம் என்றால் துன்பங்களிலிருந்து முழுமையாக என்னால் விடுதலை பெறமுடியும் என்ற முயற்சி அவர்களைப் படிப்படியாக முற்றுணர்ந்தோர்களாக மாற்றும். அதன்பின் அவர் களைப் பாவபுண்ணியங்கள் பற்றாது. அதுவரை சேர்த்துவைத்த சஞ்சித கர்மம் முழுவதும் அழிவதுடன் ஆகாமி கர்மமும் அவர் களைப் பாதிக்காது என்று வேதம் கூறுகிறது. எனவே அவர்கள் பிறவிச்சுழலிலிருந்து விடுபட்டு முக்தியடைவார்கள்.

## வேதம் தரும் விளக்கம்

உலகம் ஒரு புரியாத புதிர் என்பதை உணராதவர்கள் அனைத்துக் காரியங்களுக்கும் ஒரு காரணம் இருக்கிறது என்ற நம்பிக்கையில் செயல்படுவார்கள். இது இதனால் நடந்தது என்ற விளக்கம் கொடுக்கமுடியாதபொழுது கர்மபலன், மறுபிறவி என்ற கருத்துக்களை வேதம் அறிமுகப்படுத்துகிறது. பகுத்தறிவிற்கும் ஆராய்ச்சிக்கும் அப்பாற்பட்டு இருந்தாலும் அனைத்து நிகழ்வு களுக்கும் ஒரு காரணம் இருந்தாக வேண்டும் என்ற ஒரு எதிர் பார்ப்பு இக்கருத்துக்களை உண்மையாக்குகிறது. எந்த முரண்பாடும் இல்லாமல் தர்க்க அறிவிற்குப் பொருந்திய இக்கருத்துக்கள் மக்களை முக்தியை நோக்கிய சரியான பாதையில் பயணிக்க வைக்கிறது.

உலகைப் புரிந்துகொள்ள முடியாது என்று எடுத்த எடுப்பி லேயே சொல்வதற்குபதில் எந்தச் செயல் எப்பொழுது பலன் அளிக்கும் என்பதை மட்டும் மனிதனால் உணர்ந்து கொள்ள முடியாது என்று வேதம் கூறுகிறது. இதை ஏற்றுக்கொண்டால் கடவுள், எண்ணிலடங்காப் பிறவிகள், பாவபுண்ணியம், சுவர்க்கம், நரகம் போன்ற வேதம் கூறும் காரணகாரியங்கள் உலகைப் புரிந்து கொண்டதுபோல ஒரு தோற்றத்தை ஏற்படுத்துகின்றன. தர்க்கத்தின் அடிப்படையில் யாராலும் தகர்க்க முடியாத இந்த விளக்கங்கள் புத்திகூர்மையுள்ள மனிதர்களையும் கடவுள் நம்பிக்கையுடன் செயல்படவைக்கின்றன.

உலகைப் புரிந்துகொள்ள முடியாது என்றும், புரிந்துகொள்ள வேண்டிய அவசியம் எதுவும் இல்லை என்றும் புரிந்துகொள் பவர்கள் முற்றுணர்ந்தோர்கள். கனவில் நாம் எதிர்கொள்ளும் குடி காரன் ஏன் அந்தப்பழக்கத்துக்கு அடிமையானான் என்றோ அவன் முக்தியடைய வாய்ப்பு இருக்கிறதா என்றோ நாம் கவலைப்படுவதில்லை. அதுபோல விருப்பு-வெறுப்புகள் பிறவி தோறும் நம்மைத் தொடர்கின்றன, செய்த பாவபுண்ணியங்களின் பலனை நாம் அனுபவித்துத்தான் ஆகவேண்டும் முதலிய விளக் கங்கள் அனாவசியம் என்று அறிபவர்கள் முற்றுணர்ந்தோர். துன்பம் என்பதே கற்பனை என்பதால் முக்தியென்பதும் கற்பனையே என்பதை இவர்கள் அறிந்திருப்பதால் பாவ புண்ணியங்கள் இவர்களைச் சிறிதும் பாதிக்காது. ஒரு சிறு படகு பெரிய கடலைக் கடக்க உதவுவது போல நான்தான் இந்த உலகின் ஆதாரம் என்ற அறிவு எண்ணிலடங்காப் பிறவிகளில் சேர்த்து வைத்த பாவங்களின் பலனை அனுபவிக்க வேண்டிய கட்டாயத் திலிருந்து இவர்களை விடுவிக்கும். மேலும் இந்தப் பிறவியில் செய்த, செய்யும் பாவங்களும் இவர்களைப் பாதிக்காது.

### அனுபவித்துத் தீர்க்கமுடியாது

எண்ணற்ற பிறவிகளில் சேர்த்து வைத்த அளவற்ற பாவ புண்ணியங்களை நம்மால் அனுபவித்துத் தீர்க்கவே முடியாது. மேலும் அவற்றை அனுபவிக்கும்பொழுது புதிய செயல்கள் செய்து மேலும் பாவபுண்ணியங்களை சேர்த்துக்கொள்வதையும் தவிர்க்க முடியாது. எனவே ஞானத்தினால் மட்டுமே முக்தியடைய முடியும்.

மறுபிறவி, பாவபுண்ணியங்கள் ஆகியவை உள்ளன என்று நமக்குத் தெரிவித்த அதே வேதம், ஞானம் பெற்ற மறுகணம் இவற்றிலிருந்து விடுதலையடையலாம் என்று கூறுவதால் அதை நாம் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். செய்த பாவங்களுக்குத் தண்டனை பெறாமல் தப்பிப்பது எப்படி நியாயம் என்ற தர்க்க விவாதம் இங்கு உதவாது. எவ்வளவுதான் பாவ காரியங்கள் செய்து இருந்தாலும் ஞானம் பெற்றவுடன் முக்தியடைவோம் என்பதில் எவ்விதச் சந்தேகமும் கிடையாது.

### செய்பவனின் முடிவு

செயல் செய்தவன் செயலின் பலனை அனுபவித்துத்தான் ஆகவேண்டும் என்று வேதம் கூறுவது செயல் செய்து உலகை

மாற்ற முயலும் பற்றுடையோர்கள் அல்லது செயல்கள் மூலம் மனதை மாற்ற முயலும் முக்திவிழைவோர்கள் ஆகியோருக்கு மட்டுமே பொருந்தும். தான் செயல் செய்பவன் அல்ல என்பதை அறிந்த முற்றுணர்ந்தோர்களைப் பாவம் பற்றாது. மனிதனைத்தவிர மற்ற உயிரினங்கள் எதுவும் நான் செயல்களைச் செய்பவன் என்ற அகங்காரம் இல்லாமல் செயல்படுவதால் அவை பாவ புண்ணியங் களை சேர்த்துக்கொள்வதில்லை என்று வேதம் கூறுகிறது. அது போல இவ்வுலகிலிருந்து வேறுபட்டுத் தனியாக இயங்கும் மனித னாகத் தன்னைக் கருதாதவர்கள் பாவபுண்ணியங்களுக்கு அப்பாற் பட்டவர்கள்.

## செயல்களின் முடிவு

பதினான்கு உலகங்களில் இங்குமட்டும்தான் செயல்கள் செய் யப்படுவதாக மக்கள் நினைப்பதால் இதுமட்டும்தான் கர்ம பூமி என்று வேதம் கூறுகிறது. தொடர்ந்து நடக்கும் ஒலி-ஒளி காட்சியில் ஏற்படும் மாற்றங்களைச் செயல்கள் என்று தவறாக நினைப்பவர் களுக்கு மட்டுமே கர்ம பலன் என்ற காரண காரிய விளக்கம் அவசியமாகிறது. செயல்களே இல்லை என்று உணர்ந்தவுடன் அவற்றின் பலன்கள் மறைந்துவிடும். கர்ம பலன்கள் மறைந்து விட்ட காரணத்தால் மறுபடி பிறக்க வேண்டிய அவசியமும் கிடையாது.

## காலத்தின் முடிவு

காலம் நமது கற்பனை என்பதால் சென்ற காலத்தில் செய்த செயல்களின் பலனை வருங்காலத்தில் அனுபவிக்கவேண்டும் என்ற சட்டம் நமக்குப் பொருந்தாது. யார் மூன்று காலங்கள் இருப்பது உண்மை என்று நம்புகிறார்களோ அவர்களுக்கு மறுபிறவி உண்மை. இந்தப்பிறவியே பொய் என்பதை அறிந்த வர்களுக்கு நிச்சயம் மறுபிறவி கிடையாது.

## இடைவெளியின் முடிவு

வெண்திரையில் காட்டப்படும் வண்டி எவ்வளவு வேகமாகப் போனாலும் திரைக்கு வெளியே செல்ல முடியாது. முருகன் மூன்று முறை உலகைச் சுற்றிவருவதற்குள் அம்மையப்பன்தான் உலகம், உலகம்தான் அம்மையப்பன் என்ற உண்மையைக் கூறி ஞானப் பழத்தை வென்ற விநாயகனைப்போல இவ்வுலகம் இருப்பது

எனது எண்ணத்தில் மட்டும்தான் என்றுணர்ந்தவர்கள் துன்பத்திற்கு ஆளாவதில்லை.

**கற்பனை கதை**

செய்த குற்றத்திற்கு இரண்டு வருடக் கடுங்காவல் தண்டனை என்று தீர்ப்பைக் கேட்டவுடன் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டால் அந்தத் தண்டனையை அனுபவிக்க வேண்டிய அவசியமில்லை. அதுபோல உலகம் என்ற மாயையின் பிடியிலிருந்து விழித்துக்கொண்ட முற்றுணர்ந்தோர்கள் எவ்விதத் தண்டனையையும் அனுபவிப்பதில்லை.

### சாராம்சம்

*நான் உருவாக்கிய உலகில் உலாவரும் அற்பமான மனிதர்களில் ஒருவரை நான் என்று தவறாக நம்புபவரை செயல்கள் செய்வதாகவும் அவற்றின் பலன்களை அனுபவிப்பதாகவும் ஏற்படும் தோற்றத்தைத் தவிர்க்க முடியாது. இருப்பது நான் மட்டுமே. பல்வேறு உயிரினங்களைத் தோற்றுவித்த எனது மாயா சக்தி அவை ஒரு இடத்தில் பிறந்து சில காலம் வளர்ந்து பிறகு மறைவதாகவும் சித்தரித்துள்ளது. எண்ணிலடங்கா இவ்வுயிரினங்கள் பிறப்பு-இறப்பு என்ற சக்கரத்தில் சிக்கி மீண்டும் மீண்டும் பிறந்து இவ்வுலகில் இன்பதுன்பங்களை அனுபவிப்பதாகக் காட்டப்படும் இந்த நாடகத்தின் சூத்திரதாரி நான் என்ற அறிவைப் பெறும் மனிதர்கள் பாவ புண்ணியங்களிலிருந்து விடுதலையடைகிறார்கள்.*

### பயிற்சிக்காக

1. பற்றுடையோரின் பார்வையில் பாவபுண்ணியங்களை விவரிக்கவும்.
2. முக்திவிழைவோர்கள் பாவபுண்ணியங்களை ஏற்றுக்கொள்ளும் விதம் யாது?
3. முற்றுணர்ந்தோர்களைப் பாவபுண்ணியங்கள் ஏன் பாதிப்பதில்லை?

## சுயசிந்தனைக்காக

1. *நான் தூங்கும்பொழுது உலகம் இருப்பதில்லையா?*

2. *முற்றுணர்ந்தோர்கள் பாவம் செய்வார்களா?*



# 163 ஆனந்தமாக இருக்கப் புண்ணியம் அவசியமில்லை

**அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 491**

**ஞா**னம் பெற்றபின் கர்ம பலன்கள் அழிந்துவிடும் என்பதால் பாவங்களின் பலன்கள் மட்டுமின்றி புண்ணியங்களின் பலன் களையும் அனுபவிக்க முடியாது. ஆயினும் முற்றுணர்ந்தோன் தொடர்ந்து ஆனந்தமாக இருப்பதன் காரணத்தை இந்தப் பாடம் ஆராய்கிறது.

இனிப்புப்பண்டம் வடிவம், வண்ணம், தன்மை, செய்முறை போன்றவற்றின் அடிப்படையில் வேறுபட்டாலும் தித்திக்கும். அது போல அறிவு, குணம், செயல்கள் ஆகியவற்றின் அடிப்படையில் மனிதர்கள் ஒருவருக்கொருவர் வேறுபட்டாலும் அனைவருக்கும் ஆதாரமான பரமன் ஆனந்தமயமானவன் என்பதால் அனைவரது இயல்பு நிலையும் இன்பமே. எனவேதான் கோபம், எரிச்சல், பயம் போன்ற துன்ப உணர்வுகள் மனதில் ஏற்படும்பொழுது அவற்றை அகற்றி கூடிய விரைவில் தங்கள் இயல்பு நிலைக்குத் திரும்ப அனைவரும் விரும்புவர்.

ஆழ்ந்த உறக்கத்தில் மனம் ஒடுங்கிய நிலையில் ஆனந்தமாக இருக்கும் நாம் கனவு காண ஆரம்பித்தவுடன் மனதில் தோன்றும் எண்ண ஓட்டங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துத் துன்பப் படுகிறோம். இந்த எண்ண ஓட்டங்களின் தன்மை விழித்தபின் கூட சிறிதும் மாறுபடுவதில்லை. கனவிற்குள் காணும் மற்றொரு கனவுதான் நிஜம்.

நான் என்னும் உணர்வின் அதிர்வுகளை ஆதாரமாகக் கொண்டு உருவாக்கப்பட்டுத் தொடர்ந்து மாறிக்கொண்டிருப்பது

இந்தப் பிரபஞ்சம். அதன் ஒரு பகுதியான நம் மனம் ஆழ்ந்த உறக்கத்தின்பொழுது மட்டும் முழுவதும் அடங்கிவிடுகிறது. எனவே நாம் எண்ணங்கள் ஏதுமின்றி அமைதியாகவும் இன்ப மாகவும் இடம், பொருள், காலத்திற்கு அப்பாற்பட்டு எவ்வித மாற்றமுமின்றி இருக்கிறோம். இன்பம் நமது இயல்பு என்பதால் அப்படியே இருந்துவிடாமல் ஒரு உலகத்தைக் கனவிலும் நன விலும் நாம் உற்பத்தி செய்கிறோம். இவ்வாறு உலகை உருவாக்கு வது நான் என்பது உருவாக்கப்பட்ட மனதிற்குத் தெரியாததால் அது எங்கே நிம்மதி, எங்கே நிம்மதி, அங்கே எனக்கோர் இடம் வேண்டும் என்று உலகம் முழுவது தேடித் திரிந்து கொண்டு இருக்கிறது. உண்மையை அறிந்து கொள்ளும் பக்குவம் வரும் வரை புண்ணியங்கள் செய்வதனால் அமைதியையும் இன்பத் தையும் அடையலாம் என்று அறிவுறுத்தும் வேதம் ஞானம் ஏற்பட்டவுடன் புண்ணியங்களை அழித்துவிடுகிறது.

### துன்பங்களிலிருந்து விடுதலை

பிறருக்குத் துன்பம் தரும்வகையில் நம் செயல்கள் அமைந்தால் நம்மால் நிம்மதியாக வாழமுடியாது. யாரையாவது திட்டினால் அவர் வருத்தப்படுகிறாரோ இல்லையோ நாம் வருத்தப்படுவது நிச்சயம். நாம் வருத்தப்படாமல் இருக்க வேண்டு மானால் யார் மனதையும் புண்படுத்தும்படி நடந்து கொள்ளக் கூடாது. அதேபோல மற்றவருக்கு ஒரு உதவியைச் செய்தால் அதனால் அவருக்கு நன்மை ஏற்படுகிறதோ இல்லையோ நாம் இன்பமடைவது நிச்சயம். எனவே துன்பத்தைத் தவிர்த்து இன்ப மாயிருக்கப் பாவங்களைத் தவிர்த்துப் புண்ணியங்களைச் செய்ய வேண்டுமென்று பற்றுடையோருக்கு வேதம் வழிகாட்டுகிறது.

இந்த வழியில் நடந்தபின் கூட முழுவதுமாகத் துன்பத்தைத் தவிர்க்க முடியவில்லை என்ற நிலையில் செய்த புண்ணியங்களின் பலனாக மரணத்திற்குப்பின் சுவர்க்கம் போன்ற உயர்லோகங்களில் பிறவியெடுக்கலாம் என்ற நம்பிக்கையை வேதம் வளர்க்கிறது. தேவையான மனப்பக்குவம் ஏற்பட்டபின் பற்றுடையோர்கள் இது போன்ற உலகங்கள் உண்மையிலேயே இருக்கின்றனவா என்ற கேள்வியை எழுப்பி வேதம் படிக்கும்பொழுது முக்திவிழை வோர்களாக மாறுவார்கள்.

அதன்பின் தன் மனம் உடல் உட்பட்ட இந்த உலகமே உண் மையில் இல்லை என்ற அறிந்தபின் செய்த பாவபுண்ணியங்

களிலிருந்து முழுவதுமாக விடுதலை பெற்று நிம்மதியாக வாழ்வார்கள்.

## நம் செயல்களுக்குக் காரணம்

ஒரு சிலர் புன்முறுவலுடன் மற்றவர்களுக்கு எப்பொழுதும் உதவி செய்யும் சுபாவம் உள்ளவர்களாகவும் வேறு சிலர் இயற்கையிலேயே சிடுமூஞ்சியாக எது செய்தாலும் மற்றவர்களுக்குத் துன்பம் தரும் வகையில் நடந்துகொள்வதற்கும் ஒளி, சக்தி, ஜடம் ஆகியவற்றின் கலப்பு விகிதம்தான் காரணம் என்று வேதம் விளக்கம் தருகிறது. கடிப்பதற்குக் கடினமாக இருக்கும் மைசூர்பாக்கு ஏன் குலோப்ஜாமுனை போல மென்மையாக இல்லை என்று கேள்விகேட்பதில் பயனில்லை. சர்க்கரையை அப்படியே சாப்பிடாமல் அதனுடன் வெவ்வேறு பொருள்களைக் கலந்து பல்வேறு இனிப்பு பண்டங்களாக மாற்றி அதன்பின் உண்பது போல அடிப்படையில் ஆனந்தமயமான பரமன் தனிமங்களின் மாற்றத்திற்கேற்ப பாவபுண்ணியங்கள் இரண்டையும் செய்யும்படியான உயிரினங்களாக உருமாறியுள்ளது.

எவ்வித வேறுபாடும் இல்லாமல் இயந்திரம்போல மனிதர்கள் இயங்கி அதர்மத்தைத் தவிர்த்துத் தர்மமாக வாழ வேண்டும் என்பது படைப்பின் நோக்கம் அல்ல. மனிதருக்கு மனிதர் மாறுபடுவது மட்டுமின்றி ஒவ்வொரு மனிதனும் காலையில் ஒரு மாதிரியும் மாலையில் வேறுமாதிரியும் செயல்படும் வகையில்தான் ஒளி, சக்தி, ஜடம் ஆகிய தனிமங்களின் கலவைவிகிதம் மாறுபடுகிறது. இந்த மாற்றம் ஏற்படுத்தும் இன்பதுன்பங்கள் மனிதனை நான் ஏன் துன்பபடுகிறேன் என்ற சுய ஆராய்ச்சியில் ஈடுபட வைக்கிறது.

தானியங்கி வாகனத்தில் அமர்ந்து எவ்வித வேலையும் செய்யாமல் பயணம் செல்வது வாழ்க்கையின் நோக்கமல்ல. சாலையில் செல்லும் வாகனங்களைக் கவனித்துத் தகுந்த வேகத்தில் வாகனத்தை ஓட்டிச்செல்லும் பொறுப்பு இருக்கும் ஓட்டுனர் போல வாழ்வில் சந்திக்கும் மற்ற மனிதர்கள் வெவ்வேறு விதத்தில் செயல்பட்டாலும் அவர்களுடன் சரியாக உறவாடும் பொறுப்பு ஒவ்வொரு மனிதனுக்கும் இருக்கிறது. எல்லோரும் நல்லவராக இருந்துவிட்டால் யாராலும் தான் யார் என்ற அறிவைப் பெற முடியாது. மற்றவர்கள் முறைதவறி நடந்தாலும் தன்னைக் கட்டுப்படுத்தி சரியாக அவர்களுடன் உறவாட வைக்கும் முயற்சி

நமது மனதைப் பக்குவப்படுத்தி உண்மையை அறிந்துகொள்ளும் நிலைக்கு உயர்த்தும்.

காரணகாரியங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் மனிதனுக்கு அவன் செய்யும் செயல்களின் பலன் அவன் எதிர்பார்த்ததுபோல் இருக்காது என்பதை உணர்த்தவே பாவபுண்ணியங்களின் பலன் எப்பொழுது ஒருவனை வந்துசேரும் என்பதை மனிதன் புரிந்து கொள்ளவே முடியாது என்று வேதம் கூறுகிறது. எனவே இந்தப் பலனை பெறவேண்டும் என்ற குறிக்கோளுடன் செயல்கள் செய்ய ஆரம்பித்தாலும் செயல்களைச் செய்யும்பொழுது பலனைப்பற்றிய எதிர்பார்ப்பைத் தியாகம் செய்யவேண்டும் என்று வேதம் வலியுறுத்துகிறது. இதன்படி நடப்பவர்கள் கூடியவிரைவில் காரணகாரியம் என்பதே தோற்றப்பிழை என்று அறிந்து கொள்வார்கள். செயலுக்கும் பலனுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்று தெரிந்த பின் செயல் செய்யவேண்டிய அவசிய மில்லை. ஆனாலும் செயல் செய்யாமல் இருக்க முடிவதில்லை என்பதை உணரும்பொழுது செயல், பலன் ஆகிய இரண்டும் நமது கற்பனை என்று தெரியவரும். எனவே ஆனந்தமய மானவன் நான் என்று அறியாமல் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்த நாம் விழித்துக்கொண்டபிறகு நான் அனைத்துச் செயல்களுக்கும் பலன்களுக்கும் ஆதாரமானவன் என்ற அறிவுடன் செயல்படுவ தால் துன்பங்கள் முழுவதும் அழிந்துவிடும்.

### விருப்பு-வெறுப்புகள்

நாம் எந்தச் செயலையும் செய்பவன் அல்ல என்ற அறிவு ஏற்பட்டபின் நமது விருப்பு-வெறுப்புகள் மறைந்துவிடாது. ஒவ்வொரு மனிதனையும் உருவாக்க உபயோகித்த மூன்று தனிமங்களின் விகிதத்திற்கு ஏற்பச் செயல்பாடுகளும் அதனால் ஏற்படும் விருப்பு-வெறுப்புகளும் மாறுபடும். விருப்பு-வெறுப்புகள் ஆசைகளாக மாறி நமது செயல்களுக்குக் காரணமாக அமைவது ஞானம் ஏற்பட்டபின்கூட தொடரும். ஏனெனில் தொடர்ந்து ஏற்படும் மாற்றங்களில் காரணகாரியம் இருப்பதுபோன்ற ஒரு தோற்றத்தை ஏற்படுத்தினால் மட்டுமே இல்லாத உலகை இருப்ப தாக மனித மனங்களை நம்பவைக்க முடியும்.

உலக இயக்கம் என்ற ஒளிக்காட்சிக்கு ஒத்துபோவதுபோல் நமது மனதில் ஒலிக்காட்சி நடந்தால்தான் வாழ்வு சுவையாக இருக்கும். கதைப் புத்தகத்தில் உள்ள பக்கங்களை முன்பின் மாற்றி

வைத்துப் படித்தால் ஒன்றும் புரியாது. எனவேதான் செயல்கள், விருப்பு வெறுப்புகள், ஆசைகள், மீண்டும் செயல்கள் எனத் தர்க்கத்திற்குப் பொருந்தி வரும் ஒரு காரணகாரியத்தைச் சித்தரிப் பதன் மூலம் இல்லாத உலகத்தை இருக்கிறது என்று மாயை நம்மை நம்பவைக்கிறது.

உலகம் ஒரு மாயை என்ற அறிவு ஏற்பட்டபின் நமது விருப்பு வெறுப்புகள், ஆசைகளும் செயல்களும் வேறுமாதிரி இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பு நமக்கு இருக்காது. ஆசைகள் நிறை வேறாவிட்டால் மனதில் எவ்விதத் துன்பமும் ஏற்படாது. எனவே முற்றுணர்ந்தோர்களின் மனதில் தோன்றும் விருப்பு - வெறுப்புகள் அவர்களுக்குத் துன்பத்தைக் கொடுப்பதில்லை.

## ஆசைகள்

ஆசை நிறைவேறினால்தான் இன்பம் என்ற கட்டாயம் இருந்தால்தான் மனிதன் மற்றவர்களைத் துன்புறுத்தும் செயல் களைச் செய்வதற்கு வாய்ப்பு ஏற்படும். இல்லாத காரணகாரி யத்தை இருப்பதாக நம்பவைக்க மனதில் தோன்றும் எண்ண ஒலிதான் ஆசை என்றுணர்ந்தவர்களின் செயல்கள் மற்றவர்களைத் துன்புறுத்தாது. ஆனந்தம் மனிதனின் இயல்பு என்பதால் ஆசைகள் நிறைவேறத் தன் இயல்புக்கு மாறாகச் செயல்பட வேண்டிய அவசியம் முற்றுணர்ந்தோர்களுக்கு இருக்காது. ஆசை களின் தோற்றம், அவை நிறைவேறச் செய்யும் செயல்கள், செயல் களின் பலன்கள் ஆகிய அனைத்தையும் அவர்கள் ஆனந்தமாக அனுபவிப்பார்கள்.

நம் வாழ்வில் நடந்த நிகழ்வுகளை அசைபோட்டுப் பார்த்தால் ஆசைகள் பற்றிய ஒரு முக்கியமான உண்மை நமக்குத் தெரிய வரும். வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் நமக்குத் தோன்றிய பற்பல ஆசைகளில் சில நிறைவேறியிருந்தாலும் முடிவில் நாம் பூரண திருப்தியை அடைந்ததே இல்லை. எனவே ஒரு ஆசை நிறைவேறினாலும் நிறைவேறாவிட்டாலும் நமது மனநிலையில் எஞ்சியிருப்பது அதிருப்தி மட்டுமே. ஆசை நிறைவேறிய சிறிது காலத்திற்குள் மற்றொரு ஆசை அந்த இடத்தில் அமர்ந்து நம்மை ஆட்டிவைக்கிறது. நம் மனதில் ஆசை ஏற்படுவதையோ அதை நிறைவேற நாம் செய்யும் செயல்களையோ தவிர்க்க முடியாது. ஆனால் ஆசை நிறைவேறினால் நிலைத்து நிற்கும் அமைதி கிடைக்கும் என்ற எதிர்பார்ப்பு தவறு என்பது நமது அனுபவத்

திலிருந்து தெரிந்துகொள்ளலாம். எனவே பலன் மீது கவனம் செலுத்தாமல் செயல் செய்தால் எப்பொழுதும் இன்பமாக இருக்கலாம்.

மனதில் ஏற்படும் ஆசை, அது நிறைவேறச் செய்யும் செயல், செயல்களின் பலன் ஆகிய அனைத்தும் நமது வசமின்றித் தானே நிகழும் மாற்றங்களின் ஒரு பகுதி என்பதை அறிந்தவர்கள் எப்பொழுதும் குறையாத இன்பத்துடன் வாழ்வார்கள். இந்தச் சுழற்சியைப் புரிந்துகொள்ளாதவர்கள் தங்கள் ஆசையை நிறைவேற்றச் செய்யும் செயல்கள் அந்த ஆசையை மேலும் வளர்த்து முடிவில்லா பிறப்பு இறப்பு என்ற சுழலில் மாட்டிக்கொண்டு துன்பத்திலிருந்து மீளும் வழியை அறியமாட்டார்கள் என்று வேதம் கூறுகிறது. எனவே ஆசைகளை நிறைவேற்றச் செயல் செய்வதை விட எதற்காக இந்தச் சுழலில் அகப்பட்டுத் திணறுகிறோம் என்ற அறிவை அடைவது மிக முக்கியம். நான் உருவாக்கிய மாயத் தோற்றத்தில் ஏற்படும் மாற்றங்களில் மனதில் ஏற்படும் ஆசைகளும் ஒரு பகுதி என்ற அறிவு இந்தச் சுழலிலிருந்து நமக்கு விடுதலை அளிக்கும்.

### பிறவிச்சக்கரம்

பிறத்தல், வளர்தல், மடிதல் என்று வாழ்க்கை முடிவில்லாமல் சுழலும் என்ற உண்மையை விழித்தல், எண்ணங்களுடன் இருத்தல், தூங்குதல் என்ற தினசரி அனுபவம் நமக்கு விளக்குகிறது. விழித்திருக்கும்பொழுது இருக்கும் உலகம் ஆழ்ந்த உறக்கத்தில் மறைந்துவிடும். ஆனாலும் நான் தொடர்ந்து இருக்கிறேன். இந்த உண்மை மடிந்தபின் கூட மாறாது. ஏனெனில் என்றும் மாறாமல் இருக்கும் நான் வெவ்வேறு உயிரினங்களாகத் தொடர்ந்து செயல்பட்டுக்கொண்டுதான் இருப்பேன். தனிமனிதன் இருக்கிறான் என்பதே கற்பனையென்பதால் மரணமும் கற்பனையே.

கையில் உள்ள விரல்கள் ஒவ்வொன்று தான் தனிப்பட்டவன் என்று தவறாக எண்ணுவது போல ஒவ்வொரு மனிதனும் தான் தனியானவன் என்று கருதுவதால் மரணபயம் அனைவருக்கும் இருக்கிறது. மனதில் தோன்றும் எண்ணங்கள் பத்து விரல்களின் இயக்கத்தைத் தீர்மானிக்கின்றன என்பது தவறான அறிவு. அனைத்து உயிரினங்களுக்கும் ஆதாரமான என் மாயா சக்தியின் நடனத்தில் சிறுவிரலின் அசைவும் ஒரு அங்கம்.

சிறுவயதில் இருந்த உடல் மறைந்து வயோதிக உடலை அடைந்தபின்னும் நான் மாறுவதில்லை என்ற உண்மை மரணத்

திற்குபின் மனம் மறைந்துவிடுவதால் மாறிவிடாது. பல்வேறு உயிரினங்களின் இயக்கமாக நான் தொடர்ந்து இருப்பேன்.

## பிறப்பும் இறப்பும்

*"கடலில் கலக்கவேண்டும் என்ற ஆவலுடன் பல்வேறு ஆறுகள் பயணம் செய்து முடிவில் கடலில் கலந்தபின் தங்கள் பெயர்களையும் தனியான நதிகள் என்ற வடிவங்களையும் இழந்து கடல் என்று அழைக்கப்படுவது போல முக்தியடைய வேண்டும் என்ற ஆவலுடன் பரமனை நோக்கிப் பயணிக்கும் உயிரினங்கள் ஒவ்வொன்றும் முடிவில் தங்கள் தனிப்பட்ட பெயரையும் வடிவத்தையும் இழந்து பரமன் என்ற பெயரினால் மட்டுமே அழைக்கப்படுகின்றன"* என்று பிரஸ்ன உபநிஷத மந்திரம் ஒன்று (6.5) பிறப்பு இறப்பு பற்றிய உண்மையை விளக்குகிறது.

ஆறு என்பது ஒரு குறிப்பிட்ட நீள அகலங்களோடு ஓடும் நீர். மனிதன் என்பவன் ஒரு குறிப்பிட்ட வடிவமுடன் சிலகாலம் வாழும் பரமன். கடலிலிருந்து தோன்றி மழை, நீரூற்று, உபநதி, ஆறு என்று பல பெயர்களைபெற்று முடிவில் கடலில் கலப்பதால் அழிவது நீர் அல்ல. வெறும் பெயர்கள் மட்டும் மாறுகின்றனவே தவிர மறைதல் என்பது நீருக்குக் கிடையாது. அதுபோலப் பரமனிடமிருந்து தோன்றிப் பாலகன், குமாரன், வாலிபன், வயோதிகன் எனப் பெயர்களில் மாற்றம் ஏற்படுகிறதே தவிர மரணம் என்பது பரமனுக்குக் கிடையாது.

தான் நீர் என்பதை உணராமல் ஆறு என்று நினைக்கும் வரைதான் தான் சிறியவன் அற்பமானவன் என்பது போன்ற வருத்தங்கள் இருக்கும். அது போலத்தான் பரமன் என்று உணராமல் மனிதன் என்று நினைக்கும்வரைதான் மரணபயம், தாழ்வு மனப்பான்மை, கவலை, தனிமை போன்ற துயரங்கள் மனதை வருத்தும். உண்மையை உணர்ந்தபின் நான் நிரந்தர மானவன் என்ற நிம்மதி பிறக்கும்.

ஆறு தொடர்ந்து கடலில் கலந்தாலும் அதற்கு மரணம் என்பதில்லை. அதுபோல உயிரினங்கள் தொடர்ந்து மடிந்தாலும் அவை நிரந்தரமானவை. ஆறு முழுவதும் வற்றிவிட்டாலும் மறுபடி மழையால் உருவாக்கப்படும். பிரளயத்தில் அனைத்து உயிரினங்களும் அழிந்துவிட்டாலும் மாயாசக்தியால் அவை மறுபடியும் உயிர்ப் பிக்கப்படும்.

### *வாழ்க்கைச்சக்கரம்*

வண்டிச்சக்கரத்தின் விளிம்பு தொடர்ந்து சுழல்வதுபோல வாழ்வில் பல மாற்றங்கள் ஏற்பட்டாலும் சக்கரத்தின் ஆதாரமான அச்சுஅசையாமல் இருப்பதுபோல எல்லா மாற்றங்களுக்கும் ஆதாரமான நான் மாற்றமடைவதில்லை. சக்கரத்தின் ஆரங்கள் போலக் கர்ம பலன், மறுபிறவி போன்ற நியதிகள் வாழ்க்கை சக்கரத்தைச் சுழற்ற உதவுகின்றன. மாற்றங்களை மட்டும் கவனிப்பவர்களுக்கு இந்த நியதிகள் உண்மையானவை. மாற்றங்கள், மாறாத பரமன் ஆகிய இரண்டையும் அறிபவர்கள் முக்திவிழைவோர்கள். இவர்கள் மாறும் உலகம் மாறாத பரமனின் வெளிப்பாடு என்பதை உணர்ந் ததும் முற்றுணர்ந்தோர்களாகிறார்கள். இவர்களது வாழ்க்கைச்சக்கரம் முன்போலச் சுழன்றுகொண்டிருந்தாலும் நிலையானவன் நான் என்ற அறிவு நிரந்தர அமைதியையும் குன்றாத இன்பத்தையும் தரும். எனவே இன்பத்துக்குப் புண்ணியம் காரணம் என்ற விளக்கம் இவர்களுக்கு அவசியமில்லை.

### *காரணமில்லா இன்பம்*

வாழ்வின் ஏற்ற இறக்கங்களுக்குப் பாவபுண்ணியங்கள் காரணம் என்ற விளக்கத்தை ஏற்றுக்கொண்டவர்களின் வாழ்வில் இன்பதுன்பங்கள் மாறிமாறி ஏற்படும். காரண காரியம் என்ற விளக்கம் அனாவசியம் என்றுணர்ந்தபின் ஏற்ற இறக்கங்கள் இருந்தாலும் இன்பம் மாறாது. இந்தப் பரந்த பிரபஞ்சத்தில் வாழும் அற்பமான மனிதன் நான் என்ற தவறான அறிவு மறைந்து இந்தப்பிரபஞ்சத்தை உருவாக்கி அதன் இயக்கத்திற்கு ஆதாரமாக இருப்பவன் நான் என்ற உண்மை தெரிந்தபின் நம் இயல்பான இன்பத்தைப் பாதிக்கும் சக்தி நமது மனதிற்கு இருக்காது.

மரணபயம் நீங்கிவிட்டால் மற்றபயங்கள் மறைந்துவிடும். அனைத்து மனிதர்களும் நான் என்று அறிவதால் தனிமை இருக்காது. செயல்கள் எதையும் செய்வதில்லை என்பதால் குற்ற உணர்வு ஏற்படாது. எனவே புண்ணியங்கள் முழுவதும் அழிந்து விட்டாலும் இன்பமாக இருப்பதில் எவ்வித மாற்றமும் இருக்காது.

**சாராம்சம்**

*இன்பம் உலகில் இருக்கிறது என்ற தவறான அறிவுடன் செயல்படும்வரைதான் புண்ணியங்கள் நமது*

இன்பத்திற்குக் காரணம் என்ற நம்பிக்கை அவசியம். உலக இயக்கத்திலிருந்து தனிப்பட்டவன் நான் என்ற எண்ணம் மறைந்ததும் எவ்விதக் காரணமும் இல்லாமல் இன்பமாயி ருக்கலாம். இன்பம் நமது இயல்பு என்பதால் அதை அனுபவிக்கத் தடைகள் எதுவும் இருக்கமுடியாது.

ஒரு விபத்தில் நம் வீடு முழுவதும் எரிந்துவிட்டால் நாம் செய்த பாவம்தான் இதற்குக் காரணமென்றும் விபத்தில் உயிரழக்காமல் தப்பித்ததற்குப் புண்ணியம் காரணம் என்றும் நினைப்பவன் முக்திவிழைவோன். பக்கத்துவீட்டுக் காரன்தான் தீ வைத்துவிட்டான் என்று எண்ணிப் பழிவாங்கத் திட்டமிடுபவன் பற்றுடையோன். இது உண்மையாக இருந்தால் கூடத் தீ வைத்தவனும் என் கற்பனையால் என்னை ஆதாரமாகக் கொண்டு உருவானவன் என்றறிந்த முற்றுணர்ந்தோன் அடுத்து ஆக வேண்டிய செயல்பாடுகளையும் தனது மனதின் மாற்றங்களையும் இன்பத்துடன் அனுபவிப்பான்.

இன்பமாக இருக்க இது வேண்டும் என்று எந்த ஒரு பொருள் மீதும் ஆசை இல்லாதவர்களுக்கு எதிர்பார்ப்பு, ஏமாற்றம், கவலை, கோபம், போட்டி, பொறாமை, பேராசை, பயம், கருமித்தனம் போன்ற எண்ணங்கள் ஏற்படாது. எனவே எல்லோருடனும் அன்பாகவும் கருணை யுடனும் இவர்களால் பழகமுடியும்.

வாழ்க்கை என்னும் ஓட்டப்பந்தயத்தில் துவக்கத்தி லிருந்தே எல்லோர் கையிலும் வெற்றிக்கோப்பை இருக் கிறது. இதையறியாதவர்களால் இன்பமாக ஓட முடியாது. உடன் ஓடுபவர்கள் மேல் காழ்ப்புணர்ச்சியுடன் எப்படியாவது தான்முதலில் இலக்கை எட்டிவிடவேண்டும் என்று சிரமபட்டு இவர்கள் ஓடுவார்கள். முற்றுணர்ந்தோர்கள் இவர்களைப் பார்த்து ஏளனமாகச் சிரிப்பதில்லை. மாறாக கருணையுடன் அவர்களுக்கு வெற்றிக்கோப்பையை சுட்டிக்காட்டி உதவும் ஆவலுடன் இருப்பார்கள். இலக்கை நோக்கி ஓடும் அவசியம் இல்லாவிட்டாலும் கூட மற்றவர்களுக்கு உதவுவதற்காக பந்தயத்தில் அவர்களும் தொடர்ந்து பங்கேற்பார்கள்.

*இல்லாத உலகை இருப்பதுபோல் இவ்வளவு தத்ரூபமாகச் சித்தரித்திருக்கும் தனது மாயா சக்தியின் திறனை நினைத்து வியந்து வாழ்வின் ஒவ்வொரு கணத்தையும் ஆனந்தமாகக் கழிப்பார்கள்.*

### பயிற்சிக்காக

1. இன்பம் நம் இயல்பு நிலை என்பதை நிரூபிக்கவும்.
2. துன்பங்களிலிருந்து விடுதலை பெற வேதம் காட்டும் எளிமையான வழி என்ன?
3. மனிதனின் செயல்கள் வேறுபடுவதற்குக் காரணம் என்ன?
4. நமது ஆசை நிறைவேறினாலும் நிறைவேறாவிட்டாலும் முடிவு ஒன்றுதான் என்பது உண்மையா?
5. ஆறு-கடல் உவமானத்தின் மூலம் வேதம் கூறும் கருத்து என்ன?

### சுயசிந்தனைக்காக

- *கனவிற்கும் நனவிற்கும் உள்ள வித்தியாசங்கள் நமது இன்பதுன்பங்களை நிர்ணயம் செய்யும் சக்தி உள்ளவையா?*
- *முற்றுணர்ந்தோர்கள் செய்யும் பாவபுண்ணியங்களின் பலன் யாருக்கும் கிடைக்காதா?*
- *இல்லாத உலகம் இருப்பதுபோல் தோன்றுகிறது என்பது வேதத்தின் கற்பனையா அல்லது அறிவியல் நிரூபணத்துடன் கூடிய உண்மையா?*



# 164 பிராரப்த கர்மம் அழிவதில்லை

**அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 492**

*"மரணம் வரை பிராரப்த கர்மம் தொடரும்"* என்று சாந்தோக்கிய மந்திரம் (**6.14.2**) கூறுகிறது. பலபிறவிகளில் சேர்த்துவைத்த சஞ்சித கர்ம பலன்கள், இந்தப்பிறவியில் சேர்க்கும் ஆகாமிகர்மபலன்கள் ஆகிய இரண்டும் ஞானம் பெற்ற மறுகணம் முழுவதும் அழிந்துவிடும் என்று கூறும் வேதம் பிராரப்த கர்ம பலன்கள் மட்டும் ஞானத்தால் அழியாது என்று கூறுவதன் பொருளை இந்தப் பாடம் ஆராய்கிறது.

ஞானம் பெற்றதும் பாவபுண்ணியங்கள் அழிவதற்கான காரணங்கள் அனைத்தும் பிராரப்த கர்மங்களுக்கும் பொருந்தும் என்பதால் அவையும் அழியவேண்டும் என்று தர்க்கத்தின் அடிப்படையில் எதிர்பார்ப்பது தவறு. தர்க்கத்தை அறிவியல் அல்லது வேதம் ஆகிய இரண்டில் ஏதாவது ஒன்றைச் சாராமல் தனித்துப் பயன்படுத்தினால் அதற்கு வறட்டு தர்க்கம் என்று பெயர். வறட்டு தர்க்கத்தால் எதையும் தீர்மானிக்க முடியாது. கர்மபலன்கள் என்ற கருத்து வேதத்தில் மட்டுமே விளக்கப் படுவதால் பிராரப்த கர்மம் ஞானம் பெற்றவுடன் அழியாது என்ற கூற்றை ஏற்றுக்கொள்ளத் தர்க்கத்தை உபயோகப்படுத்த வேண்டுமே தவிர மறுக்க உபயோகப்படுத்தக் கூடாது.

வில்லிலிருந்து விடுபட்ட அம்பு இலக்கில் பாய்வதைத் தடுக்க முடியாது. அதுபோல இவ்வுலகில் மனிதனாகப் பிறக்கக் காரணமான பிராரப்த கர்மங்கள் பலனைக் கொடுக்க ஆரம்பித்து விட்டதால் அவற்றைத் திடீரென்று அழித்துவிடமுடியாது. எனவே மற்ற மனிதர்களைப்போல ஞானியும் வாழ்வின் ஏற்ற இறக்கங்

களைச் சந்தித்துத்தான் ஆகவேண்டும் என்ற வேதம் தரும் விளக்கம் வாழ்க்கை அனுபவங்களுடன் ஒத்துப்போகிறது. இராம கிருஷ்ண பரமஹம்சர் போன்ற ஞானிகள்கூடப் புற்றுநோய் போன்ற நோய்களால் பாதிக்கப்படுவதை நாம் அறிகிறோம்.

பிராரப்த கர்மத்தின் பலனாகத்தான் ஒரு ஞானி மனிதனாகப் பிறந்து வளர்ந்து முடிவில் ஞானத்தை அடைகிறான் என்பதால் ஞானம் சஞ்சித ஆகாமி கர்மப் பலன்களை அழிப்பதுபோலப் பிராரப்த கர்மத்தை அழிப்பதில்லை. ஒருவேளை பிராரப்த கர்மமும் ஞானம் பெற்றவுடன் மறைந்துவிட்டால் ஞானிகள் தொடர்ந்து உயிரோடிருக்க முடியாது. வேதம் படிப்பது தற்கொலை செய்து கொள்வதுபோல் என்றால் யாரும் ஞானம் பெற முயற்சிக்க மாட்டார்கள். மேலும் ஞானம் பெற்றவர்கள் இல்லையென்றால் ஆசிரியர்களே இருக்கமாட்டார்கள். எனவேதான் பிராரப்த கர்மம் ஞானம் பெற்றவுடன் அழிவதில்லை.

பிராரப்த கர்மம் என்பது சஞ்சித கர்மங்களின் ஒரு பகுதி என்ப தால் அதுவும் ஞானம் பெற்றவுடன் அழியத்தான் வேண்டும். ஆனால் அது ஏற்கெனவே பலன்களைக் கொடுக்க ஆரம்பித்து விட்ட காரணத்தால் மின்சார இணைப்பைத் துண்டித்தபின்னும் சிலகாலம் தொடர்ந்து சுழலும் மின்விசிறிபோலச் சிறிது காலம் செயல்பட்டுப் பின் முற்றுணர்ந்தோர்களின் மரணத்தில் முழுதும் அழியும். எனவே ஞானத்தால் கர்மம் அனைத்தும் அழியும் என்ற வேதத்தின் கருத்து பொய்ப்பதில்லை.

## ஞானியும் மனிதனே

ஞானி என்பவன் தான் யார் என்று அறிந்த ஒரு சாதாரண மனிதன். தொடர்ந்து ஓடும் ஆறு நிலையாக இருப்பதுபோல் ஒரு தோற்றத்தை ஏற்படுத்தும். அதுபோல மனிதனின் உடலும் மனமும் தொடர்ந்து மாறி ஆரோக்கியமாக இருப்பதுபோல் ஒரு தோற்றத்தை ஏற்படுத்துகின்றன. எனவே இந்த இயற்கையான மாற்றத்தின் ஒரு பகுதியாக ஆரோக்கியக் குறைவு ஏற்படுவதை யாராலும் தடுக்க முடியாது.

உண்ணும் உணவு, சுவாசிக்கும் காற்று ஆகிய இரண்டும் உடலுக்குள் கலந்து அதை உயிருடன் வைத்திருக்க உதவும் அதே வேளையில் பல்வேறு நோய்கள் ஏற்படவும் அவை காரண மாயிருக்கின்றன. மேலும் செயல்கள் செய்யும்பொழுது ஏதாவது

விபத்து ஏற்பட்டு உடல் காயப்படலாம். நோய்கள், விபத்து, முதுமை முதலிய துன்பங்கள் மனிதர்கள் அனைவரையும் பாதிக்கும். ஞானிகள் இதற்கு விதிவிலக்கல்ல.

ஐம்புலன்கள் மூலம் உலகைபற்றிய எண்ணங்கள் மனதில் ஏற்படும்பொழுது அவை பல்வேறு வகையான உணர்ச்சிகளாக மாறுவதைத் தவிர்க்க முடியாது. அன்பும் பாசமும் சிலசமயங்களில் எரிச்சல் அல்லது கோபமாக மாறலாம். இதுபோன்று மனதில் ஏற்படும் துன்பங்களையும் முழுவதுமாக யாராலும் தவிர்க்க முடியாது.

சரியான உணவு, உடற்பயிற்சி ஆகியவற்றின் மூலம் உடலை ஆரோக்கியத்துடன் வைத்துக்கொள்ள முயல்வதுபோலச் சரியான அறிவு, தியானம் ஆகியவற்றின் மூலம் மனதை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ள முயலலாம். ஆனால் எவ்வளவுதான் முயற்சி செய்தாலும் வயதாகும் காரணத்தால் நமக்கு முழுவெற்றி கிடைக் காது. புதிய மாற்றங்களை ஏற்றுக்கொண்டு பழைய கருத்துக்களை உதறித்தள்ளும் சக்தி மனதிற்கு இருக்காது. புதுமையாக ஏதேனும் செய்யவேண்டும் என்ற இளமைத் துடிப்பு வயதான பின் குறைந்து மாற்றங்களை ஏற்றுக்கொள்வதில் சிரமம் ஏற்படும்.

### *துன்பங்களுக்குக் காரணம்*

உடலின் உபாதைகளையும், மனதின் சோகங்களையும் இயற்கையின் மாற்றத்தின் ஒரு பகுதியாகப் பார்க்காமல் பிரச் சனைகள் என்று கருதி அவற்றை முழுவதுமாக நீக்க நினைத்தால் அந்த முயற்சி தோல்வியில் முடியும். உடல் பருமன் அதிகரித்தல் அல்லது அடிக்கடி கோபம் ஏற்படுதல் முதலிய மாற்றங்களைத் தவிர்க்கத் தேவையான செயல்களைச் செய்வது தவறு அல்ல. ஆனால் என்றேனும் ஒருநாள் பிரச்சனைகள் எதுவுமே இல்லாமல் வாழ முடியும் என்ற எதிர்பார்ப்பு தவறு.

உடலும் மனமும் மாற்றங்களுக்கு உட்பட்ட மாயை என்றும் மாறாத பரமன் நான் என்றும் அறியாமல் இருப்பதே துன்பங் களுக்கு ஒரே காரணம். இந்த அறிவு ஏற்பட்டதும் பிரச்சனை களைத் துன்பம் என்று கருதாமல் இயற்கையின் மாற்றங்கள் என்று ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் ஏற்பட்டுவிடும். வெறும் கயிற்றைப் பார்த்துப் பாம்பு எனப் பயந்தது குறித்து வெட்கம் ஏற்படுவதுபோல மாற்றங்களைத் துன்பங்கள் என நினைத்து வாழ்வில் துன்பங்களே இருக்கக் கூடாது என்று முயற்சி செய்த

அனுபவம் நமக்கு வெட்கத்தை ஏற்படுத்தும். மாற்றங்கள்தான் படைப்பின் இயல்பு என்றும், மாற்றங்கள் என்றால் ஏற்ற இறக்கங்கள் என்றும், அறிந்தபின் வேதம் இந்த ஏற்ற இறக்கங் களுக்குக் காரணம் பிராரப்த கர்மம் என்று கூறும் விளக்கம் நமக்கு அனாவசியம். எனவே ஞானம் பெற்றவுடன் பிராரப்த கர்மபலன் கள் அழிவதில்லை என்றாலும் பிராரப்த கர்மம் என்று ஒன்று இருக் கிறது என்ற நினைவே மனதில் இருக்காது. ஞானம் பெறாத மற்றவர்கள் ஞானிக்கும் துன்பம் ஏற்படுவதைச் சுட்டிக்காட்டி ஞானமே தேவையல்லை என்று வாதாடுவதைத் தடுப்பதற்காகவே பிராரப்தம் என்ற கருத்தை அறிமுகப்படுத்தி ஞானிகள் வாழ்வில் ஏற்படும் துன்பமான நிகழ்வுகளுக்கு வேதம் விளக்கம் தருகிறது.

## துன்பங்களிலிருந்து விடுதலை

உடலும் மனமும் இருப்பதுபோல் தோன்றும் மாயை என்பதை உணர்ந்த ஞானி அவற்றிற்கு ஏற்படும் துன்பங்களை மட்டும் உண்மை என்று கருத வாய்ப்பில்லை. எனவே பற்றுடை யோர்களும் முக்திவிழைவோர்களும் மட்டும் துன்பங்களிலிருந்து விடுதலை வேண்டும் என்று முயற்சி செய்வார்கள். கனவில் ஏற்படும் பசியைத் தீர்க்கக் கனவுலகில் உணவைத் தேடுவதுபோல உலகத் துன்பங்களைத் தீர்க்க ஓடியாடி வேலை செய்வது அனைவருக்கும் பொது என்றாலும் முற்றுணர்ந்தோர் மட்டும் இவற்றைத் துன்பம் என்று கருதாமல் தேவையான செயல்களைச் செய்வார்கள்.

## செயலும் துன்பமும்

மலைப்பாதையில் பயணம் செய்யும் வாகனம் தொடர்ந்து நகர் வதைப் பாதையின் சாய்மானத்தைப்பொறுத்து ஏறுகிறது அல்லது இறங்குகிறது என்று குறிப்பிடுவது போலப் பிரபஞ்சத்தின் தொடர்ந்த மாற்றத்திற்குக் காரணகாரியங்களைக் கற்பித்து மக்கள் இன்பத்தை நாடியும் துன்பத்தைத் தவிர்க்கவும் செயல்கள் செய்கிறார்கள் என்ற கற்பனை அனைவரது மனதிலும் நிலவுகிறது. ஞானம் பெற்றபின் காரணக் காரியம் என்பது கற்பனை என்று புரிந்துவிடுவதால் தொடரும் மாற்றங்களுக்குச் செயல்கள் என்ற பெயர் வைக்கவேண்டிய அவசியம் ஞானிகளுக்கு இல்லை. உடலே கற்பனை என்பதால் அதில் ஏற்படும் நோயைக் கற்பனை யான மருத்துவம் மூலம் குணபடுத்த ஞானிகள் செய்யும் முயற்சி பொய்யான செயல்களாகும். நோய் குணமடைந்தாலும் ஆகா

விட்டாலும் செயல்கள் தொடரும் என்பதை உணர்ந்த ஞானிகள் துன்பபடுவதில்லை. ஆனால் பற்றுடையோர்களின் பார்வையில் செயல்களும் அவற்றின் பலன்களும் உண்மையாகத் தெரிவதால் ஞானிகளின் துன்பத்திற்குப் பிராரப்த கர்மம் காரணம் என்ற விளக்கம் தேவைப்படுகிறது.

முக்திவிழைவோர்கள் இல்லாத துன்பத்திலிருந்து முழுவதும் விடுபடுவதில்லை. ஏனெனில் பிராரப்த கர்மம் உண்மையென்றும் அதன் பலனை அனுபவிக்காமல் தப்பிக்கமுடியாது என்றும் பல காலம் நம்பிசெயல்பட்ட காரணத்தால் அவை பொய் என்று தெரிந்தபின்னும் துன்பங்கள் மறைவதில்லை. பல வருடங்கள் தன்னிடம் உழைத்த ஒரு வேலைக்காரனைத் திருடன் என்று தவறாகக் குற்றம்சாற்றிவிட்டால் உண்மை தெரிந்ததும் மனதில் ஏற்படும் குற்றவுணர்வைத் தவிர்க்க முடியாது. உண்மை தெரிவதற்கு எவ்வளவு காலமானது என்பதைப் பொறுத்துக் குற்ற உணர்வு மனதில் குடியிருக்கும் காலமும் அதிகமாகும். அதுபோல எவ்வளவு காலம் பிராரப்த கர்மம் நம் துன்பங்களுக்குக் காரணம் என்று தவறாக நினைத்துக் கொண்டிருந்தோம் என்பதைப் பொறுத்து நாம் செயல்கள் எதையும் செய்வதேயில்லை என்ற உண்மை மனதில் நிலைக்கக் காலமாகும். கயிற்றில் பாம்பைப் பார்த்துப் பயந்ததால் ஏற்பட்ட உடல் நடுக்கம் அது கயிறு என்று தெரிந்த மறுகணம் நின்றுவிடுவதில்லை. அது போலப் பிராரப்த காரணம் நமது துன்பங்களுக்குக் காரணமல்ல என்று தெரிந்ததும் துன்பங்கள் மறைவதற்குச் சிலகாலம் ஆகலாம். போர்நிறுத்த ஒப்பந்தம் ஏற்பட்ட பின்னும் திடீரென்று பட்டாசு வெடித்தால் துப்பாக்கியால் எதிரி சுடுகிறான் என்ற பயம் மக்களிடையே தொடர்வதுபோல் ஞானம் ஏற்பட்ட பின்னும் ஒரு சிலகாலம் உலக மாற்றங்கள் முக்திவிழைவோர்களுக்கு துன்பத்தைத் தரலாம்.

**சாராம்சம்**

*காண்பது கனவுதானே என்று கண்ணில்பட்ட பெண்மேல் கைவைத்துவிட முடியாது. அப்படிக் கைவைத்தால் அதன் விளைவுகளைச் சந்திக்கத் தயாராக இருக்க வேண்டும். கனவு போலன்றி இவ்வுலக நிகழ்வுகள் அனைத்தும் ஒரு விதிமுறையைப் பின்பற்றி மனிதன்தான் செயல்கள் செய்து அதன் பலனை அனுபவிக்கிறான் என்ற*

ஒரு தோற்றத்தை ஏற்படுத்துகின்றன. மேலும் இந்தப் பிரபஞ்சம் என்னைச்சார்ந்து இருக்கிறது என்றாலும் எதையும் கட்டுப்படுத்தும் சக்தியோ உலக நிகழ்வுகளை மாற்றி அமைக்கும் சக்தியோ எனக்குக் கிடையாது. எதனுடனும் சம்பந்தப்படாமல் நடக்கும் நாடகத்தைப் பார்க்க மட்டுமே முடியுமே தவிர என் உடலையும் மனதையும் பயன்படுத்தி நான் ஏற்று நடிக்கும் பாத்திரத்தின் செயல்பாடுகளைக்கூட என்னால் தீர்மானிக்க முடியாது. நான் உருவாக்கிய உலகில் வந்து போகும் பாத்திரங்களில் ஒன்றான என் உடல் உலகிலிருந்து வேறுபட்டுத் தனி சுதந்திரத்துடன் இயங்குகிறது என்ற தவறான எண்ணம் என் மனதிலிருந்து அகன்றதும் மனதில் தோன்றும் துன்ப உணர்வுகள் என்னைப் பாதிக்காது என்ற அறிவு ஏற்படும். இந்த அறிவு ஏற்படும் வரை துன்பத்திற்குக் காரணம் என்ன என்ற தேடலும் துன்பத்தை அகற்றும் வழி என்ன என்ற தேடலும் எண்ண ஓட்டங்களாக மனதை ஆக்ரமித்துக்கொண்டிருக்கும்.

என்றும் இருப்பது நான் மட்டும்தான். இடம், காலம், பொருள் ஆகிய மூன்றும் என்னை ஆதாரமாககொண்டு இருப்பதுபோல் தோன்றும் ஒளி-ஒலிகாட்சி. இந்தக் காட்சியில் தனித்தனிமனிதர்களையும், செயல்களையும் கற்பனை செய்துகொண்டு துன்பபடுபவர்களுக்குக் கர்ம பலன்கள் என்ற கருத்தை வேதம் உபதேசிக்கிறது. ஞானம் பெற்றபின்னும் பிராரப்த கர்ம பலன்கள் அழியாது என்பதால் வாழ்வின் ஏற்றஇறக்கங்கள் ஞானியைப் பாதிக்கும் என்ற கருத்தையும் கூறுகிறது. ஆனால் காண்பவன், காணப்படும் பொருள், காட்சி ஆகிய மூன்றும் ஒன்று தான் என்றறிந்த முற்றுணர்ந்தோர்கள் எப்பொழுதும் துன்பப்படுவதில்லை.

### பயிற்சிக்காக

1. வறட்டு தர்க்கம் என்றால் என்ன?
2. ஞானம் ஏற்பட்டதும் பிராரப்த கர்மம் அழியாமல் இருப்பதன் காரணங்கள் யாவை?

3. உடலின் ஆரோக்கியக் குறைவுக்கு என்ன காரணம் என்றும் அதை தவிர்க்க என்ன செய்ய வேண்டும் என்றும் விளக்குக.

4. மனதின் ஆரோக்கியக் குறைவுக்கு என்ன காரணம் என்றும் அதை தவிர்க்க என்ன செய்ய வேண்டும் என்றும் விளக்குக.

5. துன்பங்களுக்குக் காரணம் என்ன?

6. துன்பங்களிலிருந்து விடுதலை பெறுவது எப்படி?

7. செயலுக்கும் துன்பத்திற்கும் உள்ள உறவு என்ன?

### சுயசிந்தனைக்காக

- *ஞானிக்குப் பிராரப்த கர்மம் உண்டா?*
- *உலகம் ஒரு ஒளி-ஒலி காட்சி என்ற வேதம் கூறும் உண்மையை அறிவியல் சோதனைகள் நிரூபணம் செய்திருப்பதை ஆராய்க.*
- *பாடம் 88ல் கர்மவினைகளைப் பற்றி கொடுக்கப்பட்ட அறிமுகத்தையும் பாடம் 146ல் உள்ள விளக்கங்களையும் மீண்டும் படிக்கவும்.*



# 165 ஞானி தன் கடமைகளைத் தொடரவேண்டும்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 493 - 494**

**வா**ழ்வை நான்கு கட்டங்களாகப் பிரித்து ஒவ்வொரு கட்டத்திலும் செய்யவேண்டிய கடமைகளைக் கொடுத்துள்ள வேதம், மனிதர்கள் ஞானம் பெற்றபின்னும் இந்தக் கடமைகளைத் தொடர்ந்து பின்பற்றவேண்டும் என்று சொல்வதன் நோக்கத்தை இந்தப் பாடம் தெளிவுபடுத்துகிறது.

வாழ்வின் ஏற்ற இறக்கங்களைச் சமமாக ஏற்றுக்கொள்ளும் மனோபாவம் ஞானிக்கு இருப்பதால் வருவது வரட்டும் என்று தன் கடமைகளைச் செய்யாமல் சோம்பியிருக்க மாட்டான். ஞானி என்பவன் சுகவாழ்வைத் துறந்து பிச்சைக்காரனைப்போல் இருக்க வேண்டும் என்ற மற்றவர்களின் எதிர்பார்ப்பைத் தவறு என்று சுட்டிக்காட்டவே வேதம் ஞானிகளுக்கும் கடமைகள் உண்டு என்று எடுத்துரைக்கிறது.

இன்பத்தின் உண்மையான இருப்பிடத்தை அறிந்துகொண்ட பின் உலகில் அதை ஞானி தேடமாட்டான். எனினும் அவன் தொடர்ந்து உழைத்து பெரிய வீடு, சொகுசான வாகனம், பல பணியாளர்கள், உலகம் முழுவதும் உல்லாசபயணம் என வாழ்க்கைத்தரத்தை உயர்த்திக்கொள்வதை ஞானம் தடைசெய்யாது. இதுபோன்ற வசதிகள் இல்லாமல் போனால் என்ன ஆகும் என்ற கவலையில்லாமல் செல்வம் இருக்கும்வரை அனுபவிக்கும் திறன் ஞானிகளுக்கு மட்டுமே உண்டு. எனவே ஞானம் பெற்றபின் கடமைகளைத் தொடர்ந்து செய்யவேண்டும் என்று வேதம் பரிந்துரை செய்யாவிட்டாலும், ஞானி தன் இயல்புகளுக்கேற்ற

செயல்களைத் தர்மமான முறையில் செய்வதை நிறுத்திக்கொள்ள மாட்டான்.

வசதியாக வாழ பணம், துன்பக் கலப்பில்லாத இன்பத்துடன் வாழ ஞானம் ஆகிய இரண்டும் அனைவருக்கும் தேவை. பணத் தால் இன்பத்தை வாங்க முடியாது என்பதை உணர்ந்தவர்கள் வேதம் படித்து ஞானம் பெற முயல்வதுபோல், ஞானத்தால் வசதிகளை வாங்க முடியாது என்பதை உணர்ந்த ஞானி தொடர்ந்து தன் கடமைகளைச் செய்து பணம் சம்பாதிக்க முயற்சி செய்வான்.

### கடமைகளைச் செய்யக் காரணம்

1. ஞானம் பெற்றபின்னும் கடமைகளைத் தொடர்ந்து செய்ய வேண்டும் என்று வேதம் கட்டளையிட்டிருப்பதன் காரணத்தை அறிந்த ஞானிகள் வாழ்வில் தாங்கள் ஏற்றுக்கொள்ளும் பாத்திரங் களின் கடமைகளைச் சரிவரசெய்ய முயற்சிப்பார்கள்.

2. இன்பதுன்பங்களைச் சரியான வகையில் ஏற்றுக்கொள்ள உதவும் ஞானத்தை அடைந்தபின் உலகவிவகாரங்களில் சம்பந்தப் படாமல் ஒதுங்கிவாழ்வதில் பயன் எதுவும் இல்லை. எனவே பெற்ற ஞானத்தின் பலனை முழுவதும் அனுபவிக்க ஞானிகள் தொடர்ந்து தங்கள் கடமைகளைச் செய்வார்கள்.

3. வேதம் தரும் ஞானத்தின் பலனை மற்றவர்களுக்கு எடுத்துரைக்க அவர்களைப்போல் உலகவாழ்வில் ஈடுபட்டு அவர் களுக்கு ஒரு முன்னுதாரணமாக ஞானிகள் வாழ்வது அவசியம்.

4. ஞானியின் மனதில் தோன்றும் ஆசைகள் துன்பத்திற்கு வழிவகுக்காது எனினும் அவன் தொடர்ந்து கடமைகளைச் செய்ய அவை தூண்டுகோலாக அமையும்.

5. மேற்படிப்புக்காக வேலையை விடுவதைப்போல ஞானம் பெறுவதற்காக ஒரு சிலகாலம் உலக வாழ்விலிருந்து ஒதுங்கி இருப் பது தவறு அல்ல. ஆனால் படித்துமுடித்ததும் மறுபடி வேலை செய்யத்துவங்குவது போல ஞானம் பெற்றதும் மறுபடி கடமை களைத் தொடரவேண்டும்.

6. உடலும் மனமும் தொடர்ந்த மாற்றத்திற்குட்பட்டவை என்றறிந்த ஞானிகள் கடமைகளைச் செய்யாமலிருக்க இயலாது

என்று அறிவர். ஒளி, சக்தி, ஜடம் ஆகிய தனிமங்களின் சேர்க்கை விகிதப்படி மனமும் உடலும் செயல்படுவது அவசியம் என்பதால் ஞானிகள் தொடர்ந்து தங்கள் கடமைகளைச் செய்வார்கள்.

7. உயிருடன் இருக்கும் வரை உடலையும் மனதையும் ஆரோக்கியமாக வைத்துக்கொள்ளத் தொடர்ந்து கடமைகளைச் செய்வது அவசியம்.

## கடமைகளைச் செய்யும் விதம்

1. பற்றுடையோர்கள் பலனை எதிர்பார்த்துக் கடமைகளைச் செய்வார்கள். முக்திவிழைவோர்கள் பலனை எதிர்பார்க்காமல் கடமைகளைச் செய்வதனால் மனம் பக்குவமடையும் என்ற எதிர் பார்ப்புடன் கடமைகளைச் செய்வார்கள். ஞானிகள் எவ்விதப் பலனையும் எதிர்பார்க்காமல் கடமைகளைச் செய்வார்கள்.

2. திறமையுடனும் சுறுசுறுப்பாகவும் கடமைகளைச் செய் வதன் மூலம் பலன்களை விரைவில் அடைந்துவிடலாம் என்று பற்றுடையோர்கள் செயல்படுவர். இது மட்டும் போதாது என்று உணர்ந்த முக்திவிழைவோர் அவசரப்படாமல் தங்கள் இயல்புக்கு ஏற்ற விதத்தில் மேலும் சிறப்பாகச் செயல்பட முயற்சி செய்வர். தனது மனமும் உடலும் செயல்களை செய்வதுபோல் காட்சி அளிக்கின்றன என்பதை அறிந்த முற்றுணர்ந்தோர்கள் தாங்கள் செய்யும் முயற்சி கூட இயல்பாக நடக்கிறது என்ற மனோ பாவத்துடன் தங்கள் கடமைகளைச் செய்வார்கள்.

3. கடமைகளைச் சரிவரச்செய்ய முயல்வது மட்டுமே கடமை செய்வதன் பலன் என்று அறிந்த ஞானிகள் செய்த செயல்களை இன்னும் சிறப்பாகச் செய்திருக்கலாமே என்று வருந்தமாட்டார்கள்.

4. எவ்விதப் பலனையும் எதிர்பார்த்து ஞானி செயல் செய்வதில்லை என்பதால் கிடைத்த பலனில் திருப்தி அடைவான்.

5. சுற்றியிருக்கும் அனைவரும் தனது பிரதிநிதிகள் என்பதை அறிந்த ஞானி யாரையும் தன் எதிரியாக கருத மாட்டான். எனவே யாருக்கும் எவ்விதத்திலும் துன்பம் தரும் செயல்களை ஞானி செய்யமாட்டான்.

6. தன் கடமைகளைச் செய்வதால் மற்றவர்களுக்குத் துன்பம் ஏற்படும் என்றாலும் அவர்களது துன்பத்தைக் குறைக்க அவன்

முயல்வானே தவிரத் தன் கடமைகளை ஞானி சரியாகச் செய்யாமல் விட்டுவிடமாட்டான்.

**7.** வாழ்க்கை வெறும் கனவு என்றாலும் மரணம்வரை இந்தக் கனவு தொடரும் என்று உணர்ந்த ஞானி சமூகத்தின் சட்டதிட்டங் களுக்குக் கட்டுப்பட்டு ஒரு சாதாரண மனிதன்போலத் தன் கடமை களைச் செய்வான்.

**8.** தன் முயற்சியில் தோல்வியுற்றால் மற்றவர்கள் என்ன நினைப்பார்களோ என்ற அச்சம் ஞானிக்கு இருக்காது என்பதால் மிகப்பெரிய சமூகநலத்திட்டங்களை ஏற்று நடத்த அவன் தயங்குவ தில்லை.

## கடமைகளைச் செய்வதன் பலன்

**1.** ஞானியின் பார்வையில் செயல்கள், கடமைகள், பலன்கள் ஆகியவை வெறும் கற்பனைகளே. ஆயினும் அவன் தன் கடமைகளைச் சரியாகச் செய்வதாகக் காட்டிக்கொள்வதனால் சமூகத்தில் ஒரு பொறுப்புள்ள அங்கத்தினனாக மற்றவர்களால் ஏற்றுக்கொள்ளப்படுகிறான்.

**2.** ஞானம் பெற்றபின் ஞானி தொடர்ந்து கடமைகளைச் செய்து பணம் சேர்ப்பது சமூக நலனுக்குப் பெரிதும் பயன்படும். கல்விச்சாலைகள், மருத்துவமனைகள் போன்ற சமூகத்தேவை களை பூர்த்திசெய்யும் விதத்திலேயே ஞானியின் செல்வம் பெரும் பாலும் செலவழிக்கப்படும்.

**3.** உலகப்பொருள்களை துன்பம் கலவாத இன்பத்துடன் அனுபவிக்க உதவுவதே ஞானத்தின் நோக்கம். கடமைகளைச் செய்வதன் மூலம்தான் உலக இன்பங்களைப் பெறமுடியும் என்ப தால் ஞானத்தின் பலனை முழுவதும் அனுபவிக்க, பெரிய குடும்பம், நண்பர்கள், செல்வச்செழிப்பு ஆகியவை மிகவும் அவசியம்.

**4.** மற்றவர்களைச் சார்ந்திராமல் தன் திறமைகளைக் கடமை களாக வெளிப்படுத்தி ஞானி தன் உடலின் தேவைகளையும் மனதின் ஆசைகளையும் பூர்த்தி செய்து கொள்ளுவான்.

**5.** பலனில் பற்றில்லாததால் இன்பத்தில் துள்ளாமலும் துன்பத்தில் துவளாமலும் துணிவுடன் செயல்படும் ஞானியைப்

போல் தாங்களும் மாறவேண்டும் என்ற முயற்சி பற்றுடையோர் களை நல்வழிப்படுத்த உதவும்.

6. கடமையுணர்வுடன் ஞானி செயல்படுவதைப் பார்க்கும் முக்திவிழைவோர்கள் உலக வாழ்விலிருந்து ஒதுங்காமலேயே ஞானம் பெறமுடியும் என்ற நம்பிக்கையைப் பெறுவார்கள்.

7. ஞானி குருவாகத் தனது கடமைகளைச் செய்தால் மட்டுமே துன்பத்தை அகற்றி இன்பமாக வாழ வேதம் தரும் வழிமுறைகளை மக்கள் அறிந்து கொள்ள முடியும்.

## சாராம்சம்

*காண்பது கனவு என்று தெரிந்தாலும் கனவு முடியும் வரை கடமைகளைச் செய்யாமல் இருக்க முடியாது என்பதை ஞானி அறிந்திருப்பதால் ஞானம் பெற்றபின்னும் அவன் தொடர்ந்து தன் கடமைகளைச் செய்வான். உலகில் இருக்கும் அனைத்துப் பொருட்களுக்கும் ஆதாரம் எது எனத் தெளிவாக அறிந்துள்ள ஞானி இவ்வுலகம் படைக்கப்பட்டதன் நோக்கத்தைப் பூர்த்தி செய்யும் விதத்தில் தன் கடமைகளை முறையாகச் செய்வான். தான் உறவாடும் ஒவ்வொரு மனிதரும் அடிப்படையில் தன்னிடமிருந்து வேறுபட்டவரல்ல என்பதை அறிந்த ஞானி இந்த உண்மையை மற்றவர்களுக்கும் உணர்த்தும் விதத்தில் தன் கடமைகளைச் செய்வான்.*

*வண்டுகளை ஈர்த்து மகரந்தசேர்க்கை மூலம் இனப் பெருக்கம் செய்ய வேண்டும் என்ற உள்நோக்கத்துடன் தான் மலர் மணம் வீசுகிறது என்று முடிவுசெய்வது அறியாமை. மணம் தருவது மல்லிகையின் இயற்கை. மலர்வதற்கு முன்பேயே செடியிலிருந்து அதை பிரித்துவிட்டாலும் அது தன் மணம் தரும் கடமையைச் செய்யாமல் விடுவதில்லை. அதுபோல உலகில் உள்ள அனைத்து உயிரினங்களும் தங்கள் தன்மைகேற்ற செயல்படுவது அவற்றின் இயற்கை. உலகமே மாயை என்ற உண்மையை உணர்ந்து விட்டால்கூட இந்த இயற்கை நியதி மாறிவிடாது. எனவே ஞானி தன் கடமை களைச் செய்வது தடைபடாது. ஞானம்*

*பெற்று விட்டால் கடமைகளைச் செய்ய வேண்டிய அவசியம் இருக்காது என்ற அஞ்ஞானிகளின் கருத்தை மாற்றவே, வேதம் ஞானிகள் ஞானம் பெற்றபின்னும் தங்கள் கடமைகளைத் தொடர்ந்து செய்யவேண்டும் என்று தெளிவுபடுத்தியுள்ளது.*

*தான் செயல்களைச் செய்வதாக நினைப்பவன் பற்றுடையோன். செயல்கள் பரமனின் மாயாசக்தியின் வெளிப்பாடு என்று எண்ணுபவன் முக்திவிழைவோன். இது போன்ற எவ்விதக் குழப்பமும் இல்லாமல் தனது விருப்பு-வெறுப்புகளின் அடிப்படையில் கடமைகளைத் தொடர்ந்து செய்பவன் முற்றுணர்ந்தோன்.*

### பயிற்சிக்காக

1. இன்பமாகவும் வசதியாகவும் வாழத் தேவையானவை என்னென்ன?
2. ஞானி கடமைகளைச் செய்யக் காரணங்கள் யாவை?
3. ஞானி கடமைகளைச் செய்யும் விதம் எவ்வாறு இருக்கும்?
4. ஞானி கடமைகளைச் செய்வதால் விளையும் பயன்கள் யாவை?
5. மலரின் மணம் பற்றிய உதாரணத்தால் விளக்கப்பட்ட கருத்து என்ன?

### சுயசிந்தனைக்காக

❖ *துறவு மேற்கொண்ட பின் ஞானம் பெற்றால் மறுபடியும் இல்வாழ்பருவத்திற்குத் திரும்பலாமா?*

❖ *அதிகமான பணம் சம்பாதிக்கச் செய்யும் முயற்சி நிம்மதியான வாழ்வுக்குத் தடையாக இருக்குமா?*



# 166 சமூகச் சேவையும் ஞானமும்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 495**

ஞானம் பெறுவதற்கு முன்பேயே ஞானிகளைப்போல் தன் குடும்பம், நண்பர்கள் மற்றுமின்றி சுற்றியுள்ள அனைத்து மனிதர்களின் நலனுக்காகத் தன் வாழ்நாட்களைச் செலவழிப்ப வர்கள் வாழ்க்கைப்பயணத்தின் உச்சகட்டத்தில் இருப்பினும் ஞானம் பெற்றால்தான் முக்தியடைய முடியும் என்ற கருத்தை இந்தப் பாடம் சித்தரிக்கிறது.

அனைத்து மனிதர்களுக்கும் இந்த வாழ்வில் அடைய வேண்டியது ஒன்று உள்ளது என்ற எண்ணம் எப்பொழுதும் இருந்துகொண்டிருக்கும். தன் குறையை நிறைவு செய்ய எவ் வளவோ முயன்றாலும் இந்தத் திருப்தியின்மை அகலாது. முறையாக வேதத்தைப் பயின்று முக்தியடைந்தால் மட்டுமே இந்தத் தேடல் ஒரு முடிவுக்கு வரும். தான் முழுமையானவன் என்பதை உணர்ந்தபின் ஞானி மற்றவர்களுக்கு உதவும் வகையில் தன் கடமைகளைச் செய்வான். ஞானம் பெறாதவர்களின் தேடல் கூட அவர்களைச் சுயநலமற்ற சமூகசேவர்களாக முன்னேற்றலாம். ஆனால் அவர்களுக்கு அதில் திருப்தி ஏற்படாது. மற்றவர்களுக்கு எவ்வித உதவியும் செய்யாத பணக்காரர்களை ஒப்பிடும்பொழுது சமூகசேவை செய்பவர்கள் தங்களை உயர்ந்தவர்களாகக் கருதிக் கொள்ளலாமேதவிர எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் தன் கடமை களைச் செய்யும் ஞானிபோல அவர்களாலும் செயல்பட முடியாது.

மனிதனின் தேடல் அவனைச் செயல் படவைக்கிறது. செயல் செய்வதனால் அவனது அறிவு வளர்கிறது. பள்ளி மாணவன்

ஒவ்வொரு வகுப்பாக முன்னேறுவது போல வாழ்க்கைப் பயணத்தில் மனிதன் படிப்படியாக முன்னேறிச் சமூக சேவை என்ற கடைசிப் படியை அடைகிறான். தான் செய்யும் சேவை களின் பலன் தன்னைச் சம்சாரச் சுழலிலிருந்து விடுவிக்கும் என்ற தவறான எதிர்பார்ப்புடன் அவனது தேடல் மரணம் வரை தொடரும். எவ்விதத் தேடலும் இல்லாமல் தன் கடமைகளைச் செய்துகொண்டு இனிமையாக வாழ்ந்தால் மேலும் சிறப்பாகச் சமூக சேவை செய்ய முடியும் என்பதால் வேதம் தரும் ஞானம் அனைவருக்கும் அவசியம்.

### மனிதனின் நான்கு தேடல்கள்:-

*1. உணவு, உடை, உறையுள்*

அடிப்படைத்தேவைகளை நிறைவு செய்துவிட்டால் தன் குறைகள் தீர்ந்துவிடும் என்ற ஏக்கத்துடன் உழைக்கும்பொழுது வருமானத்துடன் செலவுகளும் வளர்வதை மக்கள் கவனிப்ப தில்லை. ஆடம்பரத்திற்கும் அடிப்படைத்தேவைகளுக்கும் உள்ள வித்தியாசத்தை அறிந்து கொள்ளும் முன் பலரின் வாழ்வு முடிந்து விடுகிறது.

செயல்கள் செய்வதால் தொடர்ந்து இவர்களது அறிவும், செயல்திறனும் அதிகரித்தாலும் இவர்களில் பலருக்குப் பொருளா தாரத்தை உயர்த்திக்கொள்ளும் தகுதி ஏற்படுவதில்லை. எனவே குடிப்பழக்கம், சூதாட்டம் போன்ற தவறான பாதையில் இவர் களின் தேடல் தொடரும்.

அறிவும் திறனும் உள்ள வேறு சிலர் எப்படியாவது வாழ்வில் முன்னேறிவிட வேண்டுமென்ற துடிப்புடன் திருட்டு, கொள்ளை, கொலை, ஏமாற்றுதல், அரசியல் ஆகிய அதர்மமான வழியில் தங்கள் தேடலைத் தொடருவார்கள்.

நீதி, நேர்மை, நியாயம் போன்றவைகளை கட்டுப்பட்டு தர்மமான முறையில் உழைப்பவர்கள் தேவையான அறிவையும் செயல்திறனையும் அடைந்தபின் வாழ்க்கைப்பயணத்தின் அடுத்த படிக்கட்டுக்கு முன்னேறுவார்கள்.

*2. சுயமுன்னேற்றம் (அறிவு, ஆற்றல், ஆளுமை)*

தேவைகள் ஓரளவு தீர்ந்தபின் மேலும் சிறப்பாக உழைப்பத னால் தன் அறிவு, ஆற்றல், ஆளுமை ஆகியவை வளரும் என்ற

எதிர்பார்ப்புடன் இவர்கள் தொடர்ந்து செயல்படுவார்கள். செயற்கரிய செயல்களைச் செய்வதனால் தங்கள் தேடல் முடிந்துவிடும் என்ற தவறான எண்ணத்துடன் தாங்கள் தேர்ந்தெடுத்த தொழில் துறையில் தனக்கு நிகரானவர் எவரும் இல்லை என்ற அளவுக்குத் தனது தகுதியை உயர்த்திக்கொள்ள இவர்கள் முயல்வார்கள். ஆனால் தகுதி எவ்வளவுதான் உயர்ந்தாலும் தேடல் ஒரு முடிவுக்கு வராது என்பதை இவர்கள் உணரும் பொழுது அடுத்த படிக்கு முன்னேறுவார்கள்.

*3. சுயமுன்னேற்றம் (பட்டம், பதவி, புகழ்)*

வல்லவனாக இருந்தால் மட்டும் உலகம் தன்னைக் கவனிக்காது என்று தன்னை நல்லவனாகவும் காட்டிக்கொள்ளப் பொதுவாழ்வில் ஈடுபட்டுச் சமூகசேவை செய்யப் பணத்தையும் நேரத்தையும் செலவளிக்க ஆரம்பிப்பார்கள். தான் சிறந்தவன் என்பது தனக்கு மட்டும் தெரிவதால் நிறைவு ஏற்படவில்லை என்பதால் உன்னைப்போல் ஒருவன் இவ்வுலகில் இல்லை என்று மற்றவர்கள் தன் சிறப்பை ஆமோதித்தால்தான் நிறைவு ஏற்படும் என்ற எண்ணத்தில் பட்டம், பதவி, புகழ் ஆகியவற்றை இவர்கள் தேடத்துவங்குவர்.

அகில உலகத்திற்கே அதிபதி என்ற நிலையை அடைந்தாலும் திருப்தி ஏற்படாது என்பதை அறியும் வரை இவர்களின் இந்த முயற்சி தொடரும். மேலும் தாங்கள் இருக்கும் நிலையிலிருந்து இறங்கிவிடக்கூடாதே என்ற பயம் இவர்களின் தேடலின் தீவிரத்தை அதிகப்படுத்திவிடும். இளமையில் இருந்த செயல் வேகம் குறைந்து தேடலின் தீவிரத்திற்கு ஈடுகொடுக்க முடியாத போது இவர்களில் ஒரு சிலர் பழைய பெருமையைப் பாடும் காலி பெருங்காயப் பாத்திரமாகத் தங்கள் முதுமையைச் சலிப்புடன் கழிப்பார்கள். உலகத்தின் அங்கீகாரம் தங்கள் தேடலை நிறைவு செய்யாது என்று உணர்ந்தவர்கள் அடுத்த படிக்கு முன்னேறுவார்கள்.

*4. சமூகச் சேவை*

மற்ற இடங்களில் தேடிக் கிடைக்காததால் தன்னலமற்ற சமூக சேவைதான் உண்மையான இன்பத்தையும் திருப்தியையும் கொடுக்கும் என்ற தவறான எதிர்பார்ப்புடன் மனிதனின் தேடல் இந்தக் கடைசிக்கட்டத்தில் தொடரும். இயன்றவரை தங்களின்

ஆற்றலையும் பணபலத்தையும் பயன்படுத்தி இந்த உலகத்தில் ஏதேனும் ஒரு நல்ல மாற்றத்தை ஏற்படுத்திவிடவேண்டும் என்று இவர்கள் செய்யும் முயற்சி கடலில் கரைத்த புளியைப்போலக் காணாமல் போகும். ஆயினும் சுயநலம் ஏதுமில்லாமல் மற்றவர் களுக்கு உதவவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் செயல்படு வதால் இவர்களின் செயல்பாடுகள் ஞானியின் செயல்களை ஒத்திருக்கும்.

## ஒரு ஒப்பீடு

தான் முழுமையானவன் என்பதை உணராதவன் என்ற ஒரே ஒரு வித்தியாசத்தைத் தவிரச் சமூகசேவை செய்பவன் ஞானி யிடமிருந்து வேறு எவ்விதத்திலும் வேறுபடுவதில்லை. இருவரும் தங்களுக்குப் பிடித்த துறையைத் தேர்ந்தெடுத்துத் தங்களால் இயன்றவரை மற்றவர்களின் துன்பத்தை அகற்றி இன்பத்தை அளிக்கும் நோக்கில் தங்கள் கடமைகளைச் செய்வார்கள்.

இன்பமாக இருக்க ஞானி எதையும் செய்யவேண்டிய அவசியமில்லை என்றாலும் அவன் தனது கடமைகளைத் தொடர்ந்து செய்வான். சமூக சேவை செய்யாவிட்டால் இன்பமாக இருக்கமுடியாது என்ற உந்துதலின் அடிப்படையிலேயே மற்ற வர்கள் தங்கள் கடமைகளைச் செய்வார்கள்.

தான் செய்யும் சமூக சேவையால் புண்ணியத்தைச் சேர்த்து அதன் பயனாகப் பிறவிச்சுழலிலிருந்து விடுதலைபெற்றுவிடலாம் என்ற நம்பிக்கையுடன் செயல் செய்பவன் அஞ்ஞானி. வீடு பேற்றை அடைந்துவிட்ட திருப்தியுடன் சமூக சேவை செய்பவன் ஞானி.

என்றேனும் ஒரு நாள் உலகில் உள்ள அனைவரும் துன்பத்தி லிருந்து முழுவதும் விடுபட்டு இன்பமாக வாழும் வகையில் கல்வி, அரசியல், பொருளாதாரத் துறைகளில் சீர்திருத்தங்களை ஏற்படுத்த முடியும் என்ற நம்பிக்கையுடன் செயல்படுபவன் அஞ்ஞானி. இதுபோல் நடக்க வாய்ப்பேயில்லை என்பதை அறிந்திருந்தாலும் தன்னால் முடிந்தவரை மற்றவர்களுக்கு உதவும் வகையில் தன் கடமைகளை ஞானி செய்வான்.

மனிதன் தோன்றிய காலம் முதல் இன்று வரை உலகம் அனைத்துத் துறைகளிலும் வெகுவாக முன்னேறியுள்ளது என்பது உண்மையென்றாலும் இந்த மாற்றங்கள் துன்பத்தை அகற்றி

இன்பமாக வாழ மனிதனுக்கு எள்ளளவேனும் ஏன் உதவவில்லை என்பதை ஞானி மட்டுமே அறிவான். இரண்டாயிரம் வருடங் களில் ஏற்படாத சீர்திருத்தம் தன்னுடைய முயற்சியால் ஏற்படும் வாய்ப்பு உள்ளது என்ற நம்பிக்கையுடன் செயல்படுபவன் படைப்பின் ரகசியத்தை அறியாத அஞ்ஞானி.

தான் செய்யும் உதவிக்குப் பிரதிபலனாக நன்றி என்ற ஒரு வார்த்தையைக் கூட ஞானி எதிர்பார்ப்பதில்லை. மேலும் உதவி பெற்றவர்கள் அந்த உதவியைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளா விட்டாலும் ஞானி வருந்துவதில்லை. தான்செய்யும் சமூக சேவை ஒரு சில மனிதர்களின் தேடல்களைகூட முழுமையாக முடிவுக்குக் கொண்டுவரும் சக்தியற்றது என்பதை ஞானி அறிவான். மற்ற வர்கள் தாங்கள் செய்யும் சமூக சேவையின் பலன் என்ன என்பதை ஆண்டுதோறும் தொழிலில் வரவுசெலவு கணக்கு பார்ப்பதுபோல் அளக்க முயற்சிசெய்வதுடன் மற்றச் சமூக சேவை நிறுவனங்களுடன் தங்களை ஒப்பிட்டு இன்னும் சிறப்பாகச் சேவை செய்ய வேண்டும் என்ற ஆவலுடன் தங்கள் தேடலைத் தொடர்வார்கள்.

## தேடலின் முடிவு

வாழ்க்கையை ஒரு பந்தயமாகக் கருதி எல்லோரும் ஓடுவதால் தானும் அவர்களுடன் சேர்ந்து ஓட ஆரம்பிப்பவர்களில் பலர் எதற்காக ஓடுகிறோம் என்று அறிந்து கொள்ளாமலேயே முதுமையை அடைந்துவிடுவார்கள். இவர்களின் தேடல் அடுத்த பிறவியிலும் தொடரும்.

மகாத்மா காந்தி போன்ற சாதனையாளர்களாலேயே தங்களின் குறையைத் தீர்த்துப் பூரணதிருப்தியுடன் வாழும் நிலையை அடைய முடியவில்லை என்பதை வரலாற்றையும், புராணங் களையும் படித்து அறிந்து கொள்பவர்கள் தங்களின் தேடல் உலகை மாற்றியமைக்க முயல்வதால் முடிவுக்கு வராது என்பதை உணர்வார்கள்.

இறுக்கமான காலணிகளை ஒரு ஆறு மணிநேரம் அணிந்து அதன்பின் அவற்றைக் கழட்டும்பொழுது ஏற்படும் ஒருசிலநிமிட இன்பத்திற்காகத் தினமும் பாதங்களை நோகடிப்பவன் போல ஏதாவது ஒரு குறிக்கோளை முன்வைத்து அதை அடைந்தால்தான் நிம்மதி என்று வாழ்நாள்முழுவதும் பலர் துன்பபடுகிறார்கள்.

மாணவப்பருவத்தில் உலகை மாற்றியமைக்கும் திறனைப் பெறத் தேவையான தொழில் கல்வியுடன், வேதம் தரும் வாழ்க்கை கல்வியையும் கற்பவர்கள் தங்கள் தேடல் அறியாமையின் விளைவு என்பதை உணர்வார்கள். பூரணமானவன் நான் என்பதை உணர்ந்தால் மட்டுமே மனிதனின் தேடல் முடிவுக்கு வரும்.

**சாராம்சம்**

*வெற்றிக்கோப்பையைக் கையில் ஏந்திக்கொண்டு மற்ற பவர்களுடன் சேர்ந்து ஓடுபவன் ஞானி. ஓட்டப் பந்தயத்தின் இறுதியில் வெற்றிபெற்றால்மட்டுமே அது கிடைக்கும் என்ற எண்ணத்துடன் ஓடுபவர்கள் ஞானியின் கையில் இருக்கும் வெற்றிக்கோப்பையை அடையாளம் கண்டுகொள்வதில்லை. வெற்றிபெற்றபின் ஓடத்தேவையில்லை என்ற தவறான அறிவே இதற்குக் காரணம்.*

*தடைபடாத நிம்மதியும், குறையாத இன்பமும் தங்கள் இயற்கை நிலை என்பதை அறியும் வரை இவற்றைத்தான் தேடுகிறோம் என்பதை மக்கள் அறிவதில்லை. உலகை மாற்றியமைப்பதன் மூலம் நிம்மதியை அடையலாம் என்று இல்லாத இடத்தில் இன்பத்தைத் தேடத்துவங்குபவர்களில் பலர் எவ்வளவு முயன்றும் தங்கள் தேடல் முடிவுக்கு வராததால் வாழ்க்கையில் விரக்தியும் சலிப்பு மடைந்து காந்தியைப் போலத் தான் வாழ்க்கையில் தோற்றுவிட்டதாக நினைத்துக்கொள்கிறார்கள்.*

*ஒரு சிலர் தாங்கள் செய்த புண்ணியத்தின் பலனாகச் சரியான ஆசிரியரிடம் வேதம் பயின்று வாழ்வில் வெற்றியடைகிறார்கள். அதன் பின் முழுவேகத்துடன் வாழ்க்கை என்னும் ஓட்டப்பந்தயத்தில் ஓட ஆரம்பிக்கிறார்கள். இலக்கு எதனையும் அடைய வேண்டிய கட்டாயம் இல்லாததால் இவர்களுடன் ஓடுபவர்கள் விழுந்துவிட்டால் கை கொடுத்துக் காப்பாற்றத் தயங்குவதில்லை. தனக்குபின் ஓடிவருபவர்கள் தடுக்கிவிழா வண்ணம் வழியிலிருக்கும் தடைகற்களை அகற்றுவதும் தனது கடமை என்பதை இவர்கள் அறிந்திருப்பார்கள். எவ்வளவுதான் உதவி*

*செய்தாலும் மற்றவர்களின் சோகம் தீரவில்லை என்பதை நினைத்து இவர்கள் சிறிதும் மனம் வருந்தமாட்டார்கள். மற்றவர்களுக்கு உதவி செய்வது மட்டும்தான் தங்கள் கடமை என்றும் தாங்கள் உதவி செய்தாலும் செய்யா விட்டாலும் உலகம் இப்பொழுது இருப்பதுபோல் எப் பொழுதும் தொடர்ந்து ஏற்ற இறக்கங்களுடன் மாறிக் கொண்டு இருக்கும் என்பதை இவர்கள் உணர்வார்கள். இந்த அறிவு இல்லையெனினும் வெளிப்பார்வைக்கு ஞானியைப்போலச் செயல்படும் சமூகசேவகர்கள் உலகின் ஏற்ற இறக்கங்களால் தொடர்ந்து பாதிக்கப்படுவார்கள்.*

### பயிற்சிக்காக

1. மனிதனின் தேடலுக்கும் அறிவுக்கும் என்ன தொடர்பு?
2. வாழ்க்கைப்பயணத்தில் விளக்கப்பட்ட நான்கு படிகள் யாவை?
3. மக்களின் தேடலுக்கு அடிப்படை காரணம் என்ன?
4. இந்தத் தேடல் எப்படி முடிவுக்கு வரும்?
5. சமூக சேவை செய்பவருக்கும் ஞானிக்கும் உள்ள வேறுபாடு என்ன?
6. ஞானி சமூக சேவை செய்யும் விதத்திற்கும் அஞ்ஞானி சமூக சேவை செய்யும் விதத்திற்கும் உள்ள வித்தியாசங்கள் என்னென்ன?
7. முதியவர்களில் பலர் விரக்தியுடனும் சலிப்புடனும் வாழ்வதற்குகாரணம் என்ன?

### சுயசிந்தனைக்காக

❖ *சமூக சேவை செய்வதன் மூலம் பிறவிச்சுழலிலிருந்து மீள முடியுமா?*

- ஆடம்பரத்திற்கும், அடிப்படை தேவைகளுக்கும் என்ன வித்தியாசம்?
- படைப்பின் ரகசியம் என்ன?
- ராமராஜ்யம், பொற்காலம் என்று வரலாற்று பாடங்களில் படித்ததுபோன்ற நல்லுலகம் ஒன்று எதிர்காலத்தில் ஏற்பட வாய்ப்பேயில்லையா?
- கலீல் கிப்ரான் எழுதிய முற்றுணர்ந்தோன் (The Prophet) என்ற நூலைப்படிக்கவும்.



167

# பரமனை அறிந்தவன் பரமனாகிவிடுவான்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 1 ● சூத்திரம் : 496**

*“**வா**ழும்பொழுது பரமனை அறிந்தவன் இறந்தவுடன் மீண்டும் பிறப்பதில்லை. அவன் பரமனுடன் ஒன்றாகிவிடுகிறான்”* என்று பிருஹதாரண்யக உபநிஷத மந்திரம் (4.4.6) குறிப்பிடுவதைச் சுட்டிக்காட்டி ஞானம் எவ்வாறு துன்பங்களிலிருந்து முழு விடுதலையளிக்க உதவுகிறது என்பதை இந்தப் பாடம் தெளிவுபடுத்துகிறது.

உயிரினங்களுக்கும் ஜடப்பொருள்களுக்கும் உள்ள வித்தியாசம் என்ன என்பதைத் தெளிவாக அறியாதவர்கள் பற்றுடையோர்கள். அறிவியலால் இந்த அறிவைத்தர முடியாது என்று புரிந்ததும் வேதம் படித்து, உயிருடன் உலவ நுண்ணிய உடல் தேவை என்ற அறிவைப் பெற்றவர்கள் முக்திவிழைவோர்கள். உலகில் இருப்பவை அனைத்தும் ஜடப்பொருள்கள் மட்டுமே என்று அறிந்தவர்கள் முற்றுணர்ந்தோர்.

தான் அமர்ந்திருக்கும் நாற்காலிக்கும், தனக்கும் எவ்வித வித்தியாசமும் இல்லை என்ற உண்மையை உணராதவரை துன்பங்களை முழுதாகத் தவிர்க்க முடியாது.

## கனவில் காணும் கனவு

கனவில் தென்படும் நாற்காலியும் அதில் அமர்ந்துள்ளவரும் மனதில் தோன்றும் எண்ணங்களால் உருவாக்கப்பட்டவை. அதே போல் ஜடமான மாயாசக்தியால் உருவான பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும் ஜடப்பொருள்களாகத்தான் இருக்க முடியும். ஒளியைப் பிரதிபலிக்கும் தன்மை இருந்தாலும் கண்ணாடி

கல்லைப்போல் ஒரு ஜடப்பொருளே. அதேபோல் பரமனின் உணர்வைப் பிரதிபலிக்கும் தன்மை உள்ள மனமும் மின்சாரத் தைப்போல் ஒரு ஜடம்தான். கனவு கலைந்தவுடன் கண்ணில் தெரியும் உலகம் நிஜம் என்ற எண்ணம் இருக்கும்வரை அதில் உயிரினங்களும் ஜடப்பொருள்களும் இருப்பதாகத் தோன்றும். காண்பது நிஜமல்ல என்ற ஞானம் ஏற்பட்டவுடன் ஒளி, ஒலி ஆகிய ஜடப்பொருள்களால் மட்டுமே உருவான உலகிலிருந்து துன்பம் முழுதாக மறைந்துவிடும்.

## துன்பத்திலிருந்து விடுதலை

இரவில் காணும் கனவு தானாக முடிந்துவிடும். விழித்ததும் தொடரும் கனவைக் கனவு என்று புரிந்து கொள்ள வேதம் பயின்ற ஆசிரியரின் துணைதேவை. வாழ்வைக் கனவு என்று புரிந்து கொண்டாலும் அது மரணம் வரைதொடரும். எனினும் உலகம் நமக்குத் துன்பத்தைத் தரும் சக்தியை இழந்துவிடும். வாழ்வைக் கனவு என்று அறிந்தவர்கள் என்பதால் முற்றுணர்ந்தோர்கள் துன்பத்திலிருந்து விடுதலை பெற்றவர்கள்.

வாழ்க்கையின் உண்மைத்தன்மையை ஆராயாத பற்றுடை யோர்கள் கனவு, நனவு ஆகிய இரண்டிலும் துன்பப்படுவார்கள். இவர்களது துன்பம் மரணத்தில் கூட முடிவதில்லையென்றும் பிறப்பு இறப்பு என்ற மீளாச்சுழலில் அகப்பட்டு ஞானம் பெறும் வரை அலைக்களிக்கப்படுவார்கள் என்றும் வேதம் கூறுகிறது. ஏன் என்ற கேள்வியைக் கேட்டு வேதம் படித்த ஆசிரியர்களின் உதவியுடன் பதிலை ஆராயும் முக்திவிழைவோர்கள் காரண உடல், நுண்ணிய உடல், பரு உடல் என்ற மூன்று பிரிவு களையும் அவற்றின் விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் என்ற மூன்று நிலைகளையும் தெரிந்துகொள்கிறார்கள். தீவிர ஆய்வுக்குப் பின் இவையனைத்தும் மாயை என்ற உண்மையைப் புரிந்து கொள்ளும்பொழுது முற்றுணர்ந்தோர்களாக மாறி இவர்கள் துன்பத் திலிருந்து விடுதலைபெறுகிறார்கள். காண்பது கனவு என்று அறிந்த பின் இந்த வாழ்வை துன்பம் கலக்காத இன்பத்துடன் மரணம் வரை தொடர்ந்து அனுபவிக்கும் இவர்கள் மரணத்திற்குப்பின் மீண்டும் பிறப்பதில்லை.

துன்பத்திலிருந்து விடுதலை பெறக் கூரிய பகுத்தறிவு அவ சியம். எதற்குச் செயல்களைச் செய்கிறோம் என்ற கேள்வியைக்

கேட்காமல் உழைக்கும் பற்றுடையோர்களும் வேதம் தரும் செய்தியை ஆராயாமல் ஏற்றுக்கொள்ளும் முக்திவிழைவோர்களும் உண்மைக்கும், பொய்க்கும் உள்ள வித்தியாசத்தைப் பகுத்தறிவ தில்லை. உலகம் உண்டானபொழுது உடன் உருவாகிய வேதம் என்ற அடுக்குப்பெட்டியை குருவின் உதவியுடன் பகுத்தறிவு என்ற சாவிக்கொத்தில் இருக்கும் சரியான சாவிகளை உப யோகித்துத் திறந்த ஞானிகள் துன்பத்திலிருந்து முழுவிடுதலை யடைவார்கள்.

## கனவுக்கோட்டையின் திறவுகோல்

இந்த உலகம் இருப்பதுபோல் தோன்றும் மாயை என்பதை உணர்ந்து அதிலிருந்து விடுதலைபெறத்தேவையான பகுத்தறிவு என்ற திறவுகோல்கள் ஒவ்வொரு மனிதனிடமும் கொடுக்கப் பட்டுள்ளது. இந்த மாயச்சிறையிலிருந்து முழுவதுமாக வெளியேற நான்கு கதவுகளைத் திறக்கவேண்டும். வாழ்வில் இன்பமும் துன்பமும் மாறிமாறி வருவதைத் தவிர்க்க முடியாது என்று பகுத்தறிவைப் பயன்படுத்தாமல் வாழ்பவர்கள் என்றும் விடுதலை அடைவதில்லை. துன்பத்தை முழுவதுமாகத் தவிர்க்க முடியும் என்ற உண்மையைச் சுட்டிக்காட்டவே வாழ்வு துன்பகரமானது என்று புத்தர் போதனை செய்தார் என்று உணர்பவர்கள் தங்கள் பகுத்தறிவைச் சரியாக உபயோகித்து அனைத்துக் கதவுகளையும் திறந்து முக்தியடைவர்.

## முக்தியடைய உதவும் நான்கு கதவுகள்:

*1. செய்தல்*

ஐந்து புலன்களின் மூலம் உலகின் இருப்பை அறியும் மனிதன் அவற்றின் விருப்பு-வெறுப்புகளின் அடிப்படையில் விரும்புவதை நாடியும், வெறுப்பதைத் தவிர்க்கவும் பகுத்தறிவைப் பயன்படுத்திச் செயல்களைச் செய்கிறான். அவன் செய்யும் செயல்கள் அவனது விருப்பு-வெறுப்புகளை மேலும் அதிகப்படுத் துகின்றன.

இலைதழைகளை உடையாக உடுத்தியிருந்த காலத்திலிருந்து பருத்தி, பட்டு எனப் படிப்படியாக முன்னேறியபின்னும் கடை களில் இருக்கும் எண்ணிலடங்கா வண்ண உடைகளில் எதுவும் பிடிக்கவில்லை என்ற நிலை தொடர்ந்து நீடிக்கும் அளவுக்கு

மனிதனின் விருப்பு-வெறுப்புகளின் நுட்பமும் தாக்கமும் அதிகரித்துள்ளன.

எதிரியின் பலத்தில் பாதி தனக்கு வரவேண்டும் என்று வரம் பெற்ற வாலியைப்போல உழைப்பில் பாதி, புலன்களின் விருப்பு-வெறுப்புகளை அதிகரிக்கச் செலவாகிவிடுகிறது என்பதை உணர்ந்தவுடன் வெளியுலகில் எவ்வளவு செயல்கள் செய்தாலும் துன்பத்திலிருந்து விடுதலை அடைய முடியாது என்ற அறிவு மனிதனுக்கு ஏற்படும். செயல்களை ஏன் செய்கிறேன் என்ற கேள்விக்கு அனுபவத்தின் மூலம் பதிலை அறிந்துகொள்ள முடியாது என்பதை அறிந்தவுடன் வேதத்தைக் கற்றல் என்ற அடுத்த கதவைத் திறக்க மனிதன் முயற்சி செய்வான்.

*2. கற்றல்*

தனக்கும் உலகத்திற்கும் உள்ள உறவு, செயலுக்கும் அதனால் விளையும் பலனுக்கும் உள்ள உறவு போன்றவற்றைப் புரிந்து கொள்ளவே முடியாது என்பதை அனுபவத்தில் உணர்ந்தபின் மனிதன் வேதம் தரும் உண்மைகளை அறிந்து கொள்ளத் தன் பகுத்தறிவை உபயோகப்படுத்துகிறான்.

பாவ-புண்ணியங்கள் பதிவாகியிருக்கும் காரண உடல், புத்தி, மனம், புலன்கள் போன்றவற்றை உள்ளடக்கிய நுண்ணிய உடல், மறுபிறவி, பிறவிகள்தோறும் அதிகரிக்கும் அறிவாற்றல், செயல் திறன் ஆகியவற்றை அவனுக்கு வேதம் அறிமுகப்படுத்துகிறது. புரியாத புதிராக இருந்த வாழ்க்கை புரிய ஆரம்பிக்கிறது. ஏன் வேலை செய்தாலும் பலன் கிடைப்பதில்லை, ஏன் சில சமயம் முயற்சி எதுவும் செய்யாமலேயே தேடிவது கிடைத்துவிடுகிறது, ஏன் இந்தச் சோக நிகழ்வு ஏற்பட்டது முதலிய கேள்விகள் அவனை வாட்டுவதில்லை. இதுதான் உலகம், இதில் இப்படித் தான் வாழ வேண்டும் என்று எவ்வித முரண்பாடுகளும் இல்லாத தெளிவான பாதையை வேதம் காண்பிப்பதால் அதில் முறையுடன் பயணம் செய்வதில் ஒரு சிலர் திருப்தியடைந்து விடுகிறார்கள்.

செயல் செய்வதற்கு மட்டும்தான் தனக்கு அதிகாரமிருக்கிறது என்றும், பலனைக் கொடுப்பது இறைவன் கையில் இருக்கிறது என்றும் வேதம் கூறும் கருத்தை ஏற்றுக்கொண்டு அதர்மங்களைத் தவிர்த்துப் புண்ணிய காரியங்களைச் செய்வதன் மூலம் அடுத்துவரும் பிறவிகளில் நிச்சயம் முக்தி அடையலாம் என்ற

நம்பிக்கையுடன் இவர்கள் தொடர்ந்து செயல்களைச் செய்து இன்ப துன்பங்களை அனுபவித்துக்கொண்டு வாழ்வார்கள்.

ஏன் துன்பம் ஏற்படுகிறது என்ற கேள்விக்குச் சரியான பதிலைக் கொடுத்தால் மட்டும் போதாது என்றும் துன்பத்தை முழுவதும் தவிர்ப்பது எப்படி என்ற கேள்விக்கும் வேதம் பதில் சொல்லியாகவேண்டும் என்றும் தொடர்ந்து வேதத்தை ஆராயும் மனிதர்கள் மட்டுமே இந்தப்பிறவியிலேயே முக்தியடைய வேண்டும் என்ற தீவிர ஆசை உடையவர்கள். இவர்களால் மட்டுமே அடுத்த கதவைத் திறக்க முடியும்.

*3. கசடற கற்றல்*

எவ்வித முரண்பாடும் இல்லை என்பதற்காக உலக நிகழ்வு களுக்கு வேதம் தரும் விளக்கங்களை அப்படியே ஏற்றுக் கொள்ளாமல் அவற்றின் உட்கருத்தை தங்கள் பகுத்தறிவின் துணைகொண்டு ஆராய முற்படுபவர்கள் இந்த மூன்றாம் நிலை யைக் கடக்கத் தேவையான திறவுகோலைத் தேடி எடுப்பார்கள்.

தவறான திறவுகோலால் இந்தக் கதவைத் திறக்க முனைபவர்கள் பாவபுண்ணியங்கள் எங்கனம் காரணஉடலில் பதிவாகிறது, அவை எப்பொழுது எவ்வளவு பலனைக் கொடுக்கும் என்பது எப்படித் தீர்மானிக்கப்படுகிறது, இறந்த பின் நுண்ணிய உடல் எந்தப் பாதையில் பயணம் செய்து எவ்வாறு மறுபிறவி எடுக்கிறது போன்ற ஆராய்ச்சியில் இறங்குவார்கள். இதுபோன்ற கேள்வி களுக்கு வேதம் சரியான பதில் கொடுக்கத் தயாராக இருந்தாலும் இவற்றை அறிந்து கொள்வதால் துன்பங்களைத் தவிர்க்க முடியாது என்று உணர்பவர்களுக்குச் சரியான திறவுகோல் தென்படும்.

செயல்கள் செய்வதால் விருப்பு-வெறுப்புகள் வளர்கின்றன என்பது உண்மை. ஆனால் மனதில் என்ன எண்ணங்கள் தோன்றுகின்றன என்பதும் அவற்றில் எது செயலாக மாறுகிறது என்பதும் என் கட்டுப்பாட்டில் இல்லாதபொழுது என் விருப்பு - வெறுப்புகளுக்கு நான் எப்படிப் பொறுப்பேற்கமுடியும் என்று இவர்கள் ஆராய்ந்து செயல் என்பதே ஒரு காட்சிப்பிழை என்ற முடிவுக்கு வருவார்கள். செயலின் பலன் தானாகக் கிடைக்கும் என்று முதலில் கூறும் வேதம் அடுத்துச் செயலைச் செய்வதும் தானாகத்தான் நடக்கிறது என்று கூறுவதை இவர்கள் புரிந்து கொள்வார்கள்.

வேதம் கூறும் இந்தக் கருத்துக்கள் அனுபவத்திற்குப் பொறுத்த மாகவும், தர்க்க அறிவுக்கு ஏற்புடையதாகவும், அறிவியல் நிரூபணங்களுடனும் இருப்பதால் அவை இவர்கள் மனதில் 'நான் பரமன்' என்ற தீர்க்கமான அறிவை ஏற்படுத்தும்.

வேதத்தின் ஒரே குறிக்கோள் மனிதனின் துன்பத்தை முழு வதும் அகற்றுவது என்பது மட்டுமே. எனவே நீதான் பரமன், இவ்வுலகம் மாயை என்ற வேதங்களின் மையக்கருத்தை தனது சுய அறிவாக மாற்றிக்கொண்டவர்கள் அடுத்த நிலைக்கு முன் னேறுவார்கள்.

*4. நிற்றல்*

என்ன செயல்கள் செய்கிறோம் என்பது தன் கட்டுப்பாட்டில் இல்லை என்பதை உணர்ந்தவுடன் காரண உடலில் பதிவாகி யிருந்த அனைத்துக் கர்ம பலன்களும் அழிக்கப்பட்டு மீண்டும் பிறவா வரத்தை முற்றுணர்ந்தோர்கள் பெறுவார்கள்.

கூரிய பகுத்தறிவு என்ற திறவுகோலால் மட்டுமே இந்தக் கதவைத் திறக்க முடியும். வேதம் கூறும் கருத்துக்களை அப்படியே ஏற்றுக்கொள்ளாமல் அவற்றை ஆய்ந்து அதன் மையக்கருத்தைத் தனதாக்கிக் கொண்டபின் வேதம் இவர்களுக்குத் தேவையில்லை. ஆனால் கனவில் தோன்றிய புலி பொய் என்றாலும் அது நம்மை பயமுறுத்தித் துன்பம் தரும் கனவிலிருந்து விழிப்படைய உதவி செய்ததால் அது நன்றிக்குரியது என்பதுபோலத் துன்பம் தரும் வாழ்வு என்னும் கனவிலிருந்து விழித்தெழ உதவிய வேதமும் போற்றுதலுக்குரியது. காண்பது கனவு என்று கூறும் வேதமும் கனவின் ஒரு பகுதியென்பதால்தான் உலகம் தோன்றியபோது அது உடன் தோன்றியது என்ற கருத்து ஆசிரியர்களால் போதிக் கப்படுகிறது.

அறிவுணர்வாயும், ஆனந்தமயமாயும் என்றும் இருக்கும் பரமன் நான் என்ற அறிவு வேதம் மூலமாக மட்டுமே நமக்குக் கிடைக்கப்பேறும். உலகம் மாயை என்பதை எடுத்த எடுப்பி லேயே வேதம் நமக்கு எடுத்துரைத்தாலும் அதை புரிந்து கொள்ளும் அளவுக்கு நமது பகுத்தறிவு கூர்மையில்லாதால் படிப் படியாக நமக்கு அந்த உண்மையைப் புரியவைத்தது. செயல்கள் செய்து பலனை அனுபவிப்பவன் என்ற நிலையிலிருப்பவனை ஒன்றும் செய்யாமல் இருக்கும் பரமன் நீ என்று சொன்னால்

புரியாது என்ற காரணத்தால் செயலுக்கும் அதன் விளைவு களுக்கும் உள்ள தொடர்பை மூன்று உடல்கள், மறுபிறவி, பிறவிகள்தோறும் தொடரும் கர்ம பலன் போன்ற கருத்துக்களால் விளக்கி முடிவில் அனைத்தும் மாயை என்ற உண்மையை வேதம் தருகிறது. உண்மையில் இருப்பது நான் மட்டுமே என்றும் இருப்பதுபோல் தோன்றும் இந்த ஜடமான உலகம் மாயை என்றும் புரிந்துகொள்பவர்கள் இந்தப் பிறவியிலேயே முக்திய டைந்து துன்பம் கலக்காத இன்பவாழ்வு வாழ்வார்கள். பரம னாகவே இருப்பவர்களுக்கு மறுபிறவி என்பது கிடையாது.

### சாராம்சம்

*ஏற்றிவிட உதவுவது ஏணி. ஏணியிலேயே நின்று கொண்டு மேலே ஏறாதவர்களுக்கு ஏணியினால் எந்தப் பயனும் இல்லை. காண்பது கனவு என்ற உண்மையை நமக்கு உணர்த்த பல்வேறு படிகளைக் கொடுத்து உதவும் வேதம் அந்தப் படிகளை நாம் கடந்தவுடன் அவை அனைத்தும் பொய்யான கனவைச்சேர்ந்தவை என்று நாம் உணர்வோமென எதிர்பார்க்கிறது. இல்லாத உலகத்தை இருப்பதாக நாம் தவறாக நினைத்துக்கொண்டிருக்கிறோம் என்பதைச் சுட்டிக்காட்ட மட்டுமே இல்லாததை இருப்ப தாக வேதம் சொல்கிறது. கண்ணுக்குத்தெரியும் உல கத்தை இல்லை என்று நிரூபிக்கக் கண்ணுக்குத்தெரியாத கடவுளை நமக்கு அறிமுகப்படுத்திப் படிப்படியாக நமது பகுத்தறிவைக் கூர்மைப்படுத்தி வேதம் நமக்கு உண்மையைப் புரியவைக்கிறது.*

*அறிந்து கொள்ள வேண்டும் என்ற அடங்காத வேட்கை மனிதனைத் தொடர்ந்து தேடலில் ஈடுபடுத்தும். அறிவு ஏற்படும் மனம் என்பதே ஒரு ஜடப்பொருள் என்றும் அது இருப்பதுபோல் தோன்றும் மாய உலகத்தின் ஒரு பகுதி என்பதும் புரிந்து விட்டால் மனதின் தேடல் ஒரு முடிவுக்கு வந்துவிடும். இது ஏன் இப்படி நடக்கிறது என்ற கேள்வி மறைந்துவிடுவதால் துன்பங்களிலிருந்து விடுதலை கிடைக்கிறது.*

இந்த விளக்கங்களைப் புரிந்துகொண்டு அந்த அறிவில் நிலையாக நிற்கும் முற்றுணர்ந்தோர்கள் வாழ்வின் அனைத்துத் துன்பங்களிலிருந்தும் விடுதலை பெறு கிறார்கள். இவர்கள் மரணமடைந்தவுடன் இவர்களது பரு உடல் உலகின் பஞ்சபூதங்களுடனும் நுண்ணியவுடல் கடவுளின் நுண்ணியவுடலுடனும் கலந்துவிடுவதால் மறுபடியும் பிறக்காமல் இவர்கள் பரமனாகவே மாறிவிடு கிறார்கள்.

## பயிற்சிக்காக

1. மனிதனும் அவன் அமர்ந்திருக்கும் நாற்காலியும் எப்படி ஒன்றாக முடியும்?
2. கனவுக்கோட்டையை கடக்க நாம் திறக்க வேண்டிய நான்குக் கதவுகள் யாவை?
3. கதவுகளின் திறவுகோல் என்பது யாது?
4. எந்தத் திறவுகோலை உபயோகிப்பது என்பதைத் தீர்மானிப்பது யார்?
5. வேதங்களின் ஒரே குறிக்கோள் எது?
6. வேதங்களின் மையக்கருத்து என்ன?

## சுயசிந்தனைக்காக

- வேதம் உண்மையை விளக்கக் கொடுத்த படிக்கட்டுக்கள் யாவை?
- இந்த படிக்கட்டுக்களின் மூலம் வேதம் தரும் உண்மை என்ன?
- வேதம் தரும் விளக்கங்களை அறிவதால் ஏற்படும் பயன் என்ன?

- ❖ உலகம் தோன்றியபொழுது உடன் தோன்றியது வேதம் என்பதிலிருந்து நாம் அறிந்துகொள்ளும் தகவல் என்ன?
- ❖ ஆதிசங்கரர் எழுதிய நிர்வாணச் சதகம் என்ற பாடலைப்படிக்கவும்.
- ❖ வேதங்களின் மையக்கருத்தை அறிவியல் நிரூபித்துள்ளதா?

பிரம்ம சூத்திரம் நான்கு அத்தியாயங்கள் கொண்டது. ஒவ்வொரு அத்தியாயமும் நான்கு பாதங்கள் கொண்டது. நான் பரமன் என்ற வேதத்தின் மையக்கருத்தைத் தனது கூரிய பகுத்தறிவால் ஆய்ந்து அறிந்துகொண்டவன் துன்பத்திலிருந்து முழுவதும் விடுதலையடைவதால் மீண்டும் பிறப்பதில்லை என்ற கருத்துடன் நான்காவது அத்தியாயத்தின் முதல் பாதம் இத்துடன் முற்றுப் பெறுகிறது.



## 168 ஞானி பேச மாட்டான்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 2 ● சூத்திரம் : 497 - 498**

**ஞா**னம் ஏற்பட்டவுடன் முக்திவிழைவோன் மனதளவில் மரணமடைந்து ஞானியாக மாறும்பொழுது முன்போல் அவன் பேசுவதில்லை என்ற கருத்து இந்தப் பாடத்தில் விளக்கப்பட்டு இதுபோல் அன்றாட வாழ்வில் ஞானம் தரும் பயன்களை இந்த நான்காம் அத்தியாயத்தின் இரண்டாம் பாதம் ஆராயத் தொடங்குகிறது.

கூட்டுக்குள் தவமிருந்த கம்பளிப்புழு பட்டுப்பூச்சியாக வெளி வந்து பறப்பதுபோல முக்திவிழைபவன் வேதத்தின் மையக் கருத்தைக் கருவாக ஏற்று அதன்மேல் தியானம் செய்தபின் முற்றுணர்ந்தோனாக மலர்ந்து உலகில் மணம் பரப்புவான். முன்போல் இல்லாமல் அவனது வாழ்க்கையில் ஏற்படும் பலமாறு தல்களில் முதலாவதாகத் தோன்றும் மாறுதல் அவனது பேசும் பழக்கம்.

ஒன்றும் பேசாமல் மவுனியாக ஒருவர் இருந்தால் அவருடன் நேரத்தைச் செலவிட யாரும் விரும்ப மாட்டார்கள். அவ்வளவாகப் பேசாத மனிதர்களும் மற்றவர்களது பேச்சைச் சுவாரசியமாகக் கேட்க அவ்வப்பொழுதுக் கேள்விகளாவது கேட்க வேண்டும். யாருடனும் பேச வேண்டும் என்ற கட்டாயமோ மற்றவர்களது பேச்சைக் கேட்க வேண்டும் என்ற ஆவலோ ஞானிக்குக் கிடை யாது. அனைவரது வாழ்வின் தன்மைகளை அவன் முழுவதும் அறிந்து இருப்பதால் யார் என்ன செய்து கொண்டு இருக்கிறார்கள் என்ற தகவலையோ மற்றவகளின் வாழ்வின் நிகழ்வுகளை அறிந்து கொள்ள வேண்டிய அவசியமோ ஞானிக்குக் கிடையாது. எனவே

ஞானியின் பேச்சு வெகுவாகக் குறைந்துவிடும். ஆனால் ஞானியுடன் உறவாடும் மனிதர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யத் தேவைப்பட்ட அளவு ஞானி தொடர்ந்து பேசிக்கொண்டு தான் இருப்பான்.

தான் சொல்வதை மற்றவர்கள் கேட்டுத் தனது விருப்பப்படி அவர்கள் நடக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு பெரும்பான்மை யான மனிதர்களிடம் இருக்கும். இதற்காக அவர்கள் அடிமையிடம் ஆணையிடுவது போலவோ, நண்பனுக்கு ஆலோசனை சொல் வது போலவோ, காதலருடன் மயக்கும் வார்த்தைகளைப் பேசுவது போலவோ உரையாடுவார்கள். அனைவரது செயல்பாடுகளுக்கும் அடிப்படையாக இருக்கும் காரணத்தை அறிந்த ஞானி உள் நோக்கம் எதுவும் இல்லாமல் தேவையான அளவு பேசுவான்.

தினசரி வாழ்வில் நடைபெறும் பேச்சுவார்த்தைகளில் கூட ஞானம் பெறுவதற்கு முன் இருந்த அளவை ஒப்பிட்டால் ஞானி யின் பங்கு வெகுவாகக் குறைந்துவிடும். சும்மா இருப்பது ஞானிக்கு ஒரு சுமையாக இருக்காது.

செயல்களைச் செய்வதற்காகவும் செய்விப்பதற்காகவும் தேவைபடும் பேச்சில் எவ்வித மாறுதலும் ஞானத்தினால் ஏற்ப டாது. ஆனால் தனது அறிவை அதிகப்படுத்திக்கொள்ளவும் மற்ற வர்களின் அபிப்பிராயத்தை மாற்றவும் செய்யப்படும் கருத்துப் பரிமாற்றத்தில் முக்தியடைந்த பின் குறிப்பிடத்தக்க மாறுதல் இருக்கும்.

### கருத்துப் பரிமாற்றம்

ஐம்புலன்கள் மூலம் பெறும் தகவல்களை அவரவர் தங்கள் அறிவுத்திறனாலும் தனிப்பட்ட விருப்பு-வெறுப்புகளின் அடிப் படையிலும் ஆராய்ந்து கருத்துக்களாக மாற்றி தங்கள் மனதில் பதியவைத்துக் கொள்கிறார்கள். இந்த வேறுபட்ட கருத்துக்களின் அடிப்படையில் செயல்படுவதால் மனிதர்களின் செயல்கள் ஒன்று போல் இருப்பதில்லை. தேனீக்கள் அல்லது எறும்புகள் போல மக்கள் ஒற்றுமையாகச் செயல்பட இந்த அபிப்பிராயப் பேதங்கள் தடையாக இருப்பதால் கருத்துப் பரிமாற்றம் அவசியமாகிறது.

இரு மனிதர்களிடையே நடக்கும் கருத்துப்பரிமாற்றத்தை அவர்களது நோக்கத்தின் அடிப்படையில் *சம்வாதம், வாதம், ஜல்பம்,*

***விதண்டாவாதம் என்று நான்கு வகையாகப் பிரிக்கலாம்.***

***1. சம்வாதம்***

யாரும் யாரையும் மாற்ற முடியாது. தன்னால் மாற்றக்கூடிய ஒரே ஆள் தான் மட்டுமே என்பதை உணர்ந்து தனது அறியாமையை அகற்ற மற்றவருடன் உரையாடுவது சம்வாதம். தான் முன்னேறத் தேவையான அறிவைப் பெறவேண்டும் என்ற தாகத்துடன் ஒருவரும், எவ்விதச் சுயநலத்தையும் கருதாமல் அவருக்கு உதவவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் மற்றவரும் கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்வது சம்வாதம் என்ற உயர்ந்த வகையைச்சேரும்.

சம்வாதத்தில் ஒருவர் தன்னை மாணவனாகவும் மற்றவர் தன்னை ஆசிரியனாகவும் கருதுவது மிக அவசியம். எனக்குத் தெரிந்ததை நான் சொல்கிறேன், உனக்குத் தெரிந்ததை நான் உன்னிடமிருந்து கற்றுக்கொள்கிறேன் என்ற அடிப்படையில் நடப்பது சம்வாதம் அல்ல. தன்னைவிட மற்றவருக்கு அதிகம் தெரியும் என்ற நம்பிக்கையுடன் அவரை ஆசிரியராக ஏற்றுக்கொண்டால் மட்டுமே அறிவைப் பெறமுடியும். உலக அறிவு அனைத்துக்கும் இந்த உண்மை பொருந்தும்.

உண்மையிலேயே ஆசிரியருக்கு அறிவு இருக்கிறதா என்பது முக்கியமல்ல. அவர் சொல்வது தவறாகவே இருந்தாலும் அதைத் தவறு என்று அறிந்துகொள்ளும் அளவுக்கு மாணவனின் அறிவு வளரவேண்டும். எனவே அதுவரை அவரை ஆசிரியராகக் கருதுவதைத்தவிர வேறு வழியில்லை. ஆசிரியர் சொல்வதை முழுவதுமாகக் கேட்ட பின், கேட்ட தகவல்களை முறையாக ஆராயவேண்டும். அதன் பின் முரணான கருத்துக்களுக்கு ஆசிரியரிடம் விளக்கங்கள் கேட்டு அறிவைப் பெறவேண்டும். இந்த நிலையை அடையும்பொழுதுதான் ஆசிரியர் சொல்வது தவறு என்ற முடிவை மாணவனால் எடுக்கமுடியும். அதன்பின் தன்னை இந்த நிலைக்கு உயர்த்திய ஆசிரியருக்கு நன்றி கூறிவிட்டு சரியான அறிவை அடைய வேறு ஆசிரியரைத் தேடவேண்டும்.

மாணவனுக்கு அறிவைகொடுக்கும் சக்தி எந்த ஆசிரியருக்கும் கிடையாது. கிருஷ்ண பரமாத்மாவாலேயே தன்னிடம் மாணவனாகச் சரணடைந்த அர்ஜுனனை முற்றுணர்ந்தோனாக மாற்ற முடியவில்லை என்பதிலிருந்து அறிவைப் பெறுவது மாணவனின்

திறனை மட்டுமே பொறுத்துள்ளது என்பதை அறியலாம். திறமையான மாணவன் யாரிடமிருந்துவேண்டுமானாலும் கற்றுக் கொள்ளலாம். ஏணியை உபயோகித்து நாம்தான் ஏற வேண்டுமே தவிர ஏணி நம்மை ஏற்றிவிடாது. அதுபோல் ஆசிரியரின் அறிவை மாணவன்தான் முயன்று பெற வேண்டும். ஆசிரியர் கேட்டால் மட்டுமே தனது கருத்தை மாணவன் கூறலாம். சம்வாதங்களில் அறிவு ஒருவழிப்பாதையில் செல்வதால் ஆசிரியரிடமிருந்து அறிவைப் பெறுவது மாணவனுக்கு எளிதாகிறது.

தன்னிடம் இருந்து அறிவைப் பெறவேண்டும் என்ற நோக்கத் துடன் தன்னை அணுகும் மாணவனது தேவைகள் நிறைவேறும் வரை அவனுடன் ஞானி தொடர்ந்து பேசுவார். மாணவனது சுருக்கமான கேள்விக்கு ஞானி விரிவான பதிலைத் தருவார்.

தனது அறியாமையை மட்டுமே ஞானிக்கு விளக்க மாணவன் முயற்சி செய்ய வேண்டுமே தவிர, தான் அறிந்ததைப் பற்றி ஞானியிடம் அவரது அனுமதிஇன்றி பேசக்கூடாது. மேலும் ஞானியின் விளக்கங்களைப்பற்றிக் கேள்வி கேட்கலாமே தவிர அவரது விளக்கங்களுக்கு மாறான கருத்தை அவருக்கு விளக்க முற்படக் கூடாது. தனது கேள்விக்கு ஞானி அளித்த பதிலை மீண்டும் மீண்டும் சிந்தித்துச் சில நாட்களுக்குப்பின்னும் அது புரியாவிட்டால் மட்டுமே ஞானியை அணுகி மேலும் கேட்கலாம். அவ்வாறு இல்லாமல் அவரது பதிலைக் கேட்டவுடன் அதை ஏற்காமல் மறு கேள்வி கேட்கக் கூடாது. இது போன்ற விதிகளை மாணவன் பின்பற்றாவிட்டால் ஞானி அவனுடன் பேசுவதைக் குறைத்துக் கொள்வார்.

*2. வாதம்*

இதுதான் இறுதியான உண்மை என்பதை நிலைநாட்ட இரு வருடையே நடக்கும் கருத்துப் பரிமாற்றம் வாதம் எனப்படும். வாதத்தில் ஈடுபடும் இருவரும் ஒரே கருத்தை ஏற்கும் வரை வாதத்தைத் தொடரும் ஆவல் உள்ளவர்களாக இருக்க வேண்டும். வாதம் பல நாட்களுக்குத் தொடரலாம். ஆனால் முடிவில் இருவரும் ஒத்த கருத்துடையவர்களாக மாற வேண்டும்.

உனக்கு அது சரி, எனக்கு இது சரி என்பது போன்ற முடிவு ஏற்பட வாய்ப்புடைய கருத்து பரிமாற்றங்கள் வாதம் என்ற வகைக் குள் வராது. ஒரு குறிப்பிட்ட நோயாளிக்கு இப்படித்தான் சிகிச்சை

செய்ய வேண்டும் என்று இரு மருத்துவர்களிடையே நடக்கும் கருத்து பரிமாற்றம் வாதம் ஆகாது. ஏனெனில் இதுதான் சரியான உண்மை என்று தொடர்ந்து மாறும் உலகில் எதுவும் இல்லை.

எனவே, வேதம் கூறும் உண்மை என்ன என்பதைப்பற்றி அமைவது மட்டுமே வாதம் ஆகும். இருவரது வாதங்களுக்கும் ஆதாரமாக வேத வாக்கியங்கள் இருப்பது அவசியம்.

தன்னுடன் வாதிப்பவருக்கோ அல்லது வாதங்களைக் கேட்பவர்களில் ஒரு சிலருக்கோ உண்மையை அறியும் வாய்ப்பு கிடைக்கும் என்ற நம்பிக்கை இருந்தால் மட்டுமே ஞானி வாதங்களில் பங்கேற்பார். இல்லையென்றால் உண்மையை நிலை நாட்ட அவருக்கு அவசியம் ஏதுமில்லை.

உலக நிகழ்வுகளைச் சரி அல்லது தவறு என்று பிரிப்பது அவரவர் பார்வையைப் பொறுத்தது என்பதை உணராதவர்கள் பற்றுடையோர். தான்சிந்துவது போலன்றி வேறுவிதமாக மூக்கைச் சிந்துபவர்கள் தவறாகச் செய்கிறார்கள் என்பது இவர்களது அபிப்பிராயம். உலக அழகி அழகானவள் என்பது தவறு. அவள் அழகாக இருப்பதாகப் பலர் நினைக்கிறார்கள் என்பதுதான் சரி. அழகு என்பது பார்க்கப்படும் பொருளின் குணம் அல்ல. பார்ப்பவர்களின் மனதில் பதிவாகியுள்ள விருப்பு-வெறுப்புகளின் அடிப்படையிலேயே ஒரு பொருள் அல்லது மனிதரின் அழகு தீர்மானிக்கப்படுகிறது. இந்த உண்மைகளை எடுத்துக் கூறினால் பற்றுடையோருக்கு புரியாது என்பதை ஞானி அறிவாதால் இவ்விதமான கருத்து பரிமாற்றங்களில் அவர் பங்கேற்க மாட்டார்.

தொடர்ந்து மாறும் உலகம் மாயை என்பதால் எந்தத் துறையிலும் முடிவான அறிவை யாராலும் அடைய முடியாது. வேதம் கூறும் முடிவான அறிவை அடைந்தவர்கள் தாங்கள் செய்யும் தொழிலுடன் தொடர்புடைய அறிவை அதிகப்படுத்திக் கொள்ள மற்றவரைக் குருவாக ஏற்றுக்கொண்டு சம்வாதம் செய்வார்களே தவிர வாதம் செய்ய மாட்டார்கள்.

*3. ஜல்பம்*

எதிர் எதிரான கருத்துக்கள் கொண்டுள்ள இருவர் தனது கருத்தை மற்றவர் மீது திணிக்கவேண்டும் என்ற தீர்மானத்துடன் கருத்துப்பரிமாற்றம் செய்துகொள்வது ஜல்பம். பட்டிமன்றங்கள் இதற்கு உதாரணம். கடைசிவரை தான் சொல்வதையே

சொல்லிக்கொண்டு இருப்பார்கள். சரியான பதில் கொடுக்க வேண்டும் என்ற காரணத்திற்காக மட்டும் மற்றவர்களின் பேச்சை இவர்கள் கவனிப்பார்கள்.

பொதுவாக இந்த வகை கருத்துப் பரிமாற்றத்தில் இருவரும் தங்கள் கருத்துக்களை மாற்றிக்கொள்வதில்லை. தனது வாதத் திறனை அதிகப்படுத்துக் கொள்வதைத் தவிர இவர்களது அறிவு அதிகமாகாது. ஆனால் திறந்த மனதுடன் இவர்களது கருத்துப் பரிமாற்றங்களைக் கேட்பவர்களின் அறிவை அதிகப்படுத்த ஜல்பம் உதவி செய்யலாம்.

முக்திவிழைவோர்கள் வேதம் படிக்க ஆரம்பித்ததும் இவ்வளவு நாட்கள் இந்த அறிவைப் பெறாமல் தாங்கள் வாழ்ந்தது குறித்து வருந்தித் தங்கள் நண்பர்களும் உறவினர்களும் கூட முக்திவிழை வோர்களாக மாறவேண்டும் என்ற ஆதங்கத்தில் அவர்களுக்கு வேதாந்தத்தின் பெருமையைக் கூற முற்படுவர். இது போன்ற கருத்துப் பரிமாற்றங்கள் பெரும்பாலும் ஜல்பமாகவே அமையும்.

முற்றுணர்ந்தோர்கள் தங்களின் விருப்பப்படி யாரையும் மாற்றவேண்டிய அவசியம் இல்லாதவர்கள். மேலும் மனப் பக்குவம் ஏற்பட்டால் மக்கள் தானாக வேதம் சொல்லும் கருத்தைக் கேட்க முற்படுவார்கள் என்பதை இவர்கள் அறிவதால் யாருக்கும் அவர்கள் கேட்காமல் தங்கள் கருத்தைச் சொல்ல மாட்டார்கள்.

## *4. விதண்டாவாதம்*

மற்றவர் என்ன சொன்னாலும் அதை மறுத்து அவர் சொல்வது தவறு என்று நிருபிக்கவேண்டும் என்ற பிடிவாதத்துடன் பேசுவது விதண்டாவாதம். சொல்பவர் அடுத்த கட்சியைச் சேர்ந்தவர் என்ற காரணத்திற்காக அவர் என்ன சொன்னாலும் அதை மறுத்துப் பேசவேண்டும் என்பதை மரபாககொண்ட பாராளுமன்றத்தில் இவ்வகை கருத்துப் பரிமாற்றங்கள் நடக்கும். உண்மை என்ன என்பதைபற்றியோ எது நல்லது என்பதை பற்றியோ எவ்வித அக்கறையும் இல்லாமல் மற்றவரை மட்டம் தட்டவேண்டும் என்ற நோக்கத்துடன் நடக்கும் விதண்டா வாதங்களின் ஒரே பயன் நேரத்தை வீணடிப்பது மட்டும்தான்.

ஒருவர் வாதம் செய்கிறாரா அல்லது விதண்டாவாதம் செய்கிறாரா என்பதைக் கண்டுபிடிக்க அறிவுக்கூர்மை அவசியம். ஒரு சிலர் தங்கள் அறிவுக்கூர்மையை அதிகப்படுத்திக்கொள்ள

வேண்டுமென்றே விதண்டாவாதத்தில் ஈடுபடலாம். எதையும் மறுப்பது என்பது அவ்வளவு கடினமான காரியமல்ல. அது பழக்கமாகிவிட்டால் சம்வாதம் செய்வது கடினமாகிவிடும். எனவே விதண்டா வாதம் செய்வதை முழுவதும் நிறுத்தினால்தான் உண்மையை அறியும் வாய்ப்பு உண்டாகும்.

பரிமாரப்படும் கருத்தை விட யார் அந்தக் கருத்தைக் கூறு கிறார்கள் என்பதற்கு இங்கு முக்கியத்துவம் அதிகம். 'நீ சொல்வது தவறு' என்பதற்குக் காரணம் 'சொல்வது நீ' என்பது மட்டுமே. ஒருவேளை அடுத்தவர் தான் சொல்லும் கருத்தை ஏற்றுக்கொண் டால், உடனே முன்னுக்குப்பின் முரணாகப் பேசி மறுபடியும் அவர் தவறாகப் பேசுகிறார் என்பது போல விதண்டா வாதம் ஒரு முடிவு இல்லாமல் தொடரும்.

விதண்டாவதத்திற்கு சரியான மறுமொழி மௌனம் மட்டுமே.

### ஞானி பேசுவான்

தொழில் கல்வி கற்பது, தொழில் செய்வது, குடும்பத்தை நடத்துவது போன்ற கடமைகளை ஞானம் பெற்றபின்னும் ஞானி தொடர்ந்து செய்வான். இந்தக் கடமைகளை நிறைவேற்ற மற்றவர் களைப்போல் அவன் தொடர்ந்து பேசுவான். ஞானி பேச மாட்டான் என்பதற்கு ஒருவரின் கருத்தை மாற்றவேண்டும் என்ற எண்ணத்துடன் ஆசிரியனாகச் சம்வாதம் செய்வதைத்தவிர மற்ற வகை கருத்துபரிமாற்றங்களில் அவன் ஈடுபடுவதில்லை என்பது மட்டும்தான் பொருள்.

### புலன்களும் கரணங்களும்

ஞானம் பெற்றபின் ஞானி பேசமாட்டான் என்ற கருத்தைக் கூறுவது பேச்சுக்கு மட்டுமின்றி மற்றப் புலன்களுக்கும், கரணங் களுக்கும் பொருந்தும் என வேதம் கூறுகிறது. தான் மட்டும்தான் உண்மையில் இருப்பவன் என்றும் இந்த உலகம் இருப்பதுபோல் தோன்றும் மாயை என்றும் அறிந்தபின் வாழ்வில் செய்ய வேண்டிய செயல்களோ, அடையவேண்டிய பொருள்களோ ஏதுமில்லை என்பதால் ஞானி தன் புலன்களையும் கரணங் களையும் உபயோகப்படுத்தவேண்டிய அவசியமில்லை.

கண்ணால் காண்பதனைத்தும் பொய் என்ற அறிவு ஏற்பட்ட தும் ஒரு குறிப்பிட்ட காட்சியைக் காணவேண்டும் என்று ஆசை

ஏற்படாது. மாறும் உலகின் மாறுதல்கள் தொடர்ந்து நடைபெறும் என்ற உண்மையை அறிந்தபின் மாற்றங்களைப்பற்றிய செய்தி அனாவசியம். சுற்றி நடக்கும் வாழ்க்கையே நாடகம் என்பதால் தனியாக சினிமா அல்லது தொலைக் காட்சியைப் பார்க்கவேண்டிய அவசியம் இருக்காது. தங்கள் சுற்றத்தார்கள், தெரிந்தவர்களின் வாழ்வில் ஏற்படும் ஏற்ற இறக்கங்களை அவர்கள் சந்திக்கும் விதம் அறியாசிறுவர்களின் விளையாட்டுபோல இருப்பதால் அவர் களுடன் சேர்ந்து விளையாடும் ஆசை ஏற்படாது. அவர்களின் திருப்திக்காக ஒரு பிறந்தநாள் கொண்டாட்டம் அல்லது பத்தாம் நாள் படையல் போன்ற நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டாலும் அவர்களது நிலைக்கு இறங்கி அவர்களுடன் ஒருவனாக நடந்து கொள்வதை ஞானி முடிந்தவரை தவிர்த்துவிடுவான்.

சிறுவர்கள் ஒரு கை குறைகிறது என்ற காரணத்திற்காகப் பெரியவர் ஒருவரை தங்கள் ஆட்டத்தில் சேர்த்துக்கொண்டால் ஆட்டத்தின் விதிகளைப் பின்பற்றி ஆடுவதை அவர் தன் கடமையாகச் செய்வாரேயன்றி மற்ற சிறுவர்களைப்போல் அவர் கேலிப்பேச்சிலும் சச்சரவுகளிலும் பங்கேற்கமாட்டார். அது அவ ரால் முடியவும் முடியாது. அதேபோல் ஞானி காட்சிக்கு மற்றவர் களைப்போல் வாழ முயன்றாலும் அவர்களுக்கு ஈடாக அரசியல் பேசுவது, புதிதாக அறிமுகப்படுத்தப்பட்ட நவீன பொருள்களைப் பற்றி அளவளாவுவது அல்லது சமூகநிகழ்வுகளை விமரிசிப்பது போன்ற செயல்களைச் செய்ய அவனால் முடியாது.

பத்திரிக்கைகளைப் படித்து அன்றாட நிலவரங்களை அறிந்து கொள்வதோ அரசியல் செய்திகளை விவாதிக்கும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்ப்பதோ யாருக்குமே அவசியம் இல்லை. ஜனநாயகத்தின் நான்காவது தூண் என வர்ணிக்கப்படும் ஊடகத் துறையை ஊக்குவிப்பதைத்தவிர தனிமனிதனின் வாழ்வின் முன்னேற்றத்துக்கு இந்தச் செயல்கள் எந்த வகையிலும் உதவுவது இல்லை. பொழுதுபோக்கிற்காக மற்றவர்களுடன் அளவளாவ மட்டுமே ஊடகத்துறைத் தரும் செய்திகள் பயன்படும். பொழு தைப் போக்க வேண்டும் என்ற கட்டாயமோ மற்றவர்களுடன் உரையாட வேண்டும் என்ற அவசியமோ ஞானிக்கு கிடையாது.

உடலையும் மனதையும் ஆரோக்கியமாக வைத்திருக்கத் தேவையான செயல்களை மட்டுமே ஞானி செய்வான். வாழ்வில் நேரும் அனைத்து அனுபவங்களையும் இது நல்லது அது

கெட்டது என்று பாகுபாடு செய்யாமல் அனுபவிப்பான். வாழ்க்கையே ஒரு சுற்றுலா என்றும், தான் உலவும் உலகே ஒரு கேளிக்கை மைதானம் என்றும் ஞானி உணர்ந்திருப்பதால் அனுப வங்களைத்தேடி அலையவேண்டிய அவசியம் அவனுக்குக் கிடையாது.

கிடைத்த உணவைச் சுவைத்து உண்ணுவான். காதில்விழும் செய்திகளையும் பாடல்களையும் அனுபவிப்பான். கையில் கிடைத்த புத்தகங்களைப் படிப்பான். கடற்கரையில் உலாவரும் பொழுது பார்க்கும் மனிதர்களின் முகத்தில் தெரியும் உணர்ச்சி மாற்றங்களின் காரணங்களைக் கற்பனை செய்து மகிழ்வான். குறையாத இன்பமுடனும், தடைபெறாத அமைதியுடனும் வாழ இதுதான் வேண்டும் என்று எவ்வித நிர்ப்பந்தமும் இல்லாததால் கிடைப்பதை அனுபவிப்பதைத்தவிர ஞானியின் புலன்களுக்கும் கரணங்களுக்கும் வேறு வேலையில்லை.

சாம, தான, பேத, தண்டம் என்ற நான்கு வழிகளில் மற்ற வர்களைத் தன் வழிக்குக் கொண்டுவரும் முயற்சியை ஞானி தன் சுயநலத்திற்காகச் செய்யமாட்டான். ஆனால் தான் ஏற்றுக்கொண்ட பொறுப்புகளைச் சரிவரச் செய்ய இந்த முறைகளை அவன் தர்மப்படி கையாளுவதில் தயக்கம் காட்ட மாட்டான். எனவே ஒருவர் ஞானியா என்பதை அவரது செயல்களின் அடிப்படையில் தீர்மானிக்க முடியாது.

## சாராம்சம்

*வாழ்வில் துன்பத்தை அகற்றி என்றும் இன்பமாக வாழும் வழி எது என்ற தேடல் ஞானம் பெற்றதும் ஒரு முடிவுக்கு வந்துவிடும். எனவே, ஞானியின் ஐம்புலன்களின் செயல்பாடுகளும் மூன்று கரணங்களின் செயல்பாடுகள் அடங்கிவிடும். நீண்ட பயணத்திற்குப் பின் வீடு பேற்றை அடைந்துவிட்டதால் இனி நிம்மதியாக வாழும் வாய்ப்பு ஞானிக்குக் கிடைக்கிறது.*

*கை சுத்தமாக இருக்கிறது என்பதை நிரூபிக்க அதை சாக்கடையில் வைத்து அழுக்காக்கி அதன் பின் கழுவ வேண்டும் என்ற அவசியமில்லை. இதை அறியாமல் நிம்மதியாக இருக்கக் கடுமையாக உழைத்து அதன்பின்*

விடுமுறையில் ஓய்வெடுக்கப் பலர் முயல்கிறார்கள். இதுபோல் எவ்வித நோக்கமும் இல்லாததால் ஞானியின் புலன்களும் கரணங்களும் எதையும் தேடி அலைவதில்லை.

பரந்த உலகத்தில் இன்பத்தைத் தேடியலையும் பொழுது புலன்களும் கரணங்களும் மனிதனுக்குத் தேவைப்படும். இன்பத்தின் உண்மையிருப்பிடத்தை அறிந்தபின் அவற்றின் தேவை மறைந்துவிடும்.

நிறுவனத்தின் தலைவருடன் உரையாட அவருக்கு நிகராக இருப்பவர்கள் குறைவு என்பதால் அவரால் கீழ்மட்டத்தில் வேலைசெய்பவர்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்வதுபோல் யாருடனும் பேச முடியாது. அதுபோல் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று படிகளையும் கடந்து வாழ்வின் உயர்ந்த குறிக்கோளான வீடுபேற்றை அடைந்த ஞானிகளுடன் உரையாட அவருக்கு நிகராக இருப்பவர்கள் குறைவு. பரமரகசி யத்தை உணர்ந்தபின் வாழ்வை ஒரு புதிராக நினைத்து அதில் எந்தப் பாதையில் எப்படிப் பயணிக்கவேண்டும் என்பதை அறியாமல் தவிக்கும் மற்றவர்களுடன் அவர்களுக்கு இணையாக ஞானியால் பேசமுடியாது.

எனவே ஞானி பேசமாட்டான். அவனது புலன்கள், கரணங்கள் ஆகியவற்றின் செயல்பாடுகள் வெகுவாகக் குறைந்துவிடும்.

## பயிற்சிக்காக

1. கருத்துபரிமாற்றம் என்றால் என்ன?
2. அது எத்தனை வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது?
3. ஞானி பேச மாட்டான் என்பதற்குக் காரணங்கள் யாவை?
4. ஞானி பேசுவான் என்ற தலைப்பில் சொல்லப்பட்ட கருத்து என்ன?

## சுயசிந்தனைக்காக

- தேனீக்கள் அல்லது எறும்புகளைப்போல் மக்கள் ஏன் ஒன்றுபட்டுச் செயல்படுவதில்லை?
- அனைவரிடமும் கலகலப்பாகப் பேசுபவன் ஞானம் பெற்றதும் அமைதியானவனாக மாறிவிடுவானா?
- எந்தத் துறையிலும் முழுவதுமான அறிவைப் பெறமுடியாது என்பதை உணரும் காரணத்தால் மட்டுமே PhD என்ற பட்டம் வழங்கப்படுகிறது என்பதை அதன் பெயர்க் காரணத்தை ஆராய்ந்து அறிக.



## 169 ஞானியின் மனம் அடங்கிவிடும்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 2 ● சூத்திரம் : 499**

**நா**ன் பூரணமானவன் என்ற அறிவு மனதின் நிறைவின் மையை மாற்றிவிடுவதால் ஞானியின் மனம் தேடல்களில் ஈடு படாமல் நமது அடிப்படைத் தன்மையான ஆனந்தத்தில் திளைத்து அடங்கியிருக்கும் என்ற கருத்தை இந்தப் பாடம் தருகிறது.

உணர்வுடன் கூடிய மனதை அமைதியாகவும் ஆனந்த மாகவும் வைத்திருப்பதுதான் வாழ்க்கையின் நோக்கம் என்ற தவறான அறிவுடன் வெளியுலகில் உழைக்கும் பற்றுடையோர் களின் முயற்சி தோல்வியில்தான் முடியும். சரிபாதியாகப் பிரித்துத் தருகிறேன் என்று இதில் ஒரு கடி அதில் ஒரு கடி என்று அப்பம் முழுவதையும் குரங்கு சாப்பிட்டுவிட்டதால் ஏமாந்த பூனைகளைப் போல ஆனந்தமாக இருக்க அமைதியைத் தொலைப்பதும் அமைதியாக இருந்தால் ஆனந்தத்தைத் தேட முயல்வதுமாகத் தொடர்ந்து போராடி இவர்கள் வாழ்வில் ஏமாற்றமடைவார்கள்.

மனது உணர்வுடன் கூடியதல்ல என்றும், அது வெறும் ஜடப் பொருள் என்றும் அறிபவர் முக்திவிழைவோர்கள். ஆனந்தத் தையும் அமைதியையும் வெளிஉலகில் தேடுவதை நிறுத்திவிட்டுத் தான் உணர்வு மயமான பரமன் என்பதை அறிந்தால் மனதில் இன்பவெள்ளம் கரைபுரண்டோடும் என்ற எதிர்பார்ப்புடன் வேதத்தை இவர்கள் தொடர்ந்து படிப்பார்கள். ஒரு சிலர் நான் பரமன் என்ற அறிவை மனதில் நிலை நிறுத்துவதால் குறையாத மகிழ்ச்சியும், தடையில்லாத நிம்மதியும் ஏற்படும் என்று தியானம் செய்வார்கள். உணர்வுமயமான நான் வேறு ஜடமான மனம் வேறு

என்ற அறிவு மனதில் நிலைபெறும்வரை இவர்களது தேடல் தொடரும்.

புறவுலகில் அமைதியைத் தேடும் பற்றுடையோர்களும் அகவுலகில் ஆனந்தத்தைத் தேடும் முக்திவிழைவோர்களும் மனதின் தன்மையை அறிவதில்லை. மாறும் உலகின் மாற்றங்களைப் பிரதிபலிக்கும் மனம் மாறித்தான் ஆகவேண்டுமென்றும் மனதின் மாற்றம் மாறாத தன்னைப் பாதிப்பதில்லையென்றும் முற்றுணர்ந்தோர்கள் அறிவதால் தங்கள் மனதின் நிலையைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. எனவே இவர்களது மனம் தனது மாற்றங்களை இயல்பாக ஏற்று அமைதியடையும்.

### வேற்றுமையில் ஒற்றுமை

பத்து வருடங்களுக்கு முன் தன்னிடம் பயின்று பட்டம் பெற்ற பழைய மாணவர்கள் சிலரைப் பேராசிரியர் ஒருவர் தன் வீட்டிற்கு அழைத்திருந்தார். வந்த மாணவர்கள் அனைவருக்கும் பொதுவாக ஒரு பெரிய குவளையில் தேனீருடன் வெள்ளி, பீங்கான், கண்ணாடி என்று பலவகைப்பட்ட கோப்பைகளையும் கொண்டுவந்து தங்களுக்குத் தேவையான தேனீரை அவரவர் எடுத்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொண்டார்.

விலையுயர்ந்த கோப்பைகளும், பார்வைக்கு அழகான கோப்பைகளும் முதலில் எடுக்கப்பட்டுவிட்டதால் கைப்பிடி உடைந்தும் பழையதாகவும் காணப்பட்ட சில கோப்பைகள் கடைசிவரை எஞ்சியிருந்தன. ஒவ்வொருவரின் கவனமும் மற்றவர் கையில் இருக்கும் கோப்பைகள் மீது இருந்தனவே தவிரத் தான் பருகும் தேனீரில் இல்லை. கோப்பைகள்தான் வேறுபட்டவையே தவிரப் பருகும் தேனீரில் எவ்வித வித்தியாசமும் இல்லை என்பதை உணராதவர்கள் தன்னுடைய கோப்பையைவிட மற்றவரது கோப்பை நன்றாக இருப்பதைக் கண்டு பொறாமை கொண்டார்கள். ஒரு சிலர் சிறந்த கோப்பையைத் தேர்ந்தெடுத்த பெருமையுடன் மற்றவர்களை ஏளனத்துடன் பார்த்துத் தேனீரை சுவைக்கத்தவறினார்கள்.

கோப்பையின் உதவியில்லாமல் தேனீரைப் பருக முடியாது. ஆனால் தேனீரைவிட கோப்பைதான் முக்கியமானது என்ற தவறான அறிவு மாணவர்களிடம் பரவலாகக் காணப்படுவதை அவர்களின் உரையாடல் சுட்டிக்காட்டியது. படித்த படிப்பு

ஒன்றாக இருந்தாலும் தங்களது பதவி, வருமானம், குடும்பம், செல்வாக்கு போன்றவற்றை ஒருவருடன் ஒருவர் ஒப்பிட்டுத் தான் இன்னும் கொஞ்சம் அதிகமாக வளர்ந்திருக்கலாம் என்ற ஏக்கம் அனைவரையும் பாதித்தது. தேனீரை உற்பத்தி செய்யும் திறன் கோப்பைக்குக் கிடையாது. அது போல இன்பத்தைத் தரும் தகுதி வாழ்வின் வசதிகளுக்குக் கிடையாது என்பதை யாரும் உணர வில்லை.

நெய்தான் தொன்னைக்கு ஆதாரம். வேறுபட்ட மனங்களுக்கு ஒன்றான உணர்வே ஆதாரம் என்பதை அறிந்த முற்றுணர்ந் தோர்களின் மனம் அமைதியாக இருக்கும்.

## ஒற்றுமையில் வேற்றுமை

பேராசிரியர் மாணவர்களுக்கு வழங்கியது தேனீர் மட்டுமே. குடித்துமுடித்தவுடன் கீழேவைத்துவிட்டுதான் வீட்டுக்குப் போகப் போகிறோம் என்பதை மறந்து கோப்பை தன்னுடையது என்று சொந்தம் கொண்டாடும் அறியாமைதான் மாணவர்களின் துன்பத் திற்குக் காரணம்.

அனைவரது தேனீரும் ஒரே தன்மை வாய்ந்தது. அதுபோல் ஒவ்வொருவருக்கும் சொந்தமானது ஒரே தன்மைவாய்ந்த இன்பம் மட்டுமே. கோப்பையின் தன்மையைப் பொறுத்துத் தேனீரின் தரம் மாறாது. வாழ்க்கையின் தரம் இன்பத்தின் அளவை நிர்ணயிக்காது.

அனைவருக்கும் பொதுவான தேனீரை பருக அவரவருக்குத் தனித்தனியே கோப்பை தேவை. அதுபோல அனைவருக்கும் பொதுவான இன்பத்தை அனுபவிக்க மனமும் உடலும் ஒவ்வொரு வருக்கும் தனித்தனியாகத் தற்காலிகமாகக் கிடைக்கப்பட்டவை. கோப்பையின் மீது கவனம் செலுத்திப் பருகும் தேனீரின் சுவையை அனுபவிக்கத் தவறும் மாணவர்கள் போலப் பணம், பதவி, சுற்றம், நட்பு போன்றவற்றை நாடி இன்பத்தை அனுப விக்கப் பற்றுடையோர்கள் தவறிவிடுகிறார்கள். ஆளுக்கு ஆள் வேறுபடுவது மட்டுமின்றி ஒருவரின் மனமே காலையில் இருப்பது போல் மாலையில் இல்லாமல் தொடர்ந்து மாறிக்கொண்டிருக்கும். மாறுவது மனம் என்பதை ஏற்றுக்கொள்ளாமல் அது நிலையான அமைதியுடன் இருக்க வேண்டும் என்று எதிர்பார்த்து ஏமாறு பவர்கள் மூக்திவிழைவோர்கள்.

தன்னை மற்றவர்களுடன் ஒப்பிட்டுக்கொள்ளாமல் இன்பமாக இருக்கும்பொழுது இருந்த அதே மனநிலை எப்பொழுதும் இருக்கவேண்டும் என்றும் கூட, எதிர்பார்க்காமல் வாழும் முற்றுணர்ந்தோன், கோப்பையின் மீது கவனம் செலுத்தாமல் தேனீரை அனுபவிப்பவனைப்போலத் தனது இயல்பான இன்பத்தில் திளைத்து மனதின் மாற்றங்களை மறுக்காமல் ஏற்றுக்கொண்டு அமைதியாக வாழ்வான். ஒன்றான உணர்வு வேறான பொருள் களாகவும் மாறும் மனமாகவும் தோன்றுவதால்தான் ஆனந்தத்தை அனுபவிக்க முடிகிறது என்பதை இவன் அறிவான்.

### *படைப்பின் ரகசியம்*

உலகிலிருந்து வேறுபட்ட தனிமனிதன் நான் என்று எண்ணும் பற்றுடையோர்கள் வாழ்வை ஒரு போராட்டமாகவும் மற்றவர் களைச் சகபோட்டியாளர்களுமாகவும் கருதுவதால்தான் அவர் களால் நிம்மதியாக வாழ முடிவதில்லை.

ஒன்றான பரமனே பலவாகக் காட்சியளிக்கிறான் என்று அறிந்த முக்திவிழைவோன் படைப்பின் ஒரு பகுதியான தனது மனம் மட்டும் மாறாமல் இன்பமாக இருக்க வேண்டும் என்று போராடுவதால் அமைதியை அடைய முடிவதில்லை.

உலகில் படைக்கப்பட்ட அனைத்துப் பொருள்களும் ஒன்றி லிருந்து ஒன்று வெகுவாக வேறுபட்டவை. நமக்குக் கிடைத்தது போன்ற ஒரு மனமும் உடலும் வேறு யாருக்கும் எப்பொழுதும் கிடைக்காது. கிடைத்தற்கரிய இவ்விரு பொருள்களைத் தற்காலி கமாகப் பெற்ற நாம் அவற்றை வேறு மாதிரி மாற்றியமைக்க முயற்சி செய்து நேரத்தை வீணடிக்காமல் அவற்றில் ஏற்படும் மாற்றங்களை அனுபவிப்பது புத்திசாலித்தனம்.

வெள்ளிக்கோப்பை பார்க்க நன்றாக இருக்கிறது என்று மண்கோப்பையை வைத்திருப்பவனும், மண்கோப்பையில் தேனீர் அதிகச் சுவையாக இருக்கும் என்று தன் கையைச் சுடும் வெள்ளிக்கோப்பையை வைத்திருப்பவனும் நினைப்பது போல மற்றவர்களிடம் இருப்பது தன்னிடம் இல்லாததுதான் தன் நிறைவின்மைக்கு காரணம் என்று எண்ணி பற்றுடையோர் வருந்துவார்கள். அனைவரிடமும் இருப்பது ஒரே தேனீர் என்பதை இவர்கள் அறிவதில்லை. அனைவரும் அனுபவிப்பது அவரவரின்

உண்மை இயல்பான இன்பத்தைமட்டுமே என்பதை உணர்ந்த முற்றுணர்ந்தோர்களின் மனம் வெளியுலகத் தோற்றங்களையும் மாற்றங்களையும் கண்டு மயங்காது.

மாறாத பரமன் மாற்றங்களுடனும், ஏற்ற இறக்கங்களுடனும் காட்சியளிப்பது படைப்பின் ரகசியம். இந்த ரகசியத்தை அறிந்த முற்றுணர்ந்தோர்கள் தங்கள் வாழ்வில் ஏற்படும் ஏற்ற இறக்கங் களையும் அதை அனுபவிக்கும் மனதின் தொடர்ந்த மாற்றங் களையும் மாற்ற முயலாமல் அப்படியே ஏற்றுக்கொண்டு வாழ்வை தொடர்ந்து அனுபவிப்பார்கள். உலகில் உள்ள ஏற்றத்தாழ்வுகள் நீங்கி எல்லோரும் எல்லாமும் பெற்று என்றும் இன்பத்துடன் வாழ்வார்கள் என்ற எதிர்பார்ப்பு தவறானது.

### *நிலையானதும் நிலையற்றதும்*

மரணத்தில் உணர்வுடன் கூடிய மனம் உடலைவிட்டுபிரிவ தால் உடல் நான் அல்ல என்றும் மனம்தான் நான் என்றும் நினைப்பவர்கள் பற்றுடையோர்கள். ஜடமான மனம் பரமனைப் பிரதிபலிப்பதால் உணர்வுடன் கூடியதாகத் தெரிகிறது என்று அறியும் முக்திவிழைவோர்கள் நிலையற்ற மனம் பரமனின் நிலை யான தன்மையை அடைய முடியும் என்று எதிர்பார்க்கிறார்கள். நிலையான உணர்வு மட்டுமே உண்மையில் இருக்கிறது என்றும் மனம் இருப்பதுபோல் தோன்றும் உலகின் ஒரு பகுதி என்றும் அறிந்த முற்றுணர்ந்தோர்களின் மனம் இன்பத்தில் ஆழ்ந்திருக்கும்.

கோப்பைக்கு முக்கியத்துவம் கொடுத்து அனைவருக்கும் பொதுவான தேனீர் ஒன்றுதான் என்பதை உணராததைப்போல வேறுபட்ட தோற்றங்களைக் கவனித்து ஒன்றான உணர்வுதான் பலவாகக் காணப்படுகிறது என்பதைக் கவனிக்கத் தவறுவதால் மாற்றங்களை மற்றவர்களால் அனுபவிக்கமுடிவதில்லை.

ஒளிபரப்பு எதுவும் இல்லாதபொழுது தொலைக்காட்சியில் தெரியும் கருப்பு வெள்ளை கலந்த புள்ளிகளின் நடனத்தில் ஒரு உருவத்தைக் கற்பனை செய்து கொள்வதைப்போல் அணுத்துகள் களின் ஆட்டத்தில் உலகத்தின் இயக்கத்தைப் பார்ப்பவர்கள் அறி யாத மனிதர்கள். தினமும் அரை மணிநேரம் பார்க்கும் தொலைக் காட்சி நாடகத்தின் பாத்திரங்கள் நாள்முழுவதும் வாழ்வதாக நம்பும் இவர்களுக்கு நிஜவாழ்வில் சந்திக்கும் மனிதர்கள் அனைவரும் கற்பனை வடிவங்கள் என்பதை நம்புவது கடினம்.

மனப்பக்குவம் ஏற்பட்டபின் ஆசிரியரின் துணையுடன் தன் அறிவுக்கூர்மையால் வேதத்தை ஆய்ந்து அறியும் முக்திவிழை வோர்கள் கூட நான் பரமன் என்பதை வெறும் புத்தக அறிவாக ஏற்றுக்கொண்டிருப்பதால் தங்கள் மனம் கலக்கமடையும் தருணங் களில் நிலையான நிம்மதி எப்பொழுது ஏற்படும் என்ற ஏக்கத் துடன் வாழ்நாளைக் கழிப்பார்கள்.

வார்த்தைக்கும் மனதுக்கும் எட்டாத உண்மையை அறிந்த முற்றுணர்ந்தோர்களின் மனம் தான் மாறும் மாயை என்பதை உணர்ந்து அடங்கிவிடும்.

### சாராம்சம்

*தான் உடலும் மனதும் கொண்ட மனிதன் என்ற அறிவுடன் செயல்படும் வரை நிறைவின்மையைத் தவிர்க்க முடியாது. பரந்த உலகில் ஒரு சிலகாலம் வாழும் அற் பனாகத் தன்னைக் கருதும் மக்கள் தங்களின் குறையை நிறைவு செய்ய எவ்வளவு முயன்றாலும் வெற்றிபெற மாட்டார்கள். இவர்களின் உடலும் மனமும் இருப்பதாகத் தோன்றும் மாயையின் ஒரு பகுதி என்பதால் வெளியுலக மாற்றங்களும் மனதின் மாற்றங்களும் இவர்களுக்கு நிறை வைத்தராது. நிறைவை பெறச் செய்யும் முயற்சி இவர் களின் அறியாமையை அகற்றாது. ஆசிரியரின் அடி பணிந்து வேதம் படிப்பதன் மூலம் அறியாமையை முழு வதும் அகற்றிய முற்றுணர்ந்தோர்கள் மற்ற மனிதர்களைப் போலப் பின்வரும் ஐந்து தவறுகளைச் செய்வதில்லை.*

*முதல் தவறு: மனதிற்கு முக்கியத்துவம் கொடுத்துத் தன் இயல்பான ஆனந்தத்தை அனுபவிக்கத் தவறுவது.*

*இரண்டாம் தவறு: மனதை மாற்றி அதை என்றும் அமைதியாகவும் ஆனந்தமாகவும் வைத்துக்கொள்ள முயற்சி செய்வது.*

*மூன்றாம் தவறு: மனம் எவ்வளவுதான் மாறினாலும் போதும் என்ற நிறைவு மனதிற்கு ஏற்படாது என்பதை உணராதிருத்தல்.*

நான்காம் தவறு: மாறுதல்தான் படைப்பின் ரகசியம் என்பதை அறியாமல் மாறாத இன்பத்தை மாறும் மனதில் எதிர்பார்ப்பது.

ஐந்தாம் தவறு: மனது நம் விருப்பப்படி இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்புடன் உலகையோ மனதையோ மாற்ற முயற்சி செய்வது.

அறிவுருவாகவும் ஆனந்தமயமாகவும் மாறாமல் என்றும் இருப்பவன் நான் என்ற ஞானத்தில் நிலைத்து நிற்பதால் ஞானியின் மனம் நிலத்தைச் சந்திக்கும் இடத்தில் அலைகளாக ஆர்ப்பரிக்கும் ஆழ்கடலைப்போல் அமைதியுடன் அடங்கியிருக்கும்.

### பயிற்சிக்காக

1. குரங்கு அப்பத்தைப் பிரித்த கதையின் மூலம் ஆனந்தத்திற்கும் அமைதிக்கும் உள்ள உறவு எப்படி விளக்கப்பட்டது?
2. பற்றுடையோனின் தேடலுக்கும் முற்றுணர்ந்தோனின் தேடலுக்கும் உள்ள வித்தியாசம் என்ன?
3. ஒற்றுமையில் வேற்றுமை என்ற தலைப்பில் சொல்லப்பட்ட கருத்து என்ன?
4. வேற்றுமையில் ஒற்றுமை என்ற தலைப்பில் சொல்லப்பட்ட கருத்து என்ன?
5. படைப்பின் ரகசியம் என்ன?
6. ஞானியைத்தவிர மற்றவர்கள் செய்யும் ஐந்து தவறுகள் யாவை?

### சுயசிந்தனைக்காக

❖ ஞானியின் மனம் அடங்கிவிடுவதால் அவனை எளிதாக அடையாளம் கண்டுகொள்ள முடியுமா?

- *தேடல்கள் நின்றுவிடுவதால் ஞானியின் வாழ்வின் குறிக்கோள் எதுவாக இருக்கும்?*

- *அலைகளின் ஆரவாரத்துடன் கூடிய கடலை அமைதியானது என்று எப்படி வர்ணிக்க முடியும்?*



# 170 ஞானியின் பிராணன் ஜீவாத்மாவில் அடங்கிவிடும்

அத்தியாயம் : 4 ● பாதம் : 2 ● சூத்திரம் : 500 - 502

**நா**ன் ஒரு தனிமனிதன் என்ற எண்ணம் மறைந்துவிடுவதால் ஞானியின் பிராணன் ஆத்மாவில் அடங்கிவிடும் என்ற கருத்தை விளக்கிப் பிராணன் அடங்கிவிடுவதால் ஏற்படும் பலனை இந்தப் பாடம் விவரிக்கிறது.

பிராணன் நின்றுவிட்டால் உயிர் பிரிந்துவிடும் என்ற கருத்து உடலை உணர்வின் ஆதாரமாக நினைக்கும் பற்றுடையோர்களின் மரணபயத்திற்குக் காரணம். உணர்வுதான் உடலின் ஆதாரம் என்ற உண்மையை அறிந்த முக்திவிழைவோர்கள் கூட உடல் உணர்விலிருந்து வேறானது என்று நினைப்பதால் மரண பயத்திலிருந்து விடுதலை பெறுவதில்லை. இருப்பது உணர்வு மட்டும்தான் என்ற அறிவு ஏற்பட்டவுடன்தான் அவர்கள் முற்று ணர்ந்தோர்களாகி சாகாவரம் பெறுகிறார்கள்.

கனவில் உலவும் மனிதர்கள் உயிருடன் இருப்பதாகத் தோற்றமளிப்பதற்குக் காரணம் அவர்களுக்குள் துடிக்கும் பிராணன் என்ற விளக்கம் உண்மையாக இருக்க முடியாது. உலகில் உலவும் மனிதர்கள் உயிருடன் இருக்கப் பரமனிடமிருந்து தோன்றிய பிராணன்தான் காரணம் என்ற விளக்கம் முக்திவிழைவோர்களுக்கு சரியாகப் புரிந்துவிட்டால் அவர்களது பிராணன் பரமனுடன் ஐக்கியமாகிவிடும்.

உயிருக்கு உடல் காவல் என்ற முதல் படியைத் தாண்டி மரணத்திற்குப் பின் மறுபிறவி எடுப்பதால் உடல் வெறும் உடை யைப்போல என்ற இரண்டாம் படியையும் கடந்து உடல் இருப்பதுபோல் தோன்றும் காட்சிப்பிழை என்ற உண்மையை

அறிந்ததும் பிராணன் ஆத்மாவில் அடங்கிவிடும். எனவே ஞானிக்கு மரணபயம் இருக்காது.

பிராணன் அடங்கியபின் உடல், மனம், புத்தி ஆகிய மூன்று கருவிகள் மூலம் ஆத்மாவின் இன்பத்தை முழுமையாக ஞானிகள் அனுபவிப்பர். பற்றுடையோர்கள் இவற்றின் மூலம் அனுபவிக்கும் இன்பம் துன்பத்துடன் கலந்தே இருக்கும். முக்திவிழைவோர்கள் இந்த மூன்று கருவிகளின் மூலமாக இல்லாமல் நேரடியாக ஆத்மாவின் இன்பத்தைப் பெறலாம் என்ற தவறான எதிர்பார்ப் புடன் வாழ்வார்கள்.

## இன்பத்தின் மூன்று நிலைகள்

அனைவரும் அனுபவிப்பது ஒரே இன்பம்தான் என்றாலும் மக்களின் தரத்திற்கேற்ப இந்த இன்பத்தை மூன்று நிலைகளாகப் பிரிக்கலாம். உடல் அளவில் அனுபவிக்கும் இன்பம் தாழ்ந்த நிலை. மனதளவில் அனுபவிக்கும் இன்பம் அதைவிட உயர்ந்த நிலை. அறிவுபூர்வமாகப் புத்தியைப் பயன்படுத்தி அனுபவிக்கும் இன்பம் மிக உயர்ந்த நிலை. சினிமா பாடல்கள் உடலுக்கும், கர்நாடக இசை உடல், மனம் ஆகிய இரண்டிற்கும், இலக்கியச் சொற்பொழிவு உடல், மனம், புத்தி ஆகிய மூன்றிற்கும் இன்ப அனுபவத்தைத் தருகின்றன. இலக்கியச் சொற்பொழிவை அனுப விப்பவர் சினிமா பாடலையும் ரசிக்கலாம். ஆனால் சினிமா பாடல்களை ரசிக்கும் எல்லோருக்கும் இலக்கியச் சொற்பொழிவு புரியாது. எனவே மக்களின் தரம் அதிகமாக அதிகமாக அவர்கள் அனுபவிக்கும் இன்பத்தின் நிலைகள் உயர்வதுடன் இன்பத்தின் அளவும் அதிகரிக்கும். உடலின் இன்பம் ஒரு சில நிமிடங் களுக்கும், மனதின் இன்பம் ஒரு சில மணிநேரங்களுக்கும் புத்தி யினால் அனுபவிக்கும் இன்பம் பல நாட்களுக்கும் இருக்கும். ஞானத்தினால் ஏற்படும் இன்பம் வாழ்நாள் முழுவதும் தொடரும்.

## மனிதர்களில் மூன்று தரங்கள்

உடல்தான் முக்கியம் என்று விலங்குகளைப்போல் வாழ்ப வர்கள் தரத்தில் மிகவும் தாழ்ந்தவர்கள். இவர்கள் தங்களது அறிவை உடலின் இன்பத்திற்காக மட்டுமே செலவிடுவார்கள். உடலைவிட மனம்தான் முக்கியம் என்ற அறிவுடன் உடலை வருத்தி மனதின் இன்பத்திற்காக உழைப்பவர்கள் இரண்டாம் தரம். மனதையும் கட்டுப்படுத்தி அறிவுபூர்வமாக வாழ்பவர்கள் முதல் தரமானவர்கள்.

உடலைப் பிரதானமாகக் கொண்டு வாழ்பவர்கள் பற்றுடையோர்களாகவே இருப்பர். மனதைப் பிரதானமாக நினைப்பவர்கள் முக்திவிழைவோர்களாக மாறினாலும் இவர்களுக்கு முக்தி கிடைப்பது அரிது. முதல் தர மனிதர்களில் ஒருசிலர் மட்டுமே பற்றுடையோன், முக்திவிழைவோன் என முன்னேறி இறுதியில் ஞானியாவார்கள்.

## முதல் நிலை இன்பம் - உடல்

புலன்கள் பொருள்களுடன் தொடர்பு கொள்வதால் ஏற்படும் இன்பத் துன்பங்களை அனுபவிப்பது மட்டுமே மிருகங்களால் முடியும். அதிகக் குளிரும் அதிக வெப்பமும் இல்லாமல் உடலுக்கு இதமான சூழல், சுகமாக இருக்கத் தேவையான சாதனங்கள் கொண்ட வீடு, சத்தம் அதிகமில்லாமல் இனிமையான பாடல், பார்க்க அழகாக இருக்கும் வண்ண ஓவியங்கள், நறுமணம் தரும் மலர், உடலின்பம் தரும் துணைவர் முதலிய உடலளவில் அனுபவிக்கும் இன்பங்கள்தான் வாழ்வின் ஒரே குறிக்கோளாகக் கொண்டு ஒரு சில மனிதர்கள் கூட இதே நிலையில் வாழ்வார்கள்.

உடலளவில் இன்ப அனுபவம் தரும் பொருள்களை பெறுவது எளிது. பண்பட்ட மனிதர்கள் அடுத்த நிலைக்கு முன்னேற இந்த இன்பங்களைத் தியாகம் செய்யத் தயங்குவதில்லை. முக்திவிழைவோர்கள் உடல் அளவில் பெறும் இன்பங்களை முழுவதுமாகத் துறக்கத் தயாராக இருப்பார்கள். ஆனால் முற்றுணந்தோர்கள் ஒன்றைத் துறந்து மற்றதைப் பெற முயலாமல் அனைத்து அனுபவங்களையும் ஏற்றுக்கொண்டு என்றும் இன்பமாக வாழ்வார்கள். இருப்பவற்றை அனுபவிக்கத் தயங்கமாட்டார்கள். இல்லாததற்கு ஏங்க மாட்டார்கள்.

உடலளவில் ஏற்படும் இன்பம் சில நிமிடங்களே தொடர்வதால் மேலும் இன்பத்தைப் பெற முயற்சி செய்வது அவசியமாகிறது. எவ்வளவுதான் முயன்றாலும் துன்பத்தை முழுவதும் தவிர்த்து உடலை இன்பமாக வைத்துக்கொள்ள முடியாமல் போவதற்கு முப்பத்தைந்து வயதில் துவங்கும் வயோதிகம் காரணமாகிறது. புலன்களின் திறன், உடல் ஆரோக்கியம், பொருள்களை ஈட்டும் திறன் ஆகியவை யௌவனத்திற்குப் பின் குறைய ஆரம்பிப்பதால் தொடர்ந்து இன்ப அனுபவங்களைப்பெற அடுத்த நிலைக்கு முன்னேறவேண்டிய கட்டாயம் மனிதனுக்கு ஏற்படுகிறது. உடலின் ஆதிக்கம் குறைந்து இளமை வேகம், முதுமையின் முதிர்ச்சியாக மாறியபின் அடுத்த நிலைக்குச் செல்பவர்களுக்கு

மூன்றாவது நிலைக்குச் செல்லும் தகுதி ஏற்படாது. எனவே இவர்களுக்கு இந்தப்பிறவியில் முக்தியடைய வாய்ப்பில்லை.

## இரண்டாம் நிலை இன்பம் - மனம்

பெரும்பாலான மனிதர்கள் உடலால் பெறும் இன்பத்தின் குறைபாடுகளை வெகு விரைவில் புரிந்துகொண்டு மனதினால் பெறும் இன்பம் என்றும் நிலைக்கும் என்ற எதிர்பார்ப்புடன் தங்கள் உடல் உழைப்பையும், புத்திக்கூர்மையையும் மனதிற்குப் பிடித்த பொருள்களைப் பெறுவதற்காகச் செலவிட ஆரம்பிப்பார்கள். மனம் போன போக்கில் வாழ்வதுதான் இன்பம் என்ற தவறான முடிவுடன் ஓய்வில்லாமல் உழைப்பார்கள். உழைப்பு துன்பமாக இருந்தாலும் அது என்றாவது ஒரு நாள் நிம்மதியாக வாழ வழி வகுக்கும் என்ற நம்பிக்கையுடன் வாரத்தில் ஐந்து நாட்களில் துன்பத்தைச் சகித்துக்கொண்டு எஞ்சிய இரண்டு நாட் கள் மட்டும் மனம்போனபடி வாழ்வார்கள். திங்கள் கிழமை காலை அலுவலகம் செல்லும்பொழுது மரத்தடி நிழலில் நிம்மதியாகத் தூங்குபவனைப் பார்த்து ஏக்கப்பெருமூச்சுவிடுவார்கள்.

இடத்துக்கு இடம், நேரத்திற்கு நேரம், மனிதருக்கு மனிதர் உடலின் தேவைகள் மாறுபடுவதில்லை. மனம் மாறிக்கொண்டே இருப்பதால் அதன் தேவைகள் என்ன என்று தெளிவாகத் தெரிந்து கொள்வதே கடினம். தேடியபொருள் கிடைத்தபின்கூட மனம் திருப்தியடைவதில்லை. தேவைக்குமேல் எதையும் அனுபவிக்கும் திறன் உடலுக்குக் கிடையாது. ஆனால் மனதின் தேவைகளை உலகப்பொருள்களால் நிறைக்கவே முடியாது. மனதிற்குப் பிடித்த வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டும் என்ற முயற்சி இன்பத்தைவிட துன்பத்தையே அதிக அளவில் தரும்.

இந்த உண்மையை அறிந்துகொள்ளும் அளவுக்குப் புத்தி கூர்மையுள்ளவர்கள் மனம் விரும்புகிறது என்ற ஒரே காரணத்திற்காகப் பொருள்களைத் தேடுவதை நிறுத்திவிட்டு அறிவுபூர்வமாக ஆராய்ந்தபின்னரே எவ்வித வேலையையும் செய்வார்கள். இவர்கள் மட்டுமே அடுத்த நிலை இன்பத்தை அனுபவிக்கத் தகுதியானவர்கள். இந்தத் தகுதியைப் பெற்றபின்னும் இவர்கள் உடல், மனம் ஆகிய இரண்டின் மூலமாகவும் தொடர்ந்து இன்பத்தை அனுபவிப்பார்கள். ஆனால் இவ்விரண்டும் தாழ்ந்த நிலை என்பதை அறிந்து மூன்றாம் நிலைக்கு இவர்கள் வெகு விரைவில் முன்னேறுவார்கள்.

### *மூன்றாம் நிலை இன்பம் - புத்தி*

உடலின் இன்பதுன்பங்களை வெளியுலகப்பொருள்கள் தீர் மானிக்கின்றன. அடித்தால் வலிக்கும். அணைத்தால் இனிக்கும். மனதின் இன்பதுன்பங்களைத் தீர்மானிப்பது மனம்தான். பிடித்தவர் அடித்தால் இனிக்கிறது. பிடிக்காதவர் அணைத்தால் கசக்கிறது. சரி தவறு என்ற அறிவின் அடிப்படையில் ஏற்படும் இன்பம் மூன்றாம் நிலையைச்சேர்ந்தது. முக்கியமான தேர்வில் வெற்றி பெறுவது பிடித்த நண்பருடன் சிரித்து மகிழ்வதைவிட உயர்ந்த நிலை இன்பம்.

தன் சாதனைகளை உலகம் மெச்ச வேண்டுமென்றும் சரித் திரத்தில் தன் பெயர் இடம்பெற வேண்டுமென்றும் வாழ்க்கைக்கு ஒரு நோக்கத்தைக் கற்பித்துக்கொண்டு படிப்படியாக முன்னேறு பவர்கள் முதல் தர மனிதர்கள். மனம் மூலம் பெறும் இன்பம் நிலைப்பதில்லை என்ற அறிவு ஏற்பட்டவுடன் இவர்கள் தங்கள் புத்தியைக் கூர்மைப்படுத்தி நினைத்ததை நடத்தியே முடிப்பவன் நான் என்ற தகுதியைத் தனக்கு ஏற்படுத்திக்கொண்டு அதன் மூலம் பெறும் இன்பம் நிலைக்கும் என நம்புவார்கள்.

தனது மரணத்திற்குபின் கல்லறையில் கூடுபவர்கள் தன்னைப் பற்றி உயர்வாகப் பேச வேண்டும் என்ற எதிர்பார்ப்புடன் அதற்கேற்றவாறு வாழ முயலுவார்கள். மற்றவர்கள் தன்னைப்பற்றி உயர்வாக நினைப்பதால் தனக்கு ஏற்படும் இன்பம் மற்ற இரண்டு நிலை இன்பங்களைவிட அதிகமென்றாலும் அந்த இன்பத்தைக் காப்பாற்றத் துன்பப்பட வேண்டும் என்ற அறிவு ஏற்படச் சிலகாலமாகும். வெற்றி தோல்வி மாறிமாறி ஏற்படுவதால் இன்பத் திற்கும் துன்பத்திற்கும் தங்கள் வாழ்வு அலைபாய்கிறது என்றும், இந்த அலைபாய்தலுக்கு முடிவே இல்லை என்றும் அறிந்தபின் தான் நிலையான இன்பத்தைப் பெறத் தேவையான அறிவை அடைய இவர்கள் முயற்சி செய்வார்கள்.

மாறுதலுக்குட்பட்ட உலக அறிவு துன்பத்தைக் குறைக்க மட்டுமே உதவும். துன்பத்தை முழுமையாக அகற்றவும் நிலையான இன்பத்தைப் பெறவும் வேதம் தரும் மாறாத அறிவு அவசியம். அறிவின் கூர்மையை முழுமையாகப் பயன்படுத்தி வேதம் படிப்பவர்களால் மட்டுமே இந்த நிலையின் உச்ச கட்டத்தை அடைய முடியும்.

## ஒருமித்த செயல்பாடு

இன்பம் நமது உண்மை உருவம் என்பதால் இன்ப அனுபவத்தைப் பெறாதவர்கள் யாரும் கிடையாது. இன்பம் உருவாக்கப்படுவதல்ல. அது என்றும் இருப்பது. ஆனால் இன்ப அனுபவம் வந்து போகக்கூடியது. ஆழ்ந்த உறக்கத்தின்பொழுது உடல், மனம், புத்தி ஆகிய மூன்று கருவிகளும் ஒடுங்கியிருப்ப தால் எல்லோருக்கும் கிடைக்கும் இன்ப அனுபவம் விழித்த பின் தொடர இந்தக் கருவிகள் மூன்றும் ஒருமித்து செயல்பட வேண்டியது அவசியம்.

புலன்கள் மனதின் துணையில்லாமல் செயல்படுவதில்லை. மனம் கவலையில் ஆழ்ந்திருக்கும்பொழுது திரைப்படபாடல் காதுக்குக் கேட்காது. கேட்டாலும் இனிமையாக இருக்காது. அதே போல மனதாலும் ஐந்து புலன்களின் மூலமாக அல்லாமல் வேறு வழியில் எவ்வித அனுபவத்தையும் பெற முடியாது. மனதை வழி நடத்தும் அறிவால் மனதின் துணையின்றித் தனித்து இயங்க முடியாது.

புலன்களின் துணையில்லாமல் எவ்வித இன்பத்தையும் பெற முடியாது. ஏனெனில் புலன்கள் செயல்படவில்லையென்றால் உலகம் மறைந்துவிடும். மனம் மட்டும் செயல்பட்டாலும் உடலைப் பயன்படுத்தமுடியவில்லையே என்ற வருத்தம் இன்ப அனுபவங்களைத் தடை செய்துவிடும். உடலும் மனமும் சேர்ந்து செயல்பட்டாலும் இன்ப அனுபவங்களை நாம் பெறுகிறோம் என்ற அறிவு இல்லையென்றால் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் வித்தியாசம் தெரியாது. பைத்தியக்காரன் எதற்குச் சிரிக்கிறான் அல்லது எதற்கு அழுவான் என்று தெளிவாகச் சொல்ல முடியாது.

எனவே அறிவு, மனம், புலன்கள் ஆகியவை ஒருமித்து செயல்பட்டால் மட்டுமே என்றும் இருக்கும் இன்பத்தை அனு பவிக்கமுடியும். அறிவின் ஆழமும் கூர்மையும் இன்ப அனுபவத் தின் அளவை தீர்மானிக்கின்றன. அறிவின் முழுகட்டுப்பாட்டில் மனமும், மனதிற்குக் கீழ்படிந்து உடலும் செயல்பட்டால் மட்டுமே துன்பம் கலவா இன்பத்தை இடைவிடாமல் அனுபவிக்கத் தேவையான ஞானத்தைப் பெறமுடியும்.

## இன்ப அனுபவத்தில் புத்தியின் பங்கு

பிறந்தவுடன் எழுந்து நிற்காவிட்டால் கழுதைப்புலிக்கு உணவாகிவிடுவோம் என்ற அறிவு ஒட்டகச்சிவிங்கியின் குட்டிக்கு

இயற்கையாகவே இருக்கிறது. ஆனால் தனக்கு எது நல்லது எது கெட்டது என்று பகுத்தறியும் திறனை மனிதன் தன் சுய முயற்சி யால் வளர்த்துக்கொள்ளவேண்டிய கட்டாயம் உள்ளது. வாழ்வில் அடிபட்டு அல்லது பெரியவர்களின் அறிவுரைகளைக் கேட்டு மனிதன் தன் பகுத்தறிவை வளர்த்துக்கொண்டால் மட்டுமே அவனால் இன்பமாக வாழ முடியும். மனிதன் அனுபவிக்கும் இன்பத்தின் அளவும் நிலையும் அவனது அறிவின் தரத்தைப் பொறுத்தே அமையும். புத்தியுள்ளவர்கள் மற்றவர்களைவிட இன்பமாக வாழ்வர்.

இயற்கை சூழல் தரும் இன்பதுன்பங்களை வேறு வழி யில்லாமல் ஏற்றுக்கொள்ளும் விலங்குகளைப்போல் வாழாமல் சூழ்நிலைகளைத் தன் வசதிக்கேற்ப மாற்றும் சக்தி மனிதனின் அறிவைப் பொறுத்து அதிகரிக்கும். அறிவுத்திறன் உள்ளவர்களுக்கு மட்டுமே பொருளாதார நிலையை உயர்த்தி தான் வாழும் உலகைத் தனக்கேற்ற வகையில் அமைத்துக்கொள்ளும் வாய்ப்பு கிடைக்கும்.

மேலும் வாழ்வின் நிகழ்வுகளைச் சரியாக எதிர்கொள்ளும் திறனையும் மனிதனின் அறிவு தீர்மானிக்கிறது. எவ்வளவுதான் முயன்றாலும் மற்றவர்கள் தங்களிடம் நடந்துகொள்ளும் விதத்தை முழுவதும் கட்டுப்படுத்தமுடியாது. தனக்குப் பிடிக்காத வகையில் ஏதேனும் நிகழ்ந்தாலும் அதனால் துன்பபடாமல் அதன் மூலம் ஏற்படும் நன்மைகளைக் கண்டுபிடித்துத் தோல்வியை வெற்றியின் படிக்கட்டாக மாற்றி துன்பத்தை இன்பமாக மாற்றும் சக்தியும் அறிவுள்ளவர்களுக்கே இருக்கும். நாட்டு நலனுக்காகச் சிறைபட்ட சுதந்திர போராட்ட வீரர்களுக்கு உடலளவிலும் மனதளவிலும் ஆங்கிலேயேர்கள் தந்த துன்பம் துன்பமாகத் தெரியவில்லை. எனவே ஒரு நிகழ்வு இன்பமா அல்லது துன்பமா என்பதை அறிவுதான் தீர்மானிக்கிறது.

கவர்ச்சியுடையணிந்த இளம்பெண்ணின் புகைப்படம் நமது மனதில் ஏற்படுத்தும் இன்ப உணர்வு, அந்தப் பெண் தனது தங்கை என்ற அறிவு ஏற்பட்டதும் வேறுமாதிரி மாறிவிடும். எனவே இன்ப அனுபவங்கள் அறிவின் தரத்தால் மட்டுமே நிர்ண யிக்கப்படுகின்றன.

தெரியாமல் ஒருவர் நமக்குத் துன்பம் தருகிறார் என்றால் அவரை மன்னிக்கத் தயாராக இருக்கும் மனம் அவர் வேண்டு மென்றே அப்படிச்செய்கிறார் என்று அறிந்தால் பழிவாங்கும்

உணர்வால் பாதிக்கப்படும். மற்றவர் எந்த நோக்கத்துடன் எப்படி நடந்துகொண்டாலும் என்னால் இன்பமாக இருக்க முடியும் என்ற அறிவு உள்ளவர்களால் மட்டுமே துன்பத்தைத் தவிர்த்து இன்ப மாக வாழ முடியும்.

போதிய அறிவு இல்லாதவர்களும், அறிவினால் மனதைக் கட்டுப்படுத்தாதவர்களும் வாழ்வின் ஏற்ற இறக்கங்களினால் பெரிதும் பாதிக்கப்படுவார்கள். எந்த வயதிலும் மரணமேற்பட வாய்ப்பு உள்ளது என்ற அறிவு உள்ளவர்கள், அது தங்கள் வீட்டில் ஏற்பட்டால் ஒடிந்து போய்விட மாட்டார்கள். மற்றவர்கள் மரணமடையும்பொழுது வாழ்வே மாயம் என்று வாயளவில் சொல்லித் துக்கம் விசாரித்துவிட்டு மரணம் என்றால் என்ன என்ற அறிவைப் பெற முயற்சி செய்யாதவர்களின் வாழ்வில் துன்பம் நிச்சயம் ஏற்படும்.

வருமுன் காப்பவர்கள் அறிவுடையோர். மனம்போனபோக்கில் வாழ்வதுதான் இன்பம் என்ற கொள்கையுடன் வாழ்பவர்களால் துன்பத்தைத் தவிர்க்கமுடியாது. ஒவ்வொரு துன்ப அனுபவத் திலிருந்தும் பாடம் கற்றுக்கொண்டு மறுபடியும் அதே துன்பத்திற்கு ஆளாகாமல் இருக்க என்ன செய்யவேண்டும் என்று ஆராய் பவர்கள் மட்டுமே துன்பங்களை முழுமையாகத் தவிர்க்கத் தேவையான அறிவைப் பெறுவர்.

பலூன் வைத்து விளையாடுவது இரண்டு வயது சிறுவனாக இல்லாமல் இருபது வயது வாலிபன் என்றால் அவன் இன்னும் வளரவில்லை என்று அர்த்தம். அது போல வாழ்க்கைத்துணைவர் விபத்தில் காலமாகிவிட்டார் என்பதற்காக வாழ்நாள் முழுவதும் வருத்தப்பட்டு இன்ப வாழ்வை தவறவிடுபவர்கூட அறிவில் குறைபாடுள்ளவரே.

துன்பத்தை அகற்றி இன்பமாக வாழ அறிவை அனைவரும் பயன்படுத்தினாலும் உலகை மாற்றுவதனால் தங்கள் நோக்கத்தை அடைய முடியாது என்பதை உணர்ந்தவர்கள் மட்டுமே வேதம் தரும் முடிவான அறிவைப் பெற்றுத் துன்பம் கலவா இன்பத்தை அனுபவிக்கும் வாய்ப்பைப்பெறுவார்கள்.

முடிந்த அளவு போராடியபின்னும் துன்பத்தைத் தவிர்க்க முடியவில்லை என்ற நிலையில் அதை ஏற்றுக்கொள்ள 'இதுவும் மாறும்' என்ற அறிவு உதவும். மனம் அறிவின் கட்டுப்பாட்டில் இருந்தால் சோகம் அதிக அளவில் பாதிக்காது.

கடந்த காலக் குறைகளை மறந்துவிட்டு எதிர்கால இன்பத்தை நோக்கிப் பயணிக்க அறிவாளிகளால் மட்டுமே முடியும். பத்து வருடத்திற்கு முன் அவன் தன்னை முட்டாள் என்று திட்டி விட்டான் என்று மனதில் நினைத்து இன்று புலம்புபவர்கள் முட்டாள்கள் மட்டுமே. எதிர்கால நிகழ்வுகள் நமது கட்டுப்பாட்டில் இல்லை என்றும் நடந்து முடிந்த பழைய நிகழ்வுகளை மாற்ற முடியாது என்றும் அறிவாளிகள் அறிவார்கள்.இன்று தாங்க முடியாதத் துன்பமாகத் தோன்றும் நிகழ்வு பின் ஒருகாலத்தில் மறக்கப்பட்டுவிடும் என்பதையும் இவர்கள் அறிவார்கள்.

எந்த ஒரு நிகழ்வும் நடப்பதற்கு என்ன காரணம் என்பதை அறிபவர்கள் அதனால் பாதிக்கப்படுவதில்லை. நியாயமான காரணத்தால்தான் தனக்குப் பதவி உயர்வு கிடைக்கவில்லை என்பதை அறிந்துகொண்ட பின் துன்பம் குறைந்துவிடுகிறது. வேதம் தரும் அறிவைப் பெற்றவர்கள் உலகம் என்றால் என்ன, அது எப்படி உருவாக்கப்பட்டது, அது உருவாகியதன் காரணம் என்ன, மனிதன் என்பவன் யார், அவன் வாழ்வின் நோக்கம் என்ன, அவன் எப்படிச் செயல்படுகிறான், அவன் செயல்பாடு களுக்குக் காரணம் என்ன முதலிய அனைத்துக்கேள்விகளுக்கும் தெளிவான பதிலை அறிந்திருக்கும் காரணத்தால் அவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் துன்பம் கலவா இன்பத்தை அனுபவிப் பார்கள்.

பற்றுடையோர்கள் மிகப்பெரிய அறிவாளிகளாக இருந்தாலும் அவர்கள் தங்கள் அறிவை உலகம் என்பது யாது என்ற உண் மையை அறியப் பயன்படுத்தாமல் அதை தங்கள் விருப்பத்திற்கு மாற்றப் பயன்படுத்துவதால் அவர்களால் துன்பத்தைத் தவிர்க்க முடிவதில்லை. கற்றது கைமண்ணளவு கல்லாதது உலகளவு என்று எண்ணும்வரை முக்திவிழைவோர்களால் நீடித்த இன்பத்தைப் பெற முடிவதில்லை. உலகம் மாயை என்ற கைமண்ணளவு அறிவால் கல்லாத உலகைக் கைக்குள் கொண்டுவந்த முற்றுணர்ந்தோர்கள் மட்டுமே வாழ்வின் குறிக்கோளை அடைந்தவர்கள்.

## முற்றுணர்ந்தோரின் இன்பம்

அறிவுதான் ஆனந்தத்தின் ஆதாரம். பருகும் பானத்தின் சுவை எப்படியிருக்கும் என்பது அது என்ன பானம் என்ற அறிவைப் பொறுத்தே அமையும். உயர்ந்த வகை மதுபானம் என்று நினைத்துச் சாதாரண மதுவைக் குடிப்பவர்களின் மூளைக்குள்

நிகழும் மாற்றங்கள் உண்மையிலேயே உயர்ந்தபானத்தைக் குடிக்கும்பொழுது ஏற்படும் மாற்றங்களைப் பெரிதும் ஒத்திருக்கும் என்று கண்டுபிடித்து இந்தக் கருத்தை மருத்துவ ஆய்வு ஒன்று நிரூபித்துள்ளது.

தன்னைத் தேரோட்டியின் மகன் என்று நினைத்து வருந்திய கர்ணனின் துன்பம் அவன் அங்கதேசத்தின் அதிபதியானபின் கூட மறையவில்லை. தான் குந்தியின் புத்திரன் என்ற உண்மையை உணர்ந்த பின் அவன் வாழ்வில் எந்த மாற்றமும் ஏற்படவில்லையென்றாலும் கூட அவன் மனதில் ஏற்பட்ட அறிவு மரணத்தையும் மகிழ்வோடு ஏற்றுக்கொள்ளும் அளவுக்கு அவனைத் தயார் செய்துவிட்டது.

உலகம் கொடுமையானது என்றும் அதில் தனக்கு இன்பம் தரும் பொருள்களைப் போராடிப் பெற வேண்டும் என்ற அறிவுடன் செயல்படுபவர்கள் பற்றுடையோர்கள். நீதான் அது என்று வேதம் கூறுவதால் அது உண்மையாகத்தான் இருக்க வேண்டும் என்று நம்பும் முக்திவிழைவோர்கள் தான் தர்மத்தின் அடிப்படையில் செயல்பட்டுப் புண்ணியத்தைச் சேர்த்தால் இன்பமாக இருக்கலாம் என்று எதிர்பார்ப்பார்கள். அறிவுருவாகவும் ஆனந்த மயமாகவும் என்றும் இருக்கும் பரமன் நான் என்ற உண்மையை உணர்ந்தவர்கள் மட்டுமே தங்கள் அனுபவங்கள் அனைத்தையும் இன்பமாக மாற்றி ஏற்றுக்கொள்ளும் அறிவை அடைந்தவர்கள்.

காணுமிடமெங்கும் நீக்கமற நிறைந்திருப்பது தனது இயல்பான ஆனந்தமே என்பதை உணர்ந்தவர்கள் இன்ப அனுபவத்தைப் பெற ஒரு குறிப்பிட்ட பொருளைத் தேடுவதில்லை. மேலும் இனிப்பை மட்டுமே உண்டால் திகட்டிவிடும் என்பதால் நடுவில் காரத்தையும் சுவைப்பதுபோல் இன்ப அனுபவத்தை மட்டுமே பெற்றால் மனம் மரத்துப்போய்விடும் என்பதால் ஏற்ற இறக்கங்களுடன் கூடிய அனைத்து அனுபவங்களையும் இன்பமாக ஏற்க வேதம் தரும் ஞானம் வழிவகுக்கும்.

### சாராம்சம்

*பிராணமயகோசம் தான் செயல்பட மற்றக் கோசங்களை சார்ந்து இருப்பதில்லை. மேலும் பிராணன் இருப்பதாலேயே அன்னமயகோசம், மனோன்மயகோசம், விஞ்ஞானமய*

கோசம் ஆகிய மூன்றும் செயல்படுகின்றன. பிராணனின் செயல்பாடு ஆனந்தமய கோசத்தை பாதிப்பதில்லை என்பதால் ஆழ்ந்த உறக்கத்தில் நம்மால் ஆனந்தமாக இருக்கமுடிகிறது. விழித்தபின் மற்ற மூன்று கோசங்களும் ஒருமித்து செயல் பட்டால் மட்டுமே நம்மால் ஆனந்தத்தை அனுபவிக்க முடியும். பிராணன் செயல்படும் வரை நான் என்ற அகம்பாவம் தன்னைச் செயல் செய்பவனாகவும் பலனை அனுபவிப்பவனாகவும் கருதிக்கொள்வதால் நாம் அனுபவிக்கும் இன்பம் துன்பம் கலந்தே இருக்கிறது. வேதம் படித்துப் பிராணன் உள்ளிட்ட அனைத்துக் கோசங்களும் மாயை என்ற அறிவைப் பெற்றவுடன் உலக அனுபவங்கள் அனைத்தையும் இன்பமாக ஏற்றுக் கொள்ளும் தன்மை மனதிற்கு ஏற்படும். இந்த நிலையை அடைந்த முற்றுணர்ந் தோர்கள் தங்களை ஒரு மனிதன் என்று தனிப்படுத்திக் கொள்ள மாட்டார்கள் என்பதினால் அவர்களின் பிராணன் ஆத்மாவில் அடங்கிவிடும் என்ற கருத்தை வேதம் கூறுகிறது.

ஆழ்ந்த உறக்கத்தில் கிடைத்த அதே இன்பம் விழித்தபின்னும் மாறாமல் இருப்பதை முற்றுணர்ந்தோர்கள் மட்டுமே அறிவார்கள். ஏதேனும் ஒரு காரியத்தைச் செய்தால்தான் இன்ப அனுபவம் கிடைக்கும் என்ற அறிவுடன் தொடர்ந்து செயல்களைச் செய்பவர்கள் பற்றுடை யோர். செயல்கள் எதையும் செய்யாமல் மனதிலிருந்து எண்ணங்களை அகற்றித் தான் என்றும் இருக்கும் இன்ப வடிவானவன் என்ற உண்மையை உணர்வதால் ஏற்படும் இன்ப அனுபவத்தை நாடுபவன் முக்தியிழைவோன்.

அறிவுக்கூர்மையை அதிகப்படுத்திக்கொள்வதுடன் அதை பயன்படுத்தி இறுதியான உண்மையை அறிந்து கொண்ட முற்றுணர்ந்தோர்களின் பிராணன் ஆத்மாவில் அடங்கிவிடுவதால் அவர்களது வாழ்வில் துன்பம் கலவா இன்பம் எப்பொழுதும் நிலையாக இருக்கும்.

### பயிற்சிக்காக

1. பிராணன் ஆத்மாவில் அடங்கும் என்பதன் பொருள் என்ன?

2. எந்த மூன்று படிகளைக் கடந்தபின் பிராணன் ஆத்மாவில் அடங்கும்?

3. இன்பத்தை அனுபவிக்க நமக்கு இருக்கும் மூன்று கருவிகள் யாவை?

4. மூன்று நிலை இன்பங்கள் யாவை?

5. மனிதர்கள் எதன் அடிப்படையில் மூன்று தரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளனர்?

6. மூன்று நிலை இன்பங்களுக்குள் உள்ள வித்தியாசங்களைப் பட்டியலிடவும்

7. ஒருமித்த செயல்பாடு என்ற தலைப்பின் கீழ் விவரிக்கப்பட்ட கருத்து யாது?

8. இன்ப அனுபவத்தில் புத்தியின் முக்கியத்துவத்தை விளக்கவும்.

9. முற்றுணர்ந்தோர் பெறும் இன்பத்தை விளக்கவும்.

### சுயசிந்தனைக்காக

❖ *மனதைக் கட்டுப்படுத்தி அறிவுபூர்வமாக வாழும் முதல் தரமான மனிதர்களில் பலர் வாழ்வின் இறுதிவரை பற்றுடையோர்களாகவே வாழ்வதன் காரணம் என்ன?*

❖ *அரபு நாடுகளின் வெப்பத்தைப் பொருட்படுத்தாது அங்கு உழைத்துப் பணம் சேர்க்கும் மனிதர்கள் எந்த நிலையில் இன்பத்தைத் தேடுபவர்கள்?*

❖ *மனித வெடிகுண்டாகச் சிதறத் தயாராக இருக்கும் தீவிரவாதியின் மன நிலைக்கு என்ன காரணம்?*

❖ *மாறும் உலக அறிவை ஒப்பிடும்பொழுது மாறாத வேதம் தரும் அறிவு உயர்ந்தது என்றும், இறுதியானது என்றும் கூறப்படுவதன் காரணத்தை ஆராய்க.*



# 171 பாதை ஒன்று பயணங்கள் வேறு

**அத்தியாயம் : 4 ● பாதம் : 2 ● சூத்திரம் : 503**

**பி**றப்பில் ஆரம்பித்து இறப்பில் முடியும் வாழ்க்கைப்பாதை என்பது அனைத்து மனிதர்களுக்கும் ஒன்றுதான் என்றாலும் அந்தப்பாதையில் பயணம் செய்யும் விதம் அவரவரின் அறிவைப் பொறுத்து வேறுபடும் என்று விளக்கியபின் மற்றவர்களை ஒப்பிடும்பொழுது மிக உயர்ந்த ஞானத்தைப்பெற்றவர்களின் வாழ்க்கைப்பயணம் எந்த விதத்தில் உயர்ந்தது என்று இந்தப் பாடம் ஆழமாக ஆராய்கிறது.

பொருள்களை அனுபவிப்பதன் மூலம் இன்பத்தைப் பெறு கிறேன் என்ற அறிவை உடைய பற்றுடையோர்களின் அனுபவம் உலகம் தொடர்ந்து மாறுவதால் துன்பம் கலந்தே இருக்கும். அனுபவிப்பவன், அனுபவிக்கப்படும் பொருள், அனுபவம் ஆகிய மூன்றும் ஒன்றான இறைவனின் திருவிளையாடல் என்பதை அறிந்த முக்திவிழைவோர்கள், வாழ்வில் ஏற்படும் துன்பங்களை இறைவனது பிரசாதமாக ஏற்றுக்கொள்வர். மாறும் எண்ணங்களே அனுபவங்கள் என்பதால் அவற்றை இன்பம் துன்பம் எனப் பிரிக்கமுடியாது என்று அறிந்தவர்கள் முற்றுணர்ந்தோர்கள்.

எவ்விதக் காரணமும் இல்லாமல் சிரிப்பவன் பைத்தியக்காரன். ஆனந்தமயமானவன் என்பதால் மனம் தொடர்ந்து இன்ப அனுபவங்களில் மட்டுமே மூழ்கி இருக்கும் என்பது தவறான எதிர் பார்ப்பு. மேலும் அது சாத்தியமும் இல்லை. காபி குடிக்கும் பொழுது இன்ப அனுபவம் ஏற்படவேண்டுமென்றால் அதைக் குடிக்க வேண்டும் என்ற ஆவல் இருக்கவேண்டும். காபி குடித் தாலும் குடிக்காவிட்டாலும் ஒன்றுதான் என்று பற்றற்று இருப்

பவர்களுக்கு அது சுவைக்காது. உடனே காபி கிடைக்காவிட்டால் உயிரே போய்விடும் என்று துடிப்பவர்களுக்குமட்டும்தான் குடிக்கும்பொழுது அது தேவாமிர்தமாக இனிக்கும். காபி குடிக்கா விட்டால் உயிர் போய்விடாது. சிறிது நேரம் எந்த வேலையும் ஓடாது. எப்படியாவது நேரத்தைக் கடத்திவிட்டால், 'காபி வேண்டும்' என்ற எண்ணம் காணாமல் போய்விடும். 'காபி' என்ற எண்ணம் மனதில் தோன்றுவதும், ஏதோ ஒரு வழியில் அது மறை வதும்தான் அனுபவம்.

ஆக, காபியைச் சுவைக்கும்பொழுது இன்ப அனுபவம் ஏற்படவேண்டுமென்றால் காபி கிடைக்க வேண்டுமே என்ற ஏக்கம், அது கிடைக்காவிட்டால் ஏற்படும் ஏமாற்றம் ஆகிய இரண்டு துன்ப அனுபவங்களையும் ஏற்றுக்கொள்வது அவசியம். இன்ப அனுபவங்கள் அனைத்தும் இது போன்ற துன்ப அனுபவங்களுடன் இரண்டறக் கலந்தே ஏற்படும். பூவா தலையா என்று காசைச் சுண்டினால் எது விழும் என்பதை உறுதியாகச் சொல்ல முடியாது என்றாலும் இரண்டில் ஏதாவது ஒன்று விழும் என்பது நிச்சயம். மேலும் பூ தலை ஆகிய இரண்டும் மாறிமாறி விழும் என்பதும் உறுதி. பூ விழுகிறதா அல்லது தலை விழுகிறதா என்பதைக் காசைச் சுண்டுபவனால் தீர்மானிக்க முடியாது.

மனிதர்கள் அனைவருக்கும் பொதுவான வாழ்க்கைப்பாதை ஏற்ற இறக்கங்களுடன் கூடியதாகவே இருக்குமென்றாலும் அந்தப் பாதையில் அமையும் பயணம் அவரவர் அறிவைப் பொறுத்து எவ்வாறு மாறுபடுகிறது என்பதைப் பின்வரும் கருத்துக்கள் விளக்குகின்றன.

*1. இன்ப அனுபவம்*

காபிதான் இன்பத்தைக் கொடுக்கிறது என்று நினைக்கும் பற்றுடையோர்கள் அது கிடைக்காவிட்டால் துன்பப்படுவார்கள். காபியில் இன்பம் இல்லை என்று அறிந்த முக்திவிழைவோர்கள் காபி குடிக்கும் பழக்கத்தை விட்டுவிட்டுத் துன்பத்துடன் இன்பத் தையும் தொலைத்துவிடுவார்கள். இன்ப அனுபவத்தைப் பெற காபி ஒரு அவசியமான பொருள் என்பதை அறியும் முற்றுணர்ந் தோர்கள் அது கிடைக்குமா என்ற ஆவல், கிடைக்கா விட்டால் ஏற்படும் ஏமாற்றம், கிடைத்துவிட்டால் ஏற்படும் இனிமை ஆகிய அனைத்து அனுபவங்களையும் சரிசமமாக அனுபவிப்பார்கள்.

*2. அனுபவத்தின் அளவு*

அனுபவத்தின் அளவு வயதைபொறுத்து அதிகரிக்கும். அனுபவங்கள் வாழ்வு முழுவதும் சமஅளவில் அனைவருக்கும் தொடர்ந்து ஏற்பட்டுக்கொண்டுதான் இருக்கும். பந்தின் பின் ஓடும் விளையாட்டுவீரனை ஆவலுடன் பார்க்கும் கால்பந்தாட்டரசிகன் பெறுவதும் அனுபவம்தான். பூச்சியின் பின் ஓடும் பல்லியைப் பார்த்தபடி வீட்டில் அமர்ந்திருக்கும் ஏழை மனிதன் பெறுவதும் அனுபவம்தான்.

*3. அனுபவத்தின் ஆழம்*

அனுபவத்தின் அளவு ஒன்றாக இருந்தாலும் அனுபவத்தின் ஆழம் வேறுபடலாம். அதிக ஆழமான இன்ப அனுபவம் அதிக ஆழமான துன்ப அனுபவத்துடன் சேர்ந்தே இருக்கும். கிடைத்ததில் திருப்தி அடையாமல் உலகின் பின் ஓயாமல் ஓடிக்கொண்டிருக்கும் பற்றுடையோர்களின் அனுபவங்கள் உலகில் இன்பம் இல்லை என்று ஒன்றும் செய்யாமல் ஒடுங்கியிருக்கும் முக்திவிழைவோர்களின் அனுபவங்களைவிட ஆழமானது. ஆனந்தமயமான நான் அனுபவங்களைப் பெறுவதற்காக அகிலத்தை மாயாசக்தியால் உருவாக்கியுள்ளேன் என்பதை அறியும் முற்றுணர்ந்தோர்கள் தங்களுக்கு ஏற்படும் அனுபவங்கள் அனைத்தையும் ஆழமாக அனுபவிப்பர்.

*4. துன்பத்தின் அளவு*

அளவில்லா இன்பத்தையும் அதனுடன் ஆழமான துன்பங்களையும் அனுபவிக்கும் பற்றுடையோரில் சிலர் இன்பத்தைத் தேடுவதனால்தான் துன்பம் ஏற்படுகிறது என்பதை அறிந்து முக்திவிழைவோர்களாக மாறித் துன்பத்தைத் தவிர்க்க உலகில் இன்பத்தைத் தேடக்கூடாது என்ற தவறான முடிவெடுத்துவிடுவார்கள். இதனால் அனுபவங்களின் ஆழம் குறையுமே தவிரத் துன்பத்தின் அளவு குறைந்துவிடாது. ஒன்றும் செய்யாமல் சும்மா இருந்தால் ஏற்படும் இன்ப அனுபவம் ஒன்றுமே செய்யாமல் வாழ்வை வீணடிக்கும் துன்ப அனுபவத்துடன் சமஅளவுடன் கலந்தே இருக்கும். துன்பத்தை இன்ப அனுபவத்தின் ஒரு பகுதியாக அறிபவர்களின் வாழ்வு முழுவதும் இனிமையான அனுபவங்களாலேயே நிறைந்திருக்கும். துன்பம் என்பதே

இருக்காது. கதாநாயகி அழும்பொழுது தாங்களும் அழுதிருந்தாலும் 'திரைப்படம் மிக நன்றாக இருந்தது' என்று தங்கள் அனுபவம் முழுவதையும் போற்றுவார்களே தவிரத் தாங்கள் கண்ணீர்விட்ட கட்டங்களைத் துன்பமானவை என்று தனிப்படுத்தி வர்ணிக்க மாட்டார்கள். அலைபாயும் எண்ணங்களின் தொகுப்பே அனுபவங்கள் என்றும், வேகமான அலைபாய்தலே ஆழமான அனுபவங்கள் என்றும் அறிந்த முற்றுணர்ந்தோர்கள் அனைத்திற்கும் சாட்சியாக ஆனந்தமாக இருப்பார்கள்.

*5. செயல்களைச் செய்பவன்*

செயல்களைச் சரியாகச் செய்யவில்லை என்ற குற்ற உணர்வு பற்றுடையோர்களை மட்டுமே வருத்தும். 'முட்டாள்தனமாக நடந்துகொண்டேன்' என்பதையும் ஒரு இன்ப அனுபவமாகச் சொல்லிச் சிரிக்கும் பக்குவம் நான் செயல்களைச் செய்பவன் அல்ல என்பதைத் தெளிவாக அறிந்த முற்றுணர்ந்தோர்களிடம் மட்டுமே இருக்கும்.

சூழ்நிலை மட்டுமின்றி அதை தான் எவ்விதத்தில் எதிர்கொள்கிறேன் என்பதும் தன் வசத்தில் இல்லை என்று அறிந்தவர்கள் தன் உடல், மனம் ஆகியவை குறையுடன் கூடியவை என்றும் அறிவார்கள். இவற்றின் செயல்பாடு தொடர்ந்த மாறுதல்களின் ஒரு பகுதி என்பதால் 'நான் இதைச் செய்தேன்' என்பது ஒரு தோற்றம் மட்டுமே. எனவே ஒரு செயலை நன்றாகச் செய்தேன் அல்லது நன்றாக செய்யவில்லை போன்ற இருவகை எண்ணங்களும் ஒரே மாதிரி இன்பத்தை மட்டுமே கொடுக்கும்.

*6. பலன்களை அனுபவிப்பவன்*

எடுத்த காரியம் வெற்றியில் முடியவேண்டும் என்று அனைவருக்கும் இருக்கும் எதிர்பார்ப்பு முற்றுணர்ந்தோர்களுக்கும் இருக்கும் என்றாலும் ஒருவேளை அது தோல்வியில் முடிந்தால் ஏற்படும் ஏமாற்றம் அவர்களுக்குத் துன்பத்தைக் கொடுக்காது. வெற்றி தோல்வி என்பது பூ தலை என்பதுபோல் மாறிமாறித்தான் வரும் என்பதை அவர்கள் தெளிவாக அறிவதால் அவர்கள் தோல்வியில் துவளுவதில்லை. தான் வேறு தன் மனம் வேறு என்பதைத் தெளிவாக அறிந்த காரணத்தால் அனுபவங்களைப் பெறும் ஜடமான மனதின் அலைபாய்தல் அவர்களைப் பாதிப்பதில்லை.

*7. அனுபவத்தின் காரணம்*

செயல்கள் செய்வதால் பலன் கிடைக்கிறது என்ற தவறான எண்ணம் ஞானிக்கு இல்லை என்பதால் வெற்றி தோல்விக்குக் காரணங்களை ஆராயமாட்டான். பூவா தலையா என்பதற்கு எவ்விதக் காரணமும் கிடையாது. பத்து தரம் தலை விழுந்த காரணத்தால் அடுத்தமுறை பூதான் விழும் என்று உறுதியாகச் சொல்ல முடியாது.

தனது திறமை, அதை பயன்படுத்தித் தான் செயல் செய்த விதம், தன்னைச்சுற்றி இருக்கும் மனிதர்களின் செயல்பாடுகள், சூழ்நிலைகள் ஆகியவைதான் தன் செயலின் முடிவைத் தீர்மானம் செய்கின்றன என்று நினைப்பவர்கள் தோல்விக்குக் காரணத்தைக் கண்டுபிடிக்கும் முயற்சி செய்து மேலதிகமாகத் துன்பமடைவர். பிராரப்த கர்மம்தான் துன்பங்களுக்குக் காரணம் என்ற விளக்கம் துன்பங்களின் ஆழத்தைக் குறைக்கலாமேதவிர அளவை குறைக்காது.

அனுபவம் ஏற்படுவதற்கு ஒரே காரணம் தனது மாயா சக்தியால் தான் படைத்த இந்த மாறும் உலகம் என்பதை அறிந்தவர்கள் வெற்றி தோல்வி என்பவை பூ தலை போன்று ஒரே அனுபவத்தின் இருபக்கங்கள் என்பதையும் அறிவர். உலகைத் துறந்து காட்டில் தவம் செய்தாலும் இன்ப துன்பங்கள் கலந்த அனுபவங்களைப் பெறுவதைத் தவிர்க்க முடியாது. அனுபவங்கள் வாழ்வின் இறுதிவரை தொடர்ந்து ஏற்பட்டுக்கொண்டுதான் இருக்கும் என்று அறிபவர்கள் துன்பப்படமாட்டார்கள்.

## வாழ்க்கைப் பயணத்தில் அறிவின் பங்கு

வாகனத்தைச் செலுத்தும் ஓட்டுனருக்கு வாகனம் செயல்படும் விதம், செல்ல வேண்டிய பாதை ஆகிய இரண்டு அறிவுகளும் இருப்பது அவசியம். புத்தி என்ற ஓட்டுனருக்குத் தான் செலுத்தும் மனம் என்ற வாகனத்தைப் பற்றிய அறிவு, உலகம் என்ற பாதையின் அறிவு ஆகிய இரண்டும் தேவை. வாழ்க்கை என்ற பயணத்தின் தரம் இந்த இரு அறிவுகளைப் பொறுத்துத்தான் அமையும்.

பற்றுடையோர்கள் உலகைப் பற்றிய அறிவும் இல்லாமல், மனதைப் பற்றிய அறிவும் இல்லாமல் செயல்படுவதால் அவர் களின் வாழ்வு துன்பமயமானதாகவே இருக்கும். உலகை மட்டும்

புரிந்துகொண்டு மனதைப் புரிந்துகொள்ளாத முக்திவிழைவோர்கள் என்றேனும் ஒரு நாள் துன்பம் முழுவதும் அகன்றுவிடும் என்ற எதிர்பார்ப்புடன் வாழ்வர். மாறும் உலகத்தின் மாற்றத்திற்கேற்ற வாறு மனமும் மாறும் என்பதைப் புரிந்து கொண்ட முற்று ணர்ந்தோர்களின் வாழ்க்கைப்பயணம் மட்டுமே துன்பம் கலவா இன்பமாக அமையும். எனவே உலகம் என்ற பாதை அனை வருக்கும் பொதுவானது என்றாலும் இவர்களது வாழ்க்கை பயணம் மட்டும் சிறந்திருக்கும்.

## முற்றுணர்ந்தோர்களின் வாழ்க்கை பயணத்தின் சிறப்பு

வாழ்வில் இன்பமும் துன்பமும் கலந்துதான் இருக்கும் என்ற அறிவுடன் செயல்படும் பற்றுடையோர் இன்பத்தையும் துன்பத் தையும் தனித்தனியே அனுபவிப்பர். ஆசையே துன்பத்திற்குக் காரணம் என்றறிந்த முக்திவிழைவோர்கள் ஆசைகளைக் குறைத்துத் துன்பங்களைத் தவிர்ப்பார்கள். தனது உண்மை உரு வான ஆனந்தத்தை அனுபவிப்பதற்குத்தான் இந்த மனித உடலும் மனமும் தனக்குக் கிடைத்துள்ளது என்பதை உணர்ந்த முற்றுணர்ந் தோர்கள் உலகப்பாதையில் எதிர்கொள்ளும் மேடு பள்ளம் ஆகிய இரண்டையும் துன்பம் கலவா இன்பத்துடன் அனுபவிப்பார்கள்.

*முதல் சிறப்பு: சாதனைத்திறன்*

தோல்வி என்ற ஒன்று இருந்தால் மட்டுமே வெற்றி என்ற சொல்லுக்குப் பொருள் இருக்கும். இவையிரண்டின் இணைபிரியா சுழற்சி நடனம்தான் வாழ்க்கை என்று அறியும் முற்றுணர்ந் தோர்கள் சாதனைகளைச் செய்யும் திறன் உடையவர்கள்.

பந்தை மெதுவாகத் தரையில் போட்டுவிட்டு அது மிக அதிக உயரம் எம்பிக் குதிக்கும் என்று எதிர்பார்ப்பது தவறு. பெரிய தோல்விக்குத் தயாராக இருந்தால் மட்டுமே சாதனைகளைச் செய்யமுடியும். வாழ்க்கைப்பயணத்தில் தங்களை எதிர்கொள்ளும் வாய்ப்புகளை முற்றுணர்ந்தோர் முழுமையாகப் பயன்படுத்தி யாராலும் செய்ய முடியாது என ஒதுக்கப்பட்ட நற்காரியங்களை மேற்கொள்வர்.

*இரண்டாம் சிறப்பு: சமூக நலன்*

இவ்வுலகம் முழுவதும் தன்னை ஆதாரமாகக்கொண்டு உருவானது என்ற தெளிவு முற்றுணர்ந்தோருக்கு இருப்பதால்

மற்றவர்கள் இன்பமாக வாழத் தேவையான உதவிகளை அவர்கள் சுயநலகலப்பின்றி செய்வர். இன்பமாக இருக்க இதைத்தான் செய்யவேண்டும் என்ற கட்டாயம் இல்லாத காரணத்தால் கல்வி, மருத்துவம், ஆன்மீகம் போன்ற துறைகளில் மக்களுக்கு உதவும் பணிகளைச் செய்வதன் மூலம் கிடைக்கும் அனுபவங்களை இவர்கள் ஆழமாகவும் இன்பமாகவும் அனுபவிப்பார்கள்.

*மூன்றாம் சிறப்பு: முழு ஈடுபாடுடன் பலனில் பற்றில்லாத செயல்*

வேண்டிய பொருள் கிடைக்கும் என்ற எதிர்பார்ப்புடன் கடமைகளைச் செய்பவர் பற்றுடையோர். முக்தியடையத் தேவை யான மனப்பக்குவத்தைப் பெறப் பலனில் பற்றில்லாமல் செயல்களைச் செய்பவர் முக்திவிழைவோர். செயல் செய்வ தையே இன்ப அனுபவமாக அறியும் முற்றுணர்ந்தோர்களால் மட்டுமே செயல்களைப் பற்றற்று அதே சமயம் ஆழ்ந்த ஈடு பாடுடன் செய்யமுடியும்.

பந்தயக்குதிரைமீது பத்தாயிரம் ரூபாய் கட்டி 'கமான்' 'கமான்' என்று ஆவேசத்துடன் கத்துபவர் ஏழையாக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. பணம் பற்றிய கவலை சிறிதுமில்லாத செல்வந்தராகக் கூட அவர் இருக்கலாம். தோல்வியடைய வாய்ப் பேயில்லை என்ற நிலையை அவர் விரும்பமாட்டார். வெற்றி கிடைக்குமா கிடைக்காதா என்ற திகில், வெற்றிபெறுவதைவிட முக்கியமானது. அதுபோலச் செய்யும் செயல்கள் அனைத்தையும் மனம் ஒன்றி சிறப்பாகச் செய்வது அதன் மூலம் கிடைக்கும் பலனைவிட முக்கியமானது என்பதை முற்றுணர்ந்தோர் மட்டுமே உணர்வர். எனவே இவர்களால் ஈடுபாடுடன் பற்றற்றுச் செயல்பட முடியும்.

பலனில் பற்று இல்லாத காரணத்தால் மன அழுத்தம், சோர்வு, எரிச்சல், கோபம், பயம் போன்ற உணர்வுகள் இவர்கள் மனதை வாட்டுவதில்லை. மேலும் எடுத்த காரியம் தீவிர முயற்சிக்குப் பின்னும் தோல்வியடைந்துவிட்டால் மற்றவர்கள் தங்களைப்பற்றி என்ன நினைப்பார்கள் என்ற அச்சமும் இவர்களுக்கு இருக்காது.

இகழ்ச்சி, அவதூறு, சமூகப் புறக்கணிப்பு போன்ற கொடு மைகளுக்கு இவர்கள் ஆளாக நேரிட்டாலும் அவையாவும் இறைவனைச் சேர்ந்தவை என்ற அறிவு 'எல்லாப்புகழும் இறைவ னுக்கே' என்ற வாக்கியத்தின் உண்மையான பொருளை அறிந்த

முற்றுணர்ந்தோர்களுக்கு இருக்கும். எனவே செய்யும் காரியங்களில் ஆழமாக ஈடுபட்டு அதே வேளையில் பலனில் சிறிதுகூட பற்றில்லாமல் சமூகநலனுக்காக சாதனைகளைப் படைக்க இவர்கள் எப்போதும் தயாராக இருப்பார்கள்.

*நான்காம் சிறப்பு: சிறப்பான ஆளுமை*

ஞானம் பெற்றவுடன் தோலின் நிறம் மாறிவிடாது. அதுபோல் மாறும் மனதின் ஆளுமையிலும் குறிப்பிடத்தக்க மாற்றம் எதையும் ஞானம் ஏற்படுத்தாது. சிறுவன் வளரும்பொழுது அவனது எலும்பின் அளவும், உறுதியும் அதிகரிப்பதுபோல் அனைத்து மனிதர்களின் மனதின் தன்மையும், உறுதியும் அவரவருக்குக் கிடைக்கும் அனுபவங்களின் அடிப்படையில் அதிகமாகிவரும். வேதம் படிப்பது, தியானம் செய்வது போன்ற அனுபவங்கள் மனதின் வளர்ச்சிக்குக் காரணமாக அமையுமே தவிர அதன் ஆளுமையை மாற்றிவிடாது. உடல், மனம் ஆகியவை ஆளுக்கு ஆள் மாறுபடுவது ஞானம் பெற்ற பின்னும் தொடரும். ஆயினும் ஞானிகளின் ஆளுமை சிறந்தது எனக் கூறப்படுவதற்குப் பின்வரும் தன்மைகள் காரணம்.

**கோபமின்மை:** குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயும் காத்தல் அரிது என்ற குறள் இந்தக் கருத்தை விளக்குகிறது. தன்னுடன் உறவாடும் அனைவரும் தனக்கு அனுபவங்களைக் கொடுக்கத் தன்னால் உருவாக்கப்பட்டவர்கள் என்பதை உணர்ந்தவர்கள் யார் மீதும் நீடித்த கோபம் கொள்வதில்லை.

**பொறாமையின்மை:** தான் விரும்பும் ஒன்று தனக்குக் கிடைத்ததைவிட சிறிது அதிகமாகத் தனக்குத் தெரிந்தவர் ஒருவருக்குக் கிடைத்தது என்ற செய்தியை அறியும்பொழுது ஏற்படும் உணர்வு பொறாமை. பொருள்களினால் நீடித்த இன்ப அனுபவத்தைக் கொடுக்க முடியாது என்பதைக் கிடைத்தற்கரிய ஞானத்தைப் பெற்றவர்கள் அறிவர். எனவே அவர்கள் இந்த உணர்வையும் ஆனந்தமாக அனுபவிப்பர்.

**பயமின்மை:** பயணங்கள் முடிவதில்லை என்பதையும் பயணம்தான் குறிக்கோள் என்பதையும் அறிந்தவர்கள் எதிர்காலம் என்ற கற்பனைக்குப் பயப்படுவதில்லை.

**திருப்தி:** ஏதோ ஒரு குறை இருக்கிறது என்ற நிலை அனைத்து மக்களையும் வாட்டிக்கொண்டேயிருக்கும். தான் பூரணமானவன்

என்று அறிந்தவர்கள் தாங்கள் செய்யும் செயலிலும் அனுபவிக்கும் பலனிலும் பூரணத்துவத்தை எதிர்பார்க்கமாட்டார்கள்.

## சாராம்சம்

*உலகம் நமது உல்லாசத்திற்காக உருவாக்கப் பட்டது. அதில் துன்பம் இருப்பதாக நினைப்பதற்கு நமது அறிவின்மை மட்டுமே காரணம். இரண்டு ரூபாய் பேனா தொலைந்துவிட்டது என்று இருபது வயது வாலிபன் அழுதால் அவன் மனவளர்ச்சி குன்றியவன் என்று பட்டம் கொடுப்பவர்கள் தாங்கள் துன்பபடும்பொழுது தங்கள் அறிவு போதுமானதா என்று சுயசோதனை செய்துகொள்வதில்லை. மேலும் வாழ்வு இன்பமும் துன்பமும் கலந்ததுதான் என்று தவறாக முடிவெடுத்துவிட்டுத் துன்பக் கலப்பில்லாமல் எப்பொழுதும் இன்பமாக வாழ்வது சாத்தியம் என்று வேதத்தை ஆதாரமாகக் காட்டி யாரேனும் கூறினால் அவர் ஏதோ உளறுகிறார் என்றும் தீர்மானித்துவிடுவார்கள். இவர்கள் வாழ்வில் துன்பம்தான் அதிகமிருக்கும்.*

*அறிவை வளர்த்து அதன் மூலம் பொருளாதார வசதிகளை அதிகப்படுத்திக்கொண்ட பின் கூடத் துன்பங்களைத் தவிர்க்க முடியவில்லை என்பதை உணர்ந்து தங்கள் அறிவை வேதத்தைப் படிப்பதன் மூலம் அதிகப் படுத்திக்கொள்பவர்களால் மட்டுமே தங்கள் வாழ்க்கைப் பயணம் முழுவதையும் இன்பமாக அமைத்துக்கொள்ள முடியும்.*

*அனுபவிக்கப்படும் பொருள், அனுபவிப்பவன், அனுபவம் ஆகிய மூன்றின் தன்மைகளை முழுவதுமாக அறிந்து முற்றுணர்ந்தோனாக இவர்கள் மாறியபின் இவர்களது அனுபவங்கள் அனைத்தும் ஆழமாகவும் இன்பமாகவும் அமையும்.*

## பயிற்சிக்காக

1. அறிவின் திறத்தைப்பொறுத்துத்தான் வாழ்வின் தரம் அமையும் என்பதை விளக்கக் கொடுக்கப்பட்ட ஏழு கருத்துக்கள் யாவை?

2. வாழ்க்கைப்பயணத்தில் அறிவின் பங்கு என்ன?

3. முற்றுணர்ந்தோர்களின் வாழ்க்கைப்பயணத்தின் நான்கு சிறப்புகள் யாவை?

## சுயசிந்தனைக்காக

❖ *தோல்வி வெற்றியின் படிக்கட்டு என்ற வர்ணனையை இந்தப் பாடத்தில் விளக்கப்பட்ட சுழற்சி நடனத்துடன் ஒப்பிட்டு ஆராய்க.*

❖ *'எல்லாப்புகழும் இறைவனுக்கே' என்பதன் பொருளை ஆராய்க.*



172

# பயணங்களின் முடிவு

**அத்தியாயம் : 4 ● பாதம் : 2 ● சூத்திரம் : 504 - 507**

**ப**ரமனை அறிந்தவன் பரமனாகவே ஆகிவிடுவான் எனினும் மற்றவர்களைப்போல் அவனின் வாழ்க்கைப்பயணமும் மரணத்தில் முடிவடைந்துவிடும் என்ற கருத்தைக் கூறி உடலும் மனமும் உள்ளவரை ஆனந்த அனுபவங்களை மட்டுமே பெறுவதற்கு ஞானம் எவ்வாறு உதவுகிறது என்பதை இந்தப் பாடம் விளக்குகிறது.

பிறப்பு, இறப்பு, மீண்டும் பிறப்பு என்ற சுழற்சி தொடர்கிறது என்ற நோக்கில் பயணங்கள் முடிவதில்லை என்ற கருத்து கூறப்பட்டது. ஆனால் ஒரு குறிப்பிட்ட உடலின் வாழ்க்கைப் பயணம் முடிந்துவிடும். அலைகள் ஓய்வதில்லை என்பது உண்மையென்றாலும் ஒரு குறிப்பிட்ட அலை ஓய்ந்துவிடும்.

மனிதர்கள் அனைவரும் வந்துபோகும் அலைகளைப் போன்றவர்கள். பிள்ளைகள் வடிவில் பெற்றோர்கள் தொடர்ந்து வாழ்ந்தாலும் மரணம் ஒரு தனிமனிதனின் வாழ்க்கைப்பயணத்தின் முற்றுப்புள்ளிதான். நான் பரமன் என்ற அறிவு நான் ஒரு தனி மனிதன் என்ற தவறான எண்ணத்தை முற்றுணர்ந்தோரின் மனதிலிருந்து அகற்றிவிடுவதால் அவர்கள் வாழ்வில் துன்பம் மறைந்துவிடும். ஆனால் இந்த அறிவு அவர்களின் உடலையும் மனதையும் அழிவிலிருந்து காப்பாற்றிவிடாது.

தான் தொடர்ந்து மாறும் ஒரு உருவத்தால் வரையறுக்கப்பட்டு வந்துபோகின்ற அலையைப்போன்றவன் என்ற அறிவுடன் வாழ்பவர்கள் பற்றுடையோர்கள். தான் பரந்த கடலின் ஒரு பகுதி என்று நினைப்பவர்கள் முக்திவிழைவோர்கள். தான் நீர் என்று

அறிபவர்கள் முற்றுணர்ந்தோர்கள். அலையைக் கடலின் ஒரு பகுதியாகவோ, நீராகவோ அறிவதால் அலையில் எந்த மாற்றமும் இருக்காது. அதுபோலத் தான் யார் என்ற அறிவு, அறியாமையால் விளையும் துன்பங்களைத் தவிர்க்க உதவுமே தவிர உண்மை நிலையை மாற்ற உதவாது. அழியாத பரமன் நான் என்ற ஆழமான அறிவு உடலும் மனமும் மரணத்தில் மறையும்வரை இன்ப அனுபவங்களை பெற உதவும் என்பதால் இந்த ஆழமான அறிவைக் கூடியவிரைவில் பெறுவது அவசியம்.

சுக்ல யஜுர் வேதத்தின் சாந்தி பாடம் மேலெழுந்தவாரியான அறிவுக்கும் ஆழ்ந்த அறிவுக்கும் உள்ள வித்தியாசத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறது. *"அந்தப் பரமாத்மா பூரணமானவன். குறையுடன் இருப்பவனாகக் காட்சியளிக்கும் இந்த ஜீவாத்மாவும் பூரணமானவன். பூரணமான அந்தப் பரமாத்மாவிலிருந்து பூரணமில்லாதவனாகக் காணப்படும் இந்த ஜீவாத்மா உருவானவன் என்ற மேலெழுந்தவாரியான அறிவை நீக்கினால் பூரணமான இரண்டற்ற ஆத்மா மட்டுமே எஞ்சியிருப்பது தெரியவரும்."*

### மேலெழுந்தவாரியான அறிவு - நான் அலை

அலை என்பது வெறும் தோற்றம். நீர் என்ற பொருள் ஒரு குறிப்பிட்ட வடிவில் தோன்றித் தொடர்ந்து மாறி முடிவில் மறைகிறது. நீரின் மேல் கவனம் செலுத்தாமல் வெறும் வடிவத்தை மட்டுமே கவனிப்பது மேலெழுந்தவாரியான அறிவு. அதுபோல் தோன்றுதல், பிறத்தல், வளர்தல், முதிர்தல், மங்குதல், மறைதல் போன்ற ஆறு மாறுதல்களை அடைவது பரமன் என்பதை உணராமல், வடிவங்களுக்கு சோமன், ராமன் என்ற பெயர்களை கொடுத்து அவர்களை தனித்தனிமனிதர்களாக பார்ப்பது மேலெழுந்தவாரியான அறிவின் அடிப்படையில் ஏற்படும் அனுபவம்.

ஆறு மாறுதல்களில் வளர்தல் என்ற ஒன்றுதான் இன்பம் என்று நினைப்பதால் நான் உடல் என்ற அறிவுடன் செயல்படும் மனிதர்கள் இளமையில் துன்பம் கலந்த இன்பத்தையும் முதுமையில் இன்பம் கலவா துன்பத்தையும் அனுபவிப்பர்.

### ஆராய்ந்தவர்களின் அறிவு - நான் கடல்

மாறும் உடலும் மனதும் நான் அல்ல என்ற அறிவு ஏற்பட்டதும் வேதம் தரும் கருத்துக்களை ஆராய்ந்து தான் கடவுளின் அங்கம் என்று அறிபவர்களும் வடிவத்திற்கு முக்கியத்துவம்

கொடுப்பதால் துன்பத்தைத் தவிர்க்க முடியாது. கடல், அலையை விட மிகவும் பெரியது என்றாலும் அதுவும் வெறும் வடிவம் மட்டுமே.கை விரல்கள் அனைத்தும் ஒரே உடலைச் சேர்ந்தவை என்ற அறிவை அடைந்த பின்னும் சிறுவிரலுக்குத் தான் சிறியவன் என்ற தாழ்வு மனப்பான்மை மறையாது. கடவுளும் ஒரு வடிவம் என்பதால் கடவுளின் ஆதாரமான பொருளை அறிய முயல வேண்டும்.

### ஆழமான அறிவு - நான் நீர்

வடிவங்களுக்கு அலை, கடல் என்று பெயரிட்டு அவற்றின் ஆதாரமான பொருள் நீர் என்பதை அறியாமல் செயல்படும்வரை ஆழமான அறிவு ஏற்படாது. தான் யார் என்பதைக் குருவின் துணையுடன் ஆராய்ந்து அறிபவர்கள் அந்த ஆழமான அறிவில் நிலைக்கும்பொழுது அனைத்து நிகழ்வுகளையும் இன்பமாக அனுபவிப்பர்.

### அறிவும் உண்மை நிலையும்

அறிவில் குறைந்தவனை மிருகம் என்றும், ஞானம் உள்ள வரைக் கடவுள் என்றும் ஒரு பேச்சுக்குச் சொல்லலாமே தவிர மனித உடலுடன் பிறந்தவர்கள் அனைவரும் மனிதர்கள்தான். கடவுளின் அவதாரம் அல்லது கடவுள் என்று கருதப்படும் ராமர், கிருஷ்ணர், ஏசு, சாய்பாபா போன்றவர்கள் சாதாரண மனிதர்களே. உடல், மனம் ஆகியவற்றின் அடிப்படையில் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பாகுபாடு செய்யலாமே தவிர ஒருவனை மனிதனே அல்ல என்று முடிவு செய்ய முடியாது.

### அறிவும் அனுபவமும்

அறிவு ஏற்பட அனுபவங்கள் காரணமாக அமைகின்றன. ஐந்து புலன்களைப் பயன்படுத்தி உலகிலிருந்து பெறும் அனுபவங்கள் எதுவும் இல்லாமல் எந்த அறிவும் ஏற்படாது. அனுபவங்கள்தான் அறிவுக்குக் காரணமாயிருந்தாலும் அனுபவங் களிலிருந்து சரியான அறிவு மட்டுமே ஏற்படும் என்று சொல்ல முடியாது. சூரியன் பூமியைச் சுற்றிவருகிறது என்று அனுபவம் தரும் தவறான அறிவைத் தீவிரமாக ஆய்வதன் மூலம் சரியான அறிவை அடையலாம். ஆராய்ச்சி செய்வதும் ஒரு அனுபவமே. எனவே சரியான அறிவு, தவறான அறிவு ஆகிய இரண்டும் அனுபவங்கள் மூலமாகவே கிடைக்கின்றன.

உள்ளதை உள்ளபடி அறிவது மட்டுமே சரியான அறிவு. ஒரே உலகம் மனிதருக்கு மனிதர் வெவ்வேறு அனுபவங்களைத் தருவ தால் அவற்றிலிருந்து அவர்கள் பெறும் அறிவும் வேறுபட்டி ருக்கும். சரியான அறிவு ஒரு சிலருக்குத்தான் ஏற்படும்.

அனுபவங்களின் தரத்தை அறிவு தீர்மானிக்கிறது. பிறப்பி லிருந்து இறப்பு வரை அனைவருக்கும் அனுபவங்கள் தொடர்ந்து ஏற்பட்டுக்கொண்டுதான் இருக்கும். ஆப்பிள் கீழேவிழுவதை பார்க்கும் அனுபவம் அனைவருக்கும் ஏற்பட்டாலும் புவியீர்ப்பு விசை பற்றிய அறிவு அந்த அனுபவத்தை ஆராய்பவர்களுக்கு மட்டுமே ஏற்படும். பெறும் அனுபவங்களைத் தொடர்ந்து ஆராய்ந்து அதன் மூலம் அறிவை வளர்த்துக்கொள்பவர்களால் மட்டுமே அனுபவங்களின் மூலம் சரியான அறிவை அடைய முடி யும். சரியான அறிவு அனுபவங்களின் தரத்தை உயர்த்துகிறது.

மாணவனின் அறிவின் தரம் ஆசிரியரால் கண்டிக்கப்படும் அனுபவத்தின் தரத்தைத் தீர்மானிக்கிறது. தன் நலம் விரும்பியே ஆசிரியர் தன்னைக் கண்டிக்கிறார் என்ற சரியான அறிவை உடைய மாணவன் அந்த அனுபவத்தை விரும்பி ஏற்று வாழ்வில் முன்னேறுவான். அவ்வாறில்லாமல் ஆசிரியர் தன்னை அவமான படுத்த மற்றவர்கள் முன் தன்னைக் கண்டிக்கிறார் என்ற தவறான அறிவை உடைய மாணவன் அந்த அனுபவத்தை வெறுத்து மேலும் தவறுகள் செய்வான்.

மேலெழுந்தவாரியான அறிவுடன் செயல்படுபவர்களின் அனுபவங்கள் துன்பம் நிறைந்ததாகவும், மிதமான அறிவு உள்ளவர்களின் அனுபவங்கள் இன்பம், துன்பம் ஆகிய இரண்டும் கலந்தவையாகவும் ஆழ்ந்த அறிவை உடையவர்களின் அனுப வங்கள் அனைத்தும் துன்பம் கலவா இன்பமாகவும் அமையும்.

### அனுபவங்கள் தரும் அறிவு

உலகில் உள்ள பொருள்களைப் புலன்கள் வழியே அனுப வித்து அந்த அனுபவங்கள் மூலம் அறிவை நாம் பெறுகிறோம். இல்லாத உலகை இருப்பதாகப் புலன்கள் நமக்குக் காட்டுகின்றன என்று அணுவியல் ஆராய்ச்சி முடிவுகள் தெரிவிக்கின்றன. எனவே பெரும்பாலான மக்கள் தாங்கள் பெறும் அனுபவங்களை ஆராயாமல் உலகம் உண்மையில் இருக்கிறது என்ற தவறான எண்ணத்துடன் வாழ்கிறார்கள். வேதம் தரும் உண்மைகளின் ஆதாரத்துடன் அனுபவங்களை ஆய்ந்து சரியான அறிவைப்

பெறுபவர்கள் முக்திவிழைவோர். ஆசிரியரிடம் முறையாக வேதம் பயிலாமல் அனுபவங்களிலிருந்து நேரடியாகச் சரியான அறிவைப் பெறுபவர்கள் தீர்க்கதரிசிகள்.

### நான்கு குழந்தைகள்

மாறுவேடத்தில் இருப்பவள் தன் தாய்தான் என்பதை அவளைப் பார்த்தவுடன் அறிந்துகொள்ளும் குழந்தை இன்ப அனுபவத்தை மட்டுமே பெறும். அவள் வேறுயாரோ என்று எண்ணி முதலில் பயந்தாலும், அவள் தன்னுடன் பழகும் விதத்தை ஆராய்ந்து பின் அவளைத் தன் தாய் என்று அடையாளம் கண்டுகொண்ட குழந்தை தன் சரியான அறிவில் நிலை பெற்றபின் இன்ப அனுபவத்தை மட்டுமே பெறும். அவள் தன் தாய் என்பதைத் தெளிவாக அறிந்தபின்னும் அவள் மாறு வேடத்தில் இருக்கும்வரை அவள் அருகே செல்லப்பயப்படும் குழந்தை துன்பம் கலந்த இன்ப அனுபவங்களைப் பெறும். நான்தான் உன் அம்மா என்று அவள் எவ்வளவுதான் விளக்கம் சொன்னாலும் உண்மையை அறிந்துகொள்ளும் திறன் இல்லாத குழந்தை தொடர்ந்து பயத்தில் அழும். அவள் தன் மாறுவேடத்தைக் கலைத்து சுயஉருவத்தைக் குழந்தைக்குக் காட்டினால் மட்டுமே அதன் அழுகை நிற்கும்.

உலகம் என்ற மாறுவேடத்தில் இருப்பது பரமன்தான் என்ற உண்மையை, பார்த்ததும் அறியும் திறன் இரமண மஹரிஷி போன்ற ஒரு சில மனிதர்களுக்கு மட்டுமே வாய்க்கும். எவ்வித முயற்சியும் செய்யாமல் புலன்கள் காட்டும் பொய்யான தோற்றத்தை விலக்கி உண்மையான பரமனைப் பார்ப்பவர்கள் தீர்க்கதரிசிகள்.

உலகம் என்ற மாறுவேடத்தில் இருப்பது பரமன் என்ற உண்மையை வேதம் படித்து அறிந்துகொண்ட முக்திவிழைவோர்கள் உண்மையை அறிந்த பின்னும் உலகின் மாறுவேடம் கலைந்து பரமனை நேரடியாக அனுபவிக்க வேண்டுமென்று காத்துக் கொண்டு இருப்பார்கள். அவ்வாறில்லாமல் தங்களது சரியான அறிவில் நிலைத்து நிற்கும் முற்றுணர்ந்தோர்கள் தாய் மாறுவேஷத்தைக் கலைப்பதுபோல் பரமனால் தன் சுய உருவத்தைக் காட்ட முடியாது என்பதையும் அறிவதனால் உயிருடன் இருக்கும்வரை உலகை முழுமையான இன்பத்துடன் அனுபவிப்பர்.

காணும் உலகம் மட்டுமே இருக்கிறது என்றும் கண்ணுக்குத் தெரியாத பரமன் இல்லை என்றும் உறுதியாக இருப்பவர்கள் பற்றுடையோர். புலன்கள் அறிவிக்கும் பொய்யான தோற்றங்களை உண்மை என நம்பும் இவர்கள் உலகிலிருந்து வேறுபட்ட ஒரு தனிமனிதன் நான் என்ற மேலெழுந்தவாரியான அறிவுடன் இருப்பார்கள்.

## தீர்க்கதரிசிகளும் மற்றவர்களும்

தீர்க்கமாகப் பார்ப்பதன் மூலம் ஆழமான அறிவைப் பெறு பவர்கள் தீர்க்கதரிசிகள். எதிர்காலம் மனதின் கற்பனை என்பதை அறியும் இவர்கள் அதில் நடக்கப்போகும் நிகழ்வுகளை முன் கூட்டியே ஆரூடம் சொல்வதில்லை. தற்பொழுது இல்லாத ஆனந்தம் எதிர்காலத்திலாவது கிடைக்குமா என்று ஏங்கும் பற்றுணர்ந்தோர்கள் தீர்க்கதரிசிகளைச் சந்திக்க நேர்ந்தால் அவர்கள் கூறும் உண்மையை அறிய முற்படாமல் அவர்கள் மூலம் தங்களது துயரங்களை மாற்ற முயல்வார்கள். இதனால் தீர்க்கதரிசிகளைப் பின்பற்றுபவர்கள் பலர் இருந்தாலும் அவர்களில் ஒரு சிலர்தான் தாங்களும் உண்மையை அறிந்துகொள்ள வேண்டும் என்று முயற்சி செய்யும் முக்திவிழை வோர்களாக மாறுவர். தாங்கள் பெறும் இன்பஅனுபவத்தை மற்றவர்களும் பெறவேண்டும் என்ற நல்லெண்ணம் தீர்க்க தரிசிகளுக்கு இருந்தாலும் அவர்களின் உபதேசத்தைக் கேட்பதனால் முக்தி விழைவோருக்கு எவ்விதப் பயனும் கிடைக்காது. தங்கள் அனுபவத்தின் மூலம் மட்டுமே உண்மையை உணர்ந்த காரணத்தால் ஏன் மற்றவர்களால் உலகைச் சரியாகப் பார்க்க முடிவதில்லை என்பதைத் தீர்க்கதரிசிகளால் புரிந்து கொள்ள முடியாது. எனவே தீர்க்கதரிசிகளின் சீடர்களாக இல்லாமல் முற்றுணர்ந்தோர்களிடம் பயிலும் மாணவர்களாக மாறும் முக்திவிழைவோர்கள் மட்டுமே உண்மையை அறியும் வாய்ப்பைப் பெறுவார்கள்.

தீர்க்கதரிசியும் மற்றவர்களைப்போன்ற சாதாரண மனிதன்தான். ஆனால் அவனின் அசாதாரண அனுபவம் மற்றவர் கண்களில் அவனைக் கடவுளின் அவதாரமாகக் காண்பிக்கிறது. உலகம் தங்களின் துன்பத்திற்குக் காரணம் என எண்ணுபவர்களுக்கு உலகே மாயை என்பதை அனுபவத்தில் அறிந்த தீர்க்கதரிசிகளால் உதவ முடியாது. வெற்றி தோல்வி இரண்டும் மாறி மாறி ஏற்படும் என்ற உண்மையை உணராமல் தீர்க்கதரிசிகளைத் தரிசிப்பதன் மூலம் தங்கள் வாழ்வை இன்பமயமானதாக மாற்றிவிடலாம் என

நினைப்பவர்கள் ஏமாற்றத்திற்கு ஆளாவர். மற்றவர்களின் துன்பத்தை மாற்றும் அசாதாரண சக்தி தீர்க்கதரிசி மூலம் வெளிப் பட்டாலும் கூட அந்தச் சக்தியால் யாருக்கும் நிலையான இன்பம் ஏற்பட வாய்ப்பே கிடையாது.

### தீர்க்கதரிசிகளும் முற்றுணர்ந்தோர்களும்

முறையாக ஆசிரியரிடம் வேதத்தைப் பயின்று, ''இருப்பது பரமன்மட்டும்தான்'' என்ற அறிவை அடைந்தவர்கள் முற்றுணர்ந் தோர்கள். எவ்வித முயற்சியும் இல்லாமல், ''நான் பரமன்'' என்பதை அனுபவத்தின் மூலம் உணர்ந்தவர்கள் தீர்க்கதரிசிகள். இவர்கள் இருவருக்கிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்ந்து, துன்பம் கலவா இன்ப அனுபவங்களை வாழ்நாள் முழுவதும் பெறும் விதத்தை அறியலாம்.

1. **அறிவில் ஒற்றுமை:** அறிவை அடைந்தவிதத்தில் வேறுபாடு இருந்தாலும், இருவருக்கும் இருக்கும் இறுதியான அறிவில் இம்மியளவும் வித்தியாசம் இல்லை. எனவே ஆன்மீக அறிவின் அறிவின் அடிப்படையில் இருவருக்கிடையே உயர்வு தாழ்வு கிடையாது.

2. **அனுபவத்தில் வேற்றுமை:** மனிதருக்கு மனிதர் அனுபவங்கள் வேறுபடும். எனவே முற்றுணர்ந்தோர்களின் அனுபவம் தீர்க்கதரிசி களின் அனுபவத்திலிருந்து வேறுபட்டிருக்கும். அனுபவம் என்பது மனதில் நிகழும் எண்ணங்களின் மாற்றம். மனம் என்பதே இருப்பதுபோல் தோன்றும் மாயை என்பதால் அனுபவங்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பதில் அர்த்தம் எதுவுமில்லை. மேலும் மனதில் என்ன எண்ணங்கள் எப்படித் தோன்றும் என்பதை யாராலும் நிர்ணயிக்க முடியாது. உலகம் முழுவதையும் தன் உடலாக உணரும் அனுபவம் திடீரென ஏற்பட்டகாரணத்தினால் ஒரு சாதாரண மனிதர் தீர்க்கதரிசியாக மாறினார் என்பது உண்மையானாலும் அது போன்ற அனுபவம் அவருக்கு மீண்டும் ஏற்படும் என்பதற்கு எவ்வித உத்திரவாதமும் இல்லை. எனவே மனதில் தோன்றும் அனுபவங்களின் அடிப்படையில் யாரையும் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்று பிரிக்கமுடியாது.

3. **இருவரின் இடையே வேற்றுமை:** 'உலகே நான்', 'காலம் பொய்' முதலிய அனுபவங்களைப் பெறாத காரணத்தினால் முற்றுணர்ந்தோர்களை தீர்க்கதரிசிகள் என்று சொல்லமுடியாது.

மற்றவர்களின் நிலையைப் புரிந்துகொண்டு முக்தியை நோக்கி அவர்களை வழிநடத்தத் தேவையான அறிவு இல்லாத காரணத்தால் தீர்க்க தரிசிகள் முற்றுணர்ந்தோர்கள் அல்ல.

ஒருவன் பல பெண்களுடன் ஒரே சமயத்தில் உறவாடுவது தவறு என்று எண்ணும் மக்களால் இராச லீலையின் அர்த்தத்தைப் புரிந்துகொள்ளவே முடியாது. 'ஒவ்வொரு கோபிகையுடனும் ஒரே கோபாலன் நடனமாடும் காட்சி' வாழ்வு இன்பமயமானது என்று காட்டுகிறது என்பதைத் தீர்க்கதரிசிகளும் முற்றுணர்ந்தோர்களும் அறிவர். தங்கள் இராச லீலை அனுபவத்தை மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்வதன்மூலம் தீர்க்கதரிசிகளால் அவர்களுக்கு உதவ முடியாது. முற்றுணர்ந்தோர்களால் வேதம் படித்து முடித்த முக்திவிழைவோர்களுக்கு இராசலீலையை விளக்கி அவர்களும் அந்த அனுபவத்தைபெறும் வாய்ப்பை ஏற்படுத்தித்தரமுடியும்.

ஒவ்வொரு மனிதனும் உண்மையில் பரமனே என்பதை ஒரே கிருஷ்ணன் மூலமும் உலகம் என்ற மாயக்கன்னியை கோபிகையாக சித்தரித்து வாழ்வு முழுவதும் இன்ப அனுபவம் மட்டுமே பெற அனைவராலும் முடியும் என்ற கருத்தை இராச லீலை தெரிவிக்கிறது. தன் உடல். மனம் உட்பட்ட உலகம் என்ற கோபிகை, பரமனான தன்னால் தன்னுடைய இன்பஅனுபவத் திற்காகப் படைக்கப்பட்டவள் என்பதை அறிந்தவர்கள் ஒவ்வொரு கோபிகையும் மற்றக் கோபிகைகளிலிருந்து முற்றிலும் வேறு பட்டவள் என்றும் அறிவர். தனது இன்பத்திற்கு மற்றவர்தான் காரணம் என்ற அறியாமையுடன் காதலர்கள் இருவர் ஒருவரை ஒருவர் சார்ந்து இருப்பார்கள். உலகம் என்ற காதலியுடன் உறவாடும்பொழுது தான் பெறும் இன்ப அனுபவம் தன்னிட மிருந்துதான் வருகிறது என்பதை அறிபவர்கள் மற்றவர்களது கோபி கையை பார்த்துப் பொறாமையோ ஏக்கமோ அடையமாட்டார்கள். தனது கோபிகையுடன் என்றும் இன்பமாக இருக்க முற்றுணர்ந் தோன், தீர்க்கதரிசி ஆகிய இருவரும் அறிவார்கள். காதலர்களின் கண்கள் காதலால் மூடப்பட்டுச் சுற்றியுள்ள மக்களின் உணர்வு களைப் புரிந்துகொள்ளும் சக்தியற்று இருப்பதுபோல் உலகின் மேல் உள்ள காதலில் மூழ்கிய தீர்க்கதரிசிககளால் மற்றவர்களுக்குத் தீர்க்கமாகப் பார்க்கும் சக்தி இல்லை என்பதை அறியமுடியாது. தங்களுக்கு இன்பம் மட்டுமே தரும் உலகம் மற்றவர்களை ஏன் துன்பப்படுத்துகிறது என்பதை ஆராய்ந்து அறிந்த முற்றுணர்ந் தோர்களால் மட்டுமே படிப்படியாகப் பயணம் செய்து முடிவில்

முக்தியடையும் வழியை முக்திவிழைவோர்களுக்கு காட்டித் தரமுடியும்.

உலகின் ஏதோ ஒரு மூலையில் இருக்கும் உல்லாசத்தீவில் இன்பமாக ஒரு வாரம் இருந்துவிட்டுத் திரும்பியவன் தன் இனிய அனுபவத்தை விவரித்தபின் அது எந்த இடம் அல்லது அங்கு எப்படிப் போவது என்ற விவரங்கள் தனக்குத் தெரியாது என்று கூறினால் அவனது இன்ப அனுபவங்களைக் கேட்டவர்கள் ஏக்கத்துடன் ஏமாற்றம் அடைவார்களே தவிர வேறு ஒரு பயனையும் அடைய மாட்டார்கள். அதுபோலத் தீர்க்கதரிசியைப் பின்பற்றுபவர்கள் தங்களுக்கும் முக்திகிடைக்காதா என்ற ஆதங்கம், அவரது வார்த்தைகளை முழுதும் புரிந்துகொள்ளமுடியவில்லையே என்ற இயலாமை ஆகியவற்றால் தொடர்ந்து பாதிக்கப்படுவார்களே தவிர முக்தியை நோக்கி முன்னேற மாட்டார்கள்.

**4. பயனில் வேற்றுமை:** முற்றுணர்ந்தோர்கள் மட்டுமே தீர்க்க தரிசியின் வார்த்தைகளை முழுவதும் புரிந்துகொள்ளக் கூடிய வர்கள். தங்கள் அறிவிற்கு எடுத்துக்காட்டாக விளங்கும் தீர்க்கதரிசி களை அவர்கள் மதிப்பார்கள். தங்களுக்கு ஏற்பட்ட அதே அனு பவம் எல்லோருக்கும் ஏற்பட வாய்ப்பில்லை என்பதை அறியாத தீர்க்கதரிசி முற்றுணர்ந்தோர்களின் அறிவு அனுபவமாக மாறினால் தான் முக்தி என்ற தவறான எண்ணத்துடன் அவர்களை முக்திய டைந்தோர்களாக ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்.

தீர்க்கதரிசிகளைப் பொறுத்தவரை மதகுருமார்கள் எங்கும் நிறைந்த கடவுளின் மேல் வெறும் நம்பிக்கையுடைவர்கள், முற்றுணர்ந்தோர்கள் கடவுளைபற்றிய புத்தக அறிவை மட்டும் உடையவர்கள், தாங்கள் மட்டும்தான் கடவுளை நேரடியாக அனுபவிப்பவர்கள். இவர்களின் இந்தத் தவறான மனப்பான்மை பலரைத் தவறான பாதைக்குத் திசைதிருப்பும். அனைவரும் இன்ப அனுபவத்தைப் பெறவேண்டும் என்ற நல்லெண்ணத்துடன் இவர்கள் செயல்பட்டாலும் இவர்களின் உபதேசங்களால் முற்றுணர்ந்தோர்களும் அவர்களது மாணவர்களாக இருக்கும் முக்தி விழைவோர்கள் மட்டுமே பயனைடைவார்கள்.

முக்திவிழைவோர்களின் மனம் தீர்க்கதரிசிகளின் உபதேசங் களால் கவரப்படும். ஆனால் அவர்களின் அறிவு கூடிய விரைவில் அவர்களை முற்றுணர்ந்தோர்களின் மாணவர்களாக மாற்றும். மனம் விரும்பும் அனுபவங்களைப் பெறச் சரியான அறிவை அடைய

வேண்டும் என்று உணர்பவர்கள் மட்டுமே விரைவில் முக்திய டைவார்கள்.

## முற்றுணர்ந்தோர்களின் இன்ப அனுபவங்கள்

எந்த ஒரு குறிப்பிட்ட அனுபவத்தையும் எதிர்பார்க்காமல் நிகழ்காலத்தில் மட்டுமே வாழும் முற்றுணர்ந்தோர்கள் அனைத்து நிகழ்வுகளையும் இன்பமாக அனுபவிப்பர். தான்தான் இன்பத்தின் ஒரே ஊற்று என்றறிந்த முற்றுணர்ந்தோர்கள் மாறும் உலகின் மாற்றங்கள் அனைத்தையும் அவை வேறுமாதிரி இருக்கவேண்டும் என்ற எதிர்பார்ப்பின்றி ஏற்றுக்கொள்வார்கள். உலகம் முழுவதற்கும் ஆதாரம் தான்தான் என்ற அவர்களின் அறிவு அவர்களின் வாழ் நாள் முழுவதும் இன்ப அனுபவங்களை மட்டுமே பெற அவர்களுக்கு உதவும்.

பற்றுடையோர்கள் தான்ஒரு தனிமனிதன் என்பதை ஆழமாக அறிவதுபோல் முற்றுடையோர்கள் தான் பரமன் என்ற ஆழமான அறிவுடன் செயல்படுவார்கள். தனக்கு அந்நியமாக எதையும் அவர்கள் பார்ப்பதில்லை என்பதால் அவர்கள் வாழ்நாள் முழு வதும் துன்பம் கலவா இன்பத்தை அனுபவிப்பார்கள்.

### சாராம்சம்

*புன்னகையும் நாணமும் இங்கிதப் பேச்சுக்களுமாக எங்கெல்லாம் ஒரு அந்நியமான பெண் உன்னுடன் நடந்து வருகிறாளோ அங்கெல்லாம் உனது சொர்க்கங்கள் என்ற வாசகம், உலகம் என்ற கோபிகையுடன் வலம் வரும் கோபாலன் நான்தான் என்பதை உணர்ந்தவர்களின் வாழ்வை விளக்கும். நான் பரமன் என்பதை அனுபவம் மூலம் அறிந்த தீர்க்கதரிசிகளும் என்னை ஆதாரமாக் கொண்டுதான் இந்த உலகம் இயங்குகிறது என்பதை அறிவுபூர்வமாக ஆராய்ந்து அறிந்த முற்றுணர்ந்தோர்களும் வாழ்வில் துன்பமடையமாட்டார்கள். இருவரும் எந்த ஒரு குறிப்பிட்ட அனுபவத்திற்காகவும் காத்திருக்கமாட்டார்கள். எதை அறிந்தால் அனைத்தையும் அறிந்ததாகுமோ அந்த அறிவைப் பெற்றுவிட்ட காரணத்தால் மேலும் எதையும் அறிந்துகொள்ளும் அவசியம் ஆழ்ந்த அறிவைப் பெற்ற முற்றுணர்ந்தோர்களுக்கு இல்லை. மரணத்தில் மறையப்*

*போகும் உடலும் மனமும் இயங்கும்வரை கிடைக்கும் அனுபவங்கள் அனைத்தையும் இன்பமாக ஏற்கத் தேவையான ஆழ்ந்த அறிவு இவர்களிடம் இருக்கும்.*

**பயிற்சிக்காக**

1. மேலெழுந்தவாரியான அறிவிற்கும் ஆழமான அறிவிற்கும் உள்ள வித்தியாசம் என்ன?
2. அறிவிற்கும் அனுபவத்திற்கும் உள்ள உறவு என்ன?
3. நான்கு குழந்தைகளாக வர்ணிக்கப்பட்ட மனிதர்கள் யார் யார்?

**சுயசிந்தனைக்காக**

- *முற்றுணர்ந்தோர்கள் தீர்க்கதரிசியின் உபதேசங்களிலிருந்து எந்த வகையில் பயனடைவார்கள்?*
- *சாகாவரம் , மீண்டும் பிறவாவரம் ஆகியவற்றின் சரியான பொருளை ஆராய்க.*
- *பயணங்கள் முடிந்துவிடும் என்ற தலைப்பின் முக்கிய நோக்கம் என்ன?*
- *மனித உடலுடன் பிறந்தவர்கள் அனைவரும் மனிதர்களே என்ற கருத்தையும் ஒருவர் மற்றவரைப்போல் இருக்க முடியாது என்ற கருத்தையும் ஒப்பிட்டு ஆராய்க.*
- *ஓம் பூர்ணமதஹ பூர்ணமிதம் என்று தொடங்கும் சாந்தி பாடத்தின் பொருளை ஆராய்க.*
- *ஒரே உலகம் மனிதருக்கு மனிதர் வெவ்வேறு அனுபவங்களைத் தருவதன் காரணம் என்ன?*
- *தீர்க்கதரிசிகளுக்கு அற்புதங்களைச் செய்யும் சக்தி இருக்குமா?*



173

# ஞானியின் பிராணன் மரணத்தில் பிரிவதில்லை

**அத்தியாயம் : 4 ● பாதம் : 2 ● சூத்திரம் : 508 - 510**

*''எவன் ஆசைகளின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்று விடுகிறானோ அவனது பிராணன் பிரிவதில்லை''* என்ற பிருஹதாரண்ய மந்திரத்தின் (4.4.6) பொருளை ஞானியின் செயல்களின் அடிப்படையில் இந்தப் பாடம் ஆராய்கிறது.

ஞானியும் மரணமடைவான் என்றாலும் ஞானம் பெற்றவுடனேயே அவனது பிராணன் தனது தனித்தன்மையை இழந்து இறைவனது இயக்கத்துடன் ஒன்றிவிடுவதால் மரணத்தின்பொழுது அது பிரிவதில்லை. பிரஸ்ன உபநிஷதத்தில் 'எல்லாம் எங்கிருந்து வந்தன?' என்ற கபந்தியின் முதல் கேள்விக்குப் பிப்பலாத முனிவர் கூறிய பதிலிலிருந்து பிராணன் பற்றிய பின்வரும் விளக்கங்கள் நமக்குக் கிடைக்கின்றன. ஆகாயம், பிராணன் ஆகிய இரண்டிலிருந்தே பிரபஞ்சம் முழுவதும் தோற்றுவிக்கப்பட்டது. ஆகாயத்திலிருந்து காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகிய பஞ்சபூதங்களும் அவற்றிலிருந்து ஜடப்பொருள்களும் உருவாக்கப்பட்டன. அந்தக் கலவையில் பிராணன் சேர்ந்தவுடன் இயக்கம் பிறந்தது. புவியீர்ப்பு சக்தி, காந்தச் சக்தி போன்றவையும் உயிரினங்களின் செயல்களுக்கும் பிராணனே ஆதாரம். ஆக, பூமியின் சுழற்சி முதல் தனிமனித உடலின் இயக்கம், இரத்த ஓட்டம், எண்ணங்களின் ஓட்டம் வரை அனைத்தும் பிராணனின் வெவ்வேறு நிலைகள் என்று விவேகானந்தர் விளக்கம் அளிக்கிறார். (ஞானதீபம் 2.31-32).

'பிராணன் வெளியேறிவிட்டால் இயக்கம் முழுவதும் நின்றுவிடும்' என்ற உண்மையை ஒரு கதைவடிவில் பிப்பலாத முனிவர்

பார்க்கவனின் இரண்டாவது கேள்விக்கான பதிலாகக் கூறினார். ‘இத்தகைய புகழ்வாய்ந்த பிராணன் எவ்வாறு செயல்படுகிறது?’ என்ற கௌசல்யனின் மூன்றாவது கேள்விக்கு ‘மனிதனும் அவனது நிழலும் போன்று ஆன்மாவின் நிழலாகப் பிராணன் செயல்படுகிறது’ என்று பிப்பலாத முனிவர் பதிலளித்தார். எனவே தனிமனிதனின் செயல்கள் உட்பட்ட பிரபஞ்ச இயக்கம் முழு வதற்கும் பரமனின் நிழலான பிராணனே காரணம்.

எப்படி ஒரு மன்னன் அலுவலர்களை நியமித்து ‘இந்தக் கிராமங்களை ஆளுங்கள்’ என்று கூறுகிறானோ அது போல ஐந்து இந்திரியங்கள் மூலம் பிராணன் உடலை இயக்குகிறது. ஞான சக்தி, இச்சா சக்தி, கிரியா சக்தி என்ற மூன்று சக்திகளின் வடிவில் பிராணன் மனிதனின் அனைத்துச் செயல்களுக்கும் காரணமாக அமைகிறது.

ஞான சக்தி வெளியுலகப்பொருள்களைப் பற்றிய அறிவைப் புலன்கள் மூலம் மனதில் ஏற்படுத்துகிறது. இச்சா சக்தி அறிந்த பொருள்களில் சிலவற்றில் ஆசை வைக்க தூண்டுகிறது. ஆசைப் பட்டதை அடையக் கிரியா சக்தி இந்திரியங்கள் மூலம் உடலை இயக்குகிறது. அனைத்து எண்ணங்களும் பிராணனின் வெளிப் பாடு என்ற உண்மையை உணர்ந்த முற்றுணர்ந்தோர்களின் மனதில் ‘நான் செயல் செய்கிறேன்’ என்ற எண்ணம் ஏற்படுவ தில்லை. அனைத்துச் செயல்களுக்கும் ஆதாரமான பிராணன் பிரபஞ்சத்தின் இயக்கத்தின் ஒரு சிறுபகுதியாகத் தனது உடலையும் இயக்குகிறது என்ற அறிவு ஏற்பட்டதும் முக்திவிழை வோனின் இதயத்தில் இருந்த ஆசைகளின் முடிச்சு அவிழ்ந்து அவன் முக்தி பெறுகிறான்.

*“பிராணனின் தோற்றம், வரவு, இருப்பிடம், ஐந்து விதமான தலைமை செயலகங்கள், தூல வெளிப்பாடு ஆகியவற்றை உணர்பவன் அழிவற்ற நிலையை அடைகிறான்”* என்ற பிரஸ்ன உபநிஷதத்தின் பன்னி ரெண்டாம் மந்திரம் கூறும் அதே கருத்தை *“இருளுக்கு அப்பால் பொன்னிறத்தில் ஒளிர்கின்ற மகிமை வாய்ந்த பரமபுருஷனை அறிந்துகொள் வதைத் தவிர மரணத்தை வெல்ல வேறு வழியே இல்லை”* என்று சுவேதாஸ்வதர உபநிஷதத்தின் மந்திரமும் (3.8) கூறுகிறது. அகிலத்தை ஆட்டுவிக்கும் பிராணனே தன் செயல்கள் அனைத்திற்கும் ஆதாரம் என்பதை ஐயமின்றி அறிந்துகொண்ட அக்கணமே ஆசைகள் அகன்றுவிடுவதால் முற்றுணர்ந்தோர்கள்

மரணமடையும்பொழுது அவர்களிடமிருந்து பிரிவதற்குத் தனிப் பட்ட பிராணன் இருப்பதில்லை. எனவேதான் ஆசைகளிலிருந்து விடுதலை பெற்றவனின் பிராணன் மரணத்தில் பிரிவதில்லை என்ற கருத்து கூறப்பட்டது.

## செயல்களின் ஒப்பீடு

பரமனை அறிந்த ஞானிகளை மட்டுமின்றி அனைத்து மக்களையும் அழியாத *''அமரத்துவத்தின் புத்திரர்கள்''* என்று சுவேதாஸ்வதர மந்திரம் வர்ணிக்கின்றது (2.5). இந்த உண் மையை உணரும் வரை வெளிப்பார்வைக்கு ஒன்றுபோல் தெரிந்தாலும் மனிதர்களின் செயல்கள் பின்வரும் விதங்களில் வேறுபடும்.

**செயல்களின் நோக்கம்:** பணம், புகழ், பதவி முதலிய சுயநல ஆசைகளையும் வறுமை ஒழிப்பு, ஊழலை எதிர்த்தல் முதலிய பொதுநல ஆசைகளயும் நிறைவேற்றும் நோக்கத்துடன் பற்றுடையோர் செயல்படுவர். இந்த ஆசைகளுக்கு ஒரு முடி வேயில்லை என்பதை அறிந்த முக்திவிழைவோர்கள் தங்கள் மனம் பக்குவபபட்டுப் பரமனை அறியவேண்டும் என்ற நோக்கத்துடன் செயல்களைச் செய்வர். முற்றுணர்ந்தோர்களுக்கு அடைய வேண்டியது என்று எந்த ஆசையும் கிடையாது. எனவே மற்ற வர்கள் ஒரு நோக்கத்தைக் கற்பித்தாலும் உண்மையில் இவர்களது செயல்களுக்கு எவ்வித நோக்கமும் கிடையாது.

**திட்டமிடுதல்:** அடுத்த ஐந்து வருடங்களுக்குள் வருமானம் ஒரு கோடியைத் தாண்ட வேண்டும் முதலிய குறிக்கோள்களை நிறைவேற்ற இப்பொழுது என்ன செய்ய வேண்டும் என்று திட்டமிட்டுச் செயல்படுபவர்கள் பற்றுடையோர்கள். ஆன்மீகப் பயணத்தில் தாங்கள் அடையவேண்டிய முன்னேற்றத்திற்குத் தேவையான செயல்களைத் திட்டமிடுபவர்கள் முக்திவிழை வோர்கள். முற்றுணர்ந்தோர்கள் செயல் பற்றி மனதில் தோன்றும் எண்ணங்களுக்குத் திட்டம் என்ற பெயரைக் கொடுத்தாலும் நிகழும் மாற்றங்களுக்குத் திட்டங்கள் காரணம் இல்லை என்பதை அறிவர். 'நாளைக்கு என்ன செய்வீர்கள்?' என்ற கேள்விக்குச் சரியான பதில் 'தெரியாது' என்பதுதான் என்றாலும் அவர்களும் மற்றவர்களைப்போல் நாட்காட்டியில் செய்ய வேண்டிய வேலை களின் பட்டியலைக் குறித்துவைத்திருப்பார்கள். கடந்தகாலம்,

எதிர்காலம் ஆகிய இரண்டும் மனித மனதின் கற்பனை என்று அறிந்து நிகழ்காலத்தில் மட்டும் வாழ்பவர்கள் மட்டுமே 'காலத்தை வென்றவன்' என்ற பட்டத்திற்கு உரியவர்கள்.

**விருப்பு-வெறுப்புகள்:** எதிர்காலத்தில் விரும்பிய செயல்களை மட்டுமே செய்யும் வாய்ப்பு கிடைக்கும் என்ற ஆசையுடன் நிகழ் காலத்தில் விரும்பாத செயல்களைச் செய்பவர்கள் பற்றுடை யோர்கள். விருப்பு-வெறுப்புகள் தங்கள் செயல்களைப் பாதிக்கக் கூடாது என்ற கவனத்துடன் செயல்படுபவர்கள் முக்திவிழை வோர்கள். மனதில் தோன்றும் விருப்பு-வெறுப்புகளும் பிரபஞ் சத்தை இயக்கும் பிராணனின் வெளிப்பாடு என்பதை அறிந்த முற்றுணர்ந்தோர்களின் செயல்கள் பெரும்பாலும் அவர்களின் விருப்பத்துடன் ஒன்றியே இருக்கும்.

**ஆளுமையின் தன்மை:** ஒளி, சக்தி, ஜடம் ஆகிய தனிமங்களின் கலப்புவிகிதம் மாறுபடுவதால் அனைவரது செயல்பாடுகளும் இவற்றின் அடிப்படையிலேயே இருக்கும். முற்றுணர்ந்தோர்களுக்கும் இந்த விதி பொருந்தும். ஆனால் பற்றுடையோர்கள் சக்தி தனிமத்தின் அளவு அதிகமாக வேண்டும் என்ற எதிர்பார்ப்புடனும் முக்தி விழைவோர்கள் ஒளி தனிமத்தின் அளவு அதிகரிக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்புடனும் செயல்படுவதுபோல முற்றுணர்ந்தோர்களுக்கு எவ்வித எதிர்பார்ப்பும் இருப்பதில்லை.

**அறிவின் தன்மை:** பலனில் பற்றுவைப்பதால் எந்தப்பயனும் இல்லை என்ற அறிவு பற்றுடையோர்களுக்கு ஏற்பட்டதும் அவர்கள் செயலுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுக்கும் முக்தி விழைவோர்களாக மாறுவார்கள். செயல்களும் தங்களால் செய்யப் படுவதில்லை என்ற அறிவு அவர்களை முற்றுணர்ந்தோர்களாக்கும்.

**இன்பதுன்பம்:** செயல் செய்யும் துன்பத்தை அதன் பலன் மூலம் கிடைக்கும் இன்பத்துடன் கலந்து அனுபவிப்பவர்கள் பற்றுடை யோர். பலனை எதிர்பாராமல் செயல் செய்யும் முக்திவிழைவோர்கள் துன்பத்தைத் தவிர்த்த பின்னும் இன்பத்தை முழுமையாகப் பெறுவதில்லை. எனவே உலகில் எந்தப் பிடிப்பும் இல்லாமல் விரக்தியுடன் இவர்கள் இருப்பார்கள். தான் இன்பமாக இருக்கப் படைக்கப்பட்ட உலகம் இது என்பதை அறிந்த முற்றுணர்ந்தோர்கள் செயல்கள் செய்யும்பொழுதும் பலன்களை அனுபவிக்கும்பொழுது துன்பம் கலவா இன்பத்துடன் இருப்பார்கள்.

**சாராம்சம்**

மனதை மயக்கும் ஆசைகளை மன்மதனாக உருவகப்படுத்தி, அறிவுக்கண் என்ற சிவபெருமானின் மூன்றாவது கண்ணால் அவன் எரிக்கப்பட்டதாகக் கூறும் புராணக் கதைகள், ஆசையை ஞானத்தால் மட்டுமே அகற்ற முடியும் என்ற உண்மையை மறைமுகமாகத் தெரிவிக்கின்றன.

பூமி தேராகவும், சூரியச் சந்திரர்கள் தேர்ச்சக்கரங்களாகவும், நான்கு வேதங்கள் குதிரைகளாகவும், பிரம்மா சாரதியாகவும், இமயமலை வில்லாகவும், ஆதிசேஷன் நாணாகவும், விஷ்ணு அம்பாகவும் உருமாறிச் சிவபெருமானுக்குத் துணை செய்ய விரைந்தபோது இவர்களின் உதவிகள் எதையும் ஏற்றுக்கொள்ளாமல் தன் நெற்றிக் கண்ணைத் திறந்து முப்புரத்தை எரித்த வரலாறு ஞானத்தால் மட்டுமே ஆசைகளை அகற்ற முடியும் என்று சுட்டிக் காட்டுகிறது.

மேலும், இது போன்ற நடைமுறையில் சாத்தியப் படாத உதாரணங்களைக் கொடுப்பதன் மூலம், 'செயற்கரிய செயல் எதைச் செய்தாலும் ஆசை அடங்காது' என்ற உண்மையைப் புராணங்கள் எடுத்துரைக்கின்றன. 'நான் தான் பரமன்' என்ற அறிவு ஏற்பட்டதும் பரு உடல், நுண்ணிய உடல், காரண உடல் ஆகிய மூன்று உடல்கள், ஒளி, சக்தி, ஜடம் ஆகிய மூன்று தனிமங்கள் சஞ்சிதம், ஆகாமி, பிராரப்தம் ஆகிய மூன்று கர்மங்கள் போன்ற அனைத்தும் மாயையாக மறைந்துவிடுவதால் முற்றுணர்ந்தோர்களின் செயல்கள் பிராணனின் வெளிப்பாடாக மட்டுமே அமைகின்றன.

இவ்வாறு இவர்களது செயல்கள் அமைவதால் தடைபடாத அமைதியுடனும் குறையாத இன்பத்துடனும் இவர்கள் செயல்படுவார்கள்.

தொடர்ந்து நிகழும் அனைத்து மாற்றங்களுக்கும் காரணமான பிராணன் பரமனின் மாயா சக்தியின் வடிவம்.

*மரணம் என்பதும் இந்த மாயையில் ஒரு காட்சி. எனவே ஞானி மரணமடையும் பொழுது பிராணன் பிரிவதில்லை என்ற கருத்து கூறப்பட்டது.*

## பயிற்சிக்காக

1. பிரஸ்ன உபநிஷதத்தின் மூன்று கேள்விகளின் பதில்கள் மூலம் நிறுவப்பட்ட கருத்து என்ன?

2. பிராணன் எந்த மூன்று சக்திகள் மூலம் உடலை ஆள்கிறது?

3. மரணத்தை வெல்லும் வழி யாது?

4. ஆசைகளிலிருந்து விடுபட்டவனின் பிராணன் மரணத்தில் பிரிவதில்லை என்று கூறப்பட்டதற்குக் காரணம் என்ன?

5. மக்களின் செயல்கள் எந்த எந்த அடிப்படைகளில் ஆராயப்பட்டன?

## சுயசிந்தனைக்காக

❖ *'காலத்தை வென்றவன் நீ' என்ற புகழ் மொழிக்குத் தகுதியானவர்கள் யார்?*

❖ *ஞானிகள் விரும்பிய செயல்களை மட்டுமே செய்வார்களா?*



## 174

# உபாசகனின் பிராணன் கடவுளுடன் கலந்து விடும்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 2 ● சூத்திரம் : 511**

பரமனை அறிந்ததால் ஞானிக்கும், கடவுளிடம் சரணடைந்ததால் உபாசகனுக்கும் கிடைக்கும் பலன்களை ஆராய்ந்து ஞானத்தினால் மட்டுமே முக்தி கிடைக்கும் என்ற உண்மையை இந்தப் பாடம் வலியுறுத்துகிறது.

கனவில் காணும் மரம் கனவு முடிந்ததும் கனவுலகப் பூமிக்குள் ஒடுங்கிவிடும் என நினைப்பவன் இன்னும் விழிக்கவில்லை. அதுபோல மரணத்திற்குப்பின் தனது பிராணன் கடவுளுடன் கலந்துவிடும் என்று நம்பும் உபாசகன் மாயையின் பிடியிலிருந்து இன்னும் விடுபடவில்ல. கனவுலகமே பொய்யென்று அறிந்தவன் கனவில் காணும் மரம் என்னவாகும் என்று ஆராயமாட்டான். ஞானம் பெற்றவுடன் மரணத்தை வென்றுவிடும் காரணத்தால் மரணத்திற்குப்பின் பிராணனது நிலை பற்றிய கேள்விகள் அவன் மனதில் எழுவதில்லை.

பிரஸ்ன உபநிஷதத்தின் மந்திரம் ஒன்று (6.5) *'அனைத்து நதிகளும் கடலை நோக்கி ஒடி முடிவில் அதனுடன் கலந்தபின் தங்களது தனித்தனியான பெயர்களையும் வடிவங்களையும் இழந்து 'கடல்' என்ற ஒரே பெயரால் வழங்கப்படுவது போலத் தனிமனிதர்களும் ஆத்மாவைத் தேடி ஒடி அதில் கலந்தபின் தங்கள் தனித்தன்மையை இழந்து பகுதிகளும் மரணமும் இல்லாத பரமன் என்ற நிலையை அடைகிறார்கள்'* என்ற கருத்தைக் கூறுகிறது. இந்த நிலையை ஞானம் பெற்றவுடன் அடைய முடியும் என்று உணராத உபாசகர்கள் மரணம் வரை முக்தி விழைபவர்களாகவே வாழ்வர்.

கடவுள் தன்னிலிருந்து வேறுபட்டவன் என்று நம்புபவர்களால் மட்டுமே கடவுளை உபாசிக்க முடியும். தான் வேறு கடவுள் வேறு அல்ல என்று அறிந்தவர்கள் 'கடவுள் பக்தி அவசியமில்லை' என்று மற்றவர்கள் முடிவு செய்துவிடக்கூடாது என்பதற்காக மட்டுமே உபாசனை செய்வார்கள். கோவிலுக்குச் செல்வது, பிரார்த்திப்பது போன்ற ஒரு சில செயல்களை மட்டும் உபாசனை என்று கருதாமல் தான் செய்யும் அனைத்துச் செயல்களையும் கடவுளின் செயலாகச் செய்பவன் முற்றுணர்ந்தோன்.

பற்றுடையோர் தாங்கள் செய்யும் செயல்களின் பலன் சாதகமாக இருக்கவேண்டும் என்ற எதிர்பார்ப்புடன் கடவுளைப் பிரார்த்திப்பர். பலன் பாதகமாக இருந்தாலும் அதை ஏற்கும் மனப்பக்குவம் வேண்டுமென்று முக்திவிழைவோர் பிரார்த்திப்பர். தன்னைச் செயலில் ஈடுபடுத்துவதும் பலனை அனுபவிக்கச் செய்வதும் கடவுள்தான் என்று நம்பும் உபாசகர்கள் எவ்விதக் குறிப்பிட்ட கோரிக்கையையும் கடவுள் முன் வைப்பதில்லை. அதேபோல் கடவுளிடமிருந்து தான் வேறுபட்டவனல்ல என்பதை அறிந்த முற்றுணர்ந்தோர்களும் எதையும் வேண்டிப் பிரார்த்திப்பதில்லை.

அதிகமாகப் பணம் சம்பாதிப்பதன் மூலம் வாழ்வில் துன்பத்தைப் பெருமளவில் தவிர்த்துவிடலாம் என்று முயல்பவர்கள் பற்றுடையோர். துன்பத்தைத் தவிர்க்கப் பரமனை அடைய வேண்டும் என்று முயற்சிசெய்பவர்கள் முக்திவிழைவோர்கள். உலகவாழ்வில் துன்பத்தைத் தவிர்க்கவே முடியாது என்ற உண்மையை உணர்ந்த உபாசகர்கள் மரணத்திற்குப்பின் பரவுலகில் துன்பம் கலவா இன்பம் பெறலாம் என்ற நம்பிக்கையுடன் இவ்வாழ்வை கழிப்பர். வாழ்வின் தவிர்க்கமுடியாத ஏற்ற இறக்கங்களை இன்பம்-துன்பம் எனப் பாகுபாடு செய்வது அறியாமை என்பதை அறிந்த முற்றுணர்ந்தோர் மட்டுமே துன்பம் கலவா இன்பத்துடன் வாழ்வர்.

இன்பம் உலகில் இருக்கிறது என்று அதைத் தேடி அலைபவன் பற்றுடையோன். இறைவனிடம் இன்பத்தைத் தேடுபவன் முக்திவிழைவோன். இறைவனின் உண்மை உருவத்தை அறிந்தவன் முற்றுணர்ந்தோன். அவனன்றி ஒரு அணுவும் அசையாது என்று உறுதியாக நம்பி 'எனக்கென்ன மனக்கவலை, எந்தாய்க்கன்றோ தினம் தினம் என் கவலை' என்று துயரங்கள் அனைத்தையும் இஷ்டதெய்வத்தின் மேல் ஏற்றி வைத்துவிட்டு

உபாசகர்களும் நிம்மதியாக வாழ்வர். துன்பங்கள் தொடர்ந்து நீடித்தால் அதுவும் கடவுளின் சித்தம் என்று மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்வார்கள். இதுபோல் உபாசகர்களின் மனநிலை சற்றேறக்குறைய முற்றுணர்ந்தோர்களின் மன நிம்மதியை ஒத்து இருப்பதுபோல் தோன்றினாலும் நம்பிக்கைக்கும் அறிவுக்கும் உள்ள வேறுபாடு உபாசகர்களை முக்தி அடையவிடுவதில்லை.

## கடவுள் நம்பிக்கையும் கடவுளை அறிதலும்

கடவுளைப் படைத்தவன் மனிதனல்ல. துன்பம் கலக்காத இன்பத்துடன் வாழ்வது எப்படி என்று மனிதனுக்குக் கற்றுத்தர முதல்படியாக வேதம் கடவுளை மனிதனுக்கு அறிமுகப்படுத்து கிறது. வேதம் காட்டும் வழியைப் பின்பற்றுபவர்களில் யாருக்குக் கூரிய அறிவுடன் முக்திவேண்டும் என்ற தீவிர ஆசையும் இருக் கிறதோ அவர்கள் மட்டுமே முக்தியடைகிறார்கள். மற்றவர்கள் உபாசகர்களாகவே இருப்பார்கள்.

பணம் பதவி போன்றவற்றைத்தேடி உலகத்தில் உழைப்ப தால் துன்பத்தைத் தவிர்க்க முடியாது என்றும் நீடித்த இன்பத்தைத் தரவல்லவர் கடவுள் மட்டுமே என்றும் வேதம் மனிதனுக்கு முதலில் சொல்லித்தருகிறது. கடவுள் இருக்கிறார் என்ற வேதத்தின் வார்த்தையை வெறும் நம்பிக்கையின் அடிப்படையில் ஏற்றுக் கொண்டு கடவுளை உபாசனை செய்வதுடன் நிறுத்திக் கொள்ளாமல் கடவுள் யார் என்பதை வேதம் காட்டும் பாதையில் தொடர்ந்து பயணித்து ஆராய்ந்து அறியக் கூரிய அறிவு தேவை. மேலும் கடவுளைப் பற்றிய முழுமையான அறிவு பெற்று உடனே முக்தியடைய வேண்டும் என்ற தீவிர ஆசை உள்ளவர்களுக்கு மட்டுமே கடவுள் நம்பிக்கையை அறிவாக மாற்றிக்கொள்ளும் திறன் இருக்கும். நீரில் மூழ்கி மூச்சுத் திணறு பவன் மேலே வரவேண்டும் என்று ஆசைப்படும் அளவிற்குத் துன்பக்கடலில் மூழ்கி இருப்பவர்கள் இப்பொழுதே முக்தி வேண்டும் என்று ஆசைப் பட்டால்தான் கடவுளை அறிய முடியும். அதைவிடுத்து 'பிறவா வரம் தாரும். மீண்டும் பிறந்தால் திருவடி மறவா வரம் தாரும்' என்று பாடிக்கொண்டிருந்தால் முக்தி கிடைக்காது. இறைவன் நேரடியாகக் காட்சியளிக்க வேண்டும் என்று உபாசனை செய்து ஏங்குபவர்கள் காணுமிடமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் கடவுளைக் காணத்தேவையான மூன்றாவது கண் என்னும் அறிவுக்கண்ணைப் பெறத் தவறிவிடுகிறார்கள்.

நேரான குச்சி, நீரில் வளைந்து இருப்பதுபோல் காணப்படும். குச்சி நேராகத்தான் இருக்கிறது என்பதை நிரூபிக்க அதை நீரிலிருந்து வெளியே எடுக்க வேண்டிய அவசியமில்லை. அதே போல் ஆனந்தமே உருவான பரமன் நான் என்ற அறிவு ஏற்பட்டால் உலகவாழ்வில் உழலும்பொழுதே முக்தியடையலாம்.

### அறிவின் பயன்கள்

**பூலோகச் சுவர்க்கம்:** வாழும் நாட்கள் அனைத்தையும் ஆனந்தமாக அனுபவிக்க இறைவன் யார் என்ற அறிவு உதவும். உலக வாழ்க்கை துன்பமயமானது என்றும் இறைவனடி சேர்வதுதான் இன்பம் என்றும் நினைக்கும் உபாசகர்கள் இந்த இன்ப அனுபவங் களைத் தவறவிடுகிறார்கள்.

**எதிர்பார்ப்பு இன்மை:** உலகைத்தன் உருவாகக் கொண்டு காட்சியளிக்கும் இறைவனை ஒரு குறிப்பிட்ட வடிவத்தில் உபாசிப்பவர்கள் மரணத்திற்குப்பின் தங்களுக்கு முக்திகிடைக்கும் என்ற எதிர்பார்ப்புடன் இருப்பார்கள். ஏற்கெனவே முக்தியடைந்து விட்டதால் முற்றுணர்ந்தோர்கள் எதையும் எதிர்பார்ப்பதில்லை.

**அச்சம் இன்மை:** கிடைத்தற்கரிய மானிடப்பிறவியை வீண் செய்யக்கூடாது என்பதற்குத் தவறாகப் பொருள் செய்துகொண்டு வாழ்வில் பெரும்பகுதியை இறை உபாசனையில் செலவிடுபவர்கள் மனதில் தாங்கள் செய்வது சரிதானா என்ற பயம் இருந்து கொண்டேயிருக்கும். உபாசனை செய்யும் விதம் பற்றி வேதம் கூறும் சட்ட திட்டங்களை முறையாகக் கடைப்பிடிப்பதில் கவனத்துடன் இருந்தாலும் மற்றவர்கள் வேறுமாதிரி உபாசனை செய்வதைப் பார்க்கும்பொழுது மனம் சலனப்படும். இறக்கும் தருவாயில் கடவுளை நினைக்கவில்லையென்றால் முக்திகிடைக்காது என்ற நிபந்தனைகள் உபாசனை செய்பவர்களை முழுநிம்மதியுடன் இருக்கவிடுவதில்லை.

**முழுதிருப்தி:** தொடக்கத்தில் இன்பத்தை உலகில் தேடி உழைத் ததற்கு ஈடாகத் தற்பொழுது இறை உபாசனையில் நேரத்தையும் முயற்சியையும் செலவிட வேண்டிய அவசியம் உபாசகர்களுக்கு இருக்கும். இனி எதையும் செய்யவேண்டிய அவசியமில்லை என்ற மனத் திருப்தி ஞானிகளுக்கு மட்டுமே இருக்கும்.

**நிம்மதி:** இறைவனிடம் சரணடைந்தபின் உபாசகர்களுக்கு ஏற்படும் நிம்மதி, பயணச்சீட்டு உறுதிசெய்யப்பட்டபின் ஏற்படும்

நிம்மதியைப்போன்றது. ஞானிகளின் நிம்மதி, பயணம் செய்து முடித்து வீட்டை அடைந்தபின் ஏற்படும் நிம்மதியைப் போன்றது.

**மரணமில்லாப் பெருவாழ்வு:** மரணமடைந்தவுடன் முக்தி கிடைக்கும் என்ற நிலை இல்லாமல் நான் என்றுமிருக்கும் பரமன் என்று உணர்ந்தபின் இந்த உலகம் அழிந்தாலும் நான் அழியமாட்டேன் என்ற அறிவுடன் ஞானிகள் வாழ்வார்கள்.

**விதிகளிடமிருந்து விடுதலை:** உபாசகர்கள் வாழ்வு முழுவதும் நல்லது-கெட்டது, சரி-தவறு, தர்மம்-அதர்மம், ஒழுக்கம்-ஒழுக்கமின்மை, பொதுநலம்-சுயநலம் போன்ற விதிகளுக்குக் கட்டுப்பட்டவர்கள். முற்றுணர்ந்தோர்களும் இவற்றைப் பின்பற்று வார்கள் என்றாலும் இவர்களை எந்த விதிகளும் கட்டுப்படுத்த மாட்டா. காவலாட்கள் புடைசூழ செல்லும் கைதியைப் போன்றவன் உபாசகன். அதே காவலாட்கள் புடைசூழ செல்லும் ஜனாதிபதியைப் போன்றவன் முற்றுணர்ந்தோன்.

**துறவு:** உபாசகர்கள் பெரும்பாலும் உலக இன்பங்களைத் துறந்து இறைப்பணிக்குத் தங்களை அர்ப்பணித்து வாழ்நாளைக் கழிப்பர். ஆனால் உலகப்பொருட்கள் மீது இருக்கும் பற்றுதலை முழுவதும் துறந்துவிட்ட காரணத்தால் முற்றுணர்ந்தோர்கள் தொடர்ந்து வசதியான வீடு, குளிரூட்டப்பட்ட வாகனம், சொகுசுக் கப்பலில் உல்லாசப்பயணம் என உலக இன்பங்களைத் தொடர்ந்து அனுபவிப்பார்கள்.

**சுயக்கட்டுப்பாடு:** புலன் இன்பங்களைக் கட்டுப்படுத்தி இறை உபாசனை செய்ய வேண்டிய கட்டாயம் முற்றுணர்ந்தோர்களுக்கு இல்லை என்பதால் தங்கள் விருப்பு-வெறுப்புகளின் அடிப் படையில் எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாமல் செயல்களைச் செய்வார்கள். மேலும் கடவுளைப்பற்றிய எண்ணங்களைத் தொடர்ந்து மனதில் இருத்திக்கொள்ள வேண்டும் என்ற உபாசகர் களின் நிர்ப்பந்தம் ஞானிக்கு இல்லை.

**மதச்சார்பின்மை:** கடவுளை மறுக்கும் நாத்திகர்கள், வேறுபட்ட கொள்கைகள் கொண்ட மற்ற மதத்தினர், அறிவியல் அறிஞர்கள் ஆகிய அனைவருடனும் ஒத்துப்போவது முற்றுணர்ந்த ஞானி களால் மட்டுமே முடியும். உபாசகர்களால் மற்றவர்களது கொள்கை களையும் அவர்களது வாழ்க்கை முறைகளையும் முழுமனதுடன் ஏற்றுக்கொள்ள முடியாது.

## சாராம்சம்

ஆசிரியரின் துணையுடன் ஒவ்வொருவரும் தன் சுயமுயற்சியால் மட்டுமே அறிவைப் பெறமுடியும். 'நல்ல புத்தி கொடு' என்று கடவுளைப் பிரார்த்திப்பதில் தவறு இல்லை. ஆனால் எதிர்பாராமல் பணம் கிடைப்பதுபோல அறிவும் ஏற்படும் என்ற எதிர்பார்ப்பு தவறு. கடவுள் யார் என்ற கேள்விக்கு விடைகாண உபாசகர்கள் முறையாக வேதம் பயின்ற ஆசிரியரின் உதவியை நாடவேண்டும்.

கடவுள் யார் என்பதை அறிந்து கொள்ள மனப் பக்குவம் அவசியம். உபாசனை செய்வதன் மூலம் தேவையான மனப் பக்குவத்தைப் பெறலாம். மனப்பக்குவத்தைப் பெற்றதற்குப் பின்னும் தொடர்ந்து உபாசனை செய்வதில் பயன் இல்லை.

மனப்பக்குவம் என்பது இரண்டு நிலைகளில் ஏற்படும். பணம், பதவி, புகழ் போன்றவை நீடித்த இன்பத்தைத் தராது என்பதை அறியச் சிலகாலம் இவற்றைத்தேடி உலகில் உழைத்ததும் முதல் நிலை மனப்பக்குவம் ஏற்படும். அதன்பின் உபாசனை செய்து கடவுள் யார் என்ற ஞானத்தைப் பெற்றால் மட்டுமே முக்தியடைய முடியும் என்ற உண்மையை அறியும்பொழுது இரண்டாம் நிலை மனப்பக்குவம் ஏற்படும்.

இந்த நிலையை அடைந்தபின் உபாசனை செய்வதைக் குறைத்துக்கொண்டு கடவுள் பற்றிய முழு அறிவை அடைய சரியான ஆசிரியரைச் சரணடைந்து அவரிடம் வேதத்தை முறையாகப் பயில்வதில் நேரத்தைச் செலவிட வேண்டும். இப்பொழுதே முக்தி வேண்டும் என்ற தீவிர ஆசையும், கூரிய அறிவும் கொண்ட உபாசகர்கள் வெகு விரைவில் அறிவுக்கண்ணைப்பெற்று கடவுளை நேரடியாகக் காண்பார்கள். மற்றவர்கள் மரணத்திற்குப்பின் கடவுளுடன் கலந்துவிடும் நம்பிக்கையுடன் மரணம் வரை உபாசனையைத் தொடர்வார்கள். ஞானிகள் ஞானம் பெற்ற அன்றே கடவுளுடன் ஒன்றாகிவிடுவதால் அவர்களே உண்மையில் முக்தியடைந்தவர்கள்.

## பயிற்சிக்காக

1. ஞானிக்கும் உபாசகனுக்கும் உள்ள ஒற்றுமைகள் என்னென்ன?
2. ஞானிக்கும் உபாசகனுக்கும் உள்ள வேற்றுமைகள் என்னென்ன?
3. ஞானத்தால் ஏற்படும் பலன்களாக இங்குக் கூறப்பட்ட கருத்துக்கள் யாவை?
4. ஞானம் பெறாமல் முக்தியடைய முடியாது என்பது உண்மையா?
5. ஞானம் பெற நமக்கு இருக்கும் ஒரேவழி யாது?
6. கிடைத்தற்கரிய மானிடப்பிறவியை எதற்காகப் பயன்படுத்தவேண்டும்?

## சுயசிந்தனைக்காக

❖ *ஒரு சில அறிவாளிகளும் சிந்தனையாளர்களும் உபாசகர்களாகவே கடைசிவரை வாழ்வது ஏன்?*

❖ *உபாசகர்களின் நம்பிக்கை உண்மையாகவும் ஞானிகளின் அறிவு பொய்யாகவும் இருக்க வாய்ப்பு உண்டா?*

❖ *ஞானிகளும் மரணகாலத்தில் உபாசகர்களாக மாறுவதில் ஏதேனும் தவறு இருக்கிறதா?*

❖ *உபாசகர்கள் முக்தியடைய முடியாதா?*

❖ *வீடு பேறு என்றால் என்ன?*



175

# ஞானி பரமனுடன் இரண்டறக் கலப்பதன் காரணம்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 2 ● சூத்திரம் : 512**

இல்லாத பிரபஞ்சத்தை இருப்பதாகவும் இருக்கின்ற பரமனை அறியாமலும் வாழ்ந்த வாழ்க்கை ஞானம் பெற்றதும் முடிந்துவிடும். காலமும் இடமும் பொய் என்பதை அறிந்த காரணத்தால் ஞானி பரமனுடன் இரண்டறக் கலந்துவிடுவான். மற்றவர்களால் இந்த நிலையை அடைய முடியாமல் இருப்பதற்கான காரணத்தை இந்தப் பாடம் ஆராய்கிறது.

காலம் என்பதே மனதின் கற்பனை என்பதால், 'இங்கேயே இந்தக்கணமே முக்தி வேண்டும்' என்ற தீவிர ஆசை உடைய வர்கள் மட்டுமே முக்தி அடைய முடியும். 'காலம் வெறும் கற்பனை' என்ற உண்மையைச் சில தீர்க்கதரிசிகள் தங்கள் அனுப வத்தில் அறிவார்கள். இந்த உண்மையை அறிய நாம் தீர்க்கதரிசி களாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. 'காலம் என்றால் என்ன?' என்ற கேள்விக்கான பதிலைத் தர்க்கத்தின் அடிப்படை யில் ஆராய்ந்து பார்த்தால் நமது அறியாமை அகன்றுவிடும். இந்த ஆராய்ச்சியை வெற்றிகரமாகச் செய்து முடித்த காரணத்தால் முற்றுணர்ந்தோர்கள் காலத்தை வென்றவர்களாகப் பரமனுடன் இரண்டறக் கலந்துவிடுகிறார்கள்.

### *காலம் இருக்கிறதா?*

**1.** காலம் உண்மையில் இருக்கிறது என்பதற்குக் கடிகாரமோ நாட்காட்டியோ சாட்சிகள் அல்ல. கடிகாரத்தின் முள் எவ்வளவு வேகமாக நகர்கிறது என்பதை வடிவமைத்தது ஒரு மனிதனே. நாட்

காட்டியில் தாளைக் கிழித்துப்போடும்போது 'ஒரு நாள் முடிந்து விட்டது' என்ற எண்ணம் வெறும் கற்பனைதான். வினாடி, நிமிடம், மணி, நாள், வாரம், மாதம், வருடம் என்று நமது கற்பனை களுக்குப் பெயரிடுவதால் அவை உண்மையாகிவிடாது.

**2.** காலம் உண்மையில் இல்லாத காரணத்தால்தான் உலகில் உள்ள கடிகாரங்கள் அனைத்தும் எப்போதும் ஒரே நேரத்தைக் காட்டுவதில்லை.

**3.** அனைவரும் ஒத்துக்கொள்கிறார்கள் என்பதால் காலம் உண்மையாகி விடாது. புதிய வருடம் என்றைக்கு என்பதும், அது ஆரம்பிக்கும் தருணம் எது என்பதும் ஆளுக்கு ஆள், நாட்டுக்கு நாடு மாறுபடுவதிலிருந்து காலம் உண்மை அல்ல என்பதை அறிந்து கொள்ளலாம். 'எனக்கு இன்று காலை பத்து மணி என்பது உனக்கு முதல் நாள் இரவு எட்டு மணி' என்று ஒரு ஒப்பந்தம் செய்து கொள்வதிலிருந்து காலம் பொய் என்று புலனாகிறது.

**4.** சூரியன் தலைக்குமேலே இருக்கும் உச்சிநேரத்தில் கடிகாரம் பன்னிரண்டு மணியைக் காட்டுவதில்லை. இதிலிருந்து கடிகாரம் காட்டும் நேரத்தை தீர்மானிப்பது பூமியின் சுழற்சி அல்ல என்பது தெளிவாகிறது.

**5.** சூரியன், பூமி ஆகியவை அழிந்துவிட்டால், விண் வெளியில் பயணம் செய்யும் மனிதன் நேரத்தை எப்படிக்கணக் கிடுவான்?

**6.** நாம் எந்த இடத்தில் இருந்தாலும் 'இப்போது' என்ற தற்காலம் ஒன்றுதான் உண்மை. தற்காலத்தில் ஏற்படும் மாற்றங் களுக்கு நிகழ்வுகள் என்று பெயரிட்டுக் கடந்தகாலம், எதிர்காலம் என்ற கற்பனைகளை மனம் உருவாக்கிக்கொண்டு இல்லாத நிகழ்வுகளை இருப்பதாக நம்புகிறது. சந்திரனின் நிழல் சுற்றிவரும் பாதையைக் கணக்கிட்டு இராகு, கேது என்று பெயரிடுவதால் இவை உண்மையான கிரகங்கள் ஆகிவிடாது. அதுபோலத் தொடர்ந்து நிகழும் மாற்றங்களுக்கு இடையே உள்ள நேரத்தைக் கணக்கிடுவதால் நிகழ்வுகளோ காலமோ உண்மையாகிவிடாது.

**7.** இரண்டு பொருள்கள் இருந்தால் மட்டுமே அவற்றுக்கு இடையே உள்ள இடைவெளியைக் கணக்கிட முடியும். இருப்பது இந்தக்கணம் ஒன்றுதான். எனவே, அதை அளக்க முடியாது.

8. 'ஐந்து புலன்களின் மூலம் அறியப்படும் உலகம் வெறும் தோற்றம் மட்டுமே' என்று அணுவை ஆராய்ந்த அறிவியல் அறிஞர்கள் நமக்கு அறிவிக்கிறார்கள். நம் மனம், உடல், சுற்றி யுள்ள உலகம் ஆகிய அனைத்தும் நிலையானதாக இல்லாமல் தொடர்ந்து மாறுகின்றன. எனவே இவை அனைத்தும் காட்சிப் பிழைகளே தவிர உண்மை அல்ல. தொடர்ந்து நிகழும் மாறுதல்கள் மனதில் நினைவுகளாகப் பதிவாகின்றன. 'முதலில் அது தோன்றியது, பிறகு அது வளர்ந்தது' என்று அந்த நினைவுகளை வரிசைப்படுத்தி காலம் என்ற கற்பனை உருவாகுகிறது. கற்பனை யில் உருவான காலம், உலகம் உண்மையாக இருக்கிறது என்று சாட்சி சொல்கிறது.

மாறாமல் இருக்கும் வெள்ளித்திரையில் தொடர்ச்சியாகத் தோன்றும் நிழற்படங்களைத் திரைப்படமாகப் பார்க்கிறோம். சிறுவனை ஒரு நொடிக்குப்பின் வாலிபனாக மாற்றுவதை 'இருபது வருடங்களுக்குப் பிறகு' என்ற எழுத்துக்களைக் காண்பிப்பதால் ஏற்றுக்கொள்கிறோம். காலம் என்பது இயக்குனரின் கற்பனை. மேலும் சிறுவன் வளர்ந்தபின் நல்லவனாக இருப்பானா அல்லது வில்லனாக மாறிவிடுவானா என்பதும் இயக்குனரின் கற்பனைப் படிதான் நடக்கும். இந்த அறிவு நமக்கு இருப்பதால் திரைப் படத்தை ரசிக்க முடியும்.

ஆனால் மாறாமல் இருக்கும் இந்தக்கணத்தை ஆதாரமாகக் கொண்டு தோன்றும் இந்த உலகம் மாயை என்பதை நாம் அறிவதில்லை. காலம் என்ற கற்பனை நிகழ்காலத்தைப் பெரும் பாலும் நமது கவனத்திலிருந்து அகற்றி விடுகிறது.

9. மனம் என்பது வெறும் எண்ணக்குவியல்கள். எண்ணம் என்பது சக்தி (energy). உடல் ஒரு திடமான பொருள் அல்ல. அதுவும் சக்தியின் வெளிப்பாடே. ஆக, எல்லாமே மாயை. இதை ஏற்றுக்கொள்ள முடியாத மனம், 'இதனால் இது தோன்றியது' முதலிய காரண காரியங்களைக் காலத்தின் உதவியுடன் கற்பனை செய்துகொள்கிறது. தானே தோற்றுவித்த கற்பனைகளை ஆதார மாகக் காட்டி உலகம் உண்மையில் இருப்பதாக மனம் நம்புகிறது.

10. நீள அகலங்களை அளக்கக் கிலோமீட்டர், மைல் போன்ற அளவைகளை உருவாக்கியதைப்போல, உலகில் நிகழும் மாற்றங் களை அளக்க மணி, நாள் போன்ற கால அளவைகளை உருவாக்கி யதும் மனிதன்தான். எங்கும் பயணம் செய்ய வேண்டிய

அவசியம் இல்லாதவர்களுக்கு 'கிலோ மீட்டர்' என்ற அளவை தேவையில்லை. எப்போதும் இந்தக்கணத்திலேயே எல்லோரும் வாழ்கிறார்கள். ஆனால் மனம் மட்டும் 'நேற்று', 'நாளை' முதலிய கற்பனை உலகங்களை உருவாக்கிக்கொண்டு அவற்றில் வாழ்ந்து வருகிறது.

***11.*** கற்பனைக் கதைகளுக்கும் கடந்த கால நிகழ்வுகளுக்கும் எவ்வித வித்தியாசமும் இல்லை. ஏனெனில் இவை இரண்டும் நம் மனதில் நினைவுகளாக இருக்கின்றன. சரித்திரம் என்பது பலரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட கற்பனை கதை. மகாத்மா காந்தி என்று ஒருவர் வாழ்ந்தார் என்பது நமது மனதின் கற்பனையா அல்லது உண்மையா என்ற கேள்வி தவறானது. ஏனெனில் இருப்பது இந்தக்கணம் மட்டும் தான். 'நேற்று இரவு சாப்பிட்டேன்' என்ற எண்ணமே நமது கற்பனை.

***12.*** இரண்டு மணிநேரத்தில் செய்யவேண்டிய செயல்களை, விரைவாகச் செயல்பட்டு ஒரு மணிநேரத்தில் முடிப்பவரும், மெதுவாகச்செயல்பட்டு மூன்று மணி நேரம் முடிந்த பின் கூட செயல்களை செய்து முடிக்காதவரும் வாழ்வது இந்தக்கணத்தில் மட்டுமே.

***13.*** வெளி தொடர்ந்து விரிவடைந்து கொண்டு இருப்பதால், எவ்வளவுதான் வேகமாகப் பயணம் செய்தாலும் நம்மால் பிரபஞ்சத்தின் எல்லைக்குச் சென்றுவிட முடியாது என்பது அறிவியல் கண்டுபிடிப்பு. வெளியுடன் ஒட்டிப்பிறந்த இரட்டைப் பிறவி காலம். எனவே, எவ்வளவுதான் வேகமாகச் செயல்களைச் செய்தாலும் காலத்தின் விளிம்பைத் தொட்டுவிட முடியாது.

***14.*** ஆழ்ந்த உறக்கத்தில் மனம் ஒடுங்கிவிடுவதால் இடம், பொருள், காலம் ஆகியவை முழுவதும் மறைந்து விடும். எனவேதான் விழித்தவுடன் எவ்வளவு நேரம் தூங்கினோம் என்ற கேள்விக்குக் கடிகாரத்தைப் பார்க்காமல் பதில் சொல்ல முடியாது. தூங்கி விழித்ததும் ஐந்து புலன்கள் வழியே வந்து சேரும் தகவல்களின் அடிப்படையில் நாம் இருக்கும் இடம், நேரம் போன்ற கற்பனைகளை மறுபடியும் தொடர்கிறோம்.

***15.*** காலம் மனதின் கற்பனை என்பதால்தான் மனம் உரு வாக்கிய கனவு உலகில் நம்மால் கடந்த காலத்துக்கும் எதிர்காலத் துக்கும் பயணம் செய்ய முடிகிறது. மேலும் விழித்திருக்கும்

போதும் காலம் மெதுவாக நகர்கிறதா அல்லது வேகமாக ஓடுகிறதா என்பது மனதின் நிலையைப் பொறுத்து மாறும். மனதுக்குப் பிடித்த ஒருவருடன் நேரத்தைச் செலவு செய்யும்பொழுது நேரம் போவதே தெரியாது. புரியாத பாடத்தைக் கேட்கும்போது வகுப்பு முடியவே முடியாது என்பதுபோலத் தோன்றும். காலம் ஓடுவது மனதின் கையில்தான் இருக்கிறது.

**16.** நிகழ்காலம் என்பது மனதினால் அறிந்துகொள்ள முடியாத ஒரு உண்மை. இருப்பது இந்தக்கணம் மட்டுமே. அதில் தொடர்ந்து மாறும் ஒளி-ஒலி காட்சிதான் இந்த உடலும் மனமும். உடல் ஒளியால் ஆனது. மனம் ஒலியால் ஆனது. ஒளி ஒலியைவிட வேகமாகப் பயணிக்கக் கூடியது. எனவே மனதில் தோன்றும் எண்ணங்கள் விளையாட்டு வர்ணனையைப்போலச் சிறிது பின்தங்கித்தான் இருக்கும். சுற்றி நிகழும் ஒளியின் மாற்றங்களின் விளைவாக மனதில் தோன்றும் எண்ணங்கள் கடந்த காலத்தைப் பற்றியதாக மட்டுமே இருக்க முடியும். நிகழ்காலம் மனதுக்கு எட்டாத ஒன்று.

**17.** எதிர்காலம் என்பது நமது கற்பனை என்று நமக்குத் தெளிவாகத் தெரிந்து இருந்தாலும் கூட 'நினைத்தேன் வந்தாய், நூறு வயது' முதலிய அனுபவங்கள் எதிர்காலத்தையும் உண்மை என நம்மை நம்பவைக்கின்றன. மேலும் இப்போது நான் இதைச் செய்யப்போகிறேன் என்ற எண்ணத்தைத் தொடர்ந்து அதை செயல்படுத்தியதாகத் தோன்றும் ஒளிக்காட்சி, காலம் என்ற ஒன்று உண்மையில் இருக்கிறது என்ற பிரமையை ஏற்படுத்துகிறது.

**18.** கடந்த காலம் என்பது மனதில் பதிவாகியுள்ள நினைவு அலைகள். இந்த நினைவு அலைகள் கனவிலும் நனவிலும் நம்மை ஆட்கொள்ளும்போது நிகழ்காலத்தை நாம் தவறவிட்டுவிடுகிறோம்.

**19.** அனுபவம் என்பது நிகழ்காலத்தில் மட்டுமே ஏற்படுவது. கடந்த காலம் என்பது அனுபவங்களின் வர்ணனை. எதிர்காலம் என்பது இந்த வர்ணனைகளின் பலனாக ஏற்படும் எதிர்பார்ப்பு. ஒருவேளை, காலப்பயணம் (time travel) என்பது சாத்தியமானால் கூட, நம்மால் 'இப்போது' என்ற இந்தக் கணத்தை விட்டு எங்கும் செல்ல முடியாது.

**20.** இந்த நிகழ்காலத்திற்கு ஆரம்பமோ முடிவோ கிடையாது. காரண காரியங்கள் கிடையாது. எதனுடனும் எவ்விதச் சம்பந்தமும்

கிடையாது. எதிர்காலத்துக்குச் செல்ல ஒரு படிக்கட்டாக நிகழ்காலத்தைச் சித்தரிப்பது நம் மனம். நிகழ்காலத்தை நேருக்கு நேர் சந்திக்க முயன்றால் எண்ணங்களின் ஓட்டம் நின்றுவிடும். எனவேதான் மனம் எதிர்காலத்தை நோக்கி வேகமாக ஓடிக்கொண்டிருக்கிறது.

**21.** வட்டமான பாதையில் வேகமாக ஓடுவதால் புதிய இடத்துக்குப் பயணம் செய்ய முடியாது. அதுபோல நிகழ்காலம் கடந்தகாலமாக மாறுவதற்குள் எதிர்காலத்துக்குச் சென்றுவிட வேண்டும் என்று ஓடிக்கொண்டு இருக்கும் மனதால் நிகழ்காலத்துக்குள் நுழைய முடியாது.

**22.** ஓடும் ஆற்றைப்போல் தொடர்ந்து மாறிக்கொண்டு நிலையாக இருப்பது நிகழ்காலம் மட்டுமே. நேற்றைய செயல்கள்தான் இன்றைய அனுபவங்களாக மாறுகின்றன என்பதும் இன்றைய செயல்கள் நாளைய அனுபவங்களாக மாறுகின்றன என்பதும் நமது மனதின் கற்பனை.

உலகம் மாயை என்பதை மனதில் நிலை நிறுத்த, காலம் என்பது கற்பனை என்று அறிந்து கொள்வது அவசியம்.

### சாராம்சம்

*இல்லாத உலகம் இருப்பதுபோலத் தோன்றுவதற்குக் காலம் தான் ஆதாரம். முதலில் தோற்றுவிக்கப்பட்டது வெளி. வெளிதான் பிரபஞ்சம் முழுமையும் இருக்க இடம் அளித்தது. காலமும் வெளியும் ஒட்டிப்பிறந்த இரட்டைப் பிறவிகள். எனவே மாயையான பிரபஞ்சத்தின் ஆதாரம் காலமே.*

*பரமனின் மாயாசக்தி காலமாகப் பரிணமித்து அதில் அகில உலகங்களையும் இருப்பதாகக் காண்பித்துள்ளது. காலத்தை வென்ற முற்றுணர்ந்தோர்களும் தீர்க்கதரிசிகளும் பரமனுடன் இரண்டறக்கலந்து முக்தி அடைந்தவர்கள்.*

### பயிற்சிக்காக

**1.** ஞானி பரமனுடன் இரண்டறக் கலக்கக் காரணமாக இருப்பது எது?

2. முக்தியடையத் தேவையான முக்கியமான தகுதியாகக் குறிப்பிடப்பட்டது எது?

3. காலம் கற்பனை என்பதை நிரூபிக்கக் கூறப்பட்ட காரணங்கள் யாவை?

### சுயசிந்தனைக்காக

*1. ஆசிரியரிடம் பயிலாமல் உடனே ஞானத்தை அடைய முடியுமா?*

*2. காலம் கற்பனை என்றால் நாம் நாளைக்கு என்ன செய்யவேண்டும் என்று திட்டம் தீட்டுவது அவசியம் இல்லையா?*



## 176 சுஷும்னா நாடி வழியே உயிர் பிரியும்

அத்தியாயம் : 4 ● பாதம் : 2 ● சூத்திரம் : 513

உபாசகர்கள் மரணமடையும்போது சுஷும்னா நாடி வழியே அவர்களது உயிர் உடலை விட்டுப்பிரியும் என்ற கருத்தை முக்திய டைந்தவர்களின் பார்வையில் ஆராய்ந்து அவர்கள் அனுபவிக்கும் ஆனந்தத்தை இந்தப் பாடம் எடுத்துரைக்கிறது.

'அனைத்து உயிரினங்களும் தனது வெவ்வேறு வடிவங்கள்' என்பதை அறிந்தவர்கள், இந்த உண்மையை எல்லோரும் அறிய வேண்டும் என்று ஆசைப்படுவது இயற்கை. முற்றுணர்ந்தோர் களின் நியாயமான இந்த ஆசையை நிறைவேற்ற, 'காலம்' என்ற மாயை அனுமதி தருவதில்லை. 'எதிர்காலத்தில் நிச்சயம் முக்தி அடைந்து விடுவோம்' என்ற நம்பிக்கையுடன் செயல்படும் மக்களுக்கு 'காலம் வெறும் கற்பனை' என்று முற்றுணர்ந்தோர்கள் கூறுவது புரிவதில்லை.

தண்ணீரில் தெரியும் நிலவைப் பிடிக்க முயலும் அறியா பாலகனின் தவிப்பைப் பெற்றோர்களால் ரசிக்க மட்டுமே முடியும். நிலவைப் பிடிக்க அவனுக்குப் உதவுவதோ அல்லது அதைப் பிடிக்க முடியாது என்று அவனுக்கு புரியவைக்கவோ இயலாது. வேண்டுமென்றால் நிலவைப் பிடிக்க அவனுக்கு உதவுவது போலப் பாவனை செய்யலாம். அப்படிச்செய்தால், சீக்கிரம் நில வைப் பிடித்துவிடலாம் என்ற குழந்தையின் நம்பிக்கை அதிகமாகி, பின் ஏமாற்றமும் அதிகமாகும்.

சுஷும்னா நாடிவழியே உயிர் பிரியும் என்று எதிர்பார்க்கும் உபாசகர்கள், கூடிய விரைவில் முக்தி கிடைத்துவிடும் என்று

நம்பும் முக்திவிழைவோர்கள், நிறைய சம்பாதித்தவுடன் நிம்மதியாக வாழலாம் எனக் கனவு காணும் பற்றுடையோர்கள் ஆகிய அனைவரும் எதிர்காலம் என்ற கற்பனையை நோக்கி ஓடிக் கொண்டு இன்றைய வாழ்வின் இன்பத்தை அனுபவிப்பதில்லை. வெண்ணெயை கையில் வைத்துக்கொண்டு நெய்க்கு அலையும் இவர்களது நிலை பரிதாபத்துக்கு உரியது. எனினும் முற்றுணர்ந் தோர்களால் இவர்களின் தேடலை அன்புடன் ரசிக்க மட்டுமே முடியும். உதவ முடியாது. இவர்களது அறியாமை ஆரம்பம் முதல் ஆழமாக வளர்ந்திருப்பதை முற்றுணர்ந்தோர்கள் அறிவார்கள்.

## அறியாமையின் ஆரம்பம்

'குழந்தை பிறந்திருக்கிறது' என்ற செய்தியைக் கேட்டவுடன் எல்லோர் மனதிலும் தோன்றும் கேள்வி 'ஆணா பெண்ணா?' என்பதுதான். அதேபோல, பிறந்தது முதல் நிறம், பால், குலம், இனம், மதம், சாதி, மொழி, நாடு, வகுப்பு ஆகியவற்றின் அடிப் படையில் தரம் பிரித்து, ஒவ்வொருவருக்கும் ஒரு தனி அடை யாளத்தை இந்தச் சமூகம் கொடுத்துக் கொண்டு இருக்கிறது. தான் யார் என்பதை அறியாத குழந்தையும் இந்த முத்திரைகளை உண்மை என நம்பி ஏற்றுக்கொள்கிறது.

அறியாமையால் சமூகம் செய்யும் இந்தக் கொடுமையின் தொடர்ச்சியாகப் பெற்றோர்களும் ஆசிரியர்களும் குழந்தைக்கு ஒரு தாழ்வு மனப்பான்மையைத் தங்களை அறியாமல் ஏற்படுத்து கிறார்கள். 'உனக்கு இது போதாது, நீ வாழ்க்கையில் முன்னேற இன்னும் அதிகம் படிக்க வேண்டும், நல்ல வேலைக்கு முயற்சி செய்ய வேண்டும்' முதலிய தவறான போதனைகளை மூலம் 'நான் குறையுள்ளவன்' என்ற எண்ணத்தை அவர்களின் மனதில் பதியவைக்கிறார்கள்.

பெரியவர்கள், சாதனையாளர்கள் ஆகியோரை முன்மாதிரியாக வைத்து 'என்றேனும் ஒருநாள் நான் அவர் போல ஆகிவிட வேண்டும்' என்ற ஆசையுடன் அனைத்துக் குழந்தைகளும் வளருகிறார்கள். பள்ளித்தேர்வுகளில் அனைத்துப் பாடங்களிலும் நூற்றுக்கு நூறு மதிப்பெண் வாங்கினால்தான் வாழ்வில் வெற்றி பெறமுடியும் என்ற சூழ்நிலையில் தன்னைவிட அதிக மதிப் பெண்கள் வாங்குபவர்கள் மீது பொறாமை ஏற்படுகிறது. மூன்று வயதில் ஆரம்பிக்கும் இந்த ஓட்டப்பந்தயம் மரணம் வரை தொடரும் என்று மாணவர்களுக்குத் தெரிவதில்லை.

எவ்வளவுதான் முயன்றாலும் பெற்றோர்களின் எதிர்பார்ப்பைப் பூர்த்தி செய்ய முடியாது என்பதை மறைமுகமாக உணர்ந்தவுடன் பெற்றோர்களின் பேச்சைக் கேட்காமல் அவர்களை எதிர்த்துப் பேச ஆரம்பிக்கிறார்கள். பருவ உணர்ச்சிகளின் தாக்கம் அதிகமானவுடன், ‘என் வாழ்க்கையை உங்கள் விருப்பத்துக்கு ஏற்றாற்போல் வாழ முடியாது. எனக்கு ஆத்மதிருப்தியைத் தரும் வேலைகளை மட்டும்தான் நான் செய்வேன்’ என்ற பாணியில் அவர்கள் தங்களது எதிர்ப்பைத் தெரிவிப்பார்கள்.

தங்களால் பெற முடியாத வெற்றியைத் தங்களது பிள்ளைகளாவது பெற்றுத் தருவார்கள் என்று காத்திருந்த பெற்றோர்களுக்கு, ‘கிளிக்கு இறக்கை முளைத்து விட்டது. வீட்டைவிட்டுப் பறந்து போகிறது’, என்று தங்கள் ஏமாற்றத்தை ஏற்றுக் கொள்வதைத்தவிர வேறு வழியில்லை.

மற்றவர்கள் நினைப்பது போல அல்லாமல் தான் மாறுபட்டவன் என்பது மட்டும் இளைஞர்களுக்குப் புரியுமே தவிர எந்த விதத்தில் தான் மாறுபட்டவன் என்பதை இவர்கள் அறிவதில்லை. தாங்கள் வேறுபட்டவர்கள் என்பதை உலகுக்குக் காட்ட அரைகுறையாக ஆடைகள் அணிந்து பெரியவர்களுக்குப் புரியாத மொழியில் பேச ஆரம்பிப்பார்கள். இந்த நிலையில் ‘நான் யார்? என் ஆத்ம திருப்தி என்றால் என்ன? எதைச்செய்தால் நான் திருப்தியடைவேன்?’ முதலிய கேள்விகளுக்கான பதிலைத் தெரிந்து கொள்ள வேண்டிய கட்டாயம் இவர்கள் மனதில் தொடரும்.

### கற்பனைக்கதை

சிறு வயது முதல் பெற்றோர்களும் மற்றவர்களும் தன் மீது குத்திய முத்திரைகளில் சிலவற்றை ஏற்றும், பலவற்றை மறுத்தும் தான் யார் என்ற கற்பனைக்கதை ஒன்று இவர்கள் மனதில் இவர்களை அறியாமலேயே உருவாகி இருக்கும். பிடித்தவை, பிடிக்காதவை, தெரிந்தவை, தெரியாதவை, இருக்கும் குணங்கள், கிடைத்த பட்டம், பதவி போன்றவைகளைச் சேர்த்துக்கொண்டு இந்தக் கற்பனை கதை மேலும் வலுவாக வளரும்.

தன்னைப்பற்றி அறிமுகம் செய்து கொள்ள வேண்டிய அவசியம் நேரும்போது தன்னை ஒரு தனித்தன்மை உள்ளவராகக் காட்டிக்கொள்ளவே அனைவரும் முயல்வர். மேலும் தனக்கே திருப்தியில்லாத தன் கதையை எப்படியாவது மெருகேற்றிக்

கேட்பவரை கவர்ந்துவிட வேண்டும் என்ற முயற்சியும் தொடர்ந்து நடக்கும். ஒவ்வொருவர் மனதிலும் இருக்கும் இந்தக் கற்பனைக் கதையை மற்றவர்கள் அறிய வாய்ப்பு இல்லை. எனவே அனைவரது கதைகளின் தன்மையும் அடிப்படையில் ஒன்றுதான் என்பது யாருக்கும் தெரிவதில்லை.

## *'நான் யார்?' என்ற கற்பனைக்கதையின் தன்மைகள்*

**முதலாம் தன்மை:** 'கடந்த கால நிகழ்வுகள்' என்று மனதில் பதிவான தனிப்பட்ட நினைவுகளின் அடிப்படையில், தான் யார் என்ற கற்பனைக்கதையை அனைத்து மனிதர்களும் தங்கள் மனதில் வளர்த்துக்கொண்டு இருப்பார்கள். இதற்கு விதிவிலக்கே கிடையாது.

பற்றுடையோர்கள் இந்தக் கற்பனைக்கதையை உண்மை என்று நம்பி வாழ்ந்து கொண்டிருப்பார்கள். முக்திவிழைவோர் களுக்கு இது கற்பனைக்கதை என்று தெரிந்து இருந்தாலும் அதன் பிடியிலிருந்து தப்ப இயலாமல் தவித்துக்கொண்டு இருப்பார்கள். முற்றுணர்ந்தோர்கள் மனதில் கூட இந்தக்கற்பனைக்கதை இருக்கும் என்றாலும் அதை அவர்கள் உலகுடன் உறவாட மட்டும் பயன் படுத்துவார்கள்.

**இரண்டாம் தன்மை:** புத்தகங்களில் பதிவான கதைகளைப்போல அன்றி தான் யார் என்ற கற்பனைக்கதை அவரவர் மனதில் எண்ணக்குவியல்களாக இருக்கும். எனவே ஒவ்வொரு நொடியும் இந்த எண்ணங்கள் மாறிக்கொண்டே இருக்கும். இரண்டு வருடங்களுக்கு முன் நம்மைபற்றி நாம் எழுதிய நாட்குறிப்பைப் படித்தால் இந்தக் கற்பனைக்கதை எவ்வளவு தூரம் மாறியிருக்கிறது என்பதை உணரலாம்.

**மூன்றாம் தன்மை:** இந்தக் கற்பனைக் கதையை உற்றுக்கவனித்தால் அது உருத்தெரியாமல் மறைந்துவிடும். நீர்வீழ்ச்சி, ஒரு பெரிய தூண் போன்ற தோற்றத்தை ஏற்படுத்த, அதில் தொடர்ந்து நீர் விழுந்து கொண்டிருக்க வேண்டும். ஆறு வற்றிவிட்டால் நீர்வீழ்ச்சி மறைந்து விடும். அதுபோல நமது எண்ண ஓட்டங்கள் நின்றுவிட்டால் 'நான்' என்ற கற்பனைக்கதை மறைந்துவிடும். எனவே, 'நான்' மடிந்துவிடாமல் இருக்க மனதில் எப்போதும் எதைப்பற்றியாவது சிந்தித்துக்கொண்டே இருக்க வேண்டிய கட்டாயம் எல்லோருக்கும் இருக்கும். இதனாலேயே யாராலும் சும்மா இருக்க முடிவதில்லை.

**நான்காம் தன்மை:** நான் இந்த உலகத்தில் இருந்து வேறு பட்டவன் என்ற தவறான அறிவுதான் 'நான்' என்ற கற்பனைக் கதைக்கு ஆதாரம். எனவே நாம் சந்திக்கும் அனைத்து மனிதர் களைப் பற்றிய கதைகளையும் சித்தரிக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஒவ்வொரு மனிதரும் தன் ஐந்து புலன்களின் அனுபவத்துக்குள் வரும் அனைத்தையும் தனது சிற்றறிவினால் ஆராய்ந்து, தரம் பிரித்து 'இது நல்லது', 'அவர் கெட்டவர்' முதலிய முத்திரைகளைப்பதித்து உலகம் என்ற கற்பனைக்கதையையும் தொடர்ந்து வளர்த்து வருவார்கள்.

**ஐந்தாம் தன்மை:** 'நான் யார்?' என்ற அனைவரது கற்பனைக் கதையும் குறையுடன் கூடியதாகவே இருக்கும். விரும்பியவரை மணம் செய்துகொள்ள வாய்த்தால்தான் தன் சுயபுராணம் 'சுபம்' என்று நிறைவு பெறும் என்ற எதிர்பார்ப்பு அனைவருக்கும் இருக்கும். 'சுபம்' என்று கதை முடிவது திரைப்படங்களில் மட்டும் தான் என்பதை யாரும் அறிவதில்லை. குறையுடன் கூடிய தன் கற்பனை கதை நிச்சயம் எதிர்காலத்தில் நிறைவு பெறும் என்ற எதிர்பார்ப்புடன் அனைவரும் வாழ்க்கையில் தொடர்ந்து போராடிக் கொண்டிருப்பார்கள். இதற்கு விதிவிலக்கு முற்றுணர்ந்தோர்கள் மட்டும்தான்.

நிறைய பணம் கிடைத்தால் தனது கற்பனைக்கதை முற்றுப் பெறும் என்று போராடுபவர்கள் பற்றுடையோர்கள். முக்தி அடைந்தால் இந்தப்போராட்டம் முடியும் என்று தவிப்பவர்கள் முக்திவிழைவோர்.

முற்றுணர்ந்தோர்களின் கற்பனைக் கதை கூடக் குறையுடன் தான் இருக்கும். மற்றவர்களைப்போல அவர்களும் இந்தக் குறையை நிறைவு செய்யும் நோக்கத்துடன் தான் செயல்படு வார்கள். ஆனால், தன் மாயா சக்தியின் வெளிப்பாடுதான் இந்தக் கதை என்பதையும் அது எப்போதும் நிறைவு அடையாது என் பதையும் அறிந்த காரணத்தால் அவர்களது வாழ்வு ஒரு போராட்டமாக இல்லாமல் விளையாட்டாக இருக்கும்.

## *'நான் யார்?' என்ற கற்பனைக்கதையின் செயல்கள்*

*முதலாம் செயல்: நிகழ்காலத்தை மறுத்தல்*

நான் முழுமையானவனாக மாறவேண்டும் என்ற நோக்கத் துடன் செயல்கள் செய்வதால் நிகழ்காலம் என்பது எதிர்காலத் துக்குச் செல்ல உதவும் ஒரு படிக்கட்டாக மட்டுமே அனைவராலும் கருதப்படுகிறது.

அனுபவங்களை அனுபவிக்காமல் அவை எவ்வளவு தூரம் தனது கற்பனைக் கதையை மெருகேற்றும் என்பதை மட்டும் கவனிப்பதால் பெரும்பாலும் நிகழ்காலத்தில் யாரும் வாழ்வ தில்லை. தேடியது கிடைத்தபின் ஏற்படும் மகிழ்ச்சி ஒரு சில நொடிகள் மட்டுமே நீடிக்கும். அதற்குள், இந்த வெற்றி எவ்வளவு தூரம் தன் கதையின் சுப முடிவை நோக்கிச் செல்ல உதவுகிறது, இதை ஆதாராமாகக் கொண்டு எந்த விதத்தில் நாம் இன்னும் முன் னேறலாம், இதை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளலாமா வேண்டாமா முதலிய எண்ணங்கள் நிகழ்கால இன்பத்தைத் தடை செய்துவிடும்.

*இரண்டாம் செயல்: காலப்பயணம்* (time travel)

'நேற்று கோபமாகப் பேசியவன் இன்று ஏன் புன்னகைக் கிறான், ஒருவேளை நமக்கு எதிராக ஏதாவது செய்யப்போகி றானோ?' முதலிய எண்ணங்கள் நம்மைத் தொடர்ந்து கடந்த காலத்துக்கும், எதிர்காலத்துக்கும் இடையே பயணம் செய்ய வைக்கும். எதை வெட்டலாம் அல்லது எதை ஒட்டலாம் என்று ஆராய்வதிலேயே கவனம் இருப்பதால், திரைப்படத் தொகுப் பாளர்கள் படத்தில் வரும் காட்சிகளை அனுபவிப்பதில்லை. அது போல நமது மனம் நிகழ்வுகளைத் தொடர்ந்து விமரிசனம் மட்டுமே செய்துவரும். தன்னை மறந்து நிகழ்வுகளுடன் ஒன்றுவது எப்போதாவது நடக்கும். அதுவும் வெகுநேரம் தொடர்வதில்லை.

*மூன்றாம் செயல்: ஆட்சேபம்*

உலகம் என்ற கற்பனைக்கதை நான் யார் என்ற கற்பனையின் முழுமைக்கு உதவும் வகையில் அமையவில்லை என்றால் மனம் அதை ஏற்றுக்கொள்வதில்லை.

*நான்காம் செயல்: எதிர்காலத்தை நோக்கிய ஓட்டம்*

நிகழ்காலத்தில் திருப்தியடையாமல் எதிர்காலத்தில் முழுமை அடையலாம் என்று ஏங்கும் மக்கள், எதையும் நிறுத்தி நிதான மாகச் செய்வதில்லை. காலம் போனால் வராது என்ற எண்ணத் துடன் எப்போதும் எதையாவது வேகமாகச் செய்து கொண்டு இருப்பார்கள். பயணம் செய்யும்போது தொலைபேசியில் பேசுவது, கணிணியில் வேலை செய்வது அல்லது குறைந்த பட்சம் செய்தித்தாள்களை வாசிப்பது என்று எப்படியாவது குறைந்த நேரத்தில் நிறைய வேலைகளைச் செய்து முடிக்க வேண்டும் என்ற துடிப்புடன் செயல்படுவார்கள்.

*ஐந்தாம் செயல்: தவறான அறிவு*

உள்ளதை உள்ளபடி பார்க்கும் சக்தி பெரும்பாலான மக்களுக்கு இருப்பதில்லை. இதனால் தனக்கு எந்த வகையில் நன்மை ஏற்படும் என்ற குறுகிய நோக்கில்தான் உலகை இவர்கள் பார்ப்பார்கள். செடியில் பூத்திருக்கும் மலர் அழகாக இருப்பதைப் பொதுவாகக் கவனிப்பதில்லை. அப்படியே கவனித்தாலும் அதை பறித்து வீட்டை அலங்கரிக்கலாம் என்ற எண்ணம் உடனே ஏற்படும். எனவே ஒவ்வொருவருக்குள்ளும் இருக்கும் இந்தக் கற்பனைக்கதை உலகைச் சரியான பார்வையுடன் பார்க்கும் சக்தியை மறைத்துவிடுகிறது.

### 'நான் யார்?' என்ற கற்பனைக்கதையின் விளைவுகள்

*முதலாம் விளைவு: ஆசை*

தனது திருப்தியின்மையை அகற்ற உலகில் உள்ள பொருள்கள் கிடைக்க வேண்டும் என்றோ அல்லது இறைவனின் கருணை வேண்டும் என்றோ ஏதோ ஒரு ஆசை எல்லோருக்கும் இருக்கும். பிரச்சனைகள் அனைத்தையும் தீர்த்து விட்டால் பிறகு நிம்மதியாக இருக்கலாம் என்ற ஆசை நமது கற்பனைக்கதையின் விளைவு.

குறை நிறையவே நிறையாது என்பதால் ஆசைகள் அடங்குவதே இல்லை. இதனால் தொடர்ந்து எதிர்காலத்தை நோக்கி ஓடும் ஓட்டப்பந்தயம் வாழ்வின் இறுதிவரை தொடரும்.

*இரண்டாம் விளைவு: பயம்*

ஆசை நிறைவேறாமல் போய்விடுமோ என்ற பயமும் நிறைவேறிய பின் ஏற்படும் திருப்தி நிலைக்க வேண்டுமே என்ற ஏக்கமும் வாழ்வில் இருந்து கொண்டே இருக்கும். ஆசைகள் முடிவதில்லை என்பதால் அதனால் ஏற்படும் பயமும் ஏக்கமும் ஒரு நாளும் முடிவுக்கு வராது.

*மூன்றாம் விளைவு: துக்கம்*

ஆசையும் பயமும் தொடர்ந்து மக்களைத் துன்பக்கடலில் ஆழ்த்திவிடும். நான் என்ற கற்பனைக்கதை மக்களின் வாழ்வுக்குப் பொறுப்பு ஏற்று நடத்தும் வரை துன்பத்தைத் தவிர்க்க முடியாது.

*நான்காம் விளைவு: இன்பமின்மை*

இன்பம் என்பது நிகழ்காலத்தில் மட்டுமே இருப்பது. மனதில்

தோன்றும் எண்ணங்கள் மக்களை இன்பமாக இருக்கவிடுவதில்லை.

*ஐந்தாம் விளைவு: உலகின் மேல் நம்பிக்கையின்மை*

தன் முன்னேற்றத்துக்குத் தன்னைச் சுற்றியிருப்பவர்கள் தடையாக இருக்கிறார்கள் என்ற அடிப்படையில்தான் அனைவரும் செயல்படுவார்கள். இதனாலேயே வாழ்க்கை ஒரு போரட்டமாகத் தெரியும். உலகத்தை மாற்றினால்தான் தன் கதை சுபமாக முடியும் என்ற எண்ணத்துடன் நிகழ்காலத்தில் இருக்கும் நிலையை எப்படியாவது மாற்றிவிட இவர்கள் தொடர்ந்து முயல்வார்கள். இந்த முயற்சி பெரும்பாலும் வெற்றி அடைவதில்லை என்ற காரணத்தால் இவர்களுக்கு உலகின் மேல் இருக்கும் நம்பிக்கை வயதாக வயதாக குறைந்து, கடைசிக்காலத்தில் இந்த உலகை விட்டுச் சொர்க்கத்துக்குப் போக வேண்டும் என்ற ஏக்கம் ஏற்படும்.

### சாராம்சம்

*'நான் பரமன்', என்பதை அறியாத காரணத்தால் ஒவ்வொருவர் மனதிலும் 'நான்' என்பதன் விளக்கமாக ஒரு கற்பனைக்கதை உருவாகி இருக்கும். கற்பனைகள் ஆளுக்குஆள் வேறுபட்டாலும் அடிப்படையில் யாருடைய கதையும் திருப்திகரமாக இருப்பதில்லை. தனது குறையை நிறைக்கும் பொருள் வெளி உலகில் இருக்கிறது என்ற நம்பிக்கையில் அனைவரும் தொடர்ந்து போராடிக் கொண்டு இருப்பார்கள். அவ்வப்போது கிடைக்கும் சிறு சிறு வெற்றிகளின் போது அனுபவிக்கும் இன்பம் உலகிலிருந்து கிடைப்பதாக நினைத்து மேலும் வேகமாக நிலையான இன்பத்தைத் தேடி ஓடுவார்கள். இவ்வாறு வாழ்நாள் முழுவதும் தேடிவிட்டு வாழ்வின் இறுதி கட்டத்தில் சுஷும்னா நாடி வழியே தங்கள் உயிர்பிரியவேண்டும் என்று இறைவனை உபாசிப்பார்கள்.*

*ஓய்வைத்தேடி வேகமாக ஓடுபவனைப்போல நிகழ்காலத்தில் இருக்கும் இன்பத்தைத் தேடி எதிர்காலத்துக்கு ஓடும் மனிதர்களின் வாழ்க்கையை முற்றுணர்ந்தோர்களால் பார்த்து ரசிக்க முடியுமே தவிர உதவ முடியாது. ஓடுவதை நிறுத்தினாலே தேடுவதைப் பெற்றுவிடலாம் என்று அவர்கள்*

உபதேசம் கூறினாலும், 'ஓடுவதை நிறுத்துவது எப்படி என்று கற்றுக்கொள்ள வேண்டும்' என்ற பாணியில் மக்களின் தேடல் தொடரும்.

இருப்பதை விட்டுப் பறப்பதைப் பிடிக்க முயன்று ஏமாறுவதைப்போல நிம்மதியும் மகிழ்வும் பொங்கித்ததும்பும் நிகழ்காலத்தில் வாழாமல் எதிர்காலம் என்ற கற்பனையை நோக்கி ஓடுவதே பெரும்பாலோரின் வாழ்க்கையாக அமைகிறது.

அனைவரும் முக்தி பெற்று இன்பமாக வாழும் உலகம் ஒன்றை ஏற்படுத்த முடியாது என்பதை அறிந்த முற்றுணர்ந் தோர்கள், நடக்கும் நாடகத்தில் தங்கள் பங்கை இன்பமாகச் செய்வார்கள்.

## பயிற்சிக்காக

1. கற்பனைக்கதை என்று குறிப்பிடப்படுவது எது?
2. கற்பனைக்கதை உருவாகக் காரணம் என்ன?
3. கற்பனைக் கதையின் தன்மைகள் யாவை?
4. கற்பனைக் கதையின் செயல்கள் யாவை?
5. கற்பனைக் கதையின் விளைவுகள் யாவை?

## சுயசிந்தனைக்காக

- கற்பனைக்கதையை உருவாக்காமல் இருக்க முடியுமா?
- 'உண்மையல்ல, வெறும் கற்பனை' என்று தெரிந்த பின்னும் ஏன் துன்பத்தைத் தவிர்த்து இன்பமாக வாழ முடியவில்லை?
- முக்திவிழைவோர்கள் முற்றுணர்ந்தோர்களாக மாறக் காலம் தேவையில்லையா?
- அகங்காரம் என்பதற்கும் இந்த கற்பனைக் கதைக்கும் உள்ள உறவு என்ன?



# 177 பிரம்மலோகத்துக்குப் பயணம்

அத்தியாயம் : 4 ● பாதம் : 2 ● சூத்திரம் : 514 - 515

இவ்வுலகில் இப்போது இன்பமாக இருக்கச் செய்த முயற்சிகள் தோல்வி அடைந்ததால், மரணத்துக்குப் பின் பிரம்ம லோகம் சென்று, அங்கேயாவது முக்தி அடையலாம் என்று நினைப்பவர்கள் உபாசகர்கள். இந்த நிலைமைக்கு காரணம் என்ன என்பதை முற்றுணர்ந்தோர்களின் பார்வையில் இந்தப் பாடம் ஆராய்கிறது.

## முதன்மைக் குறிக்கோளும், துணைக் குறிக்கோள்களும்

நடனக் காட்சியில் கதாநாயகியுடன் ஏராளமான துணை நடிகையர்கள் இருப்பது போல ஒவ்வொருவர் வாழ்விலும் ஒரு முதன்மைக் குறிக்கோளும், பற்பல துணைக் குறிக்கோள்களும் இருக்கும். துணை நடிகைகள் கதாநாயகியின் முக்கியத்துவத்தை எடுத்துக்காட்டும் வகையில்தான் நடனமாடுவார்கள். ஆனால் பெரும்பான்மையான மக்களின் வாழ்வில் துணைக் குறிக்கோள் களின் ஆதிக்கம் முதன்மைக் குறிக்கோளின் இருப்பையே மறைத்து விடுகிறது.

இன்பம் என்பதே வாழ்வின் முதன்மைக் குறிக்கோள். வீடு கட்ட வேண்டும், கார் வாங்க வேண்டும், நாட்டின் பொருளா தாரத்தை முன்னேற்ற வேண்டும், உலகில் யுத்தங்களை நிறுத்தி அமைதி ஏற்படுத்தப்படவேண்டும் முதலிய ஏராளமான துணைக் குறிக்கோள்கள் மக்களின் வாழ்வில் எப்போதும் இருந்து கொண்டே இருக்கும். இந்தத் துணைக் குறிக்கோள்களை அடைய வேண்டும் என்ற முயற்சியில் பெரும்பான்மையான மனிதர்கள் தங்கள் முதன்மைக் குறிக்கோளையே மறந்து விடுகிறார்கள்.

முதன்மைக் குறிக்கோளை அடைய காலம் தேவையில்லை. சொல்லப்போனால் காலம் அதை அடைவதை தடை செய்யும். காலம் நமது கற்பனை. எதிர்காலத்தில் இன்பமாக இருப்பேன் என்ற எண்ணம் நிகழ்காலத்தில் இருக்கும் இன்பத்தை மறைத்து விடும். துணைக் குறிக்கோள்கள் நிறைவேற காலம் அவசியம். எனவே அவைதான் நம்மை நமது முதன்மைக் குறிக்கோளை அடையவிடாமல் தடுக்கின்றன.

துணைக் குறிக்கோள்கள் முக்கியமானவை அல்ல என்பதற்குப் பல காரணங்கள் உள்ளன. இந்தக் காரணங்களை அறிந்து கொள்ள அவகாசம் இல்லாமல் வாழ்வு முழுவதும் துணைக் குறிக்கோள் களுக்கு முக்கியத்துவம் கொடுத்து அவற்றை அடையப் போராடிக் கொண்டு இருக்கும் மக்களுக்கு முக்தி கிடைப்பதில்லை.

*முதலாம் காரணம்: முகமற்ற உருவங்கள்*

துணை நடிகையர்களில் ஒரு சிலர் கதாநாயகியின் அருகில் நடனமாடினாலும் அவர்களும் மற்றவர்களைப்போல் முகமற்ற உருவங்களே. அதுபோல வெவ்வேறு துணைக் குறிக்கோள்களில் ஒரு சில அவ்வப்போது நமக்கு இன்பத்தைத் தருவது போலத் தோன்றினாலும் அவை அனைத்தும் முக்கியமற்றவையே.

துணை நடிகையர்கள் இல்லாமல் கதாநாயகியால் தனித்து இயங்க முடியும். ஆனால் கதாநாயகி இல்லாமல் துணை நடிகை களுக்குத் திரைப்படத்தில் இடம் இல்லை. அதுபோல இன்பத்தைக் காரணம் காட்டியே அனைத்துத் துணைக் குறிக்கோள்களும் இருக்கின்றன.

துணைக் குறிக்கோள்கள் மாறிக்கொண்டே இருக்கும். இன்று முக்கியமானதாகத் தோன்றும் குறிக்கோள் நாளை மறக்கப்பட்டு விடும். வாழ்நாள் முழுவதும் மாறாமல் இருக்கும் ஒரே குறிக்கோள் இன்பம் மட்டுமே. எனவே மற்றவை அனைத்தும் எவ்வித முக்கியத்துவமும் அற்றவை.

*இரண்டாம் காரணம்: எதிர்காலக் கனவு*

துணைக்குறிக்கோள்கள் அனைத்தும் எதிர்காலத்தில் அடையப் படவேண்டியவை. ஆனால் எதிர்காலம் என்பது நமது கற்பனை. எனவே நிகழ்காலத்தில் துணைக்குறிக்கோள்களுக்கு எவ்வித முக்கியத்துவமும் கிடையாது. துணை நடிகையாக அறிமுகமாகும் ஒவ்வொருவருக்கும் என்றாவது கதாநாயகியாக ஆகிவிடவேண்டும்

என்ற ஆசை இருக்கும். அதேபோல உலகத்தைச் சொர்க்கமாக மாற்றிவிட்டால் அனைவரும் எப்போதும் இன்பமாக இருக்கலாம் என்ற ஏதாவது ஒரு கனவு எல்லோர் மனதிலும் இருக்கும்.

சேர்ந்து நடனம் ஆடும் பல நடிகைகளில் ஒருவருக்குக்கூடத் திரைக்கதையில் கதாநாயகியுடன் சேர்ந்து நடிக்கும் வாய்ப்பு இருக்கவே இருக்காது. அதுபோலத் துணைக் குறிக்கோள்களுக்கும், முதன்மைக் குறிக்கோளுக்கும் எவ்விதச் சம்பந்தமும் கிடையாது.

*மூன்றாம் காரணம்: அவசியமற்ற அலங்காரம்*

துணை நடிகையர் நிறைய பேர் இருக்கவேண்டும் என்ற கட்டாயம் திரைக்கதைக்கு இருப்பதில்லை. ஆனாலும் மக்கள் மனதில் ஒரு கவர்ச்சியை ஏற்படுத்த இது போன்ற பாடல் காட்சிகள் திரைப்படத்தில் இடம்பெறும். அது போல உலகில் தொடர்ந்து நிகழும் மாற்றங்களுக்குத் துணைக்குறிக்கோள்கள் அவசியம் இல்லை. எனினும் மக்களைத் தன் கட்டுக்குள் வைத்திருக்க மாயை செய்யும் லீலைகளே இந்த துணைக் குறிக்கோள்கள்.

ஓர் வீடு கட்டப்படுவதற்கு முன் அந்த வீட்டைப்பற்றிய நினைவு அலைகள் மனதில் தோன்றும். மனிதனால் உருவாக்கப்படும் அனைத்துப்பொருள்களும் பௌதீக உலகில் நுழைவதற்கு முன் மனித மனத்தினுள் எண்ணங்களாகத் தோன்றுகின்றன. இது, இந்த உலகம் என்னும் ஒளி-ஒலிக்காட்சி செயல்படும் விதம். எண்ணங்கள் தோன்றியபின் பொருள்கள் தோன்றுவதால் 'செய்ய வேண்டும்' போன்ற துணைக் குறிக்கோள்கள் மிக முக்கியமானதாகத் தோற்றம் அளிக்கின்றன.

நடக்கும் நாடகத்தை உண்மை என நம்ப வைப்பதற்காகவே, வெளி உலகில் நடக்கும் செயல்களுக்கும் மனதில் தோன்றும் எண்ணங்களுக்கும் இது போன்ற ஒரு காரண காரிய உறவு இருப்பது போலத் தோன்றுகிறது. துணைக் குறிக்கோள்கள் இல்லாமலேயே நடக்க வேண்டியவை நடந்து கொண்டே இருக்கும்.

'வீடு கட்டவேண்டும்' என்ற எண்ணம் பலருக்குத் தோன்றி னாலும் ஒரு சிலரின் எண்ணங்கள் மட்டுமே செயலாக மாறுகின்றன. மேலும் 'வீடு கட்டுவேன் என்று நினைக்கவே இல்லை. எப்படியோ எல்லாம் கூடி வந்து, இது நடந்து விட்டது.' போன்ற அனுபவங்கள் ஒரு சிலருக்கு ஏற்படுகின்றன. இது போன்ற நிகழ்வுகளை ஆராய்ந்தால், தான் திட்டமிட்டுச் செயல் செய்வதால்தான் உலகம்

இயங்குகிறது என்று மனிதன் நினைப்பது வெறும் பிரமை என்பது புரியும். வாழ்வில் குறிக்கோள்கள் அவசியமற்ற அலங்காரங்கள். மனிதர்கள் இந்த அலங்காரத்தில் மயங்கி முதன்மை குறிக்கோளை மறந்து விடுகிறார்கள். எதிர்காலக் குறிக்கோளுக்காக நிகழ்கால இன்பத்தை இவர்கள் தியாகம் செய்து விடுகிறார்கள்.

*நான்காம் காரணம்: தொடர் ஓட்டப்பந்தயம்*

தண்ணீர் குடிக்கும் செயல் தாகத்தைத் தீர்க்க வேண்டும் என்ற நோக்கத்துடனேயே செய்யப்படுகிறது. அதேபோல மக்கள் தாங்கள் செய்யும் அனைத்து செயல்களையும் ஏதாவது ஒரு குறிக்கோளை அடைவதற்காகவே செய்கிறார்கள். எனவே வாழ்வில் குறிக்கோள்கள் முக்கியமானவையாகத் தோன்றுகின்றன.

குறிக்கோள் என்பது எதிர்காலத்தில் அடையப்பட வேண்டியது. எதிர்காலம் நமது கற்பனை. வாழ்வு நிகழ்வது நிகழ்காலத்தில் மட்டுமே. நிகழ்காலமாக என்றும் இருப்பது இன்பம். குறிக்கோள்கள் மனிதனின் கவனத்தை எதிர்காலத்துக்குத் திருப்பி நிகழ்கால இன்பத்தை அனுபவிக்க விடாமல் தடுக்கின்றன.

இந்தத் தொடர் ஓட்டத்திலிருந்து மக்களை விடுவிக்கவே 'பலனில் பற்று வைக்காதே' என்று பகவான் கிருஷ்ணன் கீதையில் உபதேசம் செய்தான். இதைப் பின்பற்றினால் குறிக்கோள்களின் அவசியம் குறையும். 'பலனில் பற்று வைக்காமல் செயல்களை ஒழுங்காகச் செய்கிறேன்' என்ற எண்ணமும் பலனைக் கொடுக்காது.

தாகம் தீர வேண்டும் என்ற நோக்கத்தில் கவனம் செலுத்தாமல் தண்ணீர் குடிக்கும் செயலைச் செய்தாலும் 'நான் இப்போது தண்ணீரை எடுக்கிறேன்' என்ற வர்ணனைகள் நம்மை நிகழ்காலத்துக்குள் நுழையவிடுவதில்லை.

சிகரத்தின் மீது கொடியை ஏற்ற மலை மீது ஏறுபவர்கள், தொடர்ந்து ஒவ்வொரு அடியையும் கவனத்துடன் எடுத்து வைக்க வேண்டிய கட்டாயத்தில் இருப்பதால் அவர்கள் நிகழ்காலத்தில் மட்டுமே வாழ்வார்கள். சரியாகக் காலை கயிற்றின் மீது வைக்காவிட்டால் கீழே விழுந்து உயிர் போய்விடும் என்ற எண்ணம் கூட அவர்கள் மனதில் ஏற்படாது. மலை ஏறும் செயல் மட்டும் நடக்கும்.

நிகழ்காலத்தில் மட்டுமே இருந்த இன்ப அனுபவத்தைச் சிகரத்தை அடைந்ததும் மனம் அசைபோடுகிறது. இந்த இன்ப அனுபவம் மீண்டும் கிடைக்க வேண்டும் என்று இன்னும் அதிக

ஆபத்தான மலை மேல் ஏற ஆசை ஏற்படுகிறது. உயரமான மலைகளை ஏறிப்பழகியவர்களுக்கு ஒரு சிறிய குன்றின் மேல் ஏறுவது எளிதாக இருக்கும் காரணத்தால் அதில் ஏறும்போது மனதில் வெவ்வேறு எண்ணங்கள் தோன்றும். எனவே அவர்களுக்கு அதில் இன்பம் கிடைக்காது.

அதேபோல வாழ்விலும் முந்தையதைவிட அதிகச் சிரமமான குறிக்கோளைக் கற்பித்துக் கொண்டு அதை அடைய வேண்டும் என்று மக்கள் தொடர் ஓட்டம் ஓடிக்கொண்டு இருக்கிறார்கள். தன்னை மறந்து செயல் செய்தபோது இருந்த இன்பம் குறிக்கோளை அடைந்தபின் மறைந்துவிடும்.

கேமராவின் முன் நடனமாடும் துணை நடிகைகள் சிறிது விலகும்போது கதாநாயகியின் முகம் சில நொடிகள் தென்படுவதைப்போலக் குறிக்கோள்கள் ஏற்படுத்தும் நெருக்கடி நம்மைச் சிறிது காலத்துக்கு நிகழ்கால இன்ப அனுபவத்தைப் பெற்றுத் தருகின்றன. எனவே குறிக்கோள்கள் முக்கியமானவை என்று நாம் தவறாக எண்ணிவிடுகிறோம். கேமராவை மறைக்கும் துணை நடிகைகள் இல்லாவிட்டால் கதாநாயகியின் முகம் மறையாது. அதுபோலக் குறிக்கோள்கள் எதுவும் இல்லாவிட்டால் நாம் நிகழ் காலத்தில் தொடர்ந்து நாம் இன்பமாக இருக்கலாம்.

அனைவரும் தொடர்ந்து நிகழ்காலத்தில் மட்டுமே வாழ்கிறார்கள். ஆனால் அவசியமில்லாத குறிக்கோள்கள் இந்த உண்மையை மக்களிடமிருந்து மறைத்து விட்டு அவ்வப்போது இன்ப அனுபவங்களை மக்களுக்குத் தந்து கொண்டு இருக்கிறது. இன்னும் அதிக இன்பம் வேண்டும் என்று மேலும் கடினமான குறிக்கோளை முன்வைத்து அனைத்து மக்களும் தொடர் ஓட்டம் ஓடிக்கொண்டு இருக்கிறார்கள்.

*ஐந்தாம் காரணம்: போதை மருந்து*

திரைப்படங்களில் வரும் பாடல் காட்சிகளில் மனதைப் பறிக்கொடுப்பதன் மூலம் தங்கள் கவலைகளை மறந்து மக்கள் சிறிது நேரம் இன்பமாக இருக்கிறார்கள். இன்பம் எப்போதும் இருப்பது என்பதை அறியாமல் வாழ்க்கையில் அவ்வப்போது அதை அனுபவிக்கிறார்கள்.

வாழ்வின் முதன்மைக் குறிக்கோளான இன்பத்தை அடைய நாம் நிகழ்காலத்தில் மட்டும் வாழ்ந்தால் போதும். நிகழ்காலத்தில்

வாழ்வது என்பது கடினமான காரியம் அல்ல. நம்மைச்சுற்றி நிகழும் அத்தனை நிகழ்வுகளையும் முழுமனதுடன் ஏற்றுக் கொள்ள வேண்டும். நமது மனதில் தோன்றும் எண்ணங்கள் வேறு மாதிரி இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கக் கூடாது. சொல்லாலும், செயலாலும், எண்ணத்தாலும் நமது உடலும் மனமும் தொடர்ந்து இயங்கிக்கொண்டிருக்கும். அந்த இயக்கம் மாயா சக்தியின் இயக்கத்தில் ஒரு சிறிய பகுதி. எனவே, 'இவை என் செயல்கள் அல்லது என் எண்ணங்கள்' என்று சொந்தம் கொண்டாடி அவை எப்படி இருக்கவேண்டும் என்று தீர்மானம் செய்யாமல் இருந்தாலே போதும்.

சுருக்கமாகச் சொல்வதென்றால் குறிக்கோள்கள் முக்கிய மற்றவை என்பதைப் புரிந்து கொண்டாலே என்றும் நிகழ்காலத்தில் இருக்கலாம்.

இப்போது இருப்பதை மாற்றி அனைத்தும் நமக்கு விருப்ப மான விதத்தில் அமைய வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் குறிக்கோள்கள் இருக்கும். இவற்றில் சில அவ்வப்போது நிறை வேறும்போது சிறிது நேரம் இன்பம் ஏற்படும். போதை மருந்துக்கு அடிமை ஆவதைப்போல மக்கள் அனைவரும் தொடர்ந்து துணைக் குறிக்கோள்களை அடைய முயற்சி செய்து கொண்டு இருப்பார்கள்.

நிலையான இன்பத்தின் இருப்பை நிகழ்காலத்தில் அறியாமல் 'எனக்கு மிட்டாய் வேண்டும்' என்பதுபோன்ற குழந்தைத் தனமான குறிக்கோள்களை மனதில் வளர்த்துக்கொண்டு, அவை நிறைவேறும்போதுமட்டும் இன்ப அனுபவத்தை மக்கள் பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். அதிகமாக இன்பம் வேண்டும் என்பதற் காகத் தங்கள் எதிர்பார்ப்பை அதிகரித்துக்கொள்ளவும் அவர்கள் தயங்குவதில்லை.

குறிக்கோள்கள் என்ற போதைப்பொருளில் இருந்து விடுதலை பெற்றவர்களுக்கு மட்டுமே நிலையான இன்பம் கிடைக்கும்.

*ஆறாம் காரணம்: துணை செய்வது*

துணைக் குறிக்கோள்களை முதன்மைக் குறிக்கோளாக நினைப்பது மட்டுமே தவறு. வாழ்வில் துணைக்குறிக்கோள்களின் பங்கை அறிந்து அவற்றை உபயோகம் செய்வது தவறில்லை.

எதிர்காலம் என்பது கற்பனை என்பதால் அடுத்த வருடம் அமெரிக்கா செல்ல வேண்டும் என்று திட்டமிடுவது தவறு அல்ல.

தொடர்ந்து நிகழும் மாற்றங்களின் ஒரு பகுதியாக நமது மனதிலும் பற்பல குறிக்கோள்கள் தோன்றிக்கொண்டே இருக்கும். அவற்றைத் துணைக் குறிக்கோள்கள் என்பதையும், அவற்றால் நமக்கு எவ்வித இன்பத்தையோ மன நிம்மதியையோ பெற்றுத்தர முடியாது என்பதையும் நாம் அறிந்து கொண்டால் போதும். இது போன்ற குறிக்கோள்களை அடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் செயல்பட்டாலும் அடைய முடியாவிட்டால் எவ்விதத் துக்கமோ ஏமாற்றமோ ஏற்படாது. ஒரு துணை நடிகை வேலைக்கு வர வில்லை என்பதால் இயக்குனர் வருத்தப்படப் போவதில்லை. ஒரு துணைக் குறிக்கோள் தோல்வி அடைந்துவிட்டால் மற்றொரு குறிக்கோளை முன் வைத்துச் செயல்களைத் தொடர்ந்து செய்ய லாம். வெற்றி அடைந்தால் கூட வேறு ஒரு குறிக்கோளுக்காக வேலை செய்வது நின்றுவிடப் போவதில்லை. வாழ்நாள் முழுவதும் ஏதாவது செயல்கள் செய்து கொண்டுதான் இருப்போம். அந்தச் செயல்களைச் செய்வதற்கு ஏதாவது குறிக்கோள்கள் இருந்து கொண்டுதான் இருக்கும். அவை எந்தவித முக்கியத்துவமும் அற்றவை.

*ஏழாம் காரணம்: இருந்துவிட்டுப் போகட்டும்*

திரைக்கதையைப் புரிந்து கொள்ளப் பாடல் காட்சிகளை மறக்கவேண்டும் என்ற கட்டாயம் ஏதும் இல்லை. அதுபோல இன்பமாக நிகழ்காலத்தில் வாழத் துணைக் குறிக்கோள்களை மறக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. துணைக் குறிக்கோள்கள் முக்கியமற்றவை என்பதையும் அவற்றால் நம் இன்பம் பாதிக்கப் படுவதில்லை என்பதையும் புரிந்து கொண்டால் போதும்.

மாணவப்பருவம் முடியும்போது பற்பல கனவுகளுடன் வாழ்வைத் துவங்கினோம். நிறைவேறாத கனவுகளை நினைத்து ஏங்குவதில் பயனில்லை. ஏனெனில் அவை நிறைவேறியிருந் தாலும் நமது தற்போதைய நிலையில் எவ்வித மாற்றமும் இருக் காது. ஏனெனில் மனம் என்பது முழுமை அடைய வாய்ப்பே இல்லை. மரணம் வரை உடலும் மனமும் தொடர்ந்து மாறிக் கொண்டுதான் இருக்கும். அந்த மாற்றங்களில் குறிக்கோள்கள் என்பவை இயற்கையாக இணைந்து இருப்பவை. அவை நமது இன்பத்திற்குக் காரணம் என்று நினைப்பது மட்டும்தான் தவறு.

*எட்டாம் காரணம்: சமத்துவம்*

துணை நடிகைகளுள் யார் மிகவும் அழகானவள் என்ற கேள்வி அனாவசியம். துணைக் குறிக்கோள்களுக்குள் ஏற்றத் தாழ்வு கிடையாது. பொது நலத்துக்காக உழைப்பது சுயநலத் துக்காக உழைப்பதைவிட மேலானது அல்ல. வெளி உலகை மாற்ற வேண்டும் என்று நினைப்பது, மனதை மாற்ற வேண்டும் என்று முயல்வதைவிட தாழ்ந்தது அல்ல. பணம் வேண்டும் என்று பாடுபடுவதும், பிரம்மலோகம் செல்ல வேண்டும் என்று உபாசனை செய்வதும் ஒன்றுதான்.

நிகழ்காலத்தில் மாறாமல் இருப்பது இன்பம். இப்போது இருக்கும் இருப்புக்கு மாற்றாக வேறு ஏதோ ஒன்று வேண்டும் என்று அனைத்துக் குறிக்கோள்களும் தவறாக அறிவுறுத்துவதால் அவை அனைத்தும் தவறானவை. அவற்றுள் ஏற்றத் தாழ்வு எதுவும் கிடையாது. 'குறிக்கோள்கள் எதுவும் இல்லாமல் நிகழ்காலத்தில் இருக்க முயற்சி செய்யவேண்டும்' என்ற குறிக்கோளும் முக்கியமற்றதே.

*ஒன்பதாம் காரணம்: இயற்கையின் செயல்பாடு*

மொட்டு மலர்ந்து காய் தோன்றிப் பிறகு கனியாக மாறுவது இயற்கை. கனியாக மாறவேண்டும் என்ற குறிக்கோளோடு மொட்டு மலர்வதில்லை. பற்றுடையோன் முக்திவிழைவோனாக மாறி முற்றுணர்ந்தோனாக மாறுவதும் இயற்கை. சிலர் உபாசகர் களாகப் பிரம்மலோகம் செல்லவேண்டும் என்று ஆசைப்படுவதும் வேறு சிலர் இப்போதே இங்கேயே முக்தி அடைய வேண்டும் என்று தீவிரமாக முயற்சி செய்வதும் இயற்கையான மாற்றங்களில் அடங்கும். என்றும் மாறாமல் இருக்கும் இன்பம் இந்த மாற்றங் களின் ஆதாரம்.

*பத்தாம் காரணம்: பொழுதுபோக்கு சாதனம்*

திரைக்கதைக்கு அவசியம் இல்லாவிட்டாலும் ஒரு இனிமை யான பொழுதுபோக்கு அம்சமாகத் துணை நடிகையர் சேர்ந்து நடனமாடும் ஒரு பாடல் படத்தில் சேர்க்கப்படும். அதுபோல வாழ்க்கைக்குக் குறிக்கோள்கள் அவசியமில்லை என்றாலும் வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வாழ்க்கை சுவையாக இருக்கக் குறிக்கோள் உதவுகின்றன. இதைச்செய்யப் போகிறேன் என்று தீர்மானம் செய்து செயல் செய்வது இன்றைய இன்பத்தை அனுபவிக்க நமக்கு உதவுகிறது.

### சாராம்சம்

*'நான் யார்?' என்ற கேள்விக்கான பதிலாக ஒரு கற்பனைக் கதை அனைவரது மனதிலும் இருக்கும். இந்தக் கதை முழுமை அடையவே அடையாது. கூடிய விரைவில் விரும்பியதை அடைந்து திருப்தியுடன் வாழ லாம் என்ற எதிர்பார்ப்புடன் அனைவரது வாழ்வும் மரணம் வரை துன்பத்துடன் கூடியதாகவே இருக்கும். இந்தத் துன்பத்தில் இருந்து விடுதலை பெறப் பிரம்மலோகம் செல்ல வேண்டும் என்ற குறிக்கோளுடன் மனிதர்களின் எதிர்பார்ப்பு தொடரும்.*

*எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் எப்போதும் இன்ப மாக முற்றுணர்ந்தோர்கள் வாழ்வார்கள். இவர்கள் மனதில் இருக்கும் கற்பனைக்கதையும் முழுமை அடையாது. எனவே துணைக் குறிக்கோள்களை முன்வைத்து எதிர் காலத்தை நோக்கிய பயணமாகத்தான் முற்றுணர்ந்தோர் களின் வாழ்வும் அமையும். ஆனால் மற்றவர்களைப்போல் அல்லாமல் முற்றுணர்ந்தோர்கள் என்றும் இன்பமாக வாழ்வர். இதற்குக் காரணம் மாயை செயல்படும் முறையை இவர்கள் அறிந்து இருப்பதுதான். 'நான் பரமன்' என்பதை அறிந்த இவர்கள் தங்கள் மனமும் உடலும் மாயை என்பதையும் அறிவார்கள். எனவே மனதில் தோன்றும் குறையுடன் கூடிய கற்பனைக்கதை, அதை நிறைவு செய்ய முயலும் துணைக் குறிக்கோள்கள், குறிக்கோள்களை அடையச் செய்யப்படும் செயல்கள் ஆகியவை நடத்தும் நாடகத்தை மாறாத இன்பத்துடன் இவர்கள் அனுபவிப்பார்கள்.*

### பயிற்சிக்காக

1. முதன்மைக் குறிக்கோள் எது?
2. துணைக் குறிக்கோள்கள் ஏன் முக்கியத்துவம் அற்றவை?
3. துணைக் குறிக்கோள்கள் முக்கியம் அற்றவை என்பதை அறிந்து கொள்வதால் என்ன பயன்?

**சுயசிந்தனைக்காக**

- *குறிக்கோள்கள் இல்லாவிட்டால் செயல்கள் நின்றுவிடாதா?*
- *மலை ஏறுபவர்கள் சில மணி நேரம் நிகழ்காலத்தில் இருந்து அனுபவிக்கும் இன்பமும், முற்றுணர்ந்தோர்கள் வாழ்வு முழுவதும் அனுபவிக்கும் இன்பமும் ஒன்றா?*



# 178

# பயணம் நிச்சயம்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 2 ● சூத்திரம் : 516 - 517**

**உ**லகம் என்ற விளையாட்டுத்திடலில் மாயையால் வடிவமைக் கப்பட்ட புதையல் வேட்டையே (treasure hunt) வாழ்க்கை. அனைத்து மக்களும் பிறந்தது முதல் இறக்கும் வரை பங்குபெறும் இந்தப் போட்டியில் மாயையால் மறைத்து வைக்கப்பட்ட புதையலைக் கண்டுபிடித்தவர்களே வெற்றிபெற்ற வர்கள். ஒவ்வொரு மனிதனுக்கும் தனிப்பட்ட ஒரு புதையல் இருக்கும் காரணத்தால் அனைவரும் வெற்றியடைவது சாத்தியமே. எனினும் பெரும்பாலோர் வாழ்வு முழுவதும் தேடிவிட்டு மரணத் துக்குப் பிறகாவது புதையல் கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் தங்கள் கடைசிக்காலத்தைக் கழிக்கிறார்கள். போட்டியில் வெற்றி பெற்ற முற்றுணர்ந்தோர்கள், 'நான் பலவாக ஆகுவேனாக' என்ற பரமனின் சங்கல்பத்தின் விளைவான இந்த விளையாட்டை இன்பமாக விளையாடுவார்கள். மற்றவர்கள் புதையலைக் கண்டு பிடிக்க முடியாமல் இருப்பதன் காரணங்களை இந்தப் பாடம் விவரிக்கிறது.

## விளையாட்டின் அமைப்பு

வெளிப்பார்வைக்கு மிகவும் சிக்கலானதாகத் தெரியும் இந்த விளையாட்டு உண்மையில் மிக எளிமையானது. ஏழுகடலைத் தாண்டி எரிமலைக்குள் புகுந்து பாதாளப் பைரவியுடன் போராடும் சிந்துபாத்தின் சாகசங்களை நாம் செய்யத் தேவை யில்லை. அவரவரின் முதுகில் கட்டப்பட்டிருக்கும் புதையலை எடுத்துக் கொள்வதுதான் விளையாட்டின் நோக்கம். இது இவ் வளவு எளிதானது என்பதை அறியாமல் புதையலைத் தேடி

மற்றவர்களின் பின்னால் மக்கள் அலைந்து கொண்டு இருக் கிறார்கள்.

வாழ்க்கையை ஒரு போராட்டமாகப் பார்க்கும் மக்கள் இது இவ்வளவு எளிதான விளையாட்டாக இருக்கும் என்று எதிர்பார்ப் பதில்லை. எனவே இந்த எளிமையான அமைப்பே வெற்றிக்குத் தடையாக இருக்கிறது. இந்தப் போட்டியில் வெல்ல அனாவசிய மாகப் போராடியதை நினைத்து முற்றுணர்ந்தோர்கள் வெட்கப் படுவார்களே தவிர அதை அவர்கள் ஒரு சாதனையாகக் கருதுவ தில்லை.

## விளையாட்டின் நோக்கம்

'எது புதையல்?', 'அந்தப் புதையலை அடைவதால் என்ன பலன்?', 'புதையலைக் கண்டுபிடிக்காவிட்டால் என்ன ஆகும்? முதலிய கேள்விகளுக்கான பதில் மக்களிடம் இருந்து மறைத்து வைக்கப்படவில்லை. அனைவருக்கும் புதையல் என்பது இன்பம் என்று சந்தேகம் இல்லாமல் தெரியும். மேலும் இன்பம் என்பது என்ன என்று தெரியாதவர்கள் யாரும் இல்லை. அனைவரும் அவ்வப்போது இன்பமாக இருந்து அதன் அருமையை அறிந்தவர்களே.

ஆனால் விளையாட்டுப்போட்டியின் ஆரம்பத்தில் விசில் சத்தம் கேட்டதும் ஓட ஆரம்பித்த காரணத்தால் நடப்பது ஓட்டப் பந்தயம் அல்ல என்று இவர்களுக்குத் தெரிவதில்லை. சுற்றி இருப்பவர்கள் அனைவரும் ஓடுவதால், இது என்ன விளையாட்டு என்று விசாரித்து அறிய யாருக்கும் நேரம் இருப்பதில்லை.

எனவே புதையல் வேட்டை என்ற விளையாட்டுக்குப் பதில் ஓட்டப்பந்தயம் என்ற விளையாட்டை எல்லோரும் விளையாடிக் கொண்டு இருக்கிறார்கள். பந்தயத்தில் வெற்றி பெற்றுவிட்டால் புதையல் கிடைத்துவிடும் என்ற அனுமானத்துடன் ஓடுபவர் களுக்கு மைதானத்தில் வெற்றிக்கோடு வரையப்படவே இல்லை என்று தெரிவதில்லை. எனவே பெரும்பாலோர் சோர்வு அடையும் வரை ஓடிக்கொண்டே இருப்பார்கள். ஒரு சிலர் மட்டுமே சிறிது காலம் ஓடிவிட்டு இதன் வெற்றிக்கோடு எங்கே இருக்கிறது?, வெற்றி பெற்றால் புதையலைப் பரிசாகப் பெறலாம் என்ற அனு மானம் உண்மையா? முதலிய கேள்விகளைக் கேட்க ஆரம்பிப் பார்கள்.

புதையலைக் கண்டுபிடிக்கத் தேவையான புத்திக்கூர்மையும் விடாமுயற்சியும் உள்ளவர்கள் மட்டுமே ஓட்டப்பந்தயத்திற்குப் பதில் புதையல் வேட்டை என்ற விளையாட்டை விளையாட ஆரம்பிப்பார்கள். சரியான விளையாட்டை விளையாடாத காரணத் தால் பெரும்பாலோர் விளையாட்டில் வெற்றி பெறுவதில்லை.

### *விளையாட்டில் உதவி*

ஒவ்வொருவருக்கும் தனியாக ஒரு புதையல் இருப்பது உண்மை என்றாலும் அதை அடையப் போட்டியில் வெற்றிபெற்ற வருடைய உதவி அனைவருக்கும் தேவை. ஆனால் பெரும்பான் மையானவர்கள் யாருடைய உதவியையும் கோருவதில்லை. வாழ்வில் அனைவரும் வெற்றியடையலாம் என்பதை அறியாத காரணத்தால் இவர்கள் மற்றவர்களைச் சகபோட்டியாளர்களாகக் கருதுவார்கள். மேலும் வெற்றி பெற்றவர்களை அடையாளம் காண் பதும் கடினம். எனவே முற்றுணர்ந்தோர்கள் அல்லது தீர்க்கதரிசி களின் உதவியைப் பெற்று வாழ்வில் வெற்றியை நோக்கி முன்னேறுபவர்கள் மிகச்சிலரே.

கருத்தரங்குகளில் பங்கேற்றுத் தனது அறிவை மேலும் அதிகப் படுத்திக் கொள்ள வேண்டும் என்பது மனிதனின் துணைக்குறிக் கோள்களை நிறைவேற்ற மட்டுமே உதவும். எப்போதும் இன்ப மாக இருப்பது எப்படி என்று முற்றுணர்ந்தோர்கள் காட்டும் வழி முறைகளை நன்றாகப் படித்து அறிவை அதிகப்படுத்திக் கொள்வதால் வாழ்வின் முதன்மைக் குறிக்கோளை அடைந்துவிட முடியாது. அடுத்த வருடம் முக்தி அடைந்துவிடலாம் என்ற எண்ணம் இப் போது அடைய வேண்டிய வெற்றியைத் தடைசெய்து விடுகிறது. எனவே முற்றுணர்ந்தோர்களும் தீர்க்கதரிசிகளும் செய்யும் உதவி பெரும்பான்மையான மக்களுக்குப் பயன் அளிப்பதில்லை.

### *விளையாட்டில் எதிரி*

போட்டியில் வெற்றி அடைவதைத் தடுக்கும் ஒரே எதிரி அவரவர் மனதில் உருவாகியிருக்கும் 'நான்' என்ற கற்பனைக் கதையே. தங்களின் துன்பத்துக்குக் காரணம் வெளி உலகில் இருக் கிறது என்றும் உலகை மாற்றி அமைத்தால்தான் இன்பமாக இருக்க முடியும் என்ற கட்டுக்கதை இந்தக் கற்பனையில் அடக்கம்.

தனது எதிரி தனக்குள்ளேயே இருப்பதை அறியாத காரணத்தால் பலர் தொடர்ந்து வெளி உலகில் போராடிக் கொண்டு

இருக்கிறார்கள். இந்த எதிரியை அடையாளம் காட்டுவதற்குத்தான் வாழ்வில் வெற்றிபெற்றவரின் உதவி தேவை. ஆனால் அனைத்துப் பிரச்சனைகளையும் கூடிய விரைவில் தீர்த்து இன்பத்தைப் பெற்றுத்தருவேன் என்று தொடர்ந்து ஏமாற்றிக்கொண்டு இருக்கும் இந்த எதிரியின் உறுதிமொழியை நம்பி பலர் வாழ்வு முழுவதும் காத்துக்கொண்டு இருக்கிறார்கள்.

### வெற்றிக்குத் தடை

'இன்பம் வேண்டும்' என்ற முயற்சிதான் வெற்றிக்குத் தடை. இருப்பது இன்பம் மட்டும்தான். அது அடையப்பட வேண்டிய ஒன்று என்பது நமது கற்பனை. நாம் நம்மையே தேடிக் கண்டு பிடிக்கவேண்டும் என்ற இந்தப் போட்டியில் அங்கும் இங்கும் ஓடி உலகப் பொருள்களில் இன்பத்தைத் தேடுவதில் பயன் இருக்காது. வேதங்களைப்படித்து அதன் உபதேசங்களைப் பின்பற்றுவதாலும் பயன் இல்லை. எப்போது தேட வேண்டிய அவசியம் இல்லை என்பதை உணருகிறோமோ அப்போதுதான் புதையல் நமக்குக் கிடைக்கும்.

தான் இன்பமாக இல்லை என்ற கற்பனை, நான் என்ற உணர்வின் அடிப்படையில் இயங்க நம்மை அனுமதிப்பதில்லை. நான் ஆனந்த மயமான பரமன் என்ற உண்மையை அறிய விடாமல் நான் என்ற கற்பனைக் கதை மனதில் நிறைந்து இருப்பதால் இந்த விளையாட்டு பலகாலம் தொடர்ந்து நடக்கிறது.

வாழ்வில் பிரச்சனைகளைத் தீர்த்துவிட்டால் இன்பம் கிடைத்துவிடும் என்ற எதிர்பார்ப்புடன் அனைவரும் போராடிக்கொண்டு இருப்பார்கள். ஒரு பிரச்சனை தீர்ந்தால் மற்றொரு பிரச்சனை உருவாகும் காரணத்தால் இவர்களின் போராட்டம் முடிவதில்லை.

நிகழ்காலத்தில் பிரச்சனைகள் என்று எதுவும் கிடையாது. எதிர்காலத்தில் என்ன நடக்குமோ என்ற கற்பனையும் கடந்த காலத்தில் நினைத்தது நடக்கவில்லையே என்ற ஏக்கமும்தான் பிரச்சனைகள். காலம் என்பதே கற்பனை என்பதால் வாழ்வில் பிரச்சனைகள் ஏதும் கிடையாது. எல்லோரும் எல்லாமும் பெற்று இன்பத்துடன் வாழ்வதற்குத் தடையாக இருப்பது மக்களின் மனமே.

பிரச்சனைகளை உருவாக்குவதே ஒவ்வொருவரின் மனதில் இருக்கும் நான் என்ற கற்பனைக்கதைதான். பிரச்சனைகள் ஏதும் இல்லாவிட்டால் அது மறைந்து விடும்.

உதாரணமாகக் காதல் வயப்பட்டு ஈருடல் ஓர் உயிராக வாழும் இருவர், தன்னை மறந்து எப்போதும் இன்பமாக இருப்பார்கள். ஆனால் இது வெகுநாட்களுக்கு தொடர்வது இல்லை. இதற்குக் காரணம் அவர்களின் மனம்.

உலகையே மறந்து காதலில் மூழ்கி இருப்பவர்கள்கூட அலுவலகம் செல்வது, தினசரி வேலைகளைச் செய்வது போன்ற செயல்களை ஒழுங்காகச் செய்வார்கள். வாழ்வு முழுவதும் இது போல் இன்பமாக இயங்குவது அனைவருக்கும் சாத்தியமே. போட்டியில் பெற்ற வெற்றியை நிரந்தரமாகத் தக்கவைத்துக் கொள்வதைத் தடை செய்வது அவர்கள் மனதில் வளர்ந்திருக்கும் நான் என்ற கற்பனைக்கதை.

காதலர்களின் இன்பத்துக்குக் காரணம் அவர்கள் நிகழ்காலத்தில் வாழ்வதுதான். மனதால் நிகழ்காலத்துக்குள் நுழையவே முடியாது. இன்பமாக இருக்கும் வரை 'இப்போது நான் மகிழ்ச்சியாக இருக் கிறேன்' என்ற எண்ணம் மனதில் தோன்றாது. இன்பம் நீடித்தால் நான் என்ற கற்பனைக்கதை வெறும் கற்பனை என்பது தெரிந்து விடும். எனவே இன்ப அனுபவம் ஏற்படுத்திய மாறுதல்களை மட்டுமே அறியும் மனம் தன் இருப்பை நிலை நாட்டப் பிரச்சனைகளை உருவாக்குகிறது.

இன்ப அனுபவத்தைக் கொடுக்கும் காதலரைத் தன்னுடன் வாழ்நாள் முழுவதும் இருத்திக்கொள்ள முயற்சி செய்ய வேண்டும் என்ற பிரச்சனையை உருவாக்கி இன்ப அனுபவத்துக்கு ஒரு முற்றுப்புள்ளி வைப்பது நான் என்ற கற்பனைக் கதை.

கனவில் ஏற்படும் துன்ப அனுபவங்கள் சுகமாக மெத்தையில் தூங்கும் இன்ப அனுபவத்தை மறைத்துவிடுகின்றன. அதேபோல 'இன்று என்னுடன் இனிமையாக இருப்பவரை என்றும் இப்படியே என்னுடன் இருத்திக்கொள்ள வேண்டும்' என்ற எண்ணம், இன்று இருக்கும் இன்பத்தைத் தடுத்துவிடுகிறது.

மனிதர்கள் நீடித்த இன்ப அனுபவம் பெறுவது காதலில் மூழ்கி இருக்கும் காலத்தில் மட்டும்தான். தேடியது கிடைத்தவுடன் ஏற்படும் மற்ற இன்ப அனுபவங்களை வெகு சீக்கிரம் நான் என்ற கற்பனைக்கதை முடிவுக்குக் கொண்டு வந்துவிடும்.

இப்போது கிடைத்த இன்பத்தை எப்போதும் கிடைக்க முயற்சி செய்கிறேன் என்று பிரச்சனைகளை உருவாக்கி, நிகழ்காலத்தை

மறுத்து இல்லாத எதிர்காலத்துக்கு நம்மை இழுத்துச் செல்வது நான் என்ற கற்பனைக்கதையே.

பிரச்சனைகள் எதுவும் இல்லாவிட்டால், 'போர் அடிக்கிறது' என்ற வடிவில் ஒரு பிரச்சனையை உருவாக்கி நிகழ் காலத்தில் இன்பமாக வாழ்வதை இந்தக் கற்பனைக் கதை தடை செய்து விடும். பிரச்சனைகள்தான் நான் என்ற கற்பனைக்கதையின் உயிர்நாடி. பிரச்சனைகள் எதுவும் இல்லாமல் நிகழ்காலத்தில் நிம்மதியாக வாழ ஆரம்பித்துவிட்டால் நான் என்ற கற்பனைக்கதை முடிவுக்கு வந்துவிடும். எனவேதான் தன்னிடம் இருக்கும் குறை யைச் சுற்றியிருக்கும் உலகத்தின் மீது ஏற்றி வைத்து உலகத்தை மாற்றி அமைத்தால்தான் இன்பமாக இருக்க முடியும் என்று இது நம்மை ஏமாற்றுகிறது.

உலகத்தை மாற்ற வேண்டும் என்ற ஆசை ஒரு பக்கமும் அந்த ஆசை நிறைவேறினால் நான் உலகத்தில் இருந்து வேறு பட்டவன் அல்ல என்பது தெரிந்துவிடும் என்ற பயம் மறுபக்கமும் தொடர்ந்து மனிதர்களைத் துன்பத்தில் ஆழ்த்துகின்றன.

முற்றுணர்ந்தோர்கள் இந்த எதிரியிடம் இருந்து நம்மைக் காப்பாற்ற வழி கூறினால் அதையும் ஒரு பிரச்சனையாக மாற்றி எதிர்காலத்தில் தான் நிச்சயம் முக்தி அடைந்து விடுவேன் என்று நம் கவனத்தைத் திசை திருப்பி நான் என்பதன் உண்மைப் பொருளை உணரவிடாமல் தடுப்பது இந்தக் கற்பனைக் கதைதான்.

தான் வேறு உலகம் வேறு என்ற பொய்யை உண்மை என்று நம்மை நம்பவைக்க இப்போது இருக்கும் அனைத்தையும் மறுத்து இல்லாத எதிர்காலத்துக்கு நம்மை அழைத்துச் செல்வதாகத் தொடர்ந்து பிரச்சனைகளை உருவாக்கும் இந்தக் கற்பனைக் கதை தான் இந்த விளையாட்டில் வெற்றி பெறுவதைத் தடுக்கும் ஒரே தடை.

### வெற்றிக்கு வழி

துன்பத்துக்குக் காரணம் அறியாமை என்பதைவிட அறியாமை தான் துன்பம் என்று நாம் உணர்ந்து கொண்டால் வெற்றி நிச்சயம். நான் என்ற கற்பனைக்கதை, 'நான் குறை உள்ளவன்' என்ற பொய்யைக் கூறி, குறையை நிறை செய்ய நேரம் வேண்டும் என்று எதிர்காலக் கற்பனையை உருவாக்கி, நாம் நிகழ்காலத்தில்

அனுபவிக்கும் இன்பத்திலிருந்து நமது கவனத்தைத் திசை திருப்புகிறது.

நாம் நாமாக இருக்க எதுவும் செய்யத்தேவையில்லை. காலத்தைக் கடந்து எப்போதும் மாறாமல் இருப்பதை எதிர்காலத்தில் தேடினால் கிடைக்காது. தேடுவதை நிறுத்தினாலே இப்போது இன்பமாக இருக்கிறோம் என்பதை நாம் உணர்வோம்.

ஆனால் அப்படி நிகழ்ந்துவிடாமல் நம்மைத் தடுப்பது நான் என்ற கற்பனைக்கதை. இப்போது அது குறையுடன் இருப்பதால் நாம் உடனே எதிர்காலத்துக்கு விரைந்து செல்ல வேண்டும் என்று அது நம்மை வற்புறுத்தும். இந்த வற்புறுத்தலுக்கு எவ்வித முக்கியத்துவமும் கொடுக்காமல் நிம்மதியாக நாம் இருக்கலாம்.

இருப்பதை ஏற்றுக்கொள்வதைக் கற்பனைக்கதை அனுமதிப்பதில்லை. எவ்வித முயற்சியும் இல்லாமல் அனைத்தையும் ஏற்றுக்கொள்வது தோல்வியில் முடியும் என்று அது கதை கட்டிவிடும். எனவே பல துணைக்குறிக்கோள்களை முன்வைத்து அவற்றை அடைய நாம் விரைந்து செயல்பட வேண்டும் என்று அறிவுறுத்தும்.

ஆனால் நிகழ்வுகள் நிகழ மனம் அவசியமில்லை. இந்தப் பிரபஞ்சத்தின் இயக்கத்தில் நமது மனதில் ஏற்படும் எண்ணங்களும் உடல் அளவில் செய்யப்படும் செயல்களும் ஒரு பகுதியாகும். நான் செய்கிறேன் என்ற கற்பனையைக் கற்பனை என்று உணர்ந்தவுடன் விளையாட்டில் வெற்றி கிடைத்துவிடும்.

இந்த விளையாட்டின் அமைப்பு, நோக்கம், எதிரி ஆகியவற்றைப் பற்றிய அறிவைப் பெறுவதுடன் இந்த உண்மைகளை உணர்ந்து கொள்வதே வெற்றிக்கு வழி. உணர்வது என்பது ‘இது வேண்டும், அது வேண்டாம்’ என்று பாகுபாடு செய்யாமல் இருக்கும் அனைத்தையும் அப்படியே ஏற்றுக்கொள்வது. ‘இது தவறு. இன்பத்தை அடைய நாம் தீவிரமாக முயற்சி செய்ய வேண்டும்’ என்று நான் என்னும் கற்பனைக் கதை உரத்த குரலில் கூவினாலும் அதையும் அப்படியே ஏற்றுக்கொள்வதுதான் வெற்றியின் ரகசியம். மனதில் நடமாடும் அனைத்து எண்ணங்களையும், உலகில் நடக்கும் அனைத்து இயக்கங்களையும், இது இப்படி இருக்க வேண்டும் என்ற எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் ஏற்றுக் கொள்பவர்களே இந்தப்போட்டியில் வெற்றி பெற்றவர்கள்.

## பார்வை ஒன்றே போதும்

விருப்பு-வெறுப்பற்ற பார்வை என்பது நான் பரமன் என்ற நிலையில் இருந்து ஏற்படுவது. இந்தப்பார்வையை எப்படிப் பெறுவது என்ற கேள்வியை நான் என்ற கற்பனைக்கதை எழுப்பி நமது கவனத்தைத் திசைத்திருப்ப முயலும். ஆனால் அந்த எண்ணத்தையும் அப்படியே ஏற்றுக்கொண்டு அதை மாற்ற முயலாமல் இருந்தால் புதையல் நமக்குக் கிடைத்துவிடும்.

புதையல் கிடைப்பது என்பது மற்ற விளையாட்டுகளில் கிடைக்கும் வெற்றியைப்போலத்தான் நமக்கு இன்பத்தைத் தரும். ஆனால் எப்போதும் ஆனந்தமாக இருக்கும் வழி புதையல் கிடைத்தவுடன் நமக்குப் புரிபட்டுவிடும். நான் என்ற கற்பனைக் கதையின் ஆரவாரத்துக்கு முக்கியத்துவம் எதுவும் கொடுக்காமல் அதை அப்படியே ஏற்றுக்கொள்ள நாம் கற்றுக்கொள்வோம். அடிப்படையில் எவ்வித மாற்றமும் இல்லாத நாம் மேலெழுந்த வாரியாகத் தெரியும் மாற்றங்களை வேண்டும் வேண்டாம் என்று இனம் பிரிக்காமல் ஏற்றுக்கொள்வதும் அவற்றுடன் எவ்விதத் தொடர்பும் இல்லாமல் இன்பமாக இருப்பவன் நான் என்பதை உணர்வதும்தான் வாழ்க்கைப்போட்டியில் நாம் பெறும் வெற்றி.

## வெற்றி பெற்றவுடன் இயக்கங்கள் நின்றுவிடாது

அனைத்தையும் அப்படியே ஏற்றுக்கொள்வது என்பது முயற்சியின்மை அல்லது சோம்பேறித்தனத்தைக் குறிக்காது. வாழ்வில் துணைக்குறிக்கோள்கள் எப்போதும் இருந்து கொண்டே இருக்கும். அடுத்தவாரம் அமைச்சரைச் சந்திக்க வேண்டும் என்று திட்டம் இடுவதும் அதற்கான முயற்சிகளில் ஈடுபடுவதும் தொடர்ந்து நடக்கும். ஆனால் நினைத்தது நடந்தால்தான் இன்பம் கிடைக்கும் என்ற எதிர்பார்ப்பு இருக்காது. ஏனெனில் என்றும் இருக்கும் இன்பம் தான் அனைத்து இயக்கங்களுக்கும் ஆதாரம் என்ற அறிவு மனதில் நிலைத்து இருக்கும். மேலும் மனதில் அவ்வப்போது நடமாடும் நான் என்ற கற்பனைக்கதை காணாமல் போய்விடாது. ஆனால் அதன் ஆதிக்கத்தில் இருந்து நாம் விடுதலைப்பெற்று இருப்போம்.

நான் ஆனந்தமான பரமன் என்ற உணர்வுடன் நாம் செயலாற்றும்போது நான் என்ற கற்பனைக்கதையின் 'நான் குறையுள்ளவன்' என்ற கூப்பாடு எடுபடாது.

## சாராம்சம்

உலகம் என்ற விளையாட்டுத்திடலில் இன்பம் என்ற புதையலை விரைவில் அடைந்து வாழ்வு முழுவதும் மக்கள் இன்பமாக இருக்க வேண்டும் என்பதுதான் அனைத்துச் சமயங்களின் நோக்கம். மனதைச் சமைத்து மக்கள் உண்மையை உணர ஒவ்வொரு மதமும் வெவ்வேறு வழிமுறைகளை வகுத்து இருப்பது போல் தோன்றினாலும் உண்மையில் அவை அனைத்தும் நான் என்ற கற்பனைக்கதை உலகத்தின் இயக்கத்திற்குக் காரணம் இல்லை என்பதைத்தான் போதிக்கின்றன.

வெளியுலகில் வேகமாகத் தேடலில் ஈடுபட்டிருக்கும் மக்களின் மனதில் அலைபாயும் எண்ணங்களின் வேகத்தைக் குறைத்து அமைதிப்படுத்துவதே அனைத்து வழிபாட்டு முறைகளின் அடிப்படை நோக்கம். தியானம் என்ற பயிற்சி மூலம் நான் என்ற கற்பனைக்கதை மனதில் வளர்ந்திருப்பதைச் சுட்டிக்காட்ட அவை முயன்ற போதும் பெரும்பான்மை மக்கள் மந்திரங்களின் ஒலிக்கு முக்கியத்துவம் கொடுத்து மந்திரங்களுக்கு நடுவே இருக்கும் அமைதியைக் கவனிப்பதில்லை.

இறைவனிடம் தன்னை ஒப்புக்கொடுப்பது, நான் என்ற கற்பனைக்கதையின் ஆதிக்கத்திலிருந்து விடுபடுவதற்காகவே என்பதை அறியாமல் அந்தக் கற்பனையை மேலும் மக்கள் வளர்த்திக்கொள்கிறார்கள். என்றும் இருக்கும் இறைவனின் அருளைப் பெற்று மரணத்துக்குப் பின் அவனது சாம்ராஜ்ஜியத்தில் நுழைய வேண்டும் என்ற கற்பனை அவர்களை ஆட்கொள்ளுகிறது.

எனவே, முக்தியை இப்போதே அடையாமல் அதை நோக்கிப் பயணம் செய்வதுதான் இவர்களின் வாழ்க்கையாக அமையும். இந்த விளையாட்டை அதில் வெற்றி பெற்றவர்கள் மட்டும் இன்பமாக அனுபவிப்பார்கள்.

### பயிற்சிக்காக

1. புதையல் வேட்டை உவமை மூலம் இந்தப் பாடம் கூறிய கருத்து என்ன?
2. விளையாட்டின் அமைப்பு யாது?
3. விளையாட்டின் நோக்கம் எது?
4. விளையாட்டில் உதவி அவசியமா?
5. விளையாட்டின் எதிரி யார்?
6. வெற்றிக்குத் தடையாக இருப்பது எது?
7. வெற்றி பெறும் வழி யாது?
8. வெற்றி பெற்றபின் விளையாட்டு தொடருமா?

### சுயசிந்தனைக்காக

❖ *முக்திவேண்டும் என்று தீவிர ஆசை உள்ளவர்கள் முக்தி அடைவார்களா?*

❖ *அறிவை அடையாமல் முக்தி பெற முடியுமா?*

**பிரம்ம சூத்திரம் நான்கு அத்தியாயங்கள் கொண்டது. ஒவ்வொரு அத்தியாயமும் நான்கு பாதங்கள் கொண்டது. உலகத்தின் இயக்கத்தைப் பரமனின் லீலையாகப் பார்த்து முற்றுணர்ந்தோர்கள் அனுபவிக்கும் இன்பத்தை விவரித்த நான்காவது அத்தியாயத்தின் இரண்டாம் பாதம், இத்துடன் முற்றுப்பெறுகிறது.**



179

# ஞானியின் பார்வை - ஏசு கிறிஸ்து

**அத்தியாயம் : 4 ● பாதம் : 3 ● சூத்திரம் :518**

''கேளுங்கள் தரப்படும், தட்டுங்கள் திறக்கப்படும், தேடுங்கள் கிடைக்கும்'' என்று கூறிய ஏசு கிறிஸ்துவின் பார்வையில், உலகம், கடவுள், மனிதன், துன்பத்திற்குக் காரணம், துன்பத்திலிருந்து விடுதலை அடையும் வழி, விடுதலை அடைந்தபின் அமையும் வாழ்வு ஆகிய ஆறு கருத்துக்களை இந்தப் பாடம் தருகிறது.

சூரியனை நோக்கிப்பயணம் செய்யும் ஒரு விண்வெளிக் கலத்தில் இருந்து ஒரு கோடி கிலோமீட்டருக்கு ஒரு தடவை சூரியனைப் புகைப்படம் எடுத்துப் பார்த்தால் ஒவ்வொரு படத்திலும் சூரியனின் அளவு வேறுபட்டிருக்கும். தூரத்தில் இருந்து எடுத்த புகைப்படத்தில் இருக்கும் சூரியன் அருகில் இருந்து எடுத்த படத்தில் இருப்பதைவிட மிகச்சிறிய அளவில் இருக்கும். ஆனால் அனைத்துப்படங்களும் காண்பிப்பது சூரியனையே.

அதுபோல ஆன்மீகப்பயணத்தின் ஆரம்பகட்டத்தில் இருப்பவர்கள் காணும் கடவுள், பயணத்தை முடித்த ஞானிகள் காணும் கடவுளில் இருந்து முற்றிலும் மாறுபட்டு இருந்தாலும் அனைவரின் பார்வையில் தென்படுவதும் கடவுளே. புகைப்படத்தில் இருப்பது தான் சூரியன் என்ற அறிவுடன் இருப்பவர்கள் எது சரியான புகைப்படம் என்று விவாதிப்பதுப் போல் வெவ்வேறு மதத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் கடவுள்தான் உண்மையானவர் என்று சாதிப்பார்கள். சரியான அறிவை அடையும் தகுதி அனைவருக்கும் இருப்பதில்லை. உண்மையான கடவுளை மக்களுக்கு அறிமுகம் செய்து வைக்க முயன்ற ஏசுவைப் பெரும்பான்மையான மக்கள் புரிந்து கொள்ளவில்லை.

தான் முழுவதுமாக அறிந்த கடவுளை ஏசு, மற்றவர்களுக்கு அவரவரின் அறிவுத்திறனுக்கு ஏற்ற வகையில் அறிமுகம் செய்து வைத்தார். கடவுள் சுவர்க்கத்தில் இருப்பதாகவும் அவரைத் துதித்தால் ஆனந்த வாழ்வை அடையலாம் என்றும் அவர் பற்று டையோர்களுக்குக் கூறினார். உனக்குள் இருக்கும் கடவுளே உன்னை வழிநடத்துகிறார் என்று அவர் கடவுளை அறிந்து கொள்ளும் தகுதியை அடைந்த முக்திவிழைவோர்களுக்குக் கூறினார். இந்த உண்மை புரியாமல் முன்னுக்குப்பின் முரணாகப் பேசி கடவுளை அவமதிக்கிறார் என்ற குற்றத்தை அவர் மேல் அரசு சுமத்தியது.

## உலகம்

உலகம் என்பது என்ன என்ற கேள்விக்கு ஒவ்வொரு மனிதனின் பதிலும் வேறுபடும். ஒவ்வொருவரும் தங்கள் ஐந்து புலன்கள் மூலம் சேகரிக்கும் வேறுபட்ட தகவல்களை தனித் தன்மை வாய்ந்த தங்கள் அறிவின் நிலைக்கு ஏற்ப வெவ்வேறு விதத்தில் பாகுபாடு செய்து புரிந்துகொள்வதுதான் இதற்குக் காரணம். தான் புரிந்துகொண்ட கருத்துத்தான் உண்மை என்ற பிடிவாதத்துடன் இருக்காமல் ஏசுநாதர் காட்டிய பாதையில் பய ணித்து அவரின் வாய்மொழிகளின் முடிவான அறிவைப் பெற்ற பின்புதான் உலகத்தைப் பற்றிய சரியான அறிவு ஏற்படும்.

புலன்களின் மூலம் பெறும் தகவல்களின் அடிப்படையில் மட்டுமே அனைத்து அறிவும் ஏற்படும். அனுமானம் (புகையைப் பார்த்து நெருப்பை அறிவது), உபமானம் (தெரிந்த பசுவை வைத்துத் தெரியாத குதிரையை அறிவது), அர்த்தாபத்தி (ஈரமான சாலையைப் பார்த்து மழை பெய்திருக்க வேண்டும் என்று அறிவது), அனுபலப்தி (காலியான பெட்டியைப் பார்த்துப் பணம் காணாமல் போனதை அறிவது), சப்தம் (படித்து அல்லது கேட்டு அறிவது) ஆகிய ஐந்து விதங்களில் நேரடியாக அனுபவித்து அறிய இயலாத பொருட்களைப்பற்றிய அறிவு ஏற்படும். இவையும் ஒருவருக்கொருவர் வேறுபடும்.

தான் அறிவது மட்டும்தான் சரி என்பது பற்றுடையோர்களின் அறிவு. இருக்கும் ஒரே உலகம் வேறுபட்டுக் காணப்படுகிறது என்ற அறிவு முக்தி விழைவோர்களுக்கு இருக்கும். தனது கருத்தை மற்றவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க் காமல் தனது பாதையில் முன்னேறினால் உலகம் ஒரு மாயை

என்று அறியலாம். முடிவான உண்மை ஒன்றுதான் என்பதால் அதை அறிந்தபின் எவ்வித மாறுபாடோ முரண்பாடோ இவ் வுலகில் தென்படாது. வெறும் வார்த்தைகளால் உலகம் உருவானது என்ற கருத்தைத்தான் ஆதியாகமத்திலே யோவான் 1:1 வசனம் ''ஆதியிலே வார்த்தை இருந்தது. அந்த வார்த்தை தேவனிடத்தில் இருந்தது. அந்த வார்த்தை தேவனாகவே இருந்தது'' குறிக்கிறது. மாயா சக்தியுடன் கூடிய பரமன் என்ற இறைவன்தான் இந்த உலகமாக நமக்குக் காட்சி அளிக்கிறான். இதை அறிந்தவர்கள் முற்றுணர்ந்தோர்.

### கடவுள்

''நானும் கடவுளும் ஒன்றுதான்'' என்பதை யோவான் வசனம் 10:30 கூறுகிறது. இது ஏசு நாதருக்கு மட்டுமின்றி அனைத்து மனிதர்களுக்கும் பொருந்தும். முதலில் ஏசு நாதரை மட்டும் கடவுளாக வழிபட்டு மனப்பக்குவம் பெற்றபின்தான் இந்த உண்மையை அறிய முடியும் என்பதை ''நான் என் பிதாவிலும், நீங்கள் என்னிலும், நான் உங்களிலும் இருப்பதை அந்நாளிலே நீங்கள் அறிவீர்கள்'' என்ற யோவான் வசனம் 14:20 கூறுகிறது. மேலும் மத்தேயு வசனம் 5:8 ''இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள். அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்'' என்று கூறுகிறது.

மிக அதிகப் பக்கங்கள் உடைய ஒரு புத்தகத்தைப் படித்து அதன் மையக்கருத்தை ஓரிரு வாக்கியங்களில் அறிந்து கொள்ள பின்வரும் ஆறு சோதனைகளைச் செய்ய வேண்டும். முகவுரை யும் முடிவுரையும் அந்தக் கருத்தை நிச்சயம் விளக்கியிருக்க வேண்டும். புத்தகம் முழுவதும் அந்தக் கருத்து அடிக்கடி சொல்லப் பட்டிருக்க வேண்டும். அந்தக் கருத்தை உண்மை என்று நிறுவ நிறைய முயற்சிகள் செய்யப்பட்டிருக்க வேண்டும். அந்தக் கருத்தை அறிந்துகொள்வதனால் ஏற்படும் பலன்களின் பட்டியல் தரப்பட்டிருக்க வேண்டும். அந்தக்கருத்து தனித்துவம் வாய்ந்ததாக இருக்க வேண்டும். கடைசியில் அந்தக்கருத்து மற்றவற்றைவிட உயர்ந்தது என்று புகழப்பட்டிருக்க வேண்டும்.

ஏசுவின் போதனைகள், அவரால் எழுதப்பட்ட ஒரே புத்தக மாக இல்லாமல் அவரது சீடர்களின் குறிப்புகளின் தொகுப்பாக அமைந்திருப்பதால் இந்த ஆறு சோதனைகளைச் செய்ய

இயலாது. எனவே, ஏசுநாதரால் விவரிக்கப்பட்ட உண்மைகளை பைபிளைப் படித்து அறிந்து கொள்வது சிரமம்.

பரமன் ஒருவனே இவ்வுலகமாக காட்சி அளிக்கிறான். ஐந்து புலன்களுக்கு மட்டுமே தென்படும் இந்த உலகம் ஒரு ஒளி-ஒலி காட்சி. இந்தக் காட்சிக்கு ஆதாரமாக இருக்கும் பரிசுத்த ஆவியை அறிந்து கொண்டால் உலகமே கடவுள் என்ற உண்மை புலப்படும். நாம் வாழ்வில் எப்போதும் கடவுளையே அனுப வித்துக் கொண்டு இருக்கிறோம். இந்த உண்மைகளைத்தான் ஏசு நாதர் போதிக்கிறார் என்பதை முற்றுணர்ந்தோர்கள் மட்டுமே அறிவர்.

### மனிதன்

உலகமே கடவுள் என்பதால் பரமன் என்கிற பரிசுத்த ஆவியை அறிய உலகப் பயணம் மேற்கொள்ளத் தேவை இல்லை. தான் யார் என்று அறிந்தாலே போதும். இறைவனைப் பிதாவாகவும் மனிதனைப் பிள்ளையாகவும் சித்தரித்து, இந்த உருவங்களுக்கு ஆதாரமாக இருப்பது பரிசுத்த ஆவி மட்டுமே என்று ஏசுநாதர் விளக்கியுள்ளார். இந்த உண்மையை அறியாமல், தன்னை இந்த உலகில் இருந்து வேறுபட்டவன் என்று எண்ணும் அகங்காரம் என்ற கற்பனைக் கதையை 'பாவி' என்று ஏசு குறிப்பிடுகிறார்.

### மனிதனின் வாழ்க்கை

தேன் எடுக்க மரத்தின் மீது ஏறிய மனிதன் புலியிடம் இருந்து தப்பக் கீழே இருந்த பாழுங்கிணறு ஒன்றில் குதித்தான். கிணற்றின் சுவற்றில் வெளிப்பட்டு இருந்த ஒரு மரத்தின் வேரை அவன் பற்றிக் கிணற்றுக்குள் விழுந்து விடாமல் அவன் தொங்கிக் கொண் டிருந்தான். அந்த வேரை ஒரு எலி கடித்து அறுத்துக் கொண்டி ருந்தது. அந்த எலியை நோக்கி நகரும் பாம்பு இவன் கை அருகே இருந்தது. மேலே ஏறினால் காத்துக்கொண்டிருக்கும் புலியிடம் அகப்படவேண்டும். கீழே விழுந்தால் பாறைகளில் அடிபட்டு இறப்பது உறுதி. கீழே குதிக்கும்பொழுது அவன் ஒரு தேன் கூட் டைக் கலைத்து விட்டிருந்ததால் தேனீக்கள் அவனைக் கொட்டத்துவங்கின. இந்த நிலையில் ஒரு துளி தேன் மேலிருந்து தற்செயலாக அவன் வாய்க்குள் விழுந்தது.

பாழுங்கிணற்றில் உயிருக்கு உசலாடும் மனிதன் தன் நாக்கில் விழுந்த ஒரு துளி தேனை ரசித்துச் சுவைப்பதுபோல நான் என்ற கற்பனைக்கதையின் பிடியில் வாழ்க்கை முழுவதும் துன்பப்படும் மனிதர்கள் எப்போதேனும் தன்னை மறந்த நிலையில் மட்டும் சில கணங்கள் ஆனந்த அனுபவங்களைப் பெறுகிறார்கள். நான் என்ற கற்பனைக்கதையை ஆதாரமாக நினைத்து வாழ்வது துன்பம். பாவியாக இருக்கும் வரை இந்தத் துன்பத்தை மாற்றமுடியாது. தான் கடவுள் என்று அறியாத அனைவரும் பாவிகள்தான் என்பதையும், பாவத்தின் சம்பளம் மரணம் என்பதையும் ஏசு எடுத்து கூறினார். இந்த உலகம் வெறும் வார்த்தையால் ஆனது என்பதை அறிந்தவர்கள் உடலை தான் என்று நினைப்பதில்லை என்பதால் அவர்கள் அனைவரும் மரணத்தை வெல்வார்கள். (யோவான் 1:12-13)

## துன்பங்களுக்குக் காரணம்

பாவியாக இருப்பது மட்டுமே துன்பங்களுக்குக் காரணம். எவ்விதச் செயலையும் செய்ய இயலாத இந்த நான் என்ற கற்பனைக்கதை உலகப் பாரம் அனைத்தையும் சுமப்பதாக நினைப்பது அறியாமை. வருத்தப்பட்டுப் பாரம் சுமப்பவர்களே என்னிடம் வாருங்கள் என்று ஏசு அழைக்கிறார். அனைவரது துன்பங்களையும் தான் சிலுவையைத் தூக்கி ஏற்றுக்கொண்டு விட்டதால் மக்கள் நிம்மதியாகவும் ஆனந்தமாகவும் வாழலாம் என்று அவர் கூறுகிறார்.

## துன்பங்களை நீக்க வழி

நான் என்ற கற்பனைக்கதையை உண்மை என்று நம்பும் பாவியாக இல்லாமல் இறைவனிடம் நம்மை ஒப்புக்கொடுப்பதன் மூலம் துன்பங்களிலிருந்து முழுதாக நாம் விடுதலை பெறலாம். யோவான் வசனம் 8:32 ''சத்தியத்தை அறிவீர்கள். சத்தியம் உங்களை விடுதலை ஆக்கும்'' என்று கூறுகிறது.

உன்னுடையது என்று இருக்கும் அனைத்தையும் துறந்து என்னைப் பின்பற்று. நான் உனக்குச் சுவர்க்கத்தைக் காட்டுகிறேன் என்றார் ஏசு (மத்தேயு 19:21). இருப்பதனைத்தும் இறைவனது என்பதை அறியாமல் உனது எனது என்று சொந்தம் கொண்டாடும் வரை துன்பத்தை அகற்ற முடியாது.

அருந்ததி நட்சத்திரத்தைச் சுட்டிக்காட்ட, அதன் பக்கத்தில் இருக்கும் சற்று அதிக ஒளியுள்ள ஒரு நட்சத்திரத்தைக் காட்டி, அதைப் பார்க்கும் அளவுக்குக் கண் பார்வை குவிந்த பின் அருந்ததியைக் காட்டித்தருவது போலக் கண்ணுக்குத்தெரியாத கடவுளைக் காட்டித் தர அருகில் இருக்கும் தன்னைக் காட்டித் தன்னைக் கடவுளின் மகனாக அறிமுகம் செய்துகொண்டார். அதன்பின் அனைவரும் தனது சகோதரர்கள் (எபிரேயர் 2.11) என்பதனால் அனைத்தும் கடவுளின் உருவமே என்பதை ஏசு எடுத்துரைத்தார். தான் பாவி என்பதை முதலில் ஏற்றுக்கொண்டு அதன் பின் ஏன் நான் பாவியாக இருக்கிறேன் என்பதை அறிய ஆசைப்படுபவர்கள் மட்டுமே உண்மையை அறியும் தகுதி உடையவர்கள்.

பாவி எனப்படுபவன் தன் மனதினுள் உருவாகியிருக்கும் கற்பனைக்கதை என்பதை அறிந்தவுடன் உள்ளே இருந்து அனைவரையும் உயிர்ப்பிக்கும் பரிசுத்த ஆவி மட்டுமே நிரந்தரமானது என்பதை அறியமுடியும். மாறும் தன்மையுள்ள உடலையும் மனதையும் நான் என்று அறிபவர்கள் இந்த வாழ்வை தொலைத்து விடுவது உறுதி. இவற்றை விடுத்து இறைவனைச் சரணடைபவர்கள் மரணத்தை வென்று நிரந்தரமாக வாழ்வார்கள் என்ற கருத்தைத்தான் 'யாரெல்லாம் தங்கள் வாழ்வை எனக்கு அர்ப்பணம் செய்கிறார்களோ அவர்கள் நிரந்தரமான வாழ்வை அடைவார்கள் என்ற வசனம் (மத்தேயு 16:25) குறிப்பிடுகிறது. மேலும் இந்த உலக வாழ்க்கையைத்தான் சுவர்க்க வாழ்வாக மாற்றிக்கொள்ள வேண்டுமே அன்றி வேறு ஒரு சுவர்க்கம் இல்லை என்பதை ஏசு எடுத்துக்கூறுகிறார். லூக்கா 17.20-21 வசனங்களில் "தேவனுடைய ராஜ்யம் உங்களுக்குள்ளே இருக்கிறதே" என்ற உண்மையை அவர் தருகிறார்.

நாள் முழுவதும் வானத்தின் வண்ணம் மாறிக்கொண்டே இருந்தாலும் அதன் ஆதாரமான ஆகாயம் வண்ணம் ஏதும் இன்றி மாறாமல் தொடர்ந்து இருப்பதுபோலத் தொடர்ந்து மாறும் உடல்களின் ஆதாரமாக மாறாமல் இருப்பது பரிசுத்த ஆவி. நான் என்ற கற்பனைக்கதையின் பிடியில் இருந்து விடுபட்டுப் பரிசுத்த ஆவி நான் என்று உணர்ந்தால் அனைத்துத் துன்பங்களில் இருந்தும் உடனடியாக விடுதலைக் கிடைக்கும். பாவிகளின் எண்ணங்கள் தான் ஒரு தனிமனிதன் என்ற கற்பனையின் அடிப்படையில் உருவானது என்பதால் துன்பங்களுக்கு வழிவகுக்கும். அவ்வாறில்லாமல் ஆவியின்படி நடக்கிறவர்கள் ஆவிக்கு உரியவைகளைச் சிந்திக்கிறார்கள் (ரோமர் 8.5).

கண்டவர் விண்டிலர். விண்டவர் கண்டிலர். உண்மையை அறிந்தவர்கள் ஒன்றான இறைவனைப் பிளவு செய்வதில்லை. நீ வேறு நான் வேறு என்று பேதம் செய்பவர்கள் உண்மையை அறியாதவர்கள். துன்பங்களுக்குக் காரணமான அறியாமையை அகற்றி உள்ளதை உள்ளவாறு அறியும் அறிவுத்திறனை அடைவது மட்டுமே துன்பங்களை நீக்கும் வழி.

## இன்பவாழ்வு

பரமனை அறிவதே நித்ய ஜீவன்(யோவான் **17.3**). பாவி யான கற்பனைக்கதை நான் அல்ல என்று உணர்ந்த அதேக் கணத்தில் நாம் மரணத்தை வென்று விடுவோம். (கொரிந்தியர் **15.51-57**, யோவான் **11.26**).

வாழ்வில் துன்பங்கள் என்பது கற்பனையே. துன்பங்களைச் சுமப்பவன் நான் என்ற அறியாமையை அகற்றச் சிலுவையின் பாரத்தைச் சுமந்த கர்த்தரை அறிந்தவுடன் பாவங்களில் இருந்து விடுபட்டு இன்ப வாழ்வை நித்தியமாக அனுபவிப்போம்.

### சாராம்சம்

*கல்லைக்கண்டால் நாயைக்காணோம். நாயைக் கண்டால் கல்லைக்காணோம். கல்லினால் செய்யப்பட்ட நாயின் சிலையைப் பார்ப்பவர்களின் நிலை இதுதான். அதேபோல உலகத்தைமட்டும் பார்ப்பவர்கள் கண்களுக்கு உலகமாகக் காட்சி அளிக்கும் கடவுள் தென்படுவதில்லை.*

*உண்மையை எடுத்து உரைத்த ஏசுவின் வார்த்தை களை அவரவர் தங்கள் அறிவுத்திறத்துக்கு ஏற்றாற்போல் புரிந்து கொள்வதால் அனைவராலும் உண்மையை முழுமையாக உணர முடிவதில்லை. ஆனாலும் ஏசு காண்பித்த வழியில் பயணம் செய்பவர்கள் கூடியவிரைவில் மரணமில்லாப் பெருவாழ்வை அடைவார்கள்.*

### பயிற்சிக்காக

1. மக்களுக்கு அறிவு ஏற்படுவது எப்படி?

2. ஒரு புத்தகத்தின் மையக்கருத்தை அறிந்து கொள்ள நாம் செய்ய வேண்டிய ஆறு சோதனைகள் யாவை?

3. பரிசுத்த ஆவி, தந்தை, மகன் ஆகிய மூவருக்கிடையே உள்ள உறவு என்ன?

4. கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர் என்பதற்குப் பொருள் என்ன?

5. கல்லைக்கண்டால் நாயைக் காணோம் என்பதற்குப் பொருள் என்ன?

### சுயசிந்தனைக்காக

❖ *ஐந்து புலன்களை உபயோகிக்காமல், பாடத்தில் விவரிக்கப்பட்ட ஐந்து வழிகளில் மட்டுமே ஏதேனும் அறிவைப் பெற முடியுமா?*

❖ *பைபிள் என்ற நூலை ஆதாரமாகக் கொண்டு பல மதப்பிரிவுகள் இருப்பதற்குக் காரணம் என்ன?*

❖ *விவேகானந்தர் ஏசு கிறிஸ்துவைப்பற்றி எழுதிய கருத்துக்களைப் படிக்கவும்.*

❖ *பைபிள் வசனங்களை* <https://wordproject.org/bibles/tm> *ல் படிக்கவும்.*



180

# ஞானியின் பார்வை -

*Dr. விஜய் S சங்கர், MD PhD.*

**அத்தியாயம் : 4 ● பாதம் : 3 ● சூத்திரம் : 519**

**வா**ர்த்தையில் இருந்தே உலகம் உருவானது என்ற உண்மையை *"அனைத்தும் ஆத்மாவின் பெயர்கள் மட்டுமே"* என்ற மந்திரத்தின் மூலம் ஐதரேய உபநிஷதம் (3.2) கூறுகிறது. மாயையான இந்த உலகத்தை ஒரு ஒளி-ஒலி காட்சி என்று வர்ணிக்கும் டாக்டர் விஜய் சங்கரின் கருத்துக்களை இந்தப் பாடம் தருகிறது.

### மனிதனின் துன்பத்துக்குக் காரணம்

தான் செயல்களைச் செய்பவன் என்ற எண்ணம் மனிதனுக்கு இருப்பதால் மட்டுமே அவன் துன்பம் அடைகிறான். மனதில் என்ன எண்ணங்கள் எப்போது தோன்றும் என்பதும் அதில் எந்த எண்ணங்கள் செயலாக மாறும் என்பதும் அவனது கட்டுப் பாட்டில் இல்லை. 'செயல்' என்பதே மனித மனத்தின் கற்பனை.

### இல்லாத உலகம்

உலகம் என்ற ஒளி-ஒலி காட்சி, வெள்ளித்திரைமேல் காட்டப் படும் திரைப்படம்போலத் தொடர்ந்து மாற்றம் அடைந்து கொண்டு இருக்கிறது. திரைப்படத்தில் ஒளி, ஒலி தவிர வேறு ஒன்றும் இல்லை. ஒளியையும் ஒலியையும் ஒன்று சேர்த்து இடம், காலம், உருவங்கள், எண்ணங்கள், வார்த்தைகள், செயல்கள் ஆகிய வற்றைக் கற்பனை செய்து கொண்டு உணர்ச்சிகளை மனித மனம் உருவாக்குகிறது. வில்லன் கதாநாயகியைக் கொலை செய்யப் போகிறான் என்பது வெறும் கற்பனை மட்டுமே. ஏனெனில் உண்மையில் இருப்பது ஒளி-ஒலி மட்டுமே.

இந்தத் திரைப்பட உவமை வாழ்வுக்கு முற்றிலும் பொருந்தும். திரையில் தோன்றும் கதாபாத்திரங்கள் தான் செயல்களைச் செய்வதாக எண்ணுவதுபோல் தன் வசமின்றி இயங்கும் உடலின் (ஒளி) மாற்றங்களையும் மனதின் (ஒலி) மாற்றங்களையும் தனது செயல்களாக மனிதன் நினைக்கிறான். தோன்றுவதும் மறைவதும் தன் கையில் இல்லாத போது இடைப்பட்ட வாழ்வு மட்டும் தன் கட்டுப்பாட்டில் இருப்பதாக நினைப்பது அறியாமை. நினைவு தெரிந்த நாள் முதல் மரணம் வரை இந்த அறியாமை தொடர்வதால் மனிதன் தன் சுயமுயற்சியால் வாழ்ந்து கொண்டு இருக்கிறேன் என்ற கற்பனை, உண்மைபோலக் காட்சி அளிக்கிறது.

நீள அகலம் மட்டுமே உடைய திரையில் உலகம் முப் பரிமாணத்துடன் தெரிவது போல ஒருங்கிணைந்த மாற்றத்தை (singular movement) நாம் பிரபஞ்சமாகப் பார்க்கிறோம். ஒலி பெருக்கியிலிருந்து வரும் சப்தத்தைத் திரையில் தோன்றும் வெவ் வேறு கதாபாத்திரங்கள் பேசுவதுபோல நாம் பார்க்கிறோம். அது போல வெவ்வேறு அலைவரிசைகளில் நடக்கும் ஒருங்கிணைந்த மாற்றத்தை நாம் வார்த்தைகளாகவும் எண்ணங்களாகவும் அறிகி றோம்.

காட்டப்படும் திரைப்படத்தில் ஒன்றி அந்தக் கதையை உண்மையான வாழ்க்கை என்று எண்ணுவதுபோல ஒருங் கிணைந்த மாற்றத்தை நாம் உலகமாகப் பார்க்கிறோம்.

### கற்பனையான வாழ்வு

வாழ்க்கை என்பது பிறப்பில் தொடங்கி இறப்பில் முடிகிறது என்பது நமது கற்பனையே. நமது உடலில் உள்ள அனைத்து அணுக்களும் தொடர்ந்து மாறுகின்றன. இந்த மாற்றம் நாம் பிறப்பதற்கு முன்பும் இருந்தது; இறந்த பின்னும் தொடரும். ஆதி அந்தம் இல்லாத ஒரு மாற்றத்தில் தொடக்கம்-முடிவு என்பதை வரையறுக்க முடியாது.

சுழலும் சக்கரத்தில் எந்த வித நியாயமும் இன்றி ஏதோ ஒரு புள்ளியை ஆரம்பம் என்று கற்பனை செய்து அதன் பின் சக்கரத்தின் சுழற்சியைக் கணக்கிடுவது போல நாம் நம் வயதைக் கணக்கிடுகின்றோம். அனைவரது விடையும் ஒத்து இருப்பதால் பொய் உண்மை ஆகிவிடாது. உலகம் என்ற ஒளி ஒலி காட்சியில் தனிமனிதர்கள் என்று யாரும் இல்லை.

### *அனைத்தும் மாயை*

இருப்பது ஒருங்கிணைந்த மாற்றம் அல்லது மாயா சக்தியுடன் கூடிய பரமன் மட்டுமே. இருக்கும் அந்த ஒன்றை நாம் உலக மாகவும் வாழ்க்கையாகவும் தவறாக அறிகிறோம். பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும் வெவ்வேறு அலைவரிசையில் (frequency) வெவ்வேறு அழுத்தத்துடன் (intensity) வெளியாகும் ஒளி-ஒலி களின் தொகுப்பே. திடமான பொருள் என்று எதுவும் கிடையாது. போட்டான் (photon) என்ற ஒரே ஒரு ஒளித்துகளை மட்டுமே நம் கண்ணால் ஒரு கணத்தில் பார்க்க முடியும். தொடர்ந்து தென்படும் இந்த ஒளித்துகள்களை ஒன்றாகக் கோர்த்து வெவ்வேறு உருவங் களை மனம் கற்பனை செய்துகொள்கிறது.

இதுபோல் கற்பனை செய்வதற்கு ஒலி அவசியம். ஒலியில் இரண்டு வகை உண்டு. காதினால் கேட்கப்படகூடிய ஒலி; கேட்க முடியாத ஒலி. எண்ணங்கள் என்பவை கேட்க முடியாத ஒலி வகையைச் சாரும். இவ்விரண்டு வகை ஒலிகளுக்கும் பொருள் கிடையாது. பொருளைக் கற்பனை செய்துகொள்வது மனித மனமே.

எவ்வளவுதான் முயன்றாலும் நம்மால் நாம் ஆறு மாதக் குழந்தையாக இருந்த போது நடந்த நிகழ்வுகளை நினைவுகூற முடியாது. ஏனெனில் நிகழ்வுகள் என்று எதுவுமே இல்லை. நிகழ் வுகள் இருப்பதாகக் கற்பனை செய்து கொள்வது குழந்தைக்குச் சாத்தியம் இல்லை. ஏனெனில் அர்த்தம் இல்லாத 'அம்மா' என்ற ஒரு ஒலியைப் பிரிக்கமுடியாத ஒளித்தொகுப்பில் ஒரு குறிப்பிட்ட உருவத்துடன் சம்பந்தப்படுத்தி இவள் தன் தாயார் என்ற கற்ப னையை வளர்த்திக்கொள்ள எண்ணங்கள் முதிர்ச்சி (sophistication) அடைவது அவசியம்.

இதனாலேயே வார்த்தையிலிருந்து உலகம் பிறந்தது என்று கூறப்படுகிறது. அம்மா என்ற வார்த்தையின் ஒலியை ஒரு குறிப் பிட்ட உருவத்துடன் ஒன்றுபடுத்தி அம்மா என்ற எண்ணம் உருவாகும் பொழுதுதான் உலகம் உருவாக ஆரம்பிக்கிறது. இது போல எவ்வித உறவும் இல்லாத ஒளி-ஒலி தொகுப்பை ஒன்று டன் ஒன்றைச் சம்பந்தப்படுத்தி, எண்ணங்களால் - அதாவது வார்த்தைகளால் - ஆன ஒரு உலகை மனித மனம் சிருஷ்டிக்கிறது.

கண்ணுக்குத் தெரிவதை நாம் பார்ப்பதில்லை. மனதுக்குத் தோன்றுவதைத்தான் நாம் பார்க்கிறோம். நம் கண்ணுக்குத் தெரிவது

ஒரே ஒரு ஒளித்துகள் மட்டுமே. அவற்றை ஒவ்வொன்றாகக் கோர்த்து ஒரு பொருளைப் பார்ப்பதற்கு எண்ணங்கள் அவசியம். மரம், வீடு, மனிதன் என்று வெவ்வேறு பெயர்களைக் கற்பனை செய்து மனதில் சேர்த்து வைத்து இருப்பதால் பார்க்கும் ஒளித் துகள்களை சிரமமின்றிக் கோர்த்து வெவ்வேறு பொருள்களாக நாம் பார்க்கிறோம். உண்மையில் இருப்பது பிரிக்கமுடியாத இடைவெளி இல்லாத ஒரே ஒளி-ஒலி தொகுப்பு மட்டுமே.

கேட்கும் ஒலி இடைவெளி என்று ஒன்று இருப்பதாக நம்மை நம்பவைக்கிறது. வெளியில் இருந்து ஒலி உருவானதாக வேதம் கூறுவதை ஒலியில் இருந்து வெளி உருவானதாகக் கூட எடுத்துக் கொள்ளலாம். காரண காரியம் என்பதே நமது கற்பனை. இரு காதுகள் மூலம் பதிவாகும் ஒலி வெவ்வேறு இடங்களில் இருந்து வருவதாக நினைப்பது மனம். இவ்வாறு வெளி என்பது உரு வாகும்பொழுது அதனுடன் காலம் என்பதும் உருவாகிறது.

காலம் இருப்பதற்கு வெளி அவசியம். வெளியை உணருவதற்குக் காலம் அவசியம். இருப்பது இந்தக்கணத்தில் தோன்றும் ஒளி-ஒலி மட்டும்தான். இதை இடம், காலம், பொருள் என்று பிரிவினை செய்வது மனித மனம். மனித மனதில் தோன்றும் எண்ணங்களாலேயே இந்த உலகம் இருப்பது போலத் தென்படுகிறது. ஆனால் இதுபோல் உலகத்தை உருவாக்குவது கூட மனிதனின் செயல் அல்ல. ஏனெனில் செயல் என்று எதுவுமே இல்லை. காரண காரியங்களும் இல்லை. எண்ணங்கள் என்பவையும் ஒலியின் வடிவங்களே. எனவே இல்லாத உலகம் இருப்பதாக மனித மனம் நம்புவதும் மாயையே. எனவே, துன்பத்திலிருந்து விடுதலை பெற வேண்டும் என்ற எண்ணமும், அனைத்தையும் அறிந்து கொண்டுவிட்டதாக ஏற்படும் எண்ணமும் இந்த ஒளி-ஒலிகாட்சியின் ஒரு பகுதியே.

ஆக, பார்க்கப்படும் பொருள், பார்ப்பவன், பார்வை ஆகிய மூன்றும் ஒன்றே. பெயரில்லாத அந்த ஒன்றைப் பரமன் என்று பெயரிட்டுப் பரமனை அறிய முயலும் முக்திவிழைவோர்களும் தாங்கள் உருவாக்கிய மாயையின் பிடியிலேயே இருக்கிறார்கள். மனதில் தோன்றும் எண்ணங்களுக்கும் தனக்கும் எவ்வித உறவும் இல்லை என்பதை அறிந்த முற்றுணர்ந்தோர்கள் துன்பம் அடைவது இல்லை.

நான் என்ற கற்பனைக்கதையின் பிடியில் செயல்படும் பற்றுடையோர்கள் தனக்கும் தான் அமர்ந்திருக்கும் நாற்காலிக்கும்

எவ்வித வித்தியாசமும் இல்லை என்பதை அறிவதில்லை. திரையில் தெரியும் திரைப்படத்தைப்போல, இருப்பது பிளவுபடாத ஒரே ஒளி-ஒலி காட்சி. உலகம் என்பது ஒரு கற்பனை.

### காலமும் வெளியும் மனதின் கற்பனை

பிரபஞ்சத்தின் அளவு எவ்வளவு பெரிதாக இருந்தாலும் அது முழுவதும் இருப்பது இந்தக்கணத்தில் மட்டும்தான். காலம் எவ்வளவு நீண்டதாக இருந்தாலும் அது இருப்பது இந்தக் கணத்தில் மட்டும்தான்.

திரையில் தோன்றும் திரைப்படத்துடன் உலகை ஒப்பிடும் போது அனைத்தும் ஒரே ஒளி-ஒலி தொகுப்பு என்ற கருத்தைப் புரிந்து கொள்ளலாம். ஆனாலும் அந்தத் திரை நீள அகலங்களுடன் இருப்பதாலும் படம் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் தொடங்கி ஓரிரு மணி நேரத்தில் முடிந்துவிடும் என்பதாலும் காலம்-வெளி ஆகிய இரண்டும் கற்பனை என்ற கருத்து புரிவதில்லை. அடுத்தடுத்துத் தென்படும் எவ்வித அசைவும் இல்லாத நிழல் படங்களின் தொகுப்புதான் திரைப்படம். வேகமாக மாறும் நிழல் படங்களைப் பார்க்கும் திறன் கண்ணுக்கு இல்லாததால் அவற்றை ஒரு திரைப்படமாக நாம் பார்க்கிறோம். அது போல இருப்பது இந்தக் கணம் மட்டும் தான். கணம் என்பது நிமிடம், வினாடி என்பது போன்ற கற்பனையான காலத்தின் அளவு அல்ல. ஒளி-ஒலியுடன் கூடிய ஒரு கணம், முழுமையானது. காலத்துக்கு அப்பாற்பட்ட இந்தக் கணத்தை, மாயையுடன் கூடிய பரமன் என்றும் கூறலாம்.

*"வார்த்தைக்கும் மனதுக்கும் எட்டாதவன் பரமன்"* என்று கேன உபநிஷத மந்திரம் (**1.3**) கூறுகிறது. வார்த்தை என்பதும் எண்ணம் என்பதும் வெவ்வேறு ஒலி வடிவங்கள். பொருள் இல்லாத ஒளியுடன், அர்த்தம் இல்லாத ஒலியைச் சம்பந்தப் படுத்திக் கற்பனையான ஒரு உலகத்தை வார்த்தைகளால் உரு வாக்கி அதில் வாழ்ந்து கொண்டிருக்கும் நான் என்ற கற்பனைக் கதையால் இந்தக்கணத்தினுள் எட்டி பார்க்க முடியாது.

திரைப்படம் பார்க்கும் உவமையே கால தேசத்திற்குள் அடங்கியது. படத்தில் தெரியும் காட்சி மனதில் பதிவாகி உணர்வு களை உண்டாக்கச் சிறிது நேரம் ஆகும். அதுபோல் பிளவுபடாத ஒளித்தொகுப்பின் மாற்றங்களை ஒலியுடன் சேர்த்து இல்லாத பொருளை உண்டாக்க நம் மனதுக்குச் சிறிது நேரம் ஆகும்.

அதாவது நம் மனதில் தோன்றும் எண்ணங்கள் நடந்து முடிந்த ஒளி மாற்றங்களின் வர்ணனை. நிகழ்காலத்தில் நடைபெறும் வாழ்வு என்னும் ஒளி-ஒலி காட்சியில் அதைபற்றி நம் மனதில் தோன்றும் வர்ணனையும் ஒரு பகுதி.

கடந்தகாலத்தைப் பார்க்க முடியாது. ஆனாலும் நாம் பார்க்கும் நட்சத்திரம் நான்கு வருடங்களுக்கு முந்தையது என்றும் அது இப்போது அழிந்து போனால் நான்கு வருடங்களுக்குப் பிறகுதான் நமக்குத் தெரியவரும் என்றும் வானவியல் அறிஞர்கள் கூறுவதை நாம் ஏற்றுக்கொள்கிறோம். ஏனெனில் இது போன்ற பொய்களை உண்மை என்று ஏற்காவிடில் நாம் நம் கற்பனையால் உருவாக்கிய மாயமான உலகம் உடைந்து போய்விடும்.

## *மனம் தேவையில்லை*

வாழ்க்கையை வாழ மனம் தேவை இல்லை. மனதில் தோன்றும் எண்ணங்கள்தான் நம் வாழ்க்கையைத் தீர்மானிக்கின்றன என்பது மூடநம்பிக்கை. தண்ணீர் குடிக்க வேண்டும் என்ற எண்ணம் முதலில் தோன்றியபின் தண்ணீர் குடிக்கும் செயலை நாம் செய்கிறோம் என்பதனால் மனம் உடலை ஆட்சி செய்கிறது என்று முடிவு செய்யக்கூடாது. ஒருங்கிணைந்த ஒளி-ஒலி மாற்றங்கள் நிகழ்வது இந்தக் கணத்தில் மட்டும்தான். அந்த மாற்றங்களை முன்பு பின்பு என்று வரிசைப்படுத்தி அதை ஒரு செயலாகப் பார்ப்பதற்கு காரணம் மாயை. நாம் நம் வாழ்க்கையை நமது முயற்சியால் வாழ்கிறோம் என்ற நம்பிக்கையை ஏற்படுத்த, நாம் நினைத்தது நடக்கிறது என்பது போன்ற நாடகம் நம் கற்பனையில் உருவாகிறது.

திரையில் மனிதர்களோ வாழ்வோ கிடையாது. இருப்பது வெறும் ஒளியும் ஒலியும் மட்டுமே. மனிதர்கள் செயல்கள் செய்வதாகத் தோன்றுவது வெறும் கற்பனையே.

அனைத்து மாற்றங்களும் இந்தக்கணத்தில் மட்டுமே இருக்கின்றன. மனதில் ஏற்படும் எண்ணங்கள் அனைத்தும் இந்தக் கணத்திலேயே ஏற்படுகின்றன. காலம் என்பதை உண்மை என்று நினைக்கும் பற்றுடையோர்கள் ஒளிமாற்றங்களுக்கு செயல்கள் என்று பெயரிட்டு, நான் இந்தச் செயலைச் செய்தேன் என்ற எண்ணத்துடன் வாழ்வார்கள். காலம் என்பதைக் கற்பனை என்று கூடிய விரைவில் புரிந்துகொள்வேன் என்ற எண்ணத்தை மனதில்

தோற்றுவிற்பதன் மூலம் மூக்திவிழைவோர்களை தொடர்ந்து மாயை தன் பிடியில் வைத்திருக்கும். காலத்தை வென்ற முற்றுணர்ந்தோர்கள் காலனின் பிடியில் இருந்து தப்பித்து மரண மில்லாப் பெருவாழ்வை வாழ்வதும் மாயையின் விளையாட்டே.

## மனிதன் எதையும் செய்வதில்லை

ஆரம்பமும் முடிவும் இல்லாத இயக்கத்தில் செயல் என்பதே கிடையாது. காலை எழுந்ததும் 'பல் தேய்ப்பது' என்பது ஒரு செயல் அல்ல. மனம் ஒரு குறிப்பிட்ட இயக்கத்திற்கு 'பல் தேய்த்தல்' என்ற பெயரை வைப்பது (labeling) மட்டும்தான் நிகழ் கிறது. பெயர் வைத்துவிட்டதால் அதற்குத் தான் உரிமையாளன் என்ற நினைவு மனிதனின் துன்பத்துக்குக் காரணமாகிறது. செயல் என்பது வெளி உலகில் இல்லை. நம் மனதில் மட்டுமே இருக்கிறது. நடந்து முடிந்ததைப் பற்றி நினைப்பது செயல் அல்ல. அதேபோல் ஒரு செயலைச் செய்யலாமா வேண்டாமா என்ற எண்ணம் மனதில் தோன்றுவதால் 'செயல்களைச் செய்பவன்' என்ற பொறுப்பு நமக்கு ஏற்பட்டுவிடாது. எவ்வித அர்த்தமும் இல்லாத ஒலி வர்ணனை நம் மனதில் ஓயாது கேட்டுக்கொண்டு இருப்பது மாயையின் விளையாட்டு. இந்த வர்ணனையின் அடிப்படையில் நாம் செயல்படுவதில்லை. உடல் என்னும் ஒளி நடப்பது போன்ற தோற்றத்தை ஏற்படுத்தும்போது 'நான் நடக்கிறேன்' என்ற நினைவு நமது மனதில் தோன்றுகிறது. நடந்து செல்வதும். 'நான் நடக்கிறேன்' என்று எண்ணம் ஏற்படுவதுவும் நம் வசமின்றித் தானாக ஏற்படும் ஒளி-ஒலி மாற்றங்கள். நம்மால் நமது சிறு விரலைக்கூட அசைக்க முடியாது. அவனின்றி ஒரு அணுவும் அசையாது. அணு என்பது மாயை என்ற சக்தியின் வெளிப்பாடு.

ஆழ்ந்த உறக்கத்தில் மனம் முழுவதும் அடங்கி இருப்பதால் நம் உடலின் இயக்கத்திற்கு அது பொறுப்பேற்றுக்கொள்வதில்லை. தூக்கத்தில் பேசுவதும் நடப்பதும் ஒரு அசாதரணமான நிகழ்வுகள் என்று கருதப்படுகிறது. ஆனால் விழித்திருக்கும் பொழுதுகூட மனம் நம் உடலைக் கட்டுப்படுத்துவதில்லை. காலையில் விழித் ததும் மனதில் ஏற்படும் எண்ணங்களில் நான் என்ற எண்ணமும் ஒன்று. அதனால் எதையும் செய்ய இயலாது. கேட்பது, பேசுவது, சுவைப்பது, நுகருவது ஆகிய அனைத்தும் மனிதனின் அகங்காரத் தின் துணை இன்றி தானே நடக்கும். ஏற்படும் அனுபவங்களுக்கு அனாவசியமாகப் பொறுப்பேற்றுக் கொள்வதினாலேயே மனிதன் துயரப்படுகிறான்.

## அடையாளம் காண்பது புரிந்து கொள்வது அல்ல

ஒளியையும் ஒலியையும் ஒன்றுபடுத்தி ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு பெயர் வைத்து இருப்பதால் மனிதர்கள் அனைத்தையும் அறிந்தவர்கள் என்ற பிரம்மையில் வாழ்கிறார்கள். இது ஒரு நாற்காலி என்பது வெறும் அடையாளம் காணும் திறன். நாற்காலியை வெறும் வார்த்தை என்றும் அங்கு உண்மையில் எந்தப்பொருளும் இல்லை என்று அறிவதும்தான் உண்மையான அறிவு. இந்த உண்மையான அறிவு கூட மாயையின் செயல் பாடே. 'நான் அறிந்துக் கொண்டேன்' என்பது வெறும் கற்பனையே.

இல்லாத உலகை இருப்பதாக அனைவரும் நம்புவதற்குத் தனிமனிதனின் இந்த அடையாளம் காட்டும் திறன் மட்டுமே ஆதாரமாக இருக்கிறது. இது அம்மா, இது அப்பா என்று அர்த்தம் அற்ற வார்த்தைகளுக்கு இல்லாத மனிதர்களை அடையாளம் காட்டக் குழந்தைக்குச் சொல்லித்தருவது இந்த அடையாளம் காட்டும் திறனை வலுப்படுத்தும் விதம் ஆகும்.

மனம் சுற்றியுள்ள பொருள்களை அடையாளம் காட்டுவதனால் மட்டுமே 'உண்மையான' ஒரு உலகம் இருக்கிறது. எனவே ஒருங்கிணைந்த ஒளித்தொகுப்பில் தான் ஒரு தனிமனிதன் என்ற எண்ணம் மனதில் ஏற்படுவதன் மூலம் இல்லாத உலகம் இருப்பதுபோல் தோன்றுகிறது. எண்ணங்கள் ஏதும் இல்லா விட்டால் உலகம் இல்லை. சிறுகுழந்தைக்கும் ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பவருக்கும் எண்ணங்கள் ஏதும் இல்லை என்பதால் உலகம் இருப்பதில்லை.

உலகம் இல்லை என்பதால் செயல்கள் ஏதும் இல்லை. எனவே வாழ்வில் துன்பம் என்பதுவும் இல்லை. நடக்க வேண்டியவை அனைத்தும் மிகச்சரியாக நம்முடைய முயற்சியோ அனுமதியோ இல்லாமல் நடப்பதால் நாம் இன்பமாக இருக்கலாம்.

**சாராம்சம்**

*நட்சத்திரங்கள், கிரகங்கள், ஜடப்பொருள்கள், உயிரினங்கள் ஆகிய அனைத்தும் ஒரு கணத்தில் தோன்றும் ஒளி-ஒலி காட்சி. இந்தக் காட்சியின் அடிப்படையில் காலம், தேசம், பொருள், காரண-காரியம் ஆகிய நான்*

கையும் கற்பனை செய்து தான் சுதந்திரத்துடன் செயல்படும் ஒரு தனிமனிதன் என்ற நம்பிக்கையுடன் மக்கள் வாழ்வது இந்த ஒளி-ஒலி காட்சியின் ஒரு பகுதி. அனைத்தையும் புரிந்து கொள்ள வேண்டும் என்ற துடிப்பு அநேகர் மனதில் எழுவதும், புதிரை விடுவிக்க ஆண்டவன் என்ற கற்பனையை உருவாக்குவதும் இந்த நாடகத்தில் ஒரு அங்கமே.

இந்தப் பிரபஞ்சத்தில் நாம ரூபங்களைத்தவிர வேறு ஒன்றும் இல்லை என்ற அறிவு ஒரு சில மனிதர்களுக்கு ஏற்பட்டவுடன் அவர்களுக்கு மனிதனால் எதையும் செய்ய முடியாது என்பது புரியும். இந்த அறிவைப் பெற யாராலும் எந்த முயற்சியையும் செய்ய முடியாது. ஏனெனில் செயல் என்பதே மனதின் கற்பனை.

ஒரு சிலர் எப்போதும் ஆரோக்கியம் குறையாமல் வலுவான உடலுடன் இருப்பார்கள். வேறு சிலர் அடிக்கடி நோய்வாய்ப்பட்டு மரணத்தை எதிர்பார்த்துக் காத்திருப் பார்கள். எஞ்சியவர்கள் இந்த இரு எதிர்முனைகளுக்கு இடையே ஏதாவது ஒரு நிலையில் இருப்பார்கள். எடை கூட வேண்டும் என்று முயற்சி செய்பவர்கள், எடை குறைய வேண்டும் என்று முயற்சி செய்பவர்களைப்போல ஏமாற்றமே அடைவார்கள். உடல் நிலை அவரவர் கட்டுப் பாட்டில் இல்லை. அது போல மனதின் நிலையும் மனிதர்களின் கட்டுப்பாட்டில் இல்லை. ஒரு சிலருக்கு எவ்வளவுதான் உதவி செய்தாலும் தொடர்ந்து துன்பத்தில் ஆழ்ந்து இருப்பர். அதேபோல் வேறு சிலர் எவ்வளவு கடினமான சூழ்நிலையிலும் நிம்மதியாக இருப்பார்கள். எஞ்சியவர்கள் இந்த இரு எதிர்முனைகளுக்கு நடுவே ஏதாவது ஒரு நிலையில் இருப்பார்கள். துன்பத்திலிருந்து விடுதலை அடைய வேண்டும் என்று பற்றுடையோர்கள் செய்யும் முயற்சி நீடித்த இன்பம் வேண்டும் என்று முக்திவிழைவோர்களின் முயற்சியைப்போலத் தோல்வி யிலேயே முடியும். தன்னால் எதையும் செய்ய முடியாது என்ற எண்ணம் மனதில் நிலைபெறும்போது 'முயற்சி செய்வது' முடிவுக்கு வந்துவிடும். அதன் பின் உலகம்

*என்னும் நாடகமேடையில் தன் உடலும் மனமும் ஆடும் ஆட்டத்தை இன்பமாக அனுபவிக்கலாம்.*

### பயிற்சிக்காக

1. மனிதனின் துன்பத்துக்குக் காரணம் என்ன?
2. எண்ணங்கள் முதிர்ச்சி (sophistication) அடைவது என்றால் என்ன?
3. அடையாளம் காண்பதற்கும், புரிந்துகொள்வதற்கும் உள்ள வித்தியாசம் என்ன?
4. வாழ்க்கையை வாழ மனம் தேவையில்லை என்பதை விளக்கவும்.

### சுயசிந்தனைக்காக

❖ *சங்கர் அவர்களின்* Non&Duality Life as it is *குறும்படத்தைப் பார்க்கவும்* (http://www.acadun.com/en/).

❖ *நட்சத்திரங்களின் ஒளி நம்மை வந்து சேர குறைந்தபட்சம் நான்கு ஆண்டுகள் ஆகும் என்பது உண்மையா?*

❖ *முற்றுணர்ந்தோனாக என்ன செய்ய வேண்டும்?*



## 181

# ஞானியின் பார்வை - *ஓஷோ ரஜனீஷ்*

அத்தியாயம் : 4 ● பாதம் : 3 ● சூத்திரம் : 520

**த**த்துவ இயலில் முதுகலை பட்டம் பெற்று, கல்லூரியில் பேராசிரியராக வாழ்வைத் துவங்கிய ஓஷோ ரஜனீஷ் அவர்களின் பார்வையில் மனித வாழ்வைச் சித்தரிக்கும் வண்ணம் இந்தப் பாடம் அமைந்துள்ளது.

உலகம் ஒரு கண்ணாடி. கண்ணாடி முன் நின்று பார்த்தால் அவரவரின் முகம்தான் தெரியும். அது அழகாக இருக்கிறதா இல்லையா என்பதைக் கண்ணாடி தீர்மானம் செய்வதில்லை. வெளி உலகம் மனிதனுக்கு இன்பத்தையோ துன்பத்தையோதருவதில்லை. மனிதனின் மனம் எப்படி இருக்கிறதோ அதைத்தான் உலகம் பிரதிபலிக்கும். உதாரணமாகக் கோபமாக இருப்பவனின் கண்ணுக்கு அழகான மலர் தென்படாது. ஆனால் அவன் காதலில் மூழ்கி இருந்தால் கள்ளிச்செடி கூடக் கவர்ச்சியாகக் காட்சி அளிக்கும். பார்க்கப்படும் பொருளைவிட பார்ப்பவனின் மனநிலை முக்கியமானது. துன்பங்களுக்குத் தீர்வு வெளி உலகில் இல்லை. உள்ளே இருப்பதை வெளியே காட்டும் கண்ணாடியை மாற்ற முயற்சிப்பது வீண்.

தன்னைத்தானே மாற்றிக்கொள்வதும் முடியாது. இடது கைக்கும் வலது கைக்கும் நடக்கும் போராட்டம் முழுமையான வெற்றி அல்லது முழுமையான தோல்வியில் முடிவதில்லை. ஏனெனில் இருப்பது ஒரே ஆள். தன்னுடன் தானே சண்டை செய்தால் மனக்கொதிப்பு, கோபம், சோகம், களைப்பு போன்ற வேண்டாத விளைவுகள் மட்டுமே ஏற்படும். வெற்றி கிடைக்காது. மனதை மாற்ற வேண்டும் என்று முடிவு செய்வது யார்? ‘இப்படி

இருக்கும் நான் அப்படி ஆக வேண்டும்' என்று முயற்சி செய்வது இரண்டு கைகளுக்கு இடையே நடக்கும் போராட்டம் போன்றது. முக்திவிழைபவர்கள் முற்றுணர்ந்தோனாக மாறவேண்டும் என்று செய்யும் போராட்டமும் தோல்வியில்தான் முடியும். சரியான அறிவு மட்டுமே வெற்றிக்கு வழி வகுக்கும்.

சரியான அறிவை அடைவதன் மூலம் நாம் நம் மனதைச் சரி செய்து கொள்ளலாம். அதன்பின் வாழ்வே ஒரு கொண்டாட்டமாக மாறிவிடும். புத்தர், மாகாவீரர் போன்ற மகான்கள் காட்டும் வழி இதுவே.

### அறிவும் துன்பமும்

வாழ்வில் துன்பத்தை அகற்றி இன்பமாக இருக்கச் சரியான அறிவை அடைய வேண்டும். ஆனால் அறிவு அதிகமாக அதிக மாகத் துன்பங்கள் அதிகமாவதைத்தான் நாம் அனுபவத்தில் பார்க்கிறோம்.

பையில் வைத்திருந்த பணம் காணாமல் போனால் வருத்தம் ஏற்படுவது இயற்கை. பணம் ஏன் தொலைந்து போனது என்ற ஆராய்ச்சியால் ஏற்படும் துன்பம் செயற்கை. பணத்தைத் தேடித் திரும்பப்பெற முயற்சி செய்வதில் தவறு இல்லை. ஆனால் அது கிடைக்குமா என்ற தவிப்பு அனாவசியம். பணம் தொலைந்து போனதற்கு எப்படி எவ்விதக் காரணமும் கிடையாதோ அதுபோல அதை திரும்பப் பெறுவதற்கும் நமது முயற்சிக் காரணமாக இருக் காது. 'என்ன செய்ய வேண்டும் அல்லது எப்படிச் செய்ய வேண் டும்?' முதலிய கேள்விகளுக்கு அறிவாளி அதிக பதில்களைக் கொடுப்பான். எனவே அவனது துன்பமும் அதிகமாக இருக்கும். அவ்வளவு தூரம் யோசிக்காதவர்கள் 'ஏதோ என் விதி' என்று இயற்கையாக ஏற்படும் துன்பத்தை மட்டுமே அனுபவிப்பார்கள். 'இது ஏன் நடந்தது?', 'நான் இதைச் செய்து இருக்கக் கூடாது' முதலிய செயற்கைத் துன்பங்கள் இவர்களைப் பாதிக்காது. மேலும் உலக அறிவு அதிகமாக இருந்தால் நிம்மதியாக இருக்க முடியாது. எதிர்காலம் பற்றி ஏதாவது அச்சம் இருந்து கொண்டே இருக்கும்.

இதுபோல, அதிக அறிவு அதிகக் கலக்கத்தையே கொடுக்கும். நிம்மதியைக் கொடுக்காது. 'நான் வேறு. இந்த உலகம் வேறு' என்று நாம் நினைத்துக் கொண்டு இருப்பதுதான் இதற்குக் காரணம். எல்லாவற்றையும் ஆராய்ந்து, காரண காரியங்களைக்

கண்டுபிடித்து, எல்லைக்கோட்டை வரையும் இந்த அரைகுறை அறிவு துன்பத்தை மட்டுமே தரும். அனைத்தும் ஒன்றுதான் என்பது முழுமையான அறிவு. இந்த அறிவைப் பெற்றவர்களைச் செயற்கைத் துன்பம் அணுகாது. உலகின் தன்மையைப் பற்றிய இந்தச் சரியான அறிவுதான் இன்ப வாழ்வுக்கு வழிவகுக்கும்.

## இருமைகள் இயற்கையானவை

இயற்கையாக ஏற்படும் துன்பங்கள் வாழ்வில் அவசிய மானவை. இன்பம் என்ற வார்த்தைக்குத் துன்பம் என்ற வார்த்தை தான் பொருளைத்தருகிறது. அதுபோல் இந்த உலகில் உள்ள அனைத்தும் எதிர்ப்பதங்களுடன் கூடிய வார்த்தைகளால் மட்டுமே உருவாகியுள்ளன. மேடு இல்லாவிட்டால் பள்ளம் இல்லை. இது தான் படைப்பின் ரகசியம்.

கடிகாரத்தின் பெண்டுலம் இடது பக்கம் சென்றால்தான் வலது பக்கம் செல்ல முடியும். வலது பக்கம் செல்வதும் இடது பக்கத் திற்குத் திரும்புவதற்காகவே. இரண்டும் ஒன்றுதான். இது போல் வாழ்க்கையில் இருக்கும் இன்பம்-துன்பம், புகழ்-இகழ், வறுமை-வளமை ஆகிய அனைத்து இருமைகளும் ஒன்றுடன் ஒன்று தொடர்பு உடையவை. ஒன்று இல்லாவிட்டால் மற்றது இல்லை. இது புரிந்துவிட்டால், 'இது வேண்டும் அது வேண்டாம்' என்று தேர்வு செய்வது அனாவசியம் என்ற அறிவு ஏற்படும். வாழ்வின் அனைத்து நிகழ்வுகளையும் அதில் பங்கேற்காத சாட்சியாகப் பார்த்து அனுபவிக்க முடியும்.

இந்த அறிவு ஏற்படும் வரை, மனிதன் செயற்கையான துன்பத்தைத் தொடர்ந்து அனுபவிப்பான். இன்பத்தை மட்டும் தரும் இடமாக உலகை மாற்றிவிடலாம் என்று அவன் செய்யும் முயற்சிகள், இரு கைகளின் போராட்டத்தைப்போலத் தோல்வியி லேயே முடியும். இதனால் இயற்கையாக ஏற்படும் துன்பத்தை விட பன்மடங்கு செயற்கைத் துன்பத்தை மனிதன் அனுபவிக் கிறான்.

தானும் மற்றவர்களும் ஒன்றுதான் என்ற அறிவு ஏற்பட்ட வுடன் அனைவர் மீதும் இயற்கையாக அன்பு ஏற்பட்டுவிடும். யாரையும் வெறுக்க முடியாது. யார் மீதும் பொறாமை கொள்ள முடியாது. போராட்டம் ஏதும் இன்றி வாழ்வில் வெற்றி அடையும் வழி இது ஒன்றுதான்.

## இன்பத்தை அடையும் வழி

கைகள் நிரம்ப வைத்திருக்கும் கற்களைக் கீழே போட்டால் தான் வைரங்களை எடுக்க முடியும். துன்பத்தைத் துறந்தால்தான் இன்பத்தை அனுபவிக்க முடியும்.

தூணைக் கட்டிப்பிடித்துக் கொண்டு என்னை அவிழ்த்து விடுங்கள் என்று கூப்பாடு போடுபவனைப்போலப் பிரச்சனை களைப் பிடித்து வைத்துக்கொண்டு அவதிப்படும் மனிதர்களால் இன்பத்தை அனுபவிக்க முடியாது.

துன்பம் வெளியே இருப்பது. இன்பம் நமக்குள் இருப்பது. துன்பத்தை அடக்கி வைத்தால் அதிகமாகும். வெளிப்படுத்தினால் குறையும். இன்பத்தை அடக்கி வைத்தால் குறையும். வெளிப்படுத் தினால் அதிகரிக்கும். துன்பத்தை வெளிப்படுத்த தனிமை அவசியம். இன்பத்தை மட்டுமே மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டும். துன்பம் நம்முடன் தொடர்பற்றது என்பதை அறிந்தால் அவை தானாக நம்மைவிட்டுப் போய்விடும்.

ஒவ்வொரு மனிதனிடமும் முக்தி அடையும் திறன் ஒளிந்து உள்ளது. வாழ்வில் முன்னேற வேண்டும் என்ற துடிப்புதான் முக்தியைத் தடை செய்கிறது. இதை அறியாமல், எவ்வளவு முயன்றாலும் வெற்றியைத் தரக்கூடிய சரியான பாதையை மனித னால் கண்டுபிடிக்க முடியாது. தான் யார் என்பதை அறிந்தவர்கள் எந்தப் பாதையில் பயணம் செய்தாலும் வாழ்வில் வெற்றி பெறுவார்கள்.

தான் யார் என்பது பற்றி தனக்கு ஒன்றுமே தெரியாது என்பதையும் தன் உலக அறிவு, முட்டாள்தனத்தின் மற்றொரு பெயர் என்பதையும் முதலில் ஏற்றுக் கொள்ள வேண்டும். துன்பக் கலப்பற்ற இன்பத்தைப் பெறக் கடவுளை நாடி கோவிலுக்குச் செல்லாமல் கடவுளை நேரடியாக அறிந்த ஞானிகளின் வார்த்தை களைப் புரிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்.

புகழ் பெற்ற மனிதர்களை முன்மாதிரியாகக் கொண்டு தானும் அவர்களைப்போல் ஆகவேண்டும் என்பது தவறான ஆசை. உலகில் உள்ள ஒவ்வொரு மனிதனும் தனித்தன்மை வாய்ந்தவன். உன்னைப்போல் ஒருவன் இதுவரை இந்த உலகில் பிறந்ததும் இல்லை; இனிப் பிறக்கப் போவதும் இல்லை. பூத்துக்குலுங்கும் நந்தவனத்தில் ஒரு மலரைப்போல இன்னொரு மலர் இருப்ப

தில்லை. ஒவ்வொரு மலரும் முழுமையாகப் பூத்து இருக்கிறதா என்பதுதான் முக்கியமே தவிர, சம்பங்கிப்பூ ரோஜா மலரைப் போல மாற வேண்டும் என்பது அவசியமில்லை. அதுபோல, 'நான் நானாக முழுமை அடைய, வாழ்வில் முன்னேற வேண்டும்' என்ற முயற்சியைக் கைவிட வேண்டும். மற்றவர்களை ஒப்பிடு வதனால் மட்டுமே முன்னேற்றம் என்ற வார்த்தைக்குப் பொருள் கிடைக்கும். முழுமை அடையத் தன்னை யாருடனும் ஒப்பிட்டுக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. வேறு யாரைப்போலவும் இல்லாமல் தனித் தன்மையுடன் கூடிய தன் உடலையும் மனதையும் போற்றி ஏற்றுக்கொண்டால் வாழ்வில் வெற்றி பெற்று விடலாம்.

வானவெளியில் தென்படும் நட்சத்திரங்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு அளவு ஒளியைச் சிந்தி அதனதன் பாதையில் வலம் வருகின்றன. முன்-பின், உயர்வு-தாழ்வு, வேகமானது-மெது வானது முதலிய பாகுபாடுகளைச் செய்யாமல் அனைத்து நட்சத் திரங்களையும் அப்படியே நாம் ஏற்றுக்கொள்வதுபோல நம்மையும் மற்றவர்களையும் நாம் அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும்.

நிழலிடமிருந்து தப்பிக்க வேண்டும் என்று ஓடாமல், நிழல் வெறும் தோற்றம் என்பதை அறிந்து கொள்வதால் மட்டுமே நிம்மதி கிடைக்கும். அதுபோல வாழ்வில் முன்னேற வேண்டும் என்ற துடிப்பை நிறுத்தினால் மட்டுமே துன்பம் கலப்பில்லாத இன்பம் நமக்குக் கிடைக்கும்.

பிச்சைபாத்திரத்தை கையில் ஏந்தித் தெருத்தெருவாக அலைந்து கொண்டிருந்த புத்தர்தான் உண்மையில் சக்ரவர்த்தி. ஏனெனில் அவருக்கு வேண்டியது என்று எதுவுமில்லை. மேலும், துன்பத்தைப் போக்கும் வழியை நாடி, மக்கள் அவரிடம் யாசித்துக் கொண்டு இருந்தார்கள். இன்னும் வேண்டும் என்று அலையும் மக்கள் எவ்வளவு செல்வந்தர்களாக இருந்தாலும் அவர்கள் ஏழைகளே.

துன்பங்களுக்குக் காரணம் ஆசை. ஆசைப்பட வேண்டும் என்று எந்தக் கட்டாயமும் இல்லை. இந்த உலகமும் நானும் ஒன்றுதான் என்ற அறிவும் உலகில் நாம் அனுபவிக்கும் இன்ப துன்பங்கள் ஒன்றுடன் ஒன்று தொடர்பு உடையன என்ற அறிவும் ஏற்பட்டால் செயற்கையான துன்பத்தைத் தரும் ஆசைகள்

ஏற்படாது. பிடித்துக்கொண்டிருக்கும் தூணை விட்டுவிட்டு துன்பங்களிலிருந்து விடுதலை பெற்றுவிடலாம்.

பொதுவாகத் துன்பத்திலிருந்து விடுதலைப் பெற்றவுடன் இன்பத்தை அனுபவிக்க ஆரம்பித்துவிடலாம். ஆனால், நம்முள் இருக்கும் இன்பத்தை அனுபவிக்கத் தேவையான 'புலன்களின் கூர்ந்து உணரும் திறனை' (sensitivity) அதிகப்படுத்திக் கொள்ளச் சில காலம் ஆகும்.

### கடவுளைச் சுவைக்க வேண்டும்

உலகை அனுபவிப்பதைவிட அனுபவிக்க வேண்டும் என்ற ஆர்வம்தான் மக்களிடம் அதிகம் இருக்கிறது. வெளிநாட்டு பயணிகள் நம் நாட்டைப் பார்த்து அனுபவிக்க இங்கே வருகிறார்கள். இங்கு இருப்பவர்கள் அவர்கள் நாட்டுக்குச் செல்ல வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள். இருப்பதை அனுபவிக்காமல் இல்லாததை அடையவேண்டும் என்ற ஆர்வம்தான் இதற்குக் காரணம்.

பொருள்களுக்கும் நமது ஐந்து புலன்களுக்கும் ஏற்படும் தொடர்பால் விளைவது அனுபவம். இன்னும் வேண்டும் என்ற ஆர்வம் நமது புலன்களை மரத்துப்போக வைக்கின்றது. இதனால் சுற்றி இருக்கும் உலகை அனுபவிக்க முடியாமல் புதிதாக ஏதேனும் வேண்டும் என்ற ஆசை ஏற்படுகிறது.

கடவுள்தான் உலகம். நமது ஐந்து புலன்களால் அனுபவிக்கும் அனைத்தும் கடவுளைத் தவிர வேறு எதுவும் இல்லை. தண்ணீர் குடிக்கும்போது கடவுளைத்தான் சுவைக்கிறோம். ஆனல் பழச் சாறு, குளிர்பானங்கள் போன்றவற்றைப் பருகிப் பழகிப்போன நாக்கு, வெறும் தண்ணீரின் சுவையை அறிவதில்லை. உலகில் உயிர்வாழ ஒரு கைப்பிடியளவு அரிசியும் குடிக்கத் தண்ணீர் மட்டும் போதும். இந்த நிறைவோடு நீரைக் குடித்தால் கடவுளின் சுவை தெரியும்.

கடலில் வாழும் மீன் கடல் நீரை அனுபவிப்பது இல்லை. அதை பிடித்து மணலில் போட்டுச் சிறிது நேரம் தவிக்கவிட்டு அதன்பின் கடலில் விட்டால் அது கடல் நீரை அனுபவிக்க ஆரம்பிக்கும். முக்தி அடைவது இதுபோல்தான். பரமன் என்ற வார்த்தைக்கு 'எங்கும் பரவியிருக்கும் அளவற்ற பெருமாள்' என்று

பொருள். இங்கே இப்போது நாம் அனுபவிப்பதுதான் கடவுள் என்பதை அறிய நமது புலன்கள் உணர்ச்சி உள்ளதாக இருக்க வேண்டும். ஆர்வமுடன் தேடி அலைவதைவிட அனுபவிப்பது தான் முக்கியம் என்று உணர ஆரம்பித்தால் புலன்களின் கூர்ந்து உணரும் திறன் அதிகமாகும். அதன்பின், சுவாசிப்பது, நடப்பது, சுற்றியிருப்பதைப் பார்ப்பது முதலிய செயல்களிலேயே நாம் முழுமையான திருப்தியை அடைவோம். இன்பத்தைத் தேடி நண்பர்களுடன் உல்லாசப் பயணம் செல்ல வேண்டிய அவசியம் இருக்காது. முக்தி என்பது முயற்சி செய்து எதிர்காலத்தில் அடைய வேண்டிய ஒன்று அல்ல. இங்கே, இப்போதே நாம் பெறும் அனுபவங்கள்தான் முடிவான ஆனந்தம் என்பதை அறிந்துக் கொள்வதுதான் முக்தி.

## அறிவும் அனுபவமும்

சரியான அறிவுதான் நீடித்த இன்பத்திற்குக் காரணம் என்றாலும் அறிவு நேரடியாக இன்பத்தைக் கொடுத்துவிடாது. சரியான அறிவுடன் புலன்களின் மூலம் உலகப்பொருள்களை அனுபவிப்பதாலேயே இன்பம் கிடைக்கும்.

உலக அறிவு இன்பத்தைக் கொடுக்காது என்பதால் வேதம் கூறும் அறிவை அடைய முயலும் முக்திவிழைவோர்களில் பலர் முக்தி அடைவதில்லை. வேதம் தரும் அறிவு கூட உலக அறிவைப்போல மனதளவில் ஏற்படுவதுதான். வாழ்வைப்பற்றிய வர்ணனையை மட்டுமே மனம் செய்து வருகிறது. முக்தி அடைய இந்த வர்ணனைதான் தடையாக இருக்கிறது.

கணக்கை முறையாகப் போடாமல் புத்தகத்தின் இறுதியில் இருக்கும் விடைகளைப் பார்த்து எழுதுபவர்களைப்போல உலகை அனுபவிக்காமல், 'நான் பரமன் என்று வேதம் கூறுகிறது' என்று புத்தக அறிவைப் பெறுபவர்கள் இன்பம் அடைவது இல்லை. கைகளால் தொடும் அனைத்துப் பொருள்களையும் கடவுளாக அனுபவிப்பவர்கள்தான் வாழ்க்கை என்ற புதிரின் விடையைக் கண்டு பிடித்தவர்கள். இவர்களின் விடையைச் சரிபார்க்க மட்டுமே வேதங்களின் இறுதிக் கருத்து உதவும்.

**சாராம்சம்**

*வாழ்வு என்பது ஒரு புதிர் அல்ல. அது ஒரு ஆத்ம அனுபவம். வாழ்க்கையை எப்படி வாழ்வது என்ற கேள்விக்கு*

மதகுருமார்கள், தத்துவஞானிகள், அரசியல் வாதிகள், பொருளாதார வல்லுனர்கள் போன்றவர்கள் பலவிதமான பதில்களைக் கொடுத்து இருக்கிறார்கள். மனித இனத்தின் வரலாற்றைப் பார்த்தால் இந்தப் பதில்கள் ஒவ்வொன்றும் பல கேள்விகளை உருவாக்கி, மனித வாழ்க்கையை ஒரு போராட்டமாக மாற்றியிருப்பது தெரியவரும்.

வாழ்க்கை மனம் சம்பந்தப்பட்டது அன்று. அது மனதிற்கு அப்பாற்பட்டது. வாழ்வு என்றால் என்ன என்பதை மனதால் புரிந்து கொள்ளவே முடியாது. புரிந்து கொள்ளவேண்டிய அவசியமும் இல்லை. ஏனெனில் இன்பமாக வாழ்வதற்கு மனம் நமக்குத் தேவையில்லை.

ஞானம் (wisdom) என்பது புதிதாக ஒன்றைத் தெரிந்துகொள்வது அல்ல. அது எந்தக் கேள்விக்கான பதிலும் இல்லை. கேள்விகள் எதுவும் இல்லாமல் ஆனந்த மாக இருக்கும் நிலையே ஞானம். வாழ்வில் அது ஒரு நிகழ்வு அல்ல. வாழ்வு முழுவதும் தொடரும் ஒரு ஆனந்த அனுபவம் அது.

இதைச்செய்ய வேண்டும் அல்லது செய்யக்கூடாது என்பது போன்று எந்தவிதக் கட்டாயமும் இல்லாமல் சுதந்திரமாக இந்தக்கணம் நமக்கு ஏற்படுத்தும் அனைத்து அனுபவங்களையும் இனிமையாக அனுபவிப்பது மட்டுமே வாழ்வின் நோக்கம்.

மனிதன் நன்றிகெட்டவன். அவனது இனிய அனுபவத்திற்காக மட்டுமே இந்தப் பரந்த பிரபஞ்சம் காத்திருக்கிறது. உதிக்கும் சூரியனையோ, மலரும் மலரையோ, பறக்கும் பறவைகளையோ அவன் கவனிப்பதே கிடையாது. எங்கோ இருக்கும் சுவர்க்கத்திற்குப் போகவேண்டும் என்ற ஆசை, எதிரே இருக்கும் உலகை அவன் கண்களில் இருந்து மறைத்துவிடுகிறது. இந்தப் பிரம்மாண்டமான கனவு உலகில் இன்பமாக வாழ முதலில் விழிப்பு ஏற்படவேண்டும். இந்தக் கணத்தில் நமக்கு ஏற்படும் அனுபவங்களை முழுமையாக ஏற்று மகிழ் வதைத்தவிர வாழ்வில் வேறு நோக்கம் எதுவும் இல்லை.

இந்த அறிவு மனதில் நிலைபெற்றபின்தான் அவனுக்கு நன்றியுணர்வு ஏற்படும்.

பறக்கும் பட்டாம்பூச்சியைத் துரத்தி ஓடும் குழந்தையைப் பார்த்து 'நீ எதற்காக ஓடுகிறாய்?' என்று கேட்டால் அது நம்மைப் பைத்தியக்காரனைப் பார்ப்பது போல் பார்க்குமே தவிரப் பதில் சொல்லாது. வாழ்வில் ஒரு குறிக்கோள் வேண்டும் என்று நினைப்பவர்கள் பைத்தியக் காரர்கள்தான்.

நீ என்னை எதற்காகக் காதலிக்கிறாய் என்ற கேள்விக்குப் பதில் சொல்ல முடிந்தால் அது காதல் அல்ல. அதுபோல் ஒரு குறிக்கோளை நோக்கி வாழ்பவர்கள் வாழ்வைத் தொலைத்து விடுகிறார்கள். காதலிப்பதுதான் குறிக்கோள். இந்தப் படைப்பு முழுவதையும் காதலிப்பதுதான் வாழ்க்கை.

ஆனந்தம் என்பது அடையப்பட வேண்டிய ஒன்று அல்ல. வாழ்வே ஆனந்தம். ஒவ்வொரு கணமும் நமக்கு அளிக்கும் ஆனந்தத்தை அனுபவிக்கவிடாமல் தடை செய்வது நமது குறிக்கோள்கள். இறைவனின் ஆனந்தத் தாண்டவம் நம்மைச் சுற்றித் தொடர்ந்து நடந்துகொண்டு இருக்கிறது. ஆனால் அந்த ஆனந்த மழையில் நனைய நாம் குழந்தையைப்போல எவ்விதக் குறிக்கோளும் இல்லாமல் விளையாட்டுத்தனமாக இருக்க வேண்டும்.

## பயிற்சிக்காக

1. உலகம் துன்பம் தருவதாகத் தோன்றுவதற்குக் காரணம் என்ன?
2. இயற்கைத் துன்பம் செயற்கைத் துன்பத்திலிருந்து எந்த வகையில் வேறுபடுகிறது?
3. இன்பத்தை அடையும் வழி யாது?
4. கடவுளைச் சுவைக்க முடியுமா?

5. செயற்கையான துன்பத்தைத் தரும் ஆசையைத் தவிர்க்க நாம் பெற வேண்டிய இரு அறிவுகள் எவை?

### சுயசிந்தனைக்காக

- ❖ "Vedanta: Seven steps to Samadhi", "The voice of silence" *என்ற ஓஷோவின் புத்தகங்களைப் படிக்கவும்.*
- ❖ *இரு கைகளுக்கு இடையே நடக்கும் போராட்டம் என்ற உதாரணத்தின் மூலம் கூறப்பட்ட இரண்டு கருத்துக்கள் யாவை?*
- ❖ *குறிக்கோள்கள் இல்லாமல் பொருளாதார முன்னேற்றம் எப்படி ஏற்படும்?*
- ❖ *பெருமாள் என்ற பெயரின் பெயர்க்காரணத்தை ஆராய்க.*





# விஞ்ஞானியின் பார்வை -

*Dr. மணி பௌமிக்*

**அத்தியாயம் : 4 ● பாதம் : 3 ● சூத்திரம் : 521 - 523**

அணு ஆராய்ச்சியில் முதுகலைப் பட்டம் (PhD in Quantum Physics from IIT) பெற்று, லேசர் கண் சிகிச்சை முறையைக் கண்டுபிடித்த மணி பௌமிக்கின் ஆராய்ச்சி முடிவுகள், வேதம் கூறும் உண்மைகளை நிரூபிக்கும் வகையில் அமைந்து இருப்பதை இந்தப் பாடம் சுட்டி காட்டுகிறது.

### உண்மையின் மூன்று அடுக்குகள்

உலகம் இருப்பது உண்மை. ஆனால், அந்த உண்மையை அறிவியலின் அடிப்படையில் ஆராய்ந்தால், அது ஒன்றன் கீழ் ஒன்றாக, அதே சமயம் ஒன்றுடன் ஒன்று இணைந்த மூன்று அடுக்குகளால் ஆனது என்பதை அறியலாம். மேலெழுந்தவாரி யாகத் தென்படும் முதல் அடுக்கு, திடம், திரவம், காற்று ஆகிய மூன்று நிலைகளில் உள்ள பொருள் (matter) ஆகும். பெரும் பாலான மக்கள், இந்த முதல் அடுக்கு மட்டும்தான் உண்மையான உலகம் என்ற அறியாமையுடன் வாழ்கிறார்கள்.

உலகத்தில் உள்ள அனைத்துப் பொருள்களும் அணுக்களால் ஆனவை என்ற கருத்து தொன்று தொட்டு நிலவி வருவது. ஆனால், ‘அணு என்றால் என்ன?’ என்ற விளக்கத்தைக் கொடுத்தவர், ஆல்பர்ட் ஐன்ஸ்டீன். தனித்தனியான சக்திப் பொட் டலங்களின் கூட்டமைப்புதான் அணு என்கிறார் அவர். அதாவது, இந்தப் பிரபஞ்சம் முழுவதும் வெறும் சக்தியின் வெளிப்பாடு மட்டுமே.

சக்தி (energy) என்பது உண்மையின் இரண்டாவது அடுக்கு. முதல் அடுக்கின் ஆதாரமாக இருக்கும் இந்த 'சக்தி' விஞ்ஞான அறிவுக்கு அப்பாற்பட்டது. சக்தியின் வெளிப்பாடுகளுக்கு வெப்பச் சக்தி, புவியீர்ப்பு விசை, காந்தச் சக்தி என்று பெயரிட்டாலும் இருப்பது ஒரே சக்திதான். அந்தச் சக்தியை அளக்க முடிவதாலும், அனுபவிக்க முடிவதாலும், பயன்படுத்த முடிவதாலும் அதை அறிந்து விட்டதாகக் கருத முடியாது. 'சக்தி என்பது என்ன?' என்ற கேள்விக்கு விஞ்ஞானிகளின் இறுதியான பதில், 'தெரியாது' என்பதுதான்.

ஒரு பொருள் உண்மையில் இருக்கிறது என்பதை நிரூபிக்க அதன் உருவத்திற்குப் பெயர் இடுவது மட்டும் போதாது. 'இது பூமி', 'அது சூரியன்' என்று பிரபஞ்சத்தில் உள்ள பொருள்களுக்குப் பெயர் சூட்டுவதை மட்டுமே பாமர மக்கள் செய்கிறார்கள். 'பூமி என்றால் என்ன?' என்ற கேள்விக்கான இறுதி பதிலை அறிய, கடைசி வரை முயன்ற அறிவியல் அறிஞர்கள், 'இந்தக் கேள்விக்குப் பதில் கூற முடியாது' என்பதைக் கண்டு பிடித்து இருக்கிறார்கள். என்னவென்று தெரியாத சக்தி, உலகமாகக் காட்சி அளிக்கிறது. 'உலகே மாயை' என்பதுதான் இறுதியான உண்மை.

'உலகம் உண்மையில் இருக்கிறது' என்ற நம்பிக்கைக்கு ஆதாரம், நமது ஐந்து புலன்கள். அவைகளால் உணரப்படும் பொருள்கள் உண்மையில் இல்லை. அவை இருப்பதாக ஒரு தோற்றத்தை ஏற்படுத்துவது இந்த மாயா சக்தி. இந்தத் தோற்றத்தை உண்மை என்று நம்புவதனாலேயே, 'நான் இந்த உலகத்தில் இருந்து வேறுபட்ட ஒரு தனிமனிதன்' என்ற எண்ணமும் நமது மனதில் எழுகிறது.

நமது புலன்களுக்கு அப்பாற்பட்ட இந்த மாயா சக்தியின் தொடர்ந்த நடனத்தை எலக்ட்ரானிக் மைக்ரோஸ்கோப் (electronic microscope), பார்டிக்கிள் ஆக்ஸலேட்டர் (particle accelerator), கணிதக் கணிப்புகள் (mathematical constructs) மூலம் அறிவியல் அறிஞர்கள் பார்க்கிறார்கள். உண்மையின் இரண்டாவது அடுக்கான இந்தச் சக்தியின் நடனம்தான், மான், மயில், மனிதன் போன்ற உயிரினங்களாகவும் கல், கடல், காற்று போன்ற ஜடப் பொருள்களாகவும் காட்சி அளிக்கிறது என்பதை அவர்கள் தெளிவாக அறிகிறார்கள்.

தொடர்ந்து மாறிக்கொண்டு இருக்கும் சக்தியின் தொகுப்பான, மலையும் மரமும், மாறாமல் திடமாகக் காட்சி அளிப்பதற்கு என்ன காரணம்? சக்திப் பொட்டலங்கள் தனித்தனியாக உதிர்ந்து போகாமல், ஒரே அணுவாகச் சேர்ந்து இருப்பதற்குக் காரணம் என்ன? அல்லாவுதீன் பூதம் பாட்டிலில் அடைக்கப்பட்டது போலச் சக்திப் பொட்டலங்களை ஒன்றுடன் ஒன்று ஒட்டியிருக்கும்படி செய்வது புலம் (field).

புலம் என்ற இந்த மூன்றாவது அடுக்கு உண்மையை, 'பிரிக்க முடியாதக் காலம்-வெளியின் ஸ்தூல வெளிப்பாடு' என்று ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் வர்ணிக்கிறார்.

ஆப்பிள் கீழே விழுவதைப் பார்த்து, தன்னைச் சுற்றி இருக்கும் பொருள்களைக் கவரும் சக்தி, பூமிக்கு இருப்பதாக நியூட்டன் நினைத்தார். இது தவறு. பூமிக்குக் கவரும் சக்தி ஏதும் இல்லை என்றும் பூமியை ஒன்றாக வைத்திருப்பதே புவியீர்ப்பு புலம்தான் (gravitational field) என்றும் கண்டுபிடித்தவர் ஐன்ஸ்டீன்.

அண்டவெளியில் இருந்து பூமிப்பந்தை அகற்றிவிட்டாலும் புவியீர்ப்பு சக்தியின் பதிவு அதே வெற்றிடத்தில் தொடர்ந்து இருக்கும் என்ற திடுக்கிடும் உண்மையைக் குவாண்டம் கோட்பாடு (quantum field theory) வெளியிடுகிறது.

திடமாக நம் முன்னே தென்படும் உலகம், 'உண்மையில் இருக்கிறது' என்று நம்பும் வரை குவாண்டம் கோட்பாட்டை நம்மால் புரிந்து கொள்ள முடியாது. அணுக்களால் ஆன பொருள் களில் இருந்து, சக்தி வெளிப்படுகிறது என்ற தலைகீழான அறிவை மாற்றி, சக்தியில் இருந்து பொருள் தோன்றுகிறது என்ற அறிவியல் கண்டுபிடிப்பை ஏற்றுக்கொண்டால், மேலும் ஆச்சரியமான உண்மைகளை அறியும் தகுதி நமக்கு ஏற்படும்.

கடல் அலைகள் பாறையின் மீது மோதும்போது, தெறிக்கப்படும் நீர்த்திவிலைகள், சிறிது மணித்துளிகள் வாழ்ந்து விட்டு, மறுபடியும் கடலிலேயே கலப்பதுபோல அணு என்ற பொருள், சக்தியில் இருந்து விடுபட்டு, பொருளாகக் காட்சி அளித்துவிட்டு, மறுபடியும் சக்தியில் கலந்து விடுகிறது. இதுபோல் ஒவ்வொரு கணமும் தோன்றி மறைவதுதான் உலகம்.

புலம் என்ற கடலில் இருந்து, அலை என்ற சக்தியின் வெளிப்பாடாகத் தோன்றும் நீர்த்திவிலைகள்தான் அணுவை உண்டாக்கும் பல்வேறு சக்திப்பொட்டலங்கள். இதுதான் குவாண்டம் கோட்பாடு. இந்தப் புலம் பிரபஞ்சம் முழுவதும் நிறைந்து இருக்கிறது. இதிலிருந்துதான் பிரபஞ்சம் உருவாகி உள்ளது.

இந்த மூன்று அடுக்குகளாலான பிரபஞ்சத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளப் பௌதீகத் துறையில் முதுகலைப் படிப்பு படிக்க வேண்டும். அல்லது வேதம் கூறும் உண்மைகளை முறையாகப் படித்தாலும் இதே அறிவை அடையலாம்.

## ஒரே உண்மை

மண்ணைத் தின்ற கண்ணனின் வாயில், பிரபஞ்சத்தையே காண முடிந்தது கட்டுக்கதை அல்ல. அது முற்றிலும் உண்மை என்பதை இன்றைய அறிவியல் நிரூபித்து இருக்கிறது. பிரபஞ்சத்துக்கு ஆதாரமாக இருக்கும் புலம் பற்றிய ஆய்வுகளின் முடிவுகள் இந்த உண்மையை விளக்குகின்றன. "புலம் என்னும் நூல் இழையால் பின்னப்பட்டதுதான் பிரபஞ்சம் என்கிற மாபெரும் துணி. ஆயினும் இந்தத் துணி முழுவதையும் ஒரே இழைக்குள் காணலாம்"

உண்மையை அறிந்து கொள்ளவேண்டும் என்ற தீவிர ஆசை உடைய அனைவரும் இது போன்ற நம்பமுடியாத 'கதை'களை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஏனெனில் இது அறிவியல் ஆராய்ச்சியின் முடிவுகள். கட்டுக்கதைகள் அல்ல.

காலியான இடைவெளி ஏதும் இல்லாமல் நெய்யப்பட்ட இந்தப் பிரபஞ்சத் துணியின் ஆதாரமாக இருக்கும் நூல் இழையில் ஒன்றுதான் ஒரு தனிமனிதன். அதே சமயம் அவனுக்குள் இந்தப் பிரபஞ்சம் முழுவதும் அடங்கியிருக்கிறது. 'நான் பரமன்' என்றும் 'இந்தப் பிரபஞ்சம் என்னை ஆதாரமாகக் கொண்டு இயங்குகிறது' என்றும் வேதம் தந்த உண்மைகளை, குவாண்டம் கோட்பாடு நிரூபித்து இருக்கிறது.

கிடார் வாத்தியத்தின் கம்பிகளின் அதிர்வுகளுக்கு ஏற்றாற்போல் வெவ்வேறு ஒலி அலைகள் உண்டாவதுபோல ஒரே புலம் தரும் வெவ்வேறு அதிர்வு அலைகளில் இருந்து உருவானதுதான் இந்தப் பிரபஞ்சம் என்று சரக்கோட்பாடு (String theory) கூறுகிறது.

சிவபெருமானின் உடுக்கை ஒலியில் இருந்து பிரபஞ்சம் உருவானது என்ற சைவ ஆகமக் கருத்தின் நவீன வடிவம்தான் சரக்கோட்பாடு. ஒலியில் இருந்து வெளி என்ற பொருள் உண்டாகி அதிலிருந்து இந்தப் பிரபஞ்சம் அனைத்தும் உருவானது. பரம சிவனின் ஒருபாதியான சக்தியின் இயக்கம்தான் பிரபஞ்சத்தின் செயல்பாடு.

## பரமன்

பிரபஞ்சத்தில் உள்ள அனைத்துப் பொருட்களும் சக்தியின் வெளிப்பாடு. ஆற்றல் காப்பு விதியின்படி (Law of conservation of energy) சக்தியைப் புதிதாக உருவாக்கவோ அழிக்கவோ முடியாது. சக்தி பொருளாகவும் பொருள் சக்தியாகவும் மாறலாம். இருப்பது எவ்வளவு என்று கேட்டால் கிடைக்கும் பதில் அதிர்ச்சியைத் தரும். பிரபஞ்சத்தில் உள்ள அனைத்துப் பொருள்கள் உள்ளிட்ட மொத்தச் சக்தியின் கூட்டுத் தொகையைக் கணக்கிட்டால், கிடைக்கும் எண், 'பூஜ்யம்'. ஆம்! சக்தியோ பொருளோ உருவாக் கப்படவே இல்லை. அவை இருப்பதாகக் காண்பிப்பது அறிவியல் அளவைகளுக்கு அப்பாற்பட்ட முக்கிய புலம் (Primary Field). இதைத்தான் உலகுக்கு ஆதாரம் பரமன் என்று ஆரம்பப் பாடங்களில் வேதம் அறிமுகம் செய்து வைத்தது.

பிரபஞ்சத்தின் இயக்கத்திற்கு ஆதாரமாக இருப்பது ஒரே முக்கிய புலம்தான் என்பது சந்தேகத்துக்கு இடம் இல்லாமல் நிருபிக்கப் பட்டுவிட்டது. எவ்வித மாற்றமும் இல்லாமல் அனைத்துக் காலங்களிலும் அனைத்து இடங்களிலும் நீக்கமற நிறைந்து இருக்கும் இந்த முக்கியப் புலம் எவ்விதச் செயலையும் செய்வதில்லை. புவியீர்ப்பு புலம், காந்தப் புலம் போன்ற மற்ற அனைத்துப் புலம்களின் செயல்பாட்டுக்கு முக்கிய புலம் ஆதாரமாக மட்டும் இருக்கிறது. அது இருக்கும் இடம் இதுதான் என்று காட்டமுடியாது. ஏனெனில் அதற்கு ஒரு குறிப்பிட்ட உருவம் கிடையாது. இந்தக் கண்டுபிடிப்புகள்தான் அறிவியலின் எல்லை. பிரபஞ்சத்தின் தோற்றம் பற்றி இதற்கு மேல் எதையும் கண்டுபிடிக்க முடியாது என்பதும் நிரூபணம் ஆகிவிட்டது.

## நான் பலவாக ஆகுவேனாக

வாழைப்பூ வடை வேண்டும் என்று கேட்டவுடன் அது தட்டில் வந்து விழுந்து விடாது. அதைச் செய்யவேண்டும் என்ற

திட்டம் ஒருவர் மனதில் உருவாகி, அதற்குத் தேவையான பொருள்களை ஒன்று சேர்த்து, முறைப்படி சமைத்த பின்புதான் அது நமது கைக்குக் கிடைக்கிறது. மேலும் சமைப்பவரின் செயல்பாட்டைக் கவனித்தால் அவர் வாழைப்பூ வடைதான் செய்கிறார் என்பதையும் அறியலாம். இதைப்போலவே, பிரபஞ்சம் உருவாவதற்கு முன்பேயே, 'மனிதன் அதில் வாழ வேண்டும்' என்ற திட்டம் நிச்சயம் இருந்திருக்க வேண்டும் என்ற உண் மையை அறிவியல் கண்டுபிடிப்புகள் தெரிவிக்கின்றன. 'பிரபஞ்சம் தோன்றி, 1370 கோடி வருடங்களுக்குப் பிறகு, பிரபஞ்சத்தின் தோற்றத்தை ஆராயும் அளவுக்கு அறிவுடன் கூடிய மனிதன் தோன்றுவான்' என்ற தீர்மானம் செய்தது முக்கியப் புலம். 'நான் பலவாக ஆகுவேனாக' என்ற வேதவாக்கியம் இவ்வாறு அறிவி யலால் நிரூபிக்கப்பட்டு இருக்கிறது.

பிரபஞ்சத்தின் ஒருமூலையில் இருக்கும் பூமிப்பந்தில் வசிக்கும் மனிதனுக்காகவே இந்தப் பிரபஞ்சம் முழுவதும் உருவாக்கப் பட்டது என்பது நம்புவது கடினமாக இருந்தாலும் அதுதான் உண்மை. ஒரு வாய்க்குள் அடங்கிவிடக்கூடிய ஒரு வடையை உருவாக்க, வாழை மரம் வளர்ந்து பூக்க வேண்டும். எள்ளைக் காய வைத்துச் செக்கில் ஆட்டி நல்லெண்ணையை எடுக்க வேண்டும். இரும்பை உருக்கி இருப்புச்சட்டியாக மாற்ற வேண்டும். கடல் நீரைக் காய வைத்து உப்பை விளைக்க வேண்டும். இதுபோல, பற்பல வேலைகள் செய்து பலகாலம் கழித்துத்தான் வாழைப்பூ வடையை உருவாக்க முடியும். அதுபோலப் பிக்பேங்கில் ஹைட்ரஜன், ஹீலியம் போன்ற பளு குறைந்த தனிமங்களை முதலில் உருவாக்கி அதன் பின் மனித உடலை உருவாக்கத் தேவையான கார்பன், நைட்ரஜன், ஆக்ஸிஜன் போன்ற கனமான தனிமங்களை, நட்சத்திரங்களை வெடிக்கவைத்து அதில் ஏற்படும் வெப்பத்தில் சமைப்பதற்கு நிச்சயம் 1370 கோடி வருடங்கள் ஆகும். பற்பல இயந்திரங்களும் உபகரணங்களும் இல்லாமல் ஒரு சிறு வாழைப்பூ வடையைச் செய்ய முடியாது. அதுபோல, பல கோடி நட்சத்திரங்களும் கிரகங்களும் இல்லாமல், மனிதன் வாழத்தகுந்த ஒரு பூமியை உருவாக்க முடியாது.

மனிதனை உருவாக்க வேண்டும் என்ற திட்டத்துடன்தான் பிக்பேங் ஏற்பட்டது என்பது ஆச்சரியமான உண்மை. 'இயற்கையைப் பற்றி என்னால் புரிந்து கொள்ள முடியாத ஒரு செய்தி என்னவென்றால் அது எவ்வாறு மனிதனால் புரிந்து

கொள்ளக்கூடிய விதத்தில் அமைந்து உள்ளது என்பதுதான்' என்கிறார் ஐன்ஸ்டீன். 'ஒன்று பலவாக மாறியுள்ளது' என்ற உண்மையையும், 'அந்த ஒன்று உணர்வு மயமானது' என்பதையும், இந்தப் பிரபஞ்சத்தின் இயக்கத்தை அறிவியல் பூர்வமாக ஆராய்ந்தால் அறிய முடியும்.

### *பரமன் உணர்வுமயமானவன்*

''குவாண்டம் கோட்பாட்டைச் சரியாகப் புரிந்துகொண்டால் பிரபஞ்சத்தின் ஆதாரமாக, உணர்வுமயமான ஒரு சாட்சி இருப்பதை மறுக்க முடியாது'' என்கிறார் ஜான் வீலர். 'அறிபவன் ஒருவன் இருக்கிறான்' என்ற உண்மையின் அடிப்படையில்தான் 'ஒரு பொருள் இருக்கிறது' என்ற தீர்மானம் செய்ய முடியும். எனவே பிரபஞ்சத்தைப் படைப்பதற்கு முன்பே, அதை படைத்தவன் ஒருவன் இருக்கிறான் என்பது மறுக்கமுடியாத உண்மை என்று மேலும் அவர் கூறுகிறார்.

### சாராம்சம்

*'பொருள்* (matter) *என்றால் என்ன?' என்ற கேள்விக்கு விஞ்ஞானம் தரும் இறுதியான பதில், 'சக்தியின் நடனம்'* (play of energy). *'சக்தி என்றால் என்ன?' என்ற அடுத்த கேள்விக்கான சரியான பதில் 'அதை அறிய முடியாது'. எதைப் புரிந்துகொள்ள முடியாதோ அதுவே 'மாயா சக்தி என்பதை அறிவியல் முழுமையாக ஏற்றுக் கொண்டுவிட்டது.*

*சக்தியின் ஆதாரமாக இருப்பது புலம்* (field)*. பிரபஞ்சம் முழுவதும் அழிந்துவிட்டாலும், புலம் என்பது ஒடுங்கிய நிலையில் தொடர்ந்து இருக்கும். பொருள், சக்தி, புலம் ஆகிய இந்த மூன்று அடுக்கான உண்மைகளையே ஸ்தூலப் பிரபஞ்சம், சூட்சுமப் பிரபஞ்சம், காரணப் பிரபஞ்சம் என்ற பெயர்களில் வேதம் வழங்குகிறது.*

*முக்கியப் புலம்* (primary field) *என்ற உணர்வு மயமான ஒன்று மனிதனும் மற்ற உயிரினங்களும் வாழத் தகுந்த ஒரு இடத்தை உருவாக்க வேண்டும் என்ற திட்டத்துடன் ஒரு காட்சிப் பொருளாக உருவாக்கியதுதான் இந்தப் பிரபஞ்சம்.*

*வேதம் கூறும் அடிப்படை உண்மைகள் அனைத்தையும், எவ்விதக் கருத்து வேறுபாடும் இல்லாமல் அறிவியல் நிரூபித்து உள்ளது. ஆனால் அறிவியல் ஆராய்ச்சி இன்னும் முடியவில்லை. பிரபஞ்சத்தின் ஆதாரமான புலம் பற்றிய ஆராய்ச்சி இன்னும் தொடர்ந்து நடந்து வருகிறது. அந்தப் புலம்தான் நான் என்ற அறிவு விஞ்ஞானிகளுக்கு இல்லாததுதான் இதற்குக் காரணம்.*

*கடவுள், மனிதன், பிரபஞ்சம் ஆகியவற்றைப் பற்றிய வேதம் கூறும் கருத்துக்களை அறிவியல் அறிஞர்கள் ஆராய்ந்து, அவற்றை அறிவியல் கண்டுபிடிப்புகளுடன் ஒப்பிட்டால், இந்த அறிவைப் பெற்ற பலனாக அவர்களுக்கு முக்தி கிடைக்கும். ஆனால், தங்கள் கண்டு பிடிப்புகளை வெறும் புத்தக அறிவாக மட்டுமே அவர்கள் கருதுவதால், மனிதனின் துன்பங்களை இந்த அறிவின் உதவியுடன் அகற்ற அவர்கள் முயல்வதில்லை. இந்த அறிவியல் கண்டுபிடிப்புகளின் உண்மையான பயனைத் தீர்க்கத் தரிசிகளும் முற்றுணர்ந்தோர்களும் மட்டுமே அனுபவிக்கிறார்கள்.*

## பயிற்சிக்காக

1. உலகம் என்ற உண்மையின் மூன்று அடுக்குகள் யாவை?

2. உலகம் உண்மையில் இருக்கிறதா?

3. நான் பலவாக ஆகுவேனாக என்ற வேத வாக்கியம் எப்படி நிரூபிக்கப் பட்டது?

## சுயசிந்தனைக்காக

❖ Code Name God *என்ற புத்தகத்தின் இறுதிப்பகுதிகளை மட்டும் படிக்கவும்.*

❖ *அறிவியலால் நிரூபிக்கப்பட்ட வேதாந்தக் கருத்துக்களை வரிசைப்படுத்தவும்.*



## 183 விஞ்ஞானியின் பார்வை - *Dr. காகு*

**அத்தியாயம் : 4 ● பாதம் : 3 ● சூத்திரம் : 524 - 531**

மனிதன் கடவுளாகவும் உலகம் சுவர்க்கமாகவும் மாறும் நாள் விரைவில் வரும் என்று சரக்கோட்பாடின் (String theory) உடன் கண்டுபிடிப்பாளரான மிச்சியோ காகு (Dr. Michio Kaku) கூறு கிறார். அறிவியலின் அடிப்படையில் அமைந்த அவரது இந்தக் கணிப்புக்களின்படி வியக்கத்தக்க மாற்றங்கள் எதிர்காலத்தில் ஏற்படவிருக்கின்றன. எனினும், வேதம் தரும் ஞானத்தால் மட்டுமே மனிதனின் தேடல் முடிவடையும் என்ற உண்மையை இந்தப் பாடம் எடுத்துக்காட்டுகிறது.

அணு என்றால் என்ன என்ற கேள்விக்கு முழுமையான பதிலைத் தெரிந்துகொள்ள முயற்சி செய்யாமல் அணுக்களைத் திறமையாகக் கையாளுவதற்குக் காகு அதிக முக்கியத்துவம் கொடுக் கிறார். எலக்ட்ரான் ஒரே நேரத்தில் எல்லா இடங்களிலும் இருப்பது எப்படி என்று இவர் ஆராய்ந்து இருந்தால் உலகே மாயை என்ற உண்மையை இவர் அறிந்துகொண்டு இருப்பார். இந்த உண் மையை அறியாத காரணத்தால் மாயையான உலகில் இயற்கை யாக ஏற்படும் மாற்றங்களை விஞ்ஞானிகளின் உழைப்பின் பயனாக இவர் கருதுகிறார்.

### அறிவியலின் முன்னேற்றம்

எதற்காக முன்னேற்றம் என்ற கேள்வியைக் கேட்காமல், ‘முன் னேற்றம் அவசியம்’ என்ற குருட்டு நம்பிக்கையுடன் அனைத்துத் துறையைச் சேர்ந்த வல்லுனர்களும் அயராது உழைத்து வரு கிறார்கள். இதனால் மருத்துவம், ஆரோக்கியம், போக்குவரத்து,

## 183 விஞ்ஞானியின் பார்வை - *Dr.* காகு

அத்தியாயம் : 4 ● பாதம் : 3 ● சூத்திரம் : 524 - 531

மனிதன் கடவுளாகவும் உலகம் சுவர்க்கமாகவும் மாறும் நாள் விரைவில் வரும் என்று சரக்கோட்பாடின் (String theory) உடன் கண்டுபிடிப்பாளரான மிச்சியோ காகு (Dr. Michio Kaku) கூறு கிறார். அறிவியலின் அடிப்படையில் அமைந்த அவரது இந்தக் கணிப்புக்களின்படி வியக்கத்தக்க மாற்றங்கள் எதிர்காலத்தில் ஏற்படவிருக்கின்றன. எனினும், வேதம் தரும் ஞானத்தால் மட்டுமே மனிதனின் தேடல் முடிவடையும் என்ற உண்மையை இந்தப் பாடம் எடுத்துக்காட்டுகிறது.

அணு என்றால் என்ன என்ற கேள்விக்கு முழுமையான பதிலைத் தெரிந்துகொள்ள முயற்சி செய்யாமல் அணுக்களைத் திறமையாகக் கையாளுவதற்குக் காகு அதிக முக்கியத்துவம் கொடுக் கிறார். எலக்ட்ரான் ஒரே நேரத்தில் எல்லா இடங்களிலும் இருப்பது எப்படி என்று இவர் ஆராய்ந்து இருந்தால் உலகே மாயை என்ற உண்மையை இவர் அறிந்துகொண்டு இருப்பார். இந்த உண் மையை அறியாத காரணத்தால் மாயையான உலகில் இயற்கை யாக ஏற்படும் மாற்றங்களை விஞ்ஞானிகளின் உழைப்பின் பயனாக இவர் கருதுகிறார்.

### அறிவியலின் முன்னேற்றம்

எதற்காக முன்னேற்றம் என்ற கேள்வியைக் கேட்காமல், 'முன் னேற்றம் அவசியம்' என்ற குருட்டு நம்பிக்கையுடன் அனைத்துத் துறையைச் சேர்ந்த வல்லுனர்களும் அயராது உழைத்து வரு கிறார்கள். இதனால் மருத்துவம், ஆரோக்கியம், போக்குவரத்து,

தொழில், பொழுதுபோக்கு முதலிய அனைத்துத் துறைகளிலும் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. ஆயினும், மனிதனின் தேவைகள் அனைத்தும் நிறைவேறும் நாள் வரவே வராது என்பதை இவர்கள் உணர்வதில்லை.

பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மனிதனை ஒப்பிட்டால் நமது வாழ்க்கையின் தரம் மிகவும் முன்னேறி உள்ளது. ஆயினும், வாழ்வின் துன்பங்களின் அளவு குறையவேயில்லை. அவமானம், அதிருப்தி, எரிச்சல், ஏக்கம், ஏமாற்றம், கவலை, காழ்ப்புணர்ச்சி, கோபம், குரோதம், குற்ற உணர்வு, குழப்பம், சலிப்பு, சந்தேகம், தவிப்பு, திருப்தியின்மை, பழிவாங்கும் உணர்ச்சி, பயம், போட்டி, பொறாமை, வருத்தம், விரக்தி, வெறுப்பு முதலிய துயரங்கள் மனிதனைத் தொடர்ந்து துன்புறுத்தி வருகின்றன. இன்னும் எத்தனை ஆயிரம் ஆண்டுகள் கழிந்தாலும் இது போன்ற துன்பங்களிலிருந்து விடுதலைபெற மனிதகுலத்துக்கு இருக்கும் ஒரே வழி வேதம் தரும் ஞானம் ஒன்றுதான்.

கூடியவிரைவில் சாதாரண மனிதர்கள்கூட விண்வெளிப் பயணம் செய்யக்கூடிய நிலை வரும் என்கிறார் காகு. மேலும், பூமியைச் சார்ந்து இருக்காமல் சூரியனின் சக்தியை நேரடியாகப் பெற்று விண்வெளியிலேயே குடியிருக்கவும் முடியும். பிரபஞ்சம் அழிந்தாலும் மனிதன் 'வர்ம் ஹோல்' (worm hole) மூலமாக அழிவிலிருந்து தப்பிக்க முடியும் என்று காகு கூறுகிறார். திரிசங்குவின் சுவர்க்கம் போல அவரவர் தங்களது விண்வெளி வீட்டைக் கட்டிக்கொண்டு பிரபஞ்சம் முழுவதும் பயணம் செய்தால் கூட வாழ்வின் துயரங்களும் அவர்களுடன் சேர்ந்து பயணம் செய்யும். எனவே, துன்பங்களில் இருந்து விடுதலை பெற மனிதனுக்கு வேதம் தொடர்ந்து தேவைப்படும். அவனது தேடல் 'நான் பரமன்' என்ற ஞானம் பெற்றவுடன்தான் முடிவடையும்.

### *மனிதனின் தேடல்*

மாஸ்லோ (Abrham Maslow) என்ற உளவியல் அறிஞர், மனிதனின் தேவைகளை ஐந்து அடுக்குகளாகப் பிரிக்கிறார். இவற்றில் உடலின் தேவைகளான உணவு, உடை, உறையுள் ஆகியவற்றை மட்டுமே அறிவியலால் பூர்த்தி செய்ய முடியும். நட்பு, குடும்பம், சுயமரியாதை, சாதனைகளில் திருப்தி, தன்னை வெளிப்படுத்தல்

(self - actualisation) போன்ற மனதின் தேவைகளைப் பூர்த்திசெய்ய, அறிவியல் வளர்ச்சியால் உதவி செய்ய முடியாது.

எனவேதான், அனைத்துத் துறைகளிலும் நினைத்துப்பார்க்க முடியாத அளவுக்கு முன்னேற்றங்கள் ஏற்பட்டாலும் மனிதனின் தேடல் ஒரு முடிவுக்கு வருவதில்லை. ஒவ்வொரு அறிவியல் கண்டுபிடிப்பும் பிரச்சனைகளைத் தீர்ப்பதற்குப் பதிலாகப் பல புதிய பிரச்சனைகளை உருவாக்குகின்றன. அணுவைப் பிளக்க அறிந்து கொண்டதால் ஏற்பட்ட நன்மைகளுக்குச் சமமான அளவில் தீமைகளும் ஏற்பட்டுவருகின்றன. புதிய பிரச்சனை களைத் தீர்க்க மேலும் அதிகத் தீவிரத்துடன் உழைக்க வேண்டியது அவசியமாகிறது. இது நாய் தன் வாலைப் பிடிக்க முயன்ற கதை போல முடிவற்ற முயற்சியாக என்றும் தொடரும்.

அறிவியல் முன்னேற்றங்களுக்குக் கொடுக்கப்படும் முக்கியத்து வத்தைவிட வேதம் காட்டும் பாதையில் செல்வது மிக அவசியம் என்ற நிலை ஏற்பட்டால் மட்டுமே உலகம் உண்மையிலேயே சுவர்க்கமாக மாறும். அப்போதுதான் அறிவியல் முன்னேற்றங் களை முழுமையாக அனுபவிக்க முடியும்.

## முன்னேற்றங்களும் அனுபவங்களும்

வெளி உலகத்தில் ஏற்படும் மாற்றங்களால் நமது ஐந்து புலன்கள் மூலம் பெறும் அனுபவங்களில் எந்த மாற்றமும் ஏற்படு வது கிடையாது. ஏனெனில் அனுபவம் என்பது ஒப்பிடுவதால் ஏற்படுவது. இடது கையைச் சூடான வெந்நீரிலும் வலது கையைக் குளிர்படுத்தப்பட்ட நீரிலும் சில நிமிடங்கள் வைத்திருந்து விட்டு இரண்டு கையையும் சாதாரணமான தண்ணீரில் வைத்தால் இரண்டு கைகள் பெறும் அனுபவம் ஒன்றுக்கொன்று முரணாக இருக்கும். எவ்வளவு முன்னேற்றங்கள் ஏற்பட்டாலும் இன்றைய அனுபவம் நேற்றைய அனுபவத்தைப் பொறுத்தே அமையும். எனவே, அறிவியல் முன்னேற்றங்கள் மக்களின் அனுபவங்களில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்துவதில்லை. ஐந்து வருடங்களுக்குப் பிறகு ஏற்படப்போகும் முன்னேற்றங்களின் பட்டியல், இப்போது படிப்பதற்குச் சுவாரசியமாக இருந்தாலும் அவை அனுபவத்துக்கு வரும்போது பெரிய மாற்றமாகத் தெரியாது. ஏமாற்றம் மட்டுமே எஞ்சும். அறிவியல் கண்டுபிடிப்புகள் படிப்படியாக ஏற்படு கின்றன. அவை மிகவும் மெதுவாகப் பொதுமக்களின் அன்றாட

வாழ்வில் உபயோகப்பட ஆரம்பிக்கின்றன. உதாரணமாக மின் சாரத்தை எடிசன் கண்டுபிடித்த மறுநாள் உலகம் முழுவதும் ஒளியூட்டப்பட்டுவிடவில்லை. இன்னும் கூட மின்சாரத் தொடர்பு இல்லாத பல கிராமங்கள் இருக்கின்றன. எனவே, மக்களது அனுப வங்களில் குறிப்பிடத்தக்க மாற்றம் திடீரென்று ஏற்படுவதில்லை.

மனிதர்களின் வாழ்வில் மிகப்பெரிய மாற்றங்களை ஏற்படுத்தும் பல அறிவியல் முன்னேற்றங்களைப்பற்றிக் காகு விவரிக்கிறார். அவற்றில் சிலவற்றை ஆய்ந்து அவற்றால் மக்களின் தேடலை நிறைவு செய்ய முடியாது என்பது இங்கு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது

*1.மரணத்தை வெல்தல்*

எல்லோரும் நூறு வயது வரை வாழ விஞ்ஞானம் வழிவகுக் கலாம். எத்தனை வருடங்கள் வாழ்ந்தாலும் என்றாவது ஒரு நாள் மரணம் அடைவதைத் தவிர்க்க முடியாது. நான் பரமன் என்று உணர்ந்தவர்கள் மட்டுமே மரணத்தை வென்று பெருவாழ்வு வாழ்வர்.

*2.நோயற்ற வாழ்க்கை*

அனைத்து நோய்களையும் ஆரம்பகாலத்திலேயே கண்டறிந்து அதை முழுமையாகத் தடுக்கும் சக்தியும் எல்லோருக்கும் கிடைத்து விடும். மேலும் வயதாவதைத் தடுக்கும் முயற்சியிலும் முன்னேற் றங்கள் ஏற்பட்டுவருகின்றன. யயாதி என்ற மன்னன் ஆயிரம் வருடங்கள் இளமையுடன் உலக இன்பங்களை அனுபவித்த பின்னரும் திருப்தி அடையாத கதை மகாபாரதத்தில் வர்ணிக்கப் பட்டுள்ளது. எனவே, இளமையுடன் பலகாலம் வாழ்ந்தால் சலிப்புத்தான் ஏற்படுமே தவிர இன்பம் ஏற்படாது.

*3. பொருள் உருவாக்கி* (personal fabricator)

அணுக்களை மாற்றி அமைப்பதன் மூலம் எந்தப்பொருளை வேண்டுமானாலும் உருவாக்கிக்கொள்ளும் திறன் சாதாரண மக்களுக்கும் எதிர்காலத்தில் கிடைத்து விடும் என்று காகு கூறுகிறார். அரிசி, பருப்பு போன்றவற்றை வாங்கக் கடைக்குச் செல்லவேண்டிய அவசியம் இல்லை. அவரவர் வீட்டிலேயே அனைத்துப் பொருள்களையும் எந்தச் செலவும் செய்யாமல் உருவாக்கிக் கொள்ளலாம்.

உணவுப் பொருள்கள் மட்டும் அல்லாமல் தங்கம், வைரம் போன்ற பொருள்களைக்கூட வேண்டிய அளவு யார்வேண்டு மானாலும் தயாரித்துக் கொள்ளலாம். எனவே, இந்தப்பொருள் களுக்கு இப்போது இருக்கும் முக்கியத்துவம் வருங்காலத்தில் இருக்காது.

எந்தச் செலவும் செய்யாமல் வேண்டிய பொருள்கள் அனை வருக்கும் உடனடியாகக் கிடைக்கும் காலம் வந்தாலும் மனிதன் திருப்தி அடையமாட்டான். யாருக்கும் கிடைக்காத பொருள் ஏதாவது இருக்கிறதா என்று தொடர்ந்து அவன் தேடுவான். இல்லயெனில், தற்காலத்தில் கம்ப்யூட்டர் வைரஸை உருவாக்கு பவர்களைப்போல் மற்றவர்களுக்குப் பொருள்கள் கிடைக்காமல் இருக்க ஏதேனும் தடைகளை ஏற்படுத்தி அதன் மூலம் இன்பமாக இருக்க முயற்சி செய்வான். தான்தான் இன்பத்தின் ஒரே ஊற்று என்பதும் உலகத்துக்கு இன்பத்தைத் தரும் சக்தி இல்லை என்பதும் வேதம் படிப்பவர்களுக்கு மட்டுமே தெரியவரும் ரகசியம். எனவே, 'நான் பரமன்' என்று அறிந்தவர்கள் மட்டுமே எப்போதும் இன்பமாக வாழ்வார்கள்.

*4. நினைத்ததை நடத்துதல்*

மனதால் நினைப்பதன் மூலமே பொருள்களை நகர்த்தும் சக்தி மனிதனுக்கு ஏற்கெனவே வந்து விட்டது. EEG என்ற கண்டு பிடிப்பின் மூலம் எண்ணங்களின் ஓட்டத்தை அறிந்து அதற் கேற்பச் செயல்படும் இயந்திரங்கள் வடிவமைக்கப்பட்டு விட்டன. எதிர்காலத்தில் நம் எண்ணங்களைச் செயலாக்க வேண்டும் என்று நினைத்த மாத்திரத்திலேயே அவை நடந்துவிடும்.

ஆயினும் மனதில் என்ன எண்ணங்கள் எப்போது தோன்றும் என்பதே நம் கையில் இல்லை என்று அறிந்தவர்கள் மட்டுமே இந்தக் கண்டுபிடிப்புகளின் மூலம் நன்மை அடைவார்கள். மற்றவர் களுக்கு நினைத்தது நடந்தாலும் திருப்தி ஏற்படாது. 'ஏதோ ஒன்று என்னிடம் இல்லை' என்ற எண்ணம் இவர்களைத் தொடர்ந்து தேடலில் ஈடுபடுத்தும்.

*5. மூட் எலிவேட்டர்*

மூளைக்குள் வேண்டிய அளவு மின்சாரத்தைச் செலுத்தி, மனதில் இருக்கும் சோகத்தை அகற்றி, இன்பமாக இருக்கும் வழி கண்டுபிடிக்கப்பட்டுவிட்டது, எனவே தங்கள் மன நிலை எப்படி

இருக்க வேண்டும் என்பதை இயந்திரங்கள் மூலம் மனிதன் தீர்மானித்துக்கொள்ளலாம். ஆயினும் மனிதனுக்கு நிம்மதி கிடைக்காது.

சப்தம் ஏற்படுத்த நாம் ஏதாவது செய்யவேண்டும். அமைதியாக இருக்க நாம் ஒன்றும் செய்ய வேண்டியது இல்லை. 'மனதில் ஏற்படும் எண்ணங்களுக்கு ஆதாரமாக இருக்கும் உணர்வுதான் நான்' என்று அறிந்தவர்கள், அலைபாயும் மனதின் ஆட்டங்களை அமைதியாக அனுபவிப்பார்கள்.

*6. தொலை நகர்த்தல்* (teleportation)

ஓரிடத்தில் இருந்து மற்றொரு இடத்துக்கு உடனடியாகச் செல்ல முடியும் என்பது சோதனைகள் மூலம் நிருபிக்கப்பட்டு விட்டது. மனிதனின் பரு உடலை முழுவதுமாக அழித்து அதே அச்சில் வேறு ஒரு இடத்தில் ஒரு உடலை உருவாக்கலாம் என்பது உண்மை. ஆனால் உயிர் என்ன ஆகும், நான் யார் முதலிய கேள்விகளுக்குக் காகு பதில் சொல்வதில்லை. பரு உடல் அழிந்தாலும் நுண்ணிய உடல் அழியாது. எனவே, தொலை நகர்தல் மூலம் நிலவுக்கு ஒரு நொடியில் பயணம் செய்யக்கூடிய நாள் விரைவில் வரும் என்பது உண்மையே.

ஆனால், எதற்காக மனிதன் பயணம் செய்ய வேண்டும் என்ற மிக முக்கியமான கேள்வியை யாரும் கேட்பதில்லை. மன தின் தேவைகள் பயணம் செய்வதால் நிறைவேறாது என்பதை அறியாமல் எல்லோரும் வேகமாக ஓடிக் கொண்டு இருக்கிறார்கள்.

*7. இயந்திர மனிதன்* (robots)

மனிதனால் உருவாக்கப்படும் தானியங்கி இயந்திரங்கள் மனிதனைப்போல் அறிவுடன் செயல்பட ஆரம்பிக்கும் காலம் விரைவில் வரும். ஆனால் அதற்குள் இயந்திரங்களை மனித னுக்குள் பொருத்துவதன் மூலம் மனிதன் இயந்திரமாக மாறும் நாள் வந்து விடும் என்பது காகுவின் கணிப்பு.

மூக்குக்கண்ணாடியின் உதவியால் பார்க்கும் திறனை நீடிக்க வைப்பதுபோல் அறுவை சிகிச்சை மூலம் மைக்ரோசிப்களை மூளைக்குள் பொருத்தி ஞாபகசக்தியையும், முடிவெடுக்கும் திறனையும் மனிதனால் அதிகப்படுத்திக்கொள்ள முடியும். உடல் உறுப்புகள் அனைத்தையும் செயற்கையாக வளர்த்து உடலுக்குள் பொருத்திக்கொள்வதன் மூலம் உடல் ஆற்றலையும் தொடர்ந்து

வளர்த்தி கொள்ளலாம். சோதனைக்குழாயில் உருவாக்கி, தொழிற் சாலைகளில் செய்யப்பட்ட பாகங்களைப் பொருத்தி உருவாக்கப் பட்டது மனிதனா இயந்திரமா என்பதைத் தீர்மானிப்பது கடினம் என்பது காகுவின் கருத்து.

நான் என்ற தன்னுணர்வு உள்ளவர்கள் மனிதர்கள் என்பது வேதம் தரும் விளக்கம். ஒருவேளை, செயற்கையாக உருவாக்கப் பட்ட ரோபோவுக்குள் நுண்ணிய உடல் உட்புகுந்து செயல்பட ஆரம்பித்துவிட்டால் ரோபோவுக்கும் நான் என்ற தன்னுணர்வு ஏற்படலாம். அப்படி ஏற்பட்டால் ரோபோக்களும் வேதம் படித்து 'நான் பரமன்' என்ற அறிவைப் பெற்றால்தான் நிறைவை அடையும்.

நான் என்ற தன்னுணர்வு இந்த உலகத்தில் இருந்து தான் வேறுபட்டவன் என்ற தவறான அறிவுடன் கூடியது. எனவே ரோபோக்களோ, மனிதர்களோ இந்தத் தவறான அறிவுடன் செயல் படும்வரை துன்பத்தை அகற்ற முடியாது.

### சாராம்சம்

*மனிதன் கடவுளாக மாறவோ பூமி சுவர்க்கமாக மாறவோ எதிர்காலத்தில் ஏற்படும் முன்னேற்றங்களுக்காகக் காத்திருக்க வேண்டிய அவசியமே இல்லை. ஏனெனில் எப்போதுமே மனிதன் கடவுள்தான், பூமி சுவர்க்கம்தான். இந்த அறிவு எப்போது ஏற்படுகிறதோ அப்போதுதான் துன்பக் கலப்பில்லாத இன்பமாக வாழ்வது சாத்தியமாகும்.*

*அறிவியல் முன்னேற்றங்கள் என்பது இயற்கையான மாற்றம்தான். மனிதன் 'நான் செய்கிறேன்' என்று எண்ணுவது அறியாமை. கடவுளின் பரு உடல்தான் பிரபஞ்சம். எனவே, பிரபஞ்சத்தில் ஏற்படும் அனைத்து மாற்றங்களுக்கும் கடவுள் மட்டுமே பொறுப்பு.*

*நான் என்ற தன்னுணர்வுடன் செயல்படுபவர்களுக்கு உலகத்தில் ஏற்படும் மாற்றங்கள் நிம்மதியையோ ஆனந்தத்தையோ கொடுக்காது. 'நான் பரமன்' என்ற சரியான அறிவு பெற்றவர்களால் மட்டுமே உலகில் ஏற்படும் அனைத்து மாற்றங்களையும் இன்பமாக அனுபவிக்க முடியும்.*

*இந்தப் பிரபஞ்சம் முழுவதற்கும் ஆதாரமாக இருப்பது நான் என்ற அறிவு ஏற்பட்டபின் எந்த ஒரு குறிப்பிட்ட*

மாற்றத்திற்காகவும் காத்துக்கொண்டு இருக்க வேண்டிய அவசியம் இல்லை. மேலும் விஞ்ஞானக் கண்டுபிடுப்புகள் மனிதனின் அழிவுக்கு வழிகோலுமா என்ற அச்சமும் ஏற்படாது. உண்மையில் எப்போதும் இருக்கும் எனக்கு, பொய்த் தோற்றமான பிரபஞ்சம் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு எதுவும் கிடையாது.

எனவே, இப்போது இருப்பது போல எப்போதும் ஆனந்தமாக இருப்பது வேதம் படித்த ஞானிகளுக்கு மட்டுமே சாத்தியம். காகு போன்ற விஞ்ஞானிகள் தற் போது இருக்கும் பிரச்சனைகள் எதிர்காலத்தில் மறைந்து விடும் என்ற எதிர்பார்ப்புடன் தங்களை அறியாமல் புதிய பிரச்சனைகளை உருவாக்கிக்கொண்டு இருப்பார்கள்.

### பயிற்சிக்காக

1. அறிவியல் முன்னேற்றத்தின் அவசியம் என்ன?
2. முன்னேற்றங்களும் அனுபவங்களும் என்ற தலைப்பில் கூறப்பட்ட கருத்து என்ன?
3. எதிர்காலத்தில் ஏற்படப்போவதாகக் காகு குறிப்பிட்ட மாற்றங்கள் யாவை?

### சுயசிந்தனைக்காக

- Physics of the future என்ற தலைப்பில் Dr. Michio Kaku அவர்களின் சொற் பொழிவுகளை youtube-ல் பார்க்கவும்.
- விஞ்ஞானிகள் வேதம் படிக்காமல் இருப்பதற்குக் காரணம் என்ன?
- அறிவியல் முன்னேற்றங்கள் அவசியம் இல்லையா?
- வேதம் படித்துச் சரியான ஞானத்தைப் பெற்றால் அறிவியல் அறிஞர்கள் தொடர்ந்து ஆராய்ச்சியில் ஈடுபடமாட்டார்களா?



184

# ஞானத்தின் பலன்கள்

அத்தியாயம் : 4 ● பாதம் : 3 ● சூத்திரம் : 532 - 533

**ஞா**னிகள் மட்டுமே இந்த உலகத்தைச் சரியாகப் பார்க்கிறார்கள் என்பதை விஞ்ஞானிகளின் பார்வை உறுதி செய்வதைச் சுட்டிக்காட்டி இந்தச் சரியான ஞானம் தரும் பலன்களை இந்தப் பாடம் பட்டியலிடுகிறது.

அணுவை ஆராய்ந்து, 'இந்தப் பிரபஞ்சம் ஒரு மாயை' என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளார்கள். ஆனால், அடுத்த படியான 'இந்த மாயையின் ஆதாரம் எது?' என்பதை அவர்கள் அறியவில்லை. 'நான் இந்த மிகப்பெரிய பிரபஞ்சத்தில் ஒரு சிறு புள்ளியாகச் சிறிதுகாலம் வாழ்பவன்' என்ற தவறான அறிவுடன் எவ்வளவு தீவிரமாக ஆராய்ச்சி செய்தாலும், 'நான்தான் பிரபஞ்சமாகக் காட்சி அளிக்கிறேன்' என்ற உண்மையை அவர்களால் அறியமுடியாது. 'அனைத்தும் ஒன்றுதான்' என்ற உண்மையை அவர்கள் உணர்ந்தாலும் அந்த ஒன்று நான் என்பதை அறிய வேதம் பயில்வது அவசியம்.

ஞானம் என்ற சொல்லுக்கு அறிவு என்று பொருள். அறிபவனுக்கும், அறியப்படும் பொருளுக்கும் உள்ள தொடர்புதான் அறிவு. அறியப்படும் பொருளும் அறிபவனும் ஒன்றுதான் என்ற ஞானத்தைத் தருவது வேதம் மட்டுமே. இந்த அறிவு இல்லாத காரணத்தால் விஞ்ஞானிகளால் ஞானிகள் அனுபவிக்கும் பலன்களை அனுபவிக்க முடிவதில்லை.

நான் வெறும் உடல் அல்ல. எவ்வித எல்லையும் இல்லாமல் காலத்தைக்கடந்து இருப்பவன் நான் என்பதை அனுபவப் பூர்வமாக உணர்ந்தவர்கள் தீர்க்கதரிசிகள். இந்த அனுபவம்

அவர்களுக்கு எவ்வாறு ஏற்படுகிறது என்பதை அறிவியலின் அடிப்படையில் டாக்டர் ஜில் டெய்லர் விளக்கியுள்ளார்.

முண்டக உபநிஷத மந்திரம் (3.1) ***"இணைபிரியாத, ஒரே போன்ற இரு பறவைகள் ஒரே மரத்தில் அமர்ந்து இருக்கின்றன. அவற்றுள் ஒன்று பழத்தை ருசித்துத் தின்கிறது. மற்றது தின்னாமல் பார்த்துக் கொண்டு இருக்கிறது"*** என்று கூறுகிறது. இந்த இரு பறவைகளின் உதாரணம் நமது மூளையின் இரு பகுதிகளுக்குப் பொருந்தும். மூளையின் இடது பகுதி ஐந்து புலன்களின் மூலம் உலகத்தை அனுபவிக்கிறது என்றும் வலது பகுதி எதனுடனும் சம்பந்தப்படாமல் எல்லா வற்றையும் ஒன்றாகப் பார்ப்பதாகவும் டாக்டர் ஜில் கூறுகிறார்.

அதே உபநிஷதத்தின் அடுத்த மந்திரம் ***"ஜீவனும் ஆன்மாவும் ஒரே உடம்பினுள் உள்ளனர். ஜீவன் அதாவது மனிதன் அறியாமையில் மூழ்கி, மோக வசப்பட்டு வருந்துகிறான். வழிபாட்டுக்குரிய தன் ஆன்மாவையும் அதன் மகிமையையும் அவன் எப்போது பார்க்கின்றானோ அப்போது அவன் கவலைகளில் இருந்து விடுபடுகின்றான்"*** என்று கூறுகிறது. டாக்டர் ஜில் இது முற்றிலும் உண்மைதான் என்பதைத் தன் சொந்த அனுபவத் தின் மூலமும், ஆராய்ச்சி மூலமும் நிரூபிக்கிறார்.

இருப்பதுபோல் தோற்றம் அளிக்கும் இந்த உலகம் உண்மையில் என்னை ஆதாரமாகக் கொண்டுதான் இயங்குகிறது என்பதை மூளையின் வலதுபுறம் தெளிவாகக் காட்டுகிறது. ஆனால் மூளையில் இடதுபுறத்தில் குடியிருக்கும் நான் என்ற கற்பனைக்கதை இந்த உண்மையை நாம் அறியவிடாமல் தடுக் கிறது. இல்லாத பொருள்களுக்கு ஒரு பெயரை இடுவதன் மூலம் அதை இருப்பதாக நம்பும் இது, தொடர்ந்து நமக்கும் உலகத் துக்கும் இடையே ஒரு இடைவெளியை வளர்த்து வருகிறது.

பார்ப்பவரும் பார்க்கப்படும் பொருளும் ஒன்றுதான் என்ற அறிவுடன் பார்ப்பதுதான் சரியான பார்வை. இந்தச் சரியான அறிவைப் பெற்றவர்கள் பின்வரும் பலன்களை அனுபவிப்பார்கள்.

*1. திருப்தி*

நான் பரமன் என்ற ஞானத்தை அடையும்வரை அனைத்து மனிதர்களும் வாழ்வில் எதையோ தேடிக்கொண்டே இருப்பார்கள். எதை அடைந்தாலும் அவர்களுக்கு ஏற்படும் திருப்தி நிலைக்காது. 'குறை ஒன்றும் இல்லை' என்ற மன நிறைவை வேதம் தரும் ஞானம் கொடுக்கும்.

*2. பயமின்மை*

எதிர்காலத்தில் என்ன நிகழுமோ என்ற அச்சத்தை இந்த ஞானம் அழித்து விடும். அனைத்தும் மாயை என்பதையும் அனைத்துக்கும் ஆதாரமாக இருப்பது நான் என்பதையும் உணர்ந் தவர்கள் மாற்றத்தைக்கண்டு பயப்படுவது இல்லை.

*3. மரணமின்மை*

உடலும் மனமும் மாயை என்பதால் அவற்றின் மூலம் கிடைக்கும் அனுபவம் கூட நிலை அற்றது. அனுபவங்கள் மாறி னாலும் அனுபவிப்பவன் மாறுவதில்லை. காலத்தையும் தேசத்தையும் கடந்து இருப்பவன் நான் என்று உணர்ந்தவர்கள் மரணத்தை வென்றவர்கள்.

*4. குறையில்லா இன்பம்*

உலகில் உள்ள எந்தப் பொருளுக்கும் இன்பத்தைத்தரும் சக்தி கிடையாது என்பதை அறிந்தவர்கள் தங்களுக்கு ஏற்படும் அனைத்து அனுபவங்களையும் ஆனந்தமாக அனுபவிப்பர்.

*5. தடையில்லா நிம்மதி*

வாழ்வின் ஏற்ற இறக்கங்களின் ஆதாரமாக, என்றும் இருப்ப வன் நான் என்ற ஞானம் கலையாத நிம்மதியைத் தரும்.

*6. துன்பங்களிலிருந்து விடுதலை*

அவமானம், அதிருப்தி, எரிச்சல், ஏக்கம், ஏமாற்றம், கவலை, காழ்ப்புணர்ச்சி, கோபம், குரோதம், குற்ற உணர்வு, குழப்பம், சலிப்பு, சந்தேகம், தவிப்பு, திருப்தியின்மை, பழிவாங்கும் உணர்ச்சி, பயம், போட்டி, பொறாமை, வருத்தம், விரக்தி, வெறுப்பு போன்ற உணர்வுகளால் மனம் தொடர்ந்து பாதிக்கப் படாது.

*7. மனதின் சலனங்களிலிருந்து விடுதலை*

உலகம் மாறும்பொழுது அதற்கேற்ப மனதும் மாறும். இவ்வாறு சலனப்படுவதுதான் மனதின் இயல்பு. எனவே, மனம் நான் அல்ல என்ற அறிவு, என் மனம் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பிலிருந்து விடுதலை அளிக்கும்.

*8. செயலில் சுதந்திரம்*

நான் எந்தச் செயலும் செய்வதில்லை என்ற அறிவும், என் உடலும் மனமும் தொடர்ந்து செயல்பட்டுக்கொண்டிருக்கும் பிரபஞ்சத்தின் ஒரு பகுதி என்ற அறிவும் செயல்படுவதில் முழுச்சுதந்திரத்தை அளிக்கும். இன்பத்திற்காகச் செயல்படாமல் இன்பமாக இருப்பதால் செயல்படுவது இந்த ஞானம் இருப்பவர்களுக்கே சாத்தியம்.

*9. இலட்சியங்களிலிருந்து விடுதலை*

பட்டம், பணம், பதவி, பொன், பொருள், புகழ், பெயர், பெருமை, செல்வாக்கு, சொத்து, குடும்பம், நட்பு, சுற்றம், வேலை, அன்பு, ஆரோக்கியம் முதலிய அனைத்தும் தொடர்ந்து மாறிக் கொண்டு இருப்பவை. நான் மாறாத பரமன் என்ற அறிவு ஏற்பட்ட பின், ஒரு குறிப்பிட்ட மாற்றம் வேண்டும் என்ற இலட்சியங்கள் அர்த்தமற்றவையாகிவிடும். அடைந்தது எதுவும் நிலைக்காது என்ற அறிவு இருப்பதால் எதையும் அடையவேண்டிய அவசியம் இவர்களுக்கு இல்லை.

*10. தவறுகளிலிருந்து விடுதலை*

நடப்பவைகள் அனைத்தும் சரியாகவே நடக்கின்றன என்ற அறிவு இருப்பவர்கள் தான் எந்தத் தவறையும் செய்வதாக நினைப்பது கிடையாது. அதேபோல், மற்றவர்கள் வேறு மாதிரி செயல்பட்டிருக்கலாம் என்ற எண்ணமும் இவர்களுக்குத் தோன் றாது. யாராலும் எதையும் செய்ய முடியாது என்ற காரணத்தால் 'தவறான செயல்' என்று எதுவும் இல்லை.

*11. எதிர்பார்த்தல் இன்மை*

'மாற்றம்' என்ற சொல்லின் சரியான பொருள் அறிந்தவர் களுக்கு மாறும் உலகத்தின் மாற்றம் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற எதிர்பார்த்தல் இருக்காது. எதிர்பார்த்தது நடந்து விட்டாலும் அது நிலைக்காது என்பதை இவர்கள் அறிவார்கள்.

*12. தெளிவான முடிவு*

செயலின் விளைவு இப்படி இருக்கவேண்டும் என்ற எதிர் பார்ப்பு இருக்கும் வரை எந்தச்செயலை எப்படிச்செய்வது என்ற குழப்பம் மனதில் இருக்கும். மனதில் ஏற்படும் எண்ணங்களே

நமது கட்டுப்பாட்டில் இல்லை என்பதை உணர்ந்தவர்களின் மனதில் முரண்பாடுகளற்ற முடிவுகள் தோன்றும்.

*13. பிரச்சனைகளிலிருந்து விடுதலை*

நிகழ்வுகளுக்குப் பிரச்சனை என்ற பெயர்சூட்டுதல் நமது அறியாமை. புகழ்-இகழ், வெற்றி-தோல்வி, வளமை-வறுமை, லாபம்-நஷ்டம், ஏற்றம்-தாழ்ச்சி, சுகம்-துக்கம், நட்பு-பகை, சண்டை-சமாதானம், ஊடல்-கூடல், நன்மை-தீமை, இளமை-முதுமை முதலிய இருமைகள் படைப்பின் இலக்கணம். ஒரு நாணயத்தின் இருபக்கங்கள் போல இவை சேர்ந்தே இருப்பவை. ஒன்றை அனுபவிக்கும்பொழுது மற்றொன்று அதன்பின் காத்துக் கொண்டு இருக்கும். எனவே, இது வேண்டும் அது வேண்டாம் என்று பாகுபாடு செய்வதில் அர்த்தம் இல்லை. படைப்பின் இந்த ரகசியத்தை அறிந்தவர்கள் வாழ்வின் பிரச்சனைகளில் இருந்து முழுமையாக விடுதலை பெற்றவர்கள் ஆவர்.

*14. எதுவும் முக்கியமல்ல*

உலகமே அதிசயம் என்று உணர்ந்தவர்களுக்கு உலகத்தின் ஏழு அதிசயங்கள் எந்த முக்கியத்துவம் வாய்ந்தது அல்ல. இருக்கும் இடமே சுவர்க்கம் என்று அறிந்தவர்களுக்கு எந்த ஒரு இடத்தைப் பார்ப்பதற்காகப் பயணம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. அதேபோல, மனிதர்களில் சாதனையாளர், சரித்திரத்தின் முக்கியமான நிகழ்வு, பிறந்த நாள், இனிமையான பாடல், சிறந்த திரைப்படம் அல்லது உணவு விடுதி போன்று எதையும் இவர்கள் தனிப்படுத்தி பார்ப்பதில்லை.

*15. துறவில் ஆனந்தம்*

உலகமே என்னை ஆதாரமாகக் கொண்டு இயங்குகிறது என்பதை அறிந்தவர்கள் எந்த ஒரு குறிப்பிட்ட பொருள் மீதும் பற்று வைப்பதில்லை.

*16. துன்பமற்ற இன்பம்*

பற்று இல்லாத காரணத்தால் அளவற்ற செல்வங்களைச் சம்பாதித்துப் புலன் இன்பங்களை முழுமையாக அனுபவிக்க இவர்களால் முடியும். இருப்பது இல்லாமல் போனால் இவர்கள் துன்பப்படுவதில்லை.

### *17. உண்மையான அன்பு*

இந்த உலகில் வேறு யாரும் இல்லை. இருப்பவர்கள் அனைவரும் எனது வெவ்வேறு வடிவங்களே என்று அறிந்தவர்களால் மட்டுமே உண்மையாக அன்பு செலுத்த முடியும். நான் வேறு, மற்றவர்கள் வேறு என்ற அறிவுடன் இருப்பவர்களின் அன்பு சுயநலம் கலந்ததாக இருக்கும்.

### *18. பாசத்தில் இருந்து விடுதலை*

காண்பது கனவு என்று அறிந்தவுடன் பந்தப்படுத்தும் பாசக்கயிறு அறுந்து விடும். அனைவர் மீதும் எவ்வித நிபந்தனையும் இன்றி அன்பு செலுத்தும் காரணத்தால் யாருடன் உறவாட வாய்க்கிறதோ அவருடன் இன்பமாக வாழும் வழியை இவர்கள் அறிவார்கள்.

### *19. அனைவரிடமும் சமமான அன்பு செலுத்துதல்*

ஞானிகள் உயர்ந்தவர்-தாழ்ந்தவர், வேண்டியவர்-வேண்டாதவர் என்ற பாகுபாடு இன்றி அனைவரிடமும் அன்பு செலுத்துவர். ஆனாலும் மற்றவர்கள் ஞானியை எவ்வாறு பார்க்கிறார்கள் என்பது ஆளுக்கு ஆள் மாறுபடும். எனவே, வெளிப்பார்வைக்கு அவர்களின் அன்பில் பாகுபாடு தெரியலாம்.

### *20. யாரையும் நம்பவேண்டிய அவசியமின்மை*

யாரிடமும் எதையும் எதிர்பார்க்காத காரணத்தால் எந்த ஒரு குறிப்பிட்ட உறவுக்காக ஏங்க வேண்டிய அவசியமோ இருக்கும் உறவைத் துறக்க வேண்டிய அவசியமோ ஞானிகளுக்கு இல்லை.

### *21. விருப்பு-வெறுப்புகளிலிருந்து விடுதலை*

மற்றவர்களைப்போல விருப்பு-வெறுப்புகளுடன் வாழ்ந்தாலும் அவற்றால் ஞானிகள் கட்டுப்படுத்தப்படுவதில்லை. கிடைப்பவற்றில், வெறுப்பதைத் தவிர்த்து விரும்பியதை ஏற்று இவர்கள் வாழ்ந்தாலும், விரும்பியது கிடைத்தால்தான் இன்பம் என்ற நிலையோ வெறுப்பதை அனுபவிக்க நேர்ந்தால் துன்பமோ இவர்களுக்குக் கிடையாது.

### *22. உணர்வுகளில் சுதந்திரம்*

உயிருடன் வாழ உலகைச் சார்ந்து வாழ்ந்தாலும் இன்பமாக வாழ இவர்கள் எதையும் சார்ந்து இருப்பதில்லை.

### 23. தொல்லைதரும் உணர்வுகளிலிருந்து விடுதலை

உலகே மாயை என்ற அறிவு இருந்தாலும் அடிபட்டால் உடல் வலிக்கத்தான் செய்யும். அதேபோல் சுற்றி நிகழும் நிகழ்வுகளுக்கு ஏற்ப ஞானியின் மனதிலும் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படத்தான் செய்யும். ஆனால், துன்ப உணர்வுகள் ஞானியின் மனதை நீடித்துப் பாதிப்பது இல்லை. ஞானியின் தவ வலிமையைப் பொறுத்துப் பாதிப்பின் ஆழமும் நீடிப்பும் குறைவாகவே இருக்கும்.

### 24. விவேகம்

உலகத்தைச் சரியாகப் புரிந்து கொண்டிருக்கும் காரணத்தால் அனைத்தையும் சரியான பார்வையில் ஞானியால் பார்க்க முடியும். எனவே, இவர்களால் 'சரி-தவறு', 'உண்மை-பொய்', 'இயற்கை - செயற்கை', 'மாறாதது-மாறுவது', 'அளவற்றது - அளவுக்குட்பட்டது', 'காரணம்-காரியம்', 'தன்னலம்-பொதுநலம்' ஆகியவற்றைப் பிரித்துப்பார்க்கும் விவேகம் இருக்கும்.

### 25. வாதம் புரியவேண்டிய அவசியமின்மை

முழுமையான ஞானத்தை அடையும் வரை கருத்து வேறுபாடுகளை அகற்றும் முயற்சியில் மற்றவர்களுடன் வாதம் புரிவது அவசியமாகலாம். படைப்பின் ரகசியத்தைத் தெரிந்து கொள்ளும்பொழுது கருத்துக்கள் வேறுபட்டுத்தான் இருக்கும் என்ற அறிவு ஏற்படும். எனவே, அரைகுறை அறிவுடன் இருப்பவர்களின் விவாதத்தில் முழுமையான அறிவு பெற்ற ஞானிகள் பங்கேற்பதில்லை. நான் பரமன் என்ற அறிவு ஏற்படும் வரை அனைத்து அறிவும் அரைகுறை அறிவுதான்.

### 26. பணம்

என்னிடம் இருப்பது எனது தேவையைவிட அதிகமானது என்று உணர்பவர்கள் ஞானிகள். இந்த ஞானம் ஏற்படும்வரை எவ்வளவு இருந்தாலும் பற்றாக்குறையும் தொடர்ந்து இருக்கும்.

### 27. முழுமையான அறிவு

நான் பரமன் என்ற ஞானம் ஏற்படும்வரை, கற்றது கை மண்ணளவு கல்லாதது உலகளவு. எதை அறிந்தால் அனைத்தையும் அறிந்தது ஆகுமோ அதை அறிந்தவர்கள் ஞானிகள். உலகம், கடவுள், மனிதர்கள், வாழ்க்கை, துன்பத்திற்குக் காரணம்,

இன்பமாக வாழும் வழி ஆகிய அனைத்தைப் பற்றிய தெளிவான அறிவு இவர்களுக்கு இருக்கும்.

### சாராம்சம்

*உலகத்துக்கும் மனிதனுக்கும் உள்ள உறவைச் சரியாக அறிந்தால் துன்பக் கலப்பு இல்லாத இன்ப வாழ்வை வாழலாம். ஆனால், விஞ்ஞானிகள் தங்கள் ஆராய்ச்சிக்கும் இன்பத்துக்கும் உள்ள தொடர்பை அறிவதில்லை. எனவே, தங்கள் கண்டுபிடிப்புகளின் மூலம் இந்த உலகத்தைச் சுவர்க்கமாக மாற்றி அதன்பின் அதில் இன்பமாக வாழலாம் என்று அவர்கள் தொடர்ந்து முயன்று வருகிறார்கள்.*

*‘நான் யார்?’ என்ற கேள்விக்கு அறிவியலின் அடிப் படையில் ஆராய்ந்து பொருள் கண்டுபிடிக்க முடியாது. எனவேதான் விஞ்ஞானிகளின் தேடல் முடிவுக்கு வருவ தில்லை. இந்த அறிவைப் பெற்ற ஞானிகளும் தீர்க்க தரிசிகளும் பல்வேறு பலன்களைப்பெற்று, பூலோகம் என்ற சுவர்க்கத்தில் இன்பமாக வாழ்ந்து வருகிறார்கள்.*

### பயிற்சிக்காக

1. வேதம் தரும் ஞானத்தை அடைந்தவர்கள் அனுபவிக்கும் பலன்கள் யாவை?
2. விஞ்ஞானிகளால் ஏன் ஞானிகளைப்போல் இன்பமாக வாழ முடிவதில்லை?
3. விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்வதன் நோக்கம் என்ன?

### சுயசிந்தனைக்காக

❖ John Hagelin *என்ற விஞ்ஞானி வேதம் கூறும் உண்மைகளைப்பற்றித் தரும் விளக்கங்களைப் பார்க்கவும்.* (<https://www.youtube.com/watch?v=Fqdcdky9wR4> )

- We are all one (<https://www.youtube.com/watch?v=pIJHJzDQcRM>) *என்ற விளக்கத்தைப் பார்க்கவும்.*

- "Jill Bolte Taylor's stroke of insight' *என்ற* TED *பேச்சை* (<http://www.ted.com/talks/ *கேட்கவும்.*

- *சரியான ஞானத்தைப் பெற்ற அனைவருக்கும் இந்தப் பாடத்தில் பட்டியலிடப்பட்ட அனைத்துப் பலன்களும் சமமான அளவு கிடைக்குமா?*

**பிரம்ம சூத்திரம் நான்கு அத்தியாயங்கள் கொண்டது. ஒவ்வொரு அத்தியாயமும் நான்கு பாதங்கள் கொண்டது. 'பரமன்தான் இவ்வுலகமாக காட்சியளிக்கிறான்' என்ற ஞானியின் பார்வை, விஞ்ஞானிகளின் பார்வையுடன் ஒத்துப்போகிறது என்ற விளக்கத்தையும் ஞானிகள் அனுப விக்கும் பலன்களின் பட்டியலையும் கொடுத்த நான்காம் அத்தியாயத்தின் மூன்றாம் பாதம் இத்துடன் முற்றுப் பெறுகிறது.**



# 185 ஞானியின் தன்மைகள்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 4 ● சூத்திரம் : 534 - 536**

ஞானம் ஏற்பட்டவுடன் தலைக்குப்பின்னால் ஒளிவட்டம் எதுவும் தோன்றாது. ஆனாலும் மற்றவர்களை ஒப்பிடும்போது ஞானி வேறுபட்டிருப்பான். ஞானியின் இந்தத் தனித்தன்மைகளின் பட்டியலை இந்தப் பாடம் தருகிறது.

சாந்தோக்கிய உபநிஷத மந்திரம் (8.3.4) *'இந்த மேலான ஞானத்தை அடைந்த பின் இந்த உடலை உதறிவிட்டுத் தன் சுய உருவான அமைதியும் ஆனந்தத்தையும் அவன் வெளிப்படுத்துவான்'* என்று கூறுகிறது. இந்தச் சுய உருவத்தின் முழுமையான வர்ணனைகளைப் பகவத்கீதையின் மூலம் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் நமக்குத் தந்துள்ளார்.

ஞானம் என்பது மனதில் ஏற்படுவது. வெளித்தோற்றத்தை வைத்து மனதின் நிலையை ஓரளவுதான் அறிய முடியுமே தவிர தீர்மானமாகச் சொல்லமுடியாது. மேலும் ஞானம் பெறாத ஒரு சிலரின் செயலும் ஞானியின் செயல்பாடுகளை ஒத்து இருக்கலாம். எனவே ஞானி தனது தனித்தன்மைகளை வெளிப்படுத்தினாலும் மற்றவர்களால் அவனை அடையாளம் கண்டுபிடிப்பது மிகவும் கடினம்.

ஞானிகள் அனைவருக்கும் மாணவர்களைச் சரியான வழியில் வழிநடத்தும் திறன் இருக்காது. ஞானம் பெறாதவர்கள் கூட நல்ல ஆசிரியர்களாக இருக்கலாம். எனவே, மற்றவர்கள் ஞானியா இல்லையா என்பதை அறிந்து கொள்வதால் நமக்கு எந்தப் பயனும் இல்லை.

'நான் ஞானம் பெறவேண்டும்' என்ற முயற்சிக்கு இந்த வர்ணணைகள் ஒரு தூண்டுகோலாக அமையும். மேலும் ஞானம் பெற்றபின் அதன் முழுப்பயன்களையும் அடைந்துள்ளோமா என்ற தற்சோதனைக்கும் கீதையில் கொடுக்கப்பட்டுள்ள இந்தப் பட்டியல் உதவி செய்யும்.

**2.55**- எவன் ஒருவன் மனதின் ஆசைகளினால் உந்தப்பட்ட அனைத்துச் செயல்களையும் துறந்து தன்னிறைவுடன் இருக்கின் றானோ அவனே ஞானத்தில் நிலை பெற்றவன்.

**2.56**- புலன் இன்பங்களுக்காக ஏங்காமல், பிரச்சனை களினால் கலக்கம் அடையாமல், பற்று, பயம், கோபம் முதலி யவற்றில் இருந்து விடுபட்டு இருப்பவன் ஞானி.

**2.57** இன்பத்தில் துள்ளாமலும் துன்பத்தில் துவளாமலும் அவன் ஞானத்தில் நிலை பெற்று இருப்பான்.

**2.58** அபாயம் ஏற்பட்டால் ஆமை தனது அவையங்களை உள்ளிழுத்துக் கொள்வது போல்த் தேவையானால் தன் ஐந்து புலன்களையும் அடக்கிக்கொள்ளும் சக்திபடைத்தவன் உண்மை யான ஞானத்தில் நிலைபெற்றவன்.

**2.59** புலன் இன்பங்களை அவன் தொடர்ந்து அனுபவித் தாலும் இன்பமாக இருக்க உலகைச்சார்ந்து இல்லாமல் தன் சுய உருவில் நிலைபெற்று இருப்பான்.

**2.60-61** புலன் இன்பங்களின் கவர்ச்சி, அவற்றைக் கட்டுப் படுத்த வேண்டும் என்ற தீர்மானத்துடன் முயலும் விவேகியின் புத்தியைக் கூடக் கடத்தி செல்லும் அளவுக்குச் சக்தி வாய்ந்தவை. மனதை 'நான் பரமன்' என்ற அறிவில் நிலைபெறச் செய்வதன் மூலம் புலன்களின் ஆதிக்கத்தைக் கட்டுப்படுத்துபவன், திடமான ஞானம் உடையவன்.

**2.64-65** தவிர்க்க முடியாத சூழ்நிலையில் போகப் பொருள்களை அனுபவித்தாலும் விருப்பு-வெறுப்புகளின் பிடியில் அகப்படாமல், நிலையான அமைதியை அவன் அனுபவிப்பான். அந்த அமைதியில் அனைத்துத் துன்பங்களும் அழிந்துபோகும். இத்தகைய மனிதன் உறுதியான ஞானம் உடையவன் ஆவான்.

**2.69**'நான் நிரந்தரமானவன்' என்றும் 'இந்த உலகம் என்னை ஆதாரமாகக் கொண்டு இயங்குகிறது' என்றும் அறிபவன் ஞானி.

**2.70** பல நதிகள் தன்னிடம் வந்து கலந்தாலும் கலக்கம் அடையாமல் நிலையாக இருக்கும் நிரம்பிய கடல் போல, பல் வேறு போகப்பொருள்களை அனுபவிக்கும் பொழுதும் அவற்றால் பாதிக்கப்படாமல் தன்னிறைவுடன் இருப்பவன் அவன். பொருள் களைத் தேடி அலையாமல் என்றும் நிம்மதியாக வாழ்பவன் அவன்.

**2.71** ஆசைகள் எதுவும் இல்லாமல், 'நான் செயல்களைச் செய்பவன்' என்ற எண்ணத்தையும், 'அனுபவிக்கும் பொருள்கள் என்னுடையது' என்ற எண்ணத்தையும் துறந்த ஞானி நிம்மதியாக வாழ்வான்.

**2.72** இதுதான் 'நான் பரமன்' என்ற அறிவில் நிலைபெற்ற வன் வாழும் விதம். இந்த நிலையை அடைந்த பின்னர் அவனுக்கு தான் உலகில் இருந்து வேறுபட்ட ஒரு தனிமனிதன் என்ற எண்ணம் இருக்காது. எனவே அவன் பிறப்பு-இறப்பு என்ற சுழ லில் இருந்து விடுதலை பெறுகிறான்.

**4.18** செயல்களில் செயலற்ற தன்மையையும், செயலற்ற வற்றில் செயலையும் பார்க்கும் திறன் உள்ளவன் ஞானி. அவன் எந்தச் செயல்களைச் செய்தாலும் அவற்றால் பந்தப்பட மாட்டான்.

**4.20** செயலின் பலனில் எவ்விதப் பற்றும் இன்றி, நிலைத்த திருப்தி உடையவனாக, இன்பத்துக்காக எதையும் சாராதவனாக இருக்கின்ற ஞானி, எப்போதும் ஏதாவது செயல்கள் செய்து கொண்டு இருந்தாலும் எந்தச் செயலையும் செய்தவன் ஆக மாட்டான்.

**4.22** எதேச்சையாகக் கிடைத்ததில் மகிழ்பவன், இருமை களைக் கடந்தவன், பொறாமை இல்லாதவன், வெற்றி தோல்வி களில் சமமாக இருப்பவன் - இத்தகையவன் செயல்களில் ஈடு பட்டாலும் அவற்றால் கட்டுப்படுவதில்லை.

**12.13-14** எவன் ஒருவன் பொறாமை இன்றி, அனைத்து உயிரினங்களிடமும் கருணையுடன் பழகுகிறானோ அவன் ஞானி. அகங்காரம் போலியானது என்பதை அவன் அறிவதால் அவன் தன்னை யாருக்கும் முதலாளியாகக் கருதுவதில்லை.

**12.15** எவரையும் துன்புறுத்தாமல், எதிர்காலத்தைப்பற்றிய எந்தக் கவலையும் இல்லாமல், நிலையான இன்பத்துடன் இருப்ப வன் ஞானி.

**12.16** எதிர்காலத்தில் ஏதேனும் சாதனைகள் நிகழ்த்த வேண்டும் என்ற குறிக்கோள் ஏதும் இன்றி, செய்யும் செயல்களுக்கு விரும்பிய பலன்கள் கிடைக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு இன்றி, துன்பங்கள் அனைத்தில் இருந்தும் விடுதலை அடைந்தவன் ஞானி.

**12.17** ஞானிக்குத் தன் மனம் எப்போதும் இன்ப உணர்விலேயே மூழ்கி இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு இருக்காது. அதேபோல, துன்ப உணர்வுகளும் நிரந்தரம் அல்ல என்று அவன் அறிவதால் சோகத்தில் புலம்பமாட்டான். புனித காரியங்களைச் செய்ய வேண்டிய கட்டாயம் அவனுக்கு இல்லை. தவறான காரியங்களை அவன் செய்ய நேரிட்டால் அதுகுறித்த வருத்தமும் அவனுக்குக் கிடையாது.

**12.18-19** தானே அனைத்து உருவங்களின் ஆதாரம் என்பதை அறிந்த காரணத்தால் நண்பர்களையும் எதிரிகளையும் ஞானி சமமாகப் பார்ப்பான். ஏற்ற இறக்கங்கள் உலகின் இயல்பு என்பதை அறிந்த காரணத்தால் அவன் புகழ்-இகழ், வெயில்-குளிர்ச்சி, இன்பம்-துன்பம், மதிப்பு-அவமானம் ஆகிய இருமைகளின் இடையே சமநிலையில் வாழ்வான். எதனாலும் பாதிக்கப்படாமல், எப்போதும் அமைதியாக, கிடைத்ததில் திருப்தி அடைந்து, தனக்கு என்று சொத்துக்கள் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்ற ஆசை சிறிதும் இல்லாமல், 'நான் பரமன்' என்ற ஞானத்தில் நிலைபெற்று உடலும் மனதும் நிகழ்த்தும் செயல் என்ற நாடகத்தில் பங்கேற்காமல் வெறும் சாட்சியாக அதை பார்த்துக்கொண்டு இருப்பவன் ஞானி.

**12.20** உலகத்தின் தொடர்ந்த இயக்கம் இறைவனின் நடனம் என்பதை அறிந்த ஞானி, நாட்டியத்தில் தனது பங்கை முழுஈடுபாட்டுடன் செய்வான். நடனமே ஆனந்தத்தின் வெளிப்பாடு என்பதால் அனைத்து மாற்றங்களின் நடுவிலும் ஆனந்தமாக இருப்பான்.

**14.22-25** இன்பம், பற்றுதல், குழப்பம் ஆகியவை இருக்கும்போது அவற்றை வெறுக்காமலும் இல்லாதபோது அவற்றுக்காக ஏங்காமலும் இருப்பவன் ஞானி. தன் உடல், மனம் உட்பட்ட உலகம் தன் வசம் இன்றி தொடர்ந்து மாறுபடும் என்பதை அறிந்ததால் அந்த மாற்றங்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு ஏதும் இல்லாமல் இருப்பவன் அவன். புலன்களும்,

அவைகளால் அனுபவிக்கப்படும் பொருள்களும் இந்தத் தொடர்ந்த மாற்றத்தின் ஒரு பகுதி என்பதால் அவன் எதன்மீதும் அக்கறை இல்லாதவன்போல இருப்பான். தான் இந்த மாற்றங்களுக்கு ஆதாரமாக மட்டும் இருப்பவன் என்று அறிந்த காரணத்தால் அவன் ஒரு குறிப்பிட்ட பலனைக் கருதிச் செயல் செய்வதில்லை.

**14.26** 'நான் பரமன்' என்ற அறிவில் நிலைத்து நின்ற போதிலும் தனது உடலும் மனமும் மாயாசக்தியின் வெளிப்பாடுகள் என்று அறிந்த காரணத்தால், ஞானி தொடர்ந்து செயல்களில் ஈடுபட்டுக்கொண்டு இருப்பான். அவன் செயல்களின் பலனால் பாதிக்கப்படுவதில்லை.

**14.27** மாற்றத்துக்கும் அழிவுக்கும் உட்படாமல் என்றும் இருக்கும் உண்மையான ஆனந்தம் நான் என்ற அறிவில் ஞானி நிலைத்து நிற்பதால் அவன் பரமனாகவே மாறிவிடுவான்.

### சாராம்சம்

*ஞானியின் சுய உருவத்துக்கும் மற்றவர்களின் சுய உருவத்துக்கும் எந்தவிதமான வேறுபாடும் கிடையாது. 'நான் பரமன்' என்ற வேதவாக்கியம் அனைவருக்கும் பொருந்தும். இருப்பது ஒரே பரமன். அந்தப் பரமன்தான் உலகமாகவும் அதில் வாழும் பல்வேறு உயிரினங்களாகவும் காட்சி அளிக்கிறான். எனவே ஞானியின் சுய உருவம் தனிப்பட்ட தன்மை உடையது அல்ல.*

*முக்தி என்பது புதிதாகப் பெறப்பட்ட ஒரு நிலை அல்ல. 'இப்போது நான் பிறப்பு-இறப்பு என்ற சுழலில் சிக்கித் துன்பப்பட்டுக்கொண்டு இருக்கிறேன். வேதம் படித்தால் இந்தத் துன்பத்தில் இருந்து விடுதலை பெற்று முக்தி அடைவேன்' என்ற எதிர்பார்ப்பு முக்திவிழைவோரி டம் இருக்கும். 'முக்தி அடைந்த பின்னும் நீ மாறாமல் அப்படியேதான் இருப்பாய்' என்ற உண்மையைப் பொதுவாக ஆசிரியர் சொல்வதில்லை. ஏனெனில் முக்தி என்பது ஒரு புதிய நிலை அல்ல என்ற உண்மையை முக்தி அடைந்த பின்தான் உணர்ந்துகொள்ள முடியும்.*

*எது அடையப்பட்டதோ அது நிலையானது அல்ல. இப்போது இல்லாத முக்தி எதிர்காலத்தில் கிடைப்பதாக*

இருந்தால் அது நிச்சயம் காலத்தைக் கடந்ததாக இருக்க முடியாது. எனவே, 'முக்தியை அடைவது' என்று வழக்கத்தில் கூறினாலும் எப்போதும் முக்தியடைந்தவனாக இருப்பவன்தான் நான் என்பதை அறிந்து கொள்வதே முக்தி.

'நான் பரமன்' என்பதை அறிந்து கொண்டவர்கள் முக்தி அடைந்தவர்கள். இதை அறியாதவர்கள் பற்றுடையோர். எனவே, மற்றவர்களை ஒப்பிடும்போது ஞானிக்கு 'தான் யார்' என்பது பற்றிய சரியான அறிவு இருக்கிறது என்பதுதான் ஞானிக்கும் மற்றவர்களுக்கும் உள்ள ஒரே வேற்றுமை.

'உன்னை அறிந்தால் நீ உலகத்தில் போராடலாம். உயர்ந்தாலும் தாழ்ந்தாலும் தலை வணங்காமல் நீ வாழலாம்' என்ற பாடல் வரிகளின் சரியான பொருளை மக்கள் உணர்வதில்லை.

'நான் பரமன்' என்பது ஞானியின் கற்பனை அல்ல. அதுதான் உண்மை என்று அறிவியல் தெள்ளத்தெளிவாக நிரூபித்து உள்ளது. ஆனால் முறையாக வேதம் படித்தவர்களால் மட்டுமே இந்த அறிவை அடைய முடியும்.

இந்த அறிவை அடைந்த பின்னர் தான் இந்த உடல் என்ற எண்ணம் மறைந்து விடுவதால் பிறப்பு-இறப்பு என்ற சுழற்சியில் இருந்து அவன் விடுபடுகிறான். வாழ்வில் துன்பம் என்பது உடலுக்கும் மனதுக்கும் மட்டுமே ஏற்படுவது. எனவேதான் தன்னை உடல் என்று நினைப்பவர்களால் துன்பத்திலிருந்து முழுமையாக விடுதலை பெற முடியாது.

கயிற்றைப் பாம்பாகப் பார்த்துப் பயப்படுவது துன்பம். பரமனை உடலாக நினைத்து வாழ்வது துன்பம். கயிறு எப்போதும் கயிறாகத்தான் இருக்கிறது. நான் எப்போதும் பரமனாகத்தான் இருக்கிறேன். கயிற்றுக்கும் பாம்புக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. பரமனுக்கும் இந்த வாழ்வுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. ஆனால் பாம்பு என்ற ஒன்றைப் பார்ப்பதற்குக் கயிறு ஆதாரமாக இருக்கிறது. உலகமும் அதில் உயிரினங்களும் இருப்ப

தாகத் தென்படுவதற்குப் பரமன்தான் ஆதாரம். உலகம் இருப்பதாகக் காட்சி அளிக்கும் மாயை என்பதை அனு ஆராய்ச்சி அறிஞர்கள் அறிவர். இந்தப் பொய்யான தோற் றத்துக்கு உண்மையான ஆதாரமாக இருப்பவன் நான் என்ற உண்மையை உணர்ந்தவர்கள் ஞானிகள்.

இந்த உண்மையை உணர்ந்த காரணத்தால் அவர்கள் துன்பப்படுவதில்லை. சுற்றி நிகழும் நிகழ்வுகளைச் சரியாகப் பார்க்கும் காரணத்தால் இவர்களின் செயல்பாடுகள் மற்றவர்களிடம் இருந்து வேறுபட்டு இருக்கும். பாம்பு என்று பயந்து பத்து அடி தள்ளி நடக்காமல், கயிறு என்று அறிந்த தால் அதன் பக்கத்திலேயே நடக்கும் காரணத்தால் மற்றவர் களின் பார்வைக்கு அவன் வேறுபட்டவனாகத் தென் படுவான்.

இதுபோன்ற வேற்றுமைகளையே, பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில் தொகுத்துக் கொடுத்து இருக்கிறார். இந்த அனைத்து வேற்றுமைகளின் சாராம்சம் ‘ஞானிகள் துன்பம் கலக்காத இன்பவாழ்வு வாழ்வார்கள்’ என்பதே.

### பயிற்சிக்காக

1. மற்றவர்கள் ஞானியா இல்லையா என்பதை நாம் அறிந்துகொள்வது ஏன் அனாவசியம்?

2. ஞானி மற்றவர்களிடம் இருந்து எவ்வாறு வேறுபடுகிறான் என்ற பட்டியலைப் படிப்பதால் என்ன பயன்?

3. பகவான் ஸ்ரீகிருஷ்ணர் கொடுத்த பட்டியலின் சாராம்சம் என்ன?

### சுயசிந்தனைக்காக

❖ *‘முக்தி என்பது மரணத்துக்குப் பின்னர் அடையப்படுவது’ என்பதைத்தான் ‘உடலை உதறிவிட்டுச் சுய உருவத்தை வெளிப்படுத்துவான்’ என்ற உபநிஷத மந்திரம் சொல்கிறதா?*

- ஞானிக்கும் மற்றவர்களுக்கும் வேறுபாடுகள் இருக்கின்றனவா? இல்லையா?
- உலகில் உள்ள மதங்களின் இறுதிக் குறிக்கோள் என்ன?



## 186 ஞானியின் இன்பங்கள்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 4 ● சூத்திரம் : 537**

**ஞா**னிகள் மற்றவர்களைப்போல் உலக இன்பங்களை அனுபவிக்க மாட்டார்கள் என்ற தவறான கருத்தை அகற்றும் வகையில் ஞானியின் இன்பங்களை இந்தப் பாடம் வர்ணனை செய்கிறது.

சாந்தோகிய மந்திரம் (8.12.3) *'உடலை உதறிவிட்டுச் சுய உருவில் வெளிப்படும் ஞானி, சிரித்துக்கொண்டும், விளையாடிக் கொண்டும், பல பெண்கள், வாகனங்கள், உறவுகள் போன்ற இன்பங்களை அனுபவித்து இவ்வுலகில் வளைய வருவான்'* என்று கூறுகிறது. மற்றவர்கள் கூட அதேபோல இன்பம் அனுபவிப்பார்கள் என்றாலும் அவர்களது வாழ்வில் துன்பமும் சம அளவில் கலந்து இருக்கும். இன்பம் உலகில் இருந்து கிடைப்பதாக அவர்கள் எண்ணுவதால் உலகில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளுக்கு ஏற்ப அவர்கள் வாழ்வில் இன்பமும் துன்பமும் மாறி மாறி ஏற்படும். இன்பம் பற்றிய முழு மையான அறிவு ஞானிக்கு இருப்பதால் அவனால் மட்டுமே துன்பத்தைத் தவிர்த்து இன்பமாக வாழ முடியும்.

### இன்பம் என்றால் என்ன?

சர்க்கரையின் இயல்பு இனிப்பு. அதுபோலப் பரமனின் இயல்பு இன்பம். இந்தப் பிரபஞ்சம் முழுவதும் பரமனின் வெளிப்பாடு என்பதால் புவிமேல் இயற்கையினாலே இயங்கும் எழில்வளம் எல்லாம் இன்பமயம்.

சர்க்கரையை நாவினால் சுவைத்தால் மட்டுமே இனிப்பை அனுபவிக்க முடியும். அதுபோலப் பரமனின் இன்பத்தை அனுப

விக்க மனம் தேவை. மனதை 'நான்', 'எனது' என்ற அகங்காரம் ஆக்ரமித்துக்கொண்டு இருக்கும்போது இன்பத்தை அனுபவிக்க முடியாது. 'இன்பமாக இருக்க எனக்கு இது வேண்டும்' என்ற எண்ணம் நம்மை இன்பத்தை அனுபவிக்கவிடாமல் தடுத்துக் கொண்டு இருக்கும். வேண்டிய பொருள் கிடைத்துவிட்டால் இந்த எண்ணம் மனதில் இருந்து மறைந்து பரமனின் இயல்பான இன்பம் மனதில் பிரதிபலிக்கும்.

'இன்பம் எனது இயல்பு' என்பதை அறிந்தவர்கள் ஞானிகள். அறியாதவர்கள் அஞ்ஞானிகள். இது மட்டுமே இருவருக்கும் இடையே இருக்கும் வேறுபாடு. 'நான் பரமன்' என்பதை ஞானிகள் அறிந்து இருந்தாலும் மற்ற மனிதர்களுடன் உறவாட 'நான் மனிதன்' என்ற அகங்காரம் அவர்கள் மனதிலும் நிறைந்து இருக்கும். எனவே இந்த அகங்காரம் மறையும் நேரங்களில் மட்டுமே ஞானிகளாலும் இன்பத்தை அனுபவிக்க முடியும். மேலும், மனம் செயல்பட உலக உறவு அவசியம் என்பதால் இன்ப அனுபவத்தைப்பெற ஞானிகளுக்குக்கூட உலக உறவு அவசியம்.

மற்றவர்கள் உலகில் இன்பத்தைத் தேடுவதால் அவர்கள் அவ்வப்போது இன்பத்தை அனுபவிப்பார்கள். நானே உலகம் என்பதை ஞானிகள் அறிந்து இருப்பதால் அவர்களால் எப்போது வேண்டுமானாலும் இன்பத்தை அனுபவிக்க முடியும்.

பொருள்களில் இருந்து இன்பம் வருகிறது என்று மற்றவர்கள் நினைப்பதால் விரும்பிய பொருள்கள் கிடைக்காவிட்டால் அவர்கள் துன்பம் அடைவார்கள். தான் மட்டுமே இன்பத்தின் ஆதாரம் என்று அறிந்த ஞானிகளால் எந்தச் சூழ்நிலையிலும் இன்பத்தை அனுபவிக்க முடியும்.

அழகிய ரோஜா மலர் செடியில் பூத்திருப்பதைப் பார்க்கும் பொழுது ஞானி அதை தன்னில் இருந்து வேறுபட்ட ஒரு பொருளாகப் பார்ப்பதில்லை. தன் மாயா சக்தி எப்படி மலராகக் காட்சி அளிக்கிறது என்ற எண்ணத்தில் மூழ்கி அவன் இன்பத்தை அனுபவிப்பான். மற்றவர்கள் அந்த மலரைத் தனதாக்கிக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டு அந்த ஆசை நிறைவேறினால் மட்டுமே இன்பம் அடைவார்கள்.

ஞானிக்கு தானே இந்த உலகம் என்ற அறிவு இருப்பதால் எதையும் தனதாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்படு வதில்லை.

## *புலன் இன்பம்*

மனதால் உலகுடன் நேரடியாகத் தொடர்பு கொள்ள முடியாது. எனவே உலகுடன் உறவாட புலன்கள் அவசியம். புலன்கள் பொருள்களுடன் தொடர்பு கொள்வதால் மட்டுமே மனதில் அனுபவங்கள் ஏற்படும். எனவே, நமது இயல்பான இன்பத்தை அனுபவிக்கப் புலன்களும் மனதும் அவசியம். இந்த விதி ஞானிகளுக்கும் பொருந்தும்.

ஆழ்ந்த உறக்கம், சமாதி ஆகிய இரண்டு நிலைகளில் மட்டுமே எந்தப் பொருள்களுடனும் தொடர்பு இல்லாமல் நம்மால் இன்பமாக இருக்கமுடியும். ஆனால் இந்த இரண்டு நிலைகளில் மனம் முழுவதுமாக மறைந்துவிடும் என்பதால் 'நாம் இன்பமாக இருந் தோம்' என்பது பிறகுதான் நமக்குத் தெரியவரும்.

எனவே, இன்பத்தை அனுபவிக்க நமக்குப் புலன், பொருள், மனம் ஆகிய மூன்று ஜடப்பொருள்கள் அவசியம்.

பல பாத்திரங்களும் பல தட்டுக்களும் இருந்தாலும் ஒரு சில தட்டுக்களை மட்டுமே ஒரு சில பாத்திரங்களுக்கு மூடியாக உப யோகிக்க முடியும். அதுபோல உலகில் பல்வேறு பொருள்கள் இருந்தாலும் அவற்றில் ஒரு சில மட்டுமே ஒருவரின் புலன்களுக்கு உகந்ததாக இருக்கும். ஒரு சிலருக்கு உப்புமா பிடித்தமான உணவாகவும் வேறு சிலருக்கு அது பிடிக்காத பொருளாகவும் இருக்கலாம். பிடித்தபொருளை புலன் அனுபவிக்கும்பொழுது அகங்காரம் அகன்று மனம் நிம்மதியாக இருப்பதால் இன்ப அனுபவம் ஏற்படுகிறது.

எனவே, மனிதர்கள் தங்கள் ஐந்து புலன்கள் மூலம் உலகத்துடன் உறவாடும்பொழுது, புலன்களுக்குப் பிடித்தமான வகையில்தான் பொருள்கள் இருக்கவேண்டும் என்ற எதிர்பார்ப்பு அவர்கள் மனதில் இருக்கும். பிடித்ததைப் பெறவும் பிடிக்காததைத் தவிர்க்கவும் அவர்கள் தொடர்ந்து முயற்சி செய்து வருவார்கள். இந்த முயற்சியில் அவர்களால் எப்போதும் வெற்றி அடைய முடியாது. வெற்றி தோல்விகள் மாறி மாறி ஏற்படும் வகையில்தான் உலகம் படைக்கப்பட்டு உள்ளது. எனவேதான் வாழ்வில் இன்பமும் துன்பமும் மாறி மாறி ஏற்படுகிறது.

இந்த உண்மையை ஞானிகள் உணர்ந்திருக்கும் காரணத்தால் தங்களுக்குப் பிடித்த பொருள்களை அனுபவிக்கும் வாய்ப்பு

தொடர்ந்து கிடைக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு அவர்களிடம் இருக்காது. பிடிக்காத சூழ்நிலையில் வாழவேண்டிய கட்டாயம் அவர்களுக்கு ஏற்பட்டாலும் 'இது விரைவில் மாறிவிடும்' என்ற அறிவு அவர்களிடம் இருப்பதால் அவர்களால் தொடர்ந்து இன்பமாக இருக்க முடியும்.

### இன்பத்தின் வகைகள்

உலகத்தில் உள்ள பொருள்களை ஐந்து புலன்கள் மூலம் அனுபவிக்கும்பொழுது மனதில் தோன்றும் இன்ப அனுபவத்தில், வகைகள் ஏதும் இல்லை. இளமையில் அனுபவிக்கும் இன்பம் முதுமையில் அனுபவிக்கும் இன்பத்தில் இருந்து வேறுபட்டதல்ல. அதேபோல் பொருள்களைத் திருடியவுடன் அந்தத் திருடன் அனுபவிக்கும் இன்பம், திருட்டுப்போன பொருள்களைத் திரும்பப் பெற்றவன் அனுபவிக்கும் இன்பத்திலிருந்து வேறுபட்டதல்ல. இனிமையான பாடலைக் கேட்கும்பொழுது ஏற்படும் இன்பம், நல்ல புத்தகத்தைப் படிக்கும்பொழுது ஏற்படும் இன்பத்தைப் போன்றதே. இந்த உலகில் கிடைக்கும் இன்பம் சுவர்க்கத்தில் கிடைக்கும் இன்பத்தில் இருந்து வேறுபட்டதல்ல.

எந்தப் புலன் மூலமாக, யாருக்கு, எப்போது இன்பம் ஏற்படுகிறது முதலிய விவரங்களில் மாறுதல் இருக்கலாமே தவிர 'இன்பம்' என்பதில் எவ்வித வேறுபாடும் கிடையாது.

### இன்பத்தின் அளவு

பரமனின் இயல்பான இன்பம் அளவு கடந்தது. ஆனால் மனதின் மூலம் நாம் பெறும் இன்ப அனுபவம் அளவுக்கு உட்பட்டது. விரும்பிய பொருள் இருக்கிறது என்ற அறிவு பிரியம் என்ற முதல் அளவு இன்பத்தைக் கொடுக்கும். அந்தப்பொருளை அடைந்தபின் மோதம் என்ற இரண்டாம் அளவு இன்பம் ஏற்படும். அந்தப்பொருளை அனுபவிக்கும்பொழுது பிரமோதம் என்ற மூன்றாம் அளவு இன்பம் பிறக்கும்.

இதுபோல் வெவ்வேறு அளவு இன்ப அனுபவம் ஏற்படுவதில் ஞானிகளுக்கும் மற்றவர்களுக்கும் வேறுபாடு ஏதும் இல்லை.

மனதில் தோன்றும் இன்ப அனுபவம் வெகு விரைவில் ஒரு முடிவுக்கு வந்துவிடும். மாறுவது மனம். எனவே, மனதில் எவ்வளவு காலம் இன்ப அனுபவம் தொடரும் என்பது சூழ்நிலைக்கு

ஏற்ப மாறுபடும். வெகு காலம் முயன்று தனது மகள் திருமணத்தை நிச்சயம் செய்த தந்தை அதை நினைத்துப் பல நாட்கள் இன்பமாக இருப்பார். திருமணம் தொடர்பாக எந்தக் கஷ்டம் ஏற்பட்டாலும் அதை ஒரு பொருட்டாக மதிக்காமல் இன்பத்தில் மூழ்கி இருப்பார். அதுபோல ஞானிக்கு 'நான் பரமன்' என்ற அறிவு ஏற்பட்ட பின் அதை நினைத்து எப்போதும் இன்பமாக இருப்பான்.

## இன்பமும் மனமும்

இன்பம் பரமனின் இயல்பு. அது மாறாதது. நிலையானது. என்றும் இருப்பது.

மனம் மாயை. தொடர்ந்து மாறுவது. விழித்த பின் தோன்றி ஆழ்ந்த உறக்கத்தில் மறைவது.

இன்ப அனுபவம் மனதில் ஏற்படுவது. இன்பம் நிலையானது என்றாலும் இன்ப அனுபவம் நிலையானதாக இருக்க முடியாது. ஏனெனில் மனம் தொடர்ந்து மாறும் இயல்பை உடையது. தொடர்ந்து எரியும் நெருப்புச் சுடர்தான் விளக்கு. தொடர்ந்து மாறும் எண்ணங்கள்தான் மனம். அலைபாயாமல் ஒரே எண்ணத்தில் ஆழ்ந்து இருக்கும்போது இன்ப அனுபவம் ஏற்படுகிறது. ஆனால் மாயையான உலகம் மாறிக்கொண்டே இருப்பதால் ஒரே எண்ணத்தில் வெகுநேரம் மூழ்கி இருக்க முடியாது.

உலகத்தின் இயக்கம் இன்பத்தை ஆதாரமாகக் கொண்டது. மனதின் நிலை உலகின் மாற்றத்தைப் பொருத்தது. சூழ்நிலைக்கு ஏற்ப மனம் மாறிக்கொண்டே இருக்கும்.

மனம் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப் புடன் இருப்பவன் அஞ்ஞானி. இந்த எதிர்பார்ப்பு எப்போதும் நிறைவேறாது. எனவேதான் வாழ்வில் இன்பமும் துன்பமும் மாறி மாறி ஏற்படுகிறது. மாறுவது மனம் என்பதை அறிந்த ஞானி, தான் இன்ப வடிவானவன் என்ற அறிவில் எப்போதும் நிலைத்து நிற் பான். இன்ப அனுபவங்கள் ஒரு சில நிமிடங்களில் மாறிவிடும். அதேபோல் துன்ப அனுபவங்களும் விரைவில் மாறிவிடும். மாறும் மனம் நான் அல்ல என்பதை அறிந்த ஞானியால் மட்டுமே மாற்றங்களை முழுவதுமாக ரசிக்க முடியும். இதைத்தான் ***'உலக இன்பங்களை அனுபவித்து இவ்வுலகில் வளைய வருவான்'*** என்று சாந்தோகிய உபநிஷதம் குறிப்பிடுகிறது. மற்றவர்கள் இன்ப

அனுபவங்கள் மாறிவிட்டதை நினைத்துத் துக்கப்படுவார்கள். ஞானிக்கு இந்தத் துக்கம் அறவே கிடையாது.

மனிதன் இன்பமாக இருக்கும் வேளைகளில் மட்டும்தான் அவனால் புலன் இன்பங்களை அனுபவிக்க முடியும். துன்பத்தில் மூழ்கி இருக்கும்போது தேன் கூட இனிக்காது. ஆனால் ஞானி தான் இன்ப உருவானவன் என்பதை அறிந்து இருப்பதால் எப்போது வேண்டுமானாலும் அவனால் உலக இன்பங்களை அனுபவிக்க முடியும்.

தானே உலகம் என்ற அறிவு ஏற்பட்டவுடன் உலக இன்பங் களைத் தொடர்ந்து அனுபவிப்பது ஞானியின் இயல்பாக ஆகிவிடும்.

## இன்பத்தின் ஊற்று

இன்பம் இருப்பது பரமனிடம் மட்டுமே. பிரபஞ்சம் இந்த இன்பத்தின் வெளிப்பாடு. எனவே, யாரும் துன்பப்படவேண்டிய அவசியம் இல்லை. ஆனால் இந்த உண்மையை அகங்காரம் மக்களிடம் இருந்து மறைத்துவிடுகிறது. பௌர்ணமி அன்று முழு நிலவாக இருந்தது அமாவாசை அன்று முழுவதும் மறைவது போல விழித்து இருக்கும் நேரங்களில் மனதை முழுதாக ஆக்ர மிக்கும் அகங்காராம் ஆழ்ந்த உறக்கத்தில் அழிந்து விடுகிறது. எனவேதான் ஆழ்ந்த உறக்கத்தில் அனைவரும் ஆனந்தமாக இருக்கின்றனர்.

பரமனின் இன்பம் மனதில் பிரதிபலிக்கும்பொழுது நாம் இன்ப அனுபவத்தைப் பெறுகிறோம். ஆனால் இந்தப் பிரதிபலிப்பைப் பெரும்பாலான நேரங்களில் அகங்காரம் மறைத்துவிடுகிறது. புலன் இன்பங்களில் மூழ்கித் தன்னை மறந்த நிலையில் நம்மால் முழுமையான இன்பத்தை அனுபவிக்க முடிகிறது.

உலகே மாயை என்பதால் அகங்காரம் மறைந்து இன்ப அனுபவம் ஏற்பட மற்றவர்களைப்போல் முயற்சி செய்ய வேண்டிய அவசியம் ஞானிக்கு இல்லை. இரண்டு மொழிகளை நன்றாக அறிந்தவன், கேட்பவருக்குப் புரியும் மொழியில் சரளமாகப் பேசத் தனியாக முயற்சி செய்ய வேண்டிய அவசியம் இல்லை. அதுபோல 'நான் பரமன்', 'நான் மனிதன்' ஆகிய இரண்டு எண்ணங்களைச் சரியாக அறிந்த ஞானி சூழ்நிலைக்கு ஏற்பச் செயல்படுவதில் சிரமப்படுவதில்லை. 'என்னால் அதைச்

செய்ய முடியும்' என்று அவன் தயங்காமல் கூறினாலும் 'யாரும் எதையும் செய்வதில்லை' என்ற அறிவு அவன் மனதில் இருந்து மறைவதில்லை.

வெய்யில் நாளில் ஆற்றுத் தண்ணீரில் நிற்பவனின் மேல் உடம்பு சுடும் அதே வேளையில் கீழ்பகுதி குளிர்ந்து இருப்பது போல உலகில் ஏற்படும் துயரங்களை அனுபவிக்கும் அதே வேளையில் ஞானி இன்பமாக இருப்பான். தான் எதனுடனும் சம்பந்தப்படாமல் இன்பமயமாக இருக்கும் பரமன் என்பதை அவன் உணர்வதுடன் தனது உடலும் மனமும் உலக நிகழ்வு களுக்கு ஏற்ப மாற்றங்கள் அடையும் என்பதையும் அறிவான். எனவே வாழ்வில் ஏற்படும் இன்ப துன்ப அனுபவங்களைக் கனவில் ஏற்படும் அனுபவங்களைப்போலத் தொடர்ந்து இன்பமாக அனுபவிப்பான்.

### சாராம்சம்

*வெளியில் இருக்கும் பொருள்கள், உள்ளே இருக்கும் மனம் ஆகிய இரண்டும் தனது சுய உருவான இன்பத்தை அனுபவிப்பதற்கான சாதனங்கள் என்பதை ஞானி அறிவான். அவன் இன்பத்திற்காகப் பொருள்களை நாடுவ தில்லை; மனதையும் செம்மைப்படுத்த முயற்சி செய்வ தில்லை. கிடைக்கும் பொருள்களை அனுபவித்து அவன் எப்போதும் இன்பமாக இருப்பான்.*

*பற்றுடையோன் இன்பத்தை வெளி உலகில் தேடுவான். முக்திவிழைவோன் இன்பத்தை அகவுலகில் தேடுவான். ஞானி இன்பத்தைத் தேடுவதில்லை. தானே இன்ப வடிவானவன் என்ற அறிவில் அவன் நிலைத்து இருப்பதால் இன்பத்தைத் தேடும் அவசியம் அவனுக்கு இல்லை.*

*எதிர்காலத்தில் இன்பமாக இருக்கலாம் என்ற எண்ணமே தற்போது இருக்கும் இன்பத்தை அனுபவிக்க விடாமல் நம்மைத் தடுக்கிறது. வாழ்வின் நிகழ்வுகள் அனைத்தையும் அப்படியே ஏற்றுக்கொண்டால் இன்பம் நம்மை விட்டு அகலாது. உலகையும் மனதையும் வேறு மாதிரி மாற்றி அமைக்கவேண்டும் என்ற முயற்சியே துன்பத்திற்குக் காரணம்.*

மனதிற்குப் பிடித்த பாடலைக் கேட்கும்பொழுது தன்னை மறந்து இன்பமாக இருந்த அனுபவம் அனைவருக்கும் உண்டு. இதற்குக் காரணம் பாடலோ மனமோ இல்லை. அகங்காரம் அடங்கிய நிலையில் இருப்பதுதான் இன்ப அனுபவத்துக்குக் காரணம். அகங்காரத்தை அடக்க உலகத்தைத் துறந்து தனித்து வாழ வேண்டிய அவசியம் இல்லை. அல்லது தியானம் மூலம் மனதையே அழித்துச் சமாதி நிலைக்குச் செல்லவேண்டிய கட்டாயமும் இல்லை. அகங்காரம் என்பது பொய்யானது என்ற அறிவு ஞானிக்கு இருப்பதால் அவனால் எப்பொழுதும் தன்னை மறந்து உலகோடு ஒன்றிவாழ்ந்து இன்பத்தை அனுபவிக்க முடியும்.

புலன்கள் மூலம் பொருள்களை அனுபவிக்காமல் நம்மால் இருக்க முடியாது. அனுபவங்களைப் பிடித்தது பிடிக்காதது என்று வகைப்படுத்தாமல் அவற்றுடன் ஒன்றி வாழ்ந்தால் அனைத்து அனுபவங்களும் இன்பமாக மாறிவிடும்.

உலகம், ஐந்து புலன்கள் மூலம் பெறும் அனுபவம், அனுபவங்களைப் பற்றி மனதில் தோன்றும் வர்ணனை ஆகிய அனைத்தும் தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கும். இவை எதனுடனும் சம்பந்தப்படாமல், இவை அனைத்துக்கும் ஆதாரமாக இருப்பவன் நான் என்ற அறிவு ஞானிக்கு இருப்பதால் அனைத்து மாற்றங்களுக்கு நடுவிலேயும் அவன் ஆனந்தமாக இருப்பான்.

## பயிற்சிக்காக

1. இன்பத்தை அனுபவிப்பதில் ஞானி மற்றவர்களிடம் இருந்து எந்த வகையில் வேறுபடுகிறான்?

2. இன்ப அனுபவத்திற்குத் தேவையான மூன்று பொருள்கள் யாவை?

3. இன்பத்தின் வகைகள் எவை?

4. இன்பத்தின் அளவுகள் யாவை?

5. இன்பத்தின் ஊற்று எது?

**சுயசிந்தனைக்காக**

❖ *இன்ப அனுபவத்திற்கும் இன்பத்திற்கும் என்ன வித்தியாசம்?*

❖ *'சிலர் சிரிப்பார். சிலர் அழுவார். ஞானி அழுதுகொண்டே சிரிப்பான்' என்பது உண்மையா?*

❖ *புலன் இன்பங்களைச் சிற்றின்பம் என்று குறிப்பிட்டால் பேரின்பம் என்பதற்குப் பொருள் என்ன?*

❖ *மனதை அழிப்பதற்கும் அகங்காரத்தை அழிப்பதற்கும் என்ன வேறுபாடு?*



## 187 ஞானியின் போதனைகள்

**அத்தியாயம் : 4 ● பாதம் : 4 ● சூத்திரம் : 538 - 540**

உலக இன்பங்களைத் துன்பக் கலப்பு இல்லாமல் தான் அனுபவிப்பது போல மற்றவர்களும் அனுபவிக்க வேண்டும் என்ற நல்ல எண்ணத்துடன் அவர்களுக்குப் போதனைகள் செய்து அதன் மூலம் ஞானிகள் அடையும் இன்பத்தை இந்தப் பாடம் விளக்குகிறது.

பிருஹதாரண்ய உபநிஷத மந்திரம் (4.5.13) "*ஒரு உப்புக் கல்லின் உள்புறமும் வெளிப்புறமும் தூய்மையான உப்பின்சுவை முழுவதுமாக நிறைந்து இருப்பதுபோல உள்ளே வெளியே என்றில்லாமல் முழுவதுமாக தூய்மையான அறிவினால் ஆனது ஆத்மா.*" என்று கூறுகிறது. தானே அந்த அறிவு என்பதை உணர்ந்த ஞானிகள் தங்கள் ஞானத்தை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்வதில் இன்பம் அடைவார்கள்.

இந்த ஞானத்தை எப்படி, யாருக்கு, எப்போது சொல்லித்தர வேண்டும் என்ற அறிவும் ஞானிக்கு இருப்பதால் பெரும்பாலான மக்களுக்குத் தன்னால் உதவ முடியவில்லையே என்ற வருத்தம் அவருக்கு இருக்காது.

### எப்படிச் சொல்லித்தருவது ?

'நான் பரமன்' என்ற ஞானத்தைக் கேள்வி-பதில் மூலமோ, விவாதங்களின் மூலமோ ஆலோசனைகள் சொல்வது மூலமோ கற்றுத்தர முடியாது. பகவத்கீதை, உபநிஷதங்கள் போன்ற நூல் களை முதல் வரியில் இருந்து ஆரம்பித்துக் கடைசி வரி வரை படிப்படியாக வெகுகாலம் இடைவிடாமல் சொல்லித்தர வேண்டும்.

வேதம் படிக்கத் தேவையான நேரத்தை ஒதுக்கத் தயாராக இருக்கும் மாணவர்கள் கிடைப்பது அரிது. எனவே, சரியான ஆசிரியர் தனக்குக் கிடைத்தது குறித்து மாணவர் அடையும் மகிழ்ச்சியைப் போல, சரியான மாணவர் கிடைத்ததை எண்ணி ஆசிரியரும் மகிழ்ச்சி அடைவார். அதே நேரத்தில் ஒரு சிலர், பாதியிலேயே படிப்பதை நிறுத்திவிட்டால் அது குறித்து ஞானி வருத்தப்படவும் மாட்டார்.

### யாருக்குச் சொல்லித்தருவது?

அனைத்து மக்களும் துன்பம் அகன்று இன்பமாக வாழ வேண்டும் என்ற முயற்சியில் ஈடுபட்டு இருந்தாலும் அவர்கள் அனைவராலும் ஞானம் பெற்றுவிட முடியாது. மலையின் சிகரத்தை ஏறி முடித்தவர் மற்றவர்கள் ஏற உதவுவது போல, ஞானி, மற்றவர்கள் இருக்கும் நிலையை அறிந்து அதற்கேற்ப வழிகாட்டுவார். பள்ளிப்படிப்பை முடிக்காதவர்களால் கல்லூரிகளில் சேரமுடியாது. அதுபோலப் பற்றுடையோர்களால் முக்தி அடைய முடியாது. இதை அறிந்த ஞானிகள், அவர்களுக்குக் கோவிலுக்குச் செல்லுதல், பிரார்த்தனைகள் செய்தல் போன்ற மதச்சடங்குகளை மட்டுமே போதிப்பார்கள். போதிய அறிவுத்திறன் உடைய முக்திவிழைவோர்களுக்குத்தான் 'நான் பரமன்' என்ற உண்மையை முறைப்படி சொல்லிக் கொடுப்பார்கள்.

### எப்போது சொல்லித்தருவது?

மாணவனின் தலையில் நெருப்பைப் பற்றவைத்து அதன்பின் அதை அணைக்க உதவுவது ஆசிரியரின் வேலை இல்லை. மீண்டும் மீண்டும் வாழ்வில் அடிபட்டு, எனக்கு துன்பங்களில் இருந்து முழுமையான விடுதலை வேண்டும் என்ற தீவிர ஆவலுடன் மாணவர்கள் தன்னை அணுகினால் மட்டுமே ஞானி அவர்களுக்குப் பாடங்களைச் சொல்லித்தர ஆரம்பிப்பார்கள்.

வேண்டிய மனப்பக்குவமும் தீவிர ஆவலும் இல்லாமல் ஒரு சிலமாணவர்கள் வேதம் படிக்கத்துவங்கினாலும் வெகு விரைவில் அவர்கள் தங்கள் முயற்சியைக் கைவிட்டு விடுவார்கள். இவர்கள் தொடர்ந்து படித்தாலும் ஞானம் பெற மாட்டார்கள் என்பதை ஞானிகள் அறிவார்கள். எனவே, மாணவர்களைத் தொடர்ந்து படிக்கவைக்கவேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்கு ஏற்படாது. கேட்பவர்களுக்குச் சொல்லித்தரத் தயாராக இருக்கும் ஞானிகள், கேளாதவர்களைக் கேட்க வைக்க எவ்வித முயற்சியும் எடுத்துக் கொள்ள மாட்டார்கள்.

## என்ன சொல்லித்தருவது?

பின்வரும் பதினாறு கருத்துக்களைச் சொல்லிக்கொடுப்பதன் மூலம் வேதபாடங்களை முறையாகப் படிக்க வேண்டியதன் அவசியத்தைத் தன்னை நாடிவரும் மக்களுக்கு ஞானிகள் எடுத்துரைப்பர்.

*முதல் கருத்து : சுயநலமே சிறந்தது*

மற்றவர்களின் நலம் தனது நலத்தைவிட முக்கியமானது என்ற எண்ணம் தவறானது. உண்மையில் தனக்கும் மற்றவர்களுக்கும் எவ்வித வித்தியாசமும் கிடையாது. ஆனால் இந்த உண்மையை வேதம் படிக்காமல் அறிந்து கொள்ள முடியாது. எனவே, முதல் படியாக மற்றவர்களைவிட தானே முக்கியமானவன் என்பதை மாணவன் ஒத்துக்கொள்ள வேண்டும். தான் மற்றவரை விரும்புவது தனக்காகத்தான் என்றும் மற்றவருக்காக அல்ல என்பதையும் பின்வரும் உதாரணங்கள் மூலம் ஞானிகள் விளக்குவார்கள்.

**1.** தாடியுடன் தகப்பன் தன் குழந்தையின் கன்னத்தில் முத்தமிடுவது தனது சுகத்துக்காகத் தானே தவிரக் குழந்தையின் நலத்துக்காக அல்ல.

**2.** பணம், நகை போன்ற சொத்துக்களைப் பாதுகாப்பது அவற்றால் தனக்குக் கிடைக்கும் பயனின் காரணமாகத்தான்.

**3.** விவசாயி மாடுகளைப் போற்றி வளர்ப்பதற்கு, அவை வயலில் வேலை செய்யும் காரணமாகத்தானே தவிர அவற்றின் மீதுள்ள கருணையால் அல்ல.

**4.** கடவுளைத் தொழுவது கடவுளின் நலத்துக்காக அல்ல.

**5.** தனக்குக் கிடைக்கும் மனநிறைவு கிடைக்கும் என்ற எண்ணத்தாலேயே பொதுநலச் சேவைகூடச் செய்யப்படுகிறது.

அதேபோல, வாழ்வில் மனிதன் செய்யும் அனைத்துச் செயல்களும் சுயநலத்துக்காக மட்டுமே செய்யப்படுகின்றன. எனவே மற்றவர்களைவிட தான்தான் முக்கியமானவன் என்ற உண்மையைப் புரிந்துகொண்டு முழுமனதுடன் ஏற்றுக்கொள்பவர்களுக்கு மட்டுமே ஞானிகள் அடுத்த கருத்தை உபதேசம் செய்வார்கள். ஏனெனில் தானே முக்கியமானவன் என்று அறியும்வரை தன்னை அறிய யாரும் முயற்சி செய்ய மாட்டார்கள்.

*இரண்டாம் கருத்து : மற்றவர்களைவிட தன்னைத்தான் அனைவரும் விரும்புவர்*

யாரேனும் நம்மை இகழ்ந்து பேசினால் நமக்குப் பிடிப்பதில்லை. மாறாக அவர்கள் நம்மைப் புகழ்ந்து பேசினால், அந்தப் புகழ்ச்சிக்கு நாம் அருகதை உடையவர்கள் அல்ல என்பதை அறிந்து இருந்தாலும் நமக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. இதிலிருந்து நமக்கு நம்மை மிகவும் பிடிக்கும் என்பதை அறியலாம்.

தன்னை அறிந்து கொள்வது மற்றவர்களை அறிந்து கொள்வதுபோல அல்ல. அறிபவனை அறிவது சிரமான செயல். எனவே, முதல்படியாகத் தன்னைத் தான் விரும்புவது மற்றவர்களை விரும்புவதில் இருந்து வேறுபட்டது என்ற உண்மையைப் பின்வரும் உதாரணங்கள் மூலம் ஞானிகள் சுட்டிக்காட்டுவர்

**1.** மற்றவர்களின் மேல் உள்ள விருப்பத்துடன் பாசம், காதல் போன்ற உணர்வுகள் கலந்திருக்கும். தன் மேல் உள்ள விருப்பத்தில் உணர்ச்சிகளுக்கு இடம் இல்லை.

**2.** மற்றவர்களின் மேல் உள்ள விருப்பம் அவர்களின் செயல்களின் அடிப்படையில் அதிகமாகும் அல்லது குறையும். தன் மீதுள்ள விருப்பம் என்றும் மாறாது.

**3.** மற்றவர்களின் மேல் உள்ள விருப்பம் நம்மைப் பந்தப் படுத்தும். தன் மேல் உள்ள விருப்பம் எவ்விதக் கட்டுப்பாட்டையும் ஏற்படுத்துவதில்லை.

**4.** மற்றவர்களின் மேல் உள்ள விருப்பம் அவர்களின் மீதுள்ள நம்பிக்கையின் அடிப்படையில் ஏற்படுவது. தன் மீது விருப்பம் கொள்ள நம்பிக்கை எதுவும் அவசியம் இல்லை.

**5.** மற்றவர்களின் மேல் உள்ள விருப்பத்தினால் தியாகங்கள் செய்வதற்கு நாம் தயங்குவதில்லை. தன் மீது விருப்பம் கொள்வதனால் எவ்விதத் தியாகமும் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படாது.

**6.** மற்றவர்களின் மேல் உள்ள விருப்பம் துன்பத்துக்கு வழி கோலும். தன் மீதுள்ள விருப்பத்தால் எவ்விதத் துன்பமும் ஏற்படாது.

**7.** மற்றவர்களின் மேல் உள்ள விருப்பம், வெறுப்பாக மாறிவிடும் வாய்ப்பு உண்டு. தற்கொலை செய்து கொள்பவர்களும்

தன் மீதுள்ள விருப்பத்தால் தான் அந்த முடிவுக்கு வருகிறார்கள். தன்னை யாரும் எப்போதும் வெறுப்பதில்லை.

8. தனது இன்பத்துக்காகவே மற்றவர்களின் மேல் விருப்பம் கொள்கிறோம். தன் மீது விருப்பம் கொள்ள எவ்விதக் காரணமும் இல்லை.

9. மற்றவர்களால் நமக்கு இன்பம் ஏற்பட்டால் மட்டுமே அவர்கள் மேல் நாம் விருப்பம் கொள்வோம். தன் மீது விருப்பம் கொள்ள எந்தவித முன் நிர்ப்பந்தமும் (pre-condition) இருக்காது.

இந்த உதாரணங்களைப் புரிந்துகொண்டபின் மாணவர்கள் தான் யார் என்று அறிந்துகொள்ள ஆசைப்படுவார்கள். ஆனால் இந்த ஆசை தீவிர ஆசையாக மாறாது. ஏனெனில் பொருளின் மீதுள்ள ஆசையால் வேதம் படிக்கத் தேவையான நேரத்தை அவர்கள் ஒதுக்கத் தயாராக இருக்க மாட்டார்கள். எனவே, இந்த ஆசை தீவிரம் அடையும் வரை, ஆசிரியர் அவர்களுக்குப் பின் வரும் கருத்துக்களைப் படிப்படியாகப் போதனை செய்வார்கள். இவற்றை மனதில் உள்வாங்கி, ஆராய்ச்சி செய்யும் மாணவர்கள் வெகு விரைவில் முறையாக வேதம் படிக்க ஆரம்பிப்பார்கள்.

*மூன்றாம் கருத்து : பொருள்களில் இன்பம் இல்லை*

பொருள்களில் இன்பம் இருக்கிறது என்ற மக்களின் தவறான எண்ணத்தை மாற்றத் தர்க்கத்தின் துணையினால் ஞானி அவர்களுக்கு உதவுவார். எல்லாக் காலங்களிலும் சமமான இன்பம் அளிக்கக் கூடிய ஒரு பொருளோ எல்லோருக்கும் இன்பம் அளிக்கக் கூடிய ஒரு பொருளோ இந்த உலகத்தில் இல்லவே இல்லை. இதிலிருந்து பொருள்களில் இன்பம் இல்லை என்பது தெளிவாகிறது.

*நான்காம் கருத்து : இன்பத்தின் ஒரே ஊற்று தான் மட்டுமே.*

காய்ந்துபோன எலும்பைக் கடிக்கும் நாய் தனது இரத்தத்தை எலும்பில் இருந்து வருவதாக நினைத்துக்கொள்ளும் முதலிய உதாரணங்கள் மூலம் நாம் நமது சுய உருவான இன்பத்தைப் பொருள்களில் இருந்து பெறுவதாகத் தவறாக நினைக்கிறோம் என்று ஞானி எடுத்துரைப்பார்.

*ஐந்தாம் கருத்து : மாற்றம் என்பது படைப்பின் இலக்கணம்.*

தோற்றம், மாற்றம், மறைதல் என்பது படைப்பின் இலக்கணம்

என்பதைப் புரிந்து கொண்டால் வாழ்வில் ஏற்றத் தாழ்வுகள் மாறி மாறி ஏற்பட்டுக்கொண்டுதான் இருக்கும் என்ற உண்மை தெளிவாகும்.

*ஆறாம் கருத்து : மனமும் உலகம்போல் மாறிக்கொண்டே இருக்கும்.*

ஐந்து புலன்கள் மூலம் உலகை உணர்வது மனதின் சுபாவம். எனவே உலகின் மாற்றங்களுக்கு ஏற்ப மனமும் மாறுபடும். வாழ்வில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுக்களுக்கு ஏற்ப மனதில் இன்பத் துன்பங்கள் ஏற்படும்.

மனதின் விருப்பத்தின் படி உலகத்தை மாற்றி அமைத்து அதன் மூலம் இன்பமாக இருக்க விழைவது நடக்காத காரியம். உலகில் ஏற்படும் மாற்றங்களைச் சரியான கண்ணொட்டத்தில் பார்ப்பதால் மட்டுமே இன்பமாக இருக்க முடியும்.

*ஏழாம் கருத்து : துன்பக் கலப்பு இல்லாமல் இன்பமாக இருப்பது சாத்தியமே.*

வாழ்வின் ஏற்ற இறக்கங்கள் நமது இன்ப துன்பங்களை நிர்ணயிக்க வேண்டிய அவசியம் இல்லை.

இன்பத்தின் ஒரே ஊற்று நாம் மட்டுமே என்பதாலும், மாறும் உலகை நாம் எப்படிப் பார்க்கிறோம் என்பதைத் தீர்மானிப்பது நாம் மட்டுமே என்பதாலும் நம்மால் துன்பத்தை முழுவதும் தவிர்த்து எப்போதும் இன்பமாக இருக்க முடியும். மாறும் உலகத் தால் நமக்கு இன்பத்தையோ துன்பத்தையோ கொடுக்க முடியாது.

*எட்டாம் கருத்து : நாம் துன்பப்படுவதற்குக் காரணம் அறியாமை*

மனதில் அறியாமை இருக்கும்வரை உலகின் மாற்றங்களை நம்மால் சரியான கண்ணோட்டத்தில் பார்க்க முடியாது. எனவே, வேதங்களை முறையாகப் படித்து 'உலகே மாயை' என்ற உண்மையான அறிவைப் பெற்றால் மட்டுமே நம்மால் துன்பத் தைத் தவிர்த்து இன்பமாக இருக்க முடியும்.

*ஒன்பதாம் கருத்து : உலகம் இருப்பதுபோல் தோன்றும் மாயை*

புலன்கள் உலகம் இருக்கிறது என்று சொல்வதில்லை. ஐந்து புலன்கள் நமக்குக் கொடுக்கும் தகவலின் அடிப்படையில் நாம் இந்த உலகம் இருப்பதாக நாம்தான் தவறாக நம்பிக்கொண்டு இருக்கிறோம். உண்மையில் இந்த உலகம் இருப்பதுபோலத் தோற்றம் அளிக்கும் ஒரு மாயை.

*பத்தாம் கருத்து : விஞ்ஞானிகள் 'உலகே மாயை' என்று நிரூபித்துள்ளனர்*

அணு என்பது யாது என்பதை ஆராய்ந்த அறிஞர்கள் உலகம் மாயா சக்தியால் உருவானது என்பதை உறுதிப்படுத்தி இருக்கிறார்கள்.

*பதின்னொன்றாம் கருத்து: காலம் நமது கற்பனை*

கடந்த காலம் என்பதும் எதிர்காலம் என்பதும் நமது மனதுக்குள் மட்டுமே இருக்கும் கற்பனை என்பதை அறிவியல் அறிஞர்கள் சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபித்து இருக்கிறார்கள். இடமும் காலமும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்கமுடியாதத் தத்துவங்கள் என்பதால் பிரபஞ்சம் மாயையாக இருக்கும்பொழுது காலம் கற்பனையாகத்தான் இருக்க வேண்டும் என்பதைத் தர்க்கப் பூர்வமாகவும் அறியலாம்.

*பனிரெண்டாம் கருத்து : விஞ்ஞானிகள் ஞானிகள் அல்ல.*

உலகம் மாயை என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்த பின்னும், 'இந்த உலகத்துக்கு ஆதாரமாக இருப்பது யார்?' என்பதை அறியாத காரணத்தால் அவர்கள் அஞ்ஞானிகளே. 'இந்த உலகத்தைப் படைத்த கடவுள் யார்?' என்ற கேள்விக்கான பதில் வேதம் படித்தால் மட்டுமே விளங்கும்.

*பதின்மூன்றாம் கருத்து : காரண-காரிய அறிவு நமது கற்பனை*

'இது இதனால் நடந்தது' என்ற காரணக் காரிய ஆராய்ச்சியை அஞ்ஞானிகள் மட்டுமே செய்வார்கள். காரண-காரியம் என்பது உலகை உண்மை என மக்களை நம்பவைக்கும் மாயையின் செயல்பாடு என்பதை ஞானிகள் அறிவார்கள்.

*பதிநான்காம் கருத்து: வெற்றியின் ரகசியத்தைக் கண்டுபிடிக்கவே முடியாது.*

காரண-காரியம் என்பதே பொய் என்ற காரணத்தால் வாழ்வில் வெற்றி பெற என்ன செய்ய வேண்டும் என்ற கேள்விக்குப் பதில் கிடையாது. வாழ்வில் வெற்றியும் தோல்வியும் மாறி மாறி ஏற்படும் அனுபவத்தை ஆராய்ந்தவர்கள் வெற்றிக்கோ தோல்விக்கோ தனது செயல்கள் காரணம் இல்லை என்பதை அனுபவப் பூர்வமாக அறிவார்கள்.

*பதினைந்தாம் கருத்து: எதுவும் நிலையானது அல்ல*

மனித உறவுகள், உடல் ஆரோக்கியம், பொருளாதார நிலை, தட்பவெப்பநிலை போன்ற எதுவுமே நிலையானது அல்ல. இன்று நண்பர்களாக இருப்பவர்கள் நாளை எதிரியாக மாறலாம். எதிரிகள் நண்பர்களாக மாறலாம். எந்தவித மாற்றமும் நம்முடைய கட்டுப்பாட்டில் இல்லை. மாயையான உலகத்தின் தொடர்ந்த மாற்றத்தின் ஒரு பகுதியாக அனைத்தும் மாறிக்கொண்டே இருக்கும்.

*பதினாறாம் கருத்து: மாறும் உலகில் மாறாமல் இருப்பது ஒன்றே ஒன்றுதான்*

'நான்' என்ற ஒன்றே ஒன்றுதான் எப்போதும் மாறாமல் இருப்பது. 'நான் யார்?' என்ற அறிவைப் பெற்றால் மட்டுமே இந்த உலகத்தைச் சரியான பார்வையில் பார்க்க முடியும். எனவே முறையாக வேதம் படித்தால் மட்டுமே நிலையான அமைதி யையும் துன்பம் கலவா இன்பத்தையும் அடைய முடியும்.

## சாராம்சம்

*எதை அறிந்தால் அனைத்தையும் அறிந்ததாகுமோ அதை அறிந்த காரணத்தால் ஞானிகள் எப்போதும் ஆனந்தமாக இருப்பார்கள். இந்த உலகமும் தன் மனமும் தொடர்ந்து மாறுவதற்குக் காரணத்தை இவர்கள் அறி வார்கள். எனவே எது எப்படி இருப்பினும் இவர்கள் தனது சுய உருவில் நிலைத்து இருப்பார்கள்.*

*மற்ற அனைத்து மனிதர்களும் தனது பிரதிபிம்பங்கள் என்றாலும் அவர்கள் ஒவ்வொருவரும் வேறுபட்டுக் காட்சியளிப்பதற்கான காரணத்தை ஞானிகள் அறிவார்கள். மேலும் தங்கள் வாழ்வுப் பயணத்தில் எந்தக் கட்டத்தில் அவர்கள் இருக்கிறார்கள் என்பதை ஞானியால் வெகு எளிதில் அறிந்து கொள்ள முடியும். எனவே, ஞானிகள் மற்றவர்களுடன் உறவாடும்பொழுது அவர்களுக்கு ஏற்பு டைய விதத்தில் நடந்து கொள்ளமுடியும்.*

*தங்களுக்கு வழிகாட்டவேண்டும் என்ற வேண்டு கோளுடன் தன்னை அணுகுபவர்களுக்கு உதவுவதில் ஞானி மகிழ்ச்சி அடைவார்.*

*கல்லில் சிலையை வடிக்க தேவையில்லாத பாகங்களைக் கல்லில் இருந்து நீக்கினால் மட்டுமே போதும். புதிதாக வேறு ஒன்றையும் சேர்க்க வேண்டாம். அது போல ஒரு மனிதனைப் பரமனாக மாற்ற அவனது அறியாமையை அகற்றினால் போதும். அவன் எப்போதுமே பரமனாகத்தான் இருக்கிறான் என்ற அறிவைப் படிப்படியாக அவனுக்கு உணர்த்துவதற்குச் சிறிது காலம் ஆகும் என்றாலும் இது எளிதில் செய்து முடிக்கக்கூடிய செயல்தான் என்பதை ஞானிகள் அறிவார்கள். பலர் இந்த அறிவைப் பெற முயற்சிக்க மாட்டார்கள் என்பதையும் ஞானிகள் அறிவார்கள். எனவே எந்தவிதக் கவலையோ வருத்தமோ இன்றி அவர்கள் மற்றவர்களுக்கு வழி காட்டுவார்கள்.*

*உலகே மாயை என்பதால் ஞானம் அடைவதும் மற்றவர்களுக்கு வழிகாட்டுதலும் தன் வசமின்றித் தானே நடக்கும் ஒளி-ஒலி காட்சியாகும். எனவே, ஞானிகள் இந்த நாடகத்தைத் தொடர்ந்து ஆனந்தமாக அனுபவிப்பார்கள்.*

## பயிற்சிக்காக

1. ஞானிகள் யாருக்குப் போதனைகள் செய்வார்கள்?
2. ஞானிகள் எப்போது போதனை செய்வார்கள்?
3. ஞானிகள் எப்படிப் போதனை செய்வார்கள்?
4. முறையாக வேதம் படிக்க மாணவர்களைத் தயார் செய்யும் வகையில் அவர் விளக்கும் பதினாறு கருத்துக்கள் யாவை?
5. விஞ்ஞானிகள் அஞ்ஞானிகளாக இருக்கக் காரணம் என்ன?

## சுயசிந்தனைக்காக

❖ *தீர்க்கதரிசிகளின் போதனைகளுக்கும், முறையாக வேதம் படித்த ஞானிகளின் போதனைகளுக்கும் உள்ள வித்தியாசங்களை ஆராயவும்.*

❖ *அஞ்ஞானத்தை அகற்றுவது விஞ்ஞானம். ஆனால் விஞ்ஞானிகளே அஞ்ஞானிகளாக இருக்கிறார்கள். எனவே நடைமுறையில் 'விஞ்ஞானம்' என்ற வார்த்தைக்குப் பொருள் என்ன?*

❖ *தற்கொலைகள் நடப்பது தன் மீது உள்ள விருப்பத்தாலா அல்லது வெறுப்பாலா?*



# 188 ஞானியின் வாழ்வு

**அத்தியாயம் : 4 ● பாதம் : 4 ● சூத்திரம் : 541 - 542**

**ஞா**னியும் சாதாரண மனிதன்தான் என்றாலும் அவனது வாழ்வு சிறப்பாக அமையும் என்ற கருத்தை யோக வசிஷ்டச்சாரம் என்ற நூலின் துணையுடன் இந்தப் பாடம் எடுத்துக் காட்டுகிறது.

சாந்தோகிய உபநிஷத மந்திரம் (8.1.6) *'அவன் அனைத்து உலகங்களிலும் விடுதலை பெற்றவன்'* என்று கூறுகிறது. இதே கருத்தைத்தான் வசிஷ்டர் ஸ்ரீ ராமனுக்குச் செய்த உபதேசங்களில் விளக்குகிறார்.

**1.18** பல வருட வாழ்க்கையின் அனுபவங்களைச் சில நிமிடங்கள் நீடிக்கும் கனவில் அனுபவிப்பது போலத்தான் மாயையின் விளையாட்டாக இந்த வாழ்வு அமைந்துள்ளது.

**1.19** இந்த வாழ்வை அனுபவிப்பவனாக இல்லாமல் வெறும் பார்வையாளானாக இருக்கும் ஞானியின் மனம் எப்போதும் அமைதியுடன் இருக்கும். அவன் பந்தங்களில் இருந்து முழுதும் விடுதலை அடைந்தவன்.

**1.20** ஏற்பது மறுப்பது ஆகிய இரண்டையும் துறந்து, 'நான் உணர்வுமயமானவன்' என்பதை உணர்ந்த ஞானியின் வாழ்வு சிறப்பாக அமையும்.

**1.23** எந்த இடத்திலும் எதுவும் எப்போதும் பிறப்பதும் இல்லை; இறப்பதும் இல்லை. பரமன் மட்டுமே அனைத்து உருவங்களாகவும் காட்சி அளிக்கிறான்.

**2.11** துன்பத்தைத் தருவதாகத் தோன்றும் பிரபஞ்சம் பரமனின் விளையாட்டு. கயிற்றில் பாம்பு தோன்றுவதுபோல் உருவாக்கப்பட்ட இந்த உலகம் சரியான ஞானம் கிடைத்ததும் மறைந்து விடும்.

**2.12** உலகத்துக்கு நம்மைப் பந்தப்படுத்தும் சக்தி இல்லா விட்டாலும் கூட, ஆசைகள் நம்மைப் பந்தப்படுத்திவிடுகின்றன. ஆசைகள் அற்றவன், பந்தங்களில் இருந்து விடுதலை பெற்ற வனாவான்.

**2.15** சிறுவனின் கற்பனையில் உருவான பேய் அவனையே பயமுறுத்துவது போல அறியாமையால் உருவான உலகம், ஞானம் இல்லாதவர்களைத் துன்புறுத்துகிறது.

**2.18** குருடனுக்கு இருளாக இருக்கும் உலகம், கண் இருப்பவனுக்கு ஒளியுடன் காட்சி தருவது போல அஞ்ஞானி களுக்குத் துன்பம் தரும் உலகம், ஞானியின் பார்வையில் இன்பம் நிறைந்ததாகக் காட்சி அளிக்கும்.

**2.19** உலக துன்பங்களை மனதின் கற்பனையாக அறிந்த ஞானியின் ஆனந்தம் தொடர்ந்து அதிகரிக்கும்.

**2.21** சூரியக்கதிர்கள் சூரியனிடம் இருந்து வேறுபட்டவை அல்ல என்பதை அறிந்தவர்கள் போல மனதில் தோன்றும் எண்ணங்கள் பரமனிடம் இருந்து வேறுபட்டவை அல்ல என்று அறிந்த ஞானிகள் எப்போதும் மகிழ்ந்திருப்பார்கள்.

**2.22** துணியை ஆராய்ந்தவர்கள் அது நூலில் இருந்து தோன்றியது என்பதை அறிவார்கள். அதுபோல இந்த உலகம் பரமனிடம் இருந்து தோன்றியது என்பதை ஞானிகள் அறிவார்கள்.

**2.24** நுரை, அலை, நீர்த்திவிலைகள், நீர்க்குமிழிகள் ஆகிய அனைத்தும் கடலில் அடங்குமோ அதுபோலப் பரமனிடம் இருந்து வெளியான இந்தப் பிரபஞ்சம் தன்னில் அடக்கம் என் பதை ஞானிகள் அறிவார்கள்.

**3.1** காய்ந்த புல்லை நெருப்பு எரிப்பதுபோல இந்த ஞானத்தை அடைந்தவர்களின் அறிவு, அவர்களின் ஆசைகளை அகற்றிவிடும். இதுதான் உண்மையான சமாதி; கண்களை மூடி தியானம் செய்வது அல்ல.

**3.3** அனைத்தையும் கடந்த நிலையை அடைந்த ஞானியின் மனம், முழு நிலவைப்போல் எப்போதும் குளிர்ந்து இருக்கும்.

**3.5** பறவைகளும் மிருகங்களும் தீப்பற்றி எரியும் காட்டுக்குள் சரணடைவதில்லை. அது போலப் பரமனை அறிந்த ஞானியின் மனதினுள் தீய எண்ணங்கள் புகுவதில்லை.

**3.8** சுற்றியுள்ள பொருள்களின் நிறம், ஸ்படிகக்கல் மேல் பட்டு பிரதிபலித்தாலும் அதன் மேல் கறை படிவதில்லை. அது போல உலகில் ஞானி செயல்பட்டாலும் தான் செய்த செயல் களால் அவன் பாதிக்கப்படுவதில்லை.

**3.9** வெளி உலகில் தீவிரமாக வேலை செய்து கொண்டி ருந்தாலும் ஞானியின் உள்மனம் ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பது போல அமைதியாக இருக்கும்.

**3.10** இருப்பது பரமன் மட்டுமே என்ற அறிவில் நிலை பெற்ற ஞானி, வெளி உலகில் தங்கள் வேலைகளைத் தொடர்ந்து செய்தாலும் அது வெறும் கனவு உலகம் என்பதை அறிவார்கள்.

**3.11** சேற்றில் புதைந்து இருந்தாலும் தங்கத்தின் பளபளப்பு குறைவதில்லை. அது போல மரணம் எப்போது ஏற்பட்டாலும் ஞானி அதனால் பாதிக்கப்படுவதில்லை.

**3.12** ஞானம் பெற்ற அன்றே அவன் முக்தி அடைந்துவிட்ட காரணத்தால், ஞானி காசியில் மடிந்தாலும் அல்லது ஒரு புலையனின் வீட்டில் மடிந்தாலும் வித்தியாசம் ஏதும் இல்லை.

**3.14** காலிப் பாத்திரம் கடலினுள் நிரம்பியும், வெளியே காலி யாகவும் இருப்பது போலச் சுற்றியுள்ள நிகழ்வுகளுக்கேற்ப ஞானி வெளித்தோற்றத்தில் மாற்றம் அடைந்தாலும் அவன் ஆழ்மனதில் எந்த மாற்றமும் இருக்காது.

**3.16** இருதயத்தில் இருந்த ஆசைகளின் முடிச்சுக்கள் அவிழ்க்கப்பட்டபின், மனதில் இருந்த சந்தேகங்கள் அனைத்தும் தீர்க்கப்பட்டபின் முக்தி அடைந்த ஞானி வெளிப்பார்வைக்கு பந்தப்பட்டவன் போலக் காட்சி அளித்தாலும் உண்மையில் அவன் விடுதலைபெற்றவனே.

**3.24** முக்தி என்பது வானத்துக்கு மறுபுறம் இருப்பதல்ல. மனதில் உள்ள ஆசைகள் சரியான ஞானத்தால் சுட்டெரிக்கப்பட்ட நிலையே முக்தி.

**4.1** இரண்டற்ற உணர்வு தன் கற்பனையில் ஆசைப் படுபவனாகவும் ஆசைப்படும் பொருளாகவும் பிரிந்து ஒன்றை ஒன்று தேடி அலையும்பொழுது அதற்கு மனம் என்று பெயர்.

**4.3** நெருப்பு எரிவதற்குக் காரணமான காற்றே அதை அணைக்கவும் உதவுவதுபோலக் கற்பனையில் உருவான துன் பங்கள் கற்பனையாலேயே நீக்கப்பட வேண்டும்.

**4.7** இது வேண்டும், அது வேண்டாம் என்று பிரிப்பதுதான் பந்தமே தவிர வேறு ஒன்றும் இல்லை.

**4.9** பார்க்கப்படும் பொருள்கள் உண்மையில் இருப்பதாகத் தோன்றுவதற்கு மனதின் கற்பனை மட்டுமே காரணம். உலகம் உண்மையில் இல்லை.

**4.23** நான் பரமன் அல்ல என்ற எண்ணம் துன்பங்களுக்குக் காரணம். நான் பரமன் என்ற எண்ணம் முக்திக்குக் காரணம்.

**5.2** படத்தில் வரையப்பட்ட கொடிகளைக் காற்றினால் அசைக்க முடியாது. அதுபோல் சூழ்நிலையில் ஏற்படும் மாற்றங் களால் சரியான ஞானத்தில் நிலைபெற்றவனின் மனதைப் பாதிக்க முடியாது.

**5.3** 'நான் யார்?' என்ற ஆராய்ச்சி செய்தால் அறிய வேண்டியது அனைத்தையும் அறிந்துவிடலாம்.

**8.6** அறிவு உன்னில் இருந்து வேறுபட்டதல்ல. அறியப்படும் பொருள்கள் அறிவில் இருந்து வேறுபட்டவை அல்ல. அதாவது, உன்னைத்தவிர வேறு எதுவும் உண்மையில் இல்லை.

**8.7** பிரம்மா, விஷ்ணு, சிவா, இந்திரன் போன்றவர்கள் செய் யும் செயல்கள் யாவும் பரமனான உன்னால் செய்யப்படுபவை.

**8.8** 'நானே இந்தப் பிரபஞ்சம். நான் மாறாத பரமன். எனக்கு அப்பாற்பட்ட கடந்த காலமோ எதிர்காலமோ கிடையாது' என்று அறிந்தவன் ஞானி.

**9.5** யானை பொம்மையை உண்மையான யானையாக மனதினுள் நம்பி அதை வைத்து விளையாடும் குழந்தைகளைப் போலத் தனது உடல் உண்மையாக இருக்கிறது என்ற நம்பிக் கையுடன் வாழ்பவன் அஞ்ஞானி.

**9.11** தூசு, புகை, மேகம் ஆகியவற்றால் ஆகாயம் பாதிக்கப் படுவது போல மாயையின் விளைவான உலகத்தால் பரமன் பாதிக்கப்படுவான்.

**9.12** நெருப்புடன் தொடர்பு கொண்ட உலோகம் சுடுவது போலப் பரமனுடன் தொடர்பு கொண்ட புலன்கள் உணர்வுடன் கூடியவையாகச் செயல்படுகின்றன.

**9.13** கண்ணுக்குத் தெரியாத ராகு, நிலவுடன் சேர்ந்தவுடன் கண்ணுக்குத் தென்படுவதுபோல் அறியமுடியாதப் பரமனை, பொருள்களை அனுபவிக்கும்போது அறிந்து கொள்ள முடிகிறது.

**9.14** தண்ணீரும் நெருப்பும் ஒன்றுடன் ஒன்று சேரும் பொழுது ஒன்றின் குணங்கள் மற்றதன் மேல் ஏற்றி வைக்கப் படுகிறது. அதேபோல, பரமனும் ஜடமான உடலும் ஒன்று சேரும் பொழுது உடல் நானாகவும், நான் உடலாகவும் தென்படுகின்றன.

**9.16** முயற்சி செய்தால்தான் கரும்பில் இருந்து சர்க்கரையை எடுப்பது, எள்ளில் இருந்து எண்ணெய் எடுப்பது, மரக்கட்டையில் நெருப்பை ஏற்படுத்துவது, பாலில் இருந்து வெண்ணையை எடுப் பது, மண்ணில் இருந்து உலோகத்தைப் பிரிப்பது போன்றவை நடக்கும். அதேபோல் உடலில் இருந்து பரமனைப் பிரித்து அறிவ தற்கும் முயற்சி தேவை.

**9.18** விலைமதிப்பற்ற கற்களால் செய்யப்பட்ட பாத்திரத் தினுள் வைக்கப்பட்ட விளக்கு அதன் உட்புறத்தையும் வெளிப் புறத்தையும் ஒளிர்விப்பது போல அனைத்தையும் ஒளிர்விப்பது பரமன்.

**9.29** உணர்வே பரமன். உலகே பரமன். பஞ்சபூதங்களும் பரமன். நான் பரமன். எனது எதிரிகளும் பரமன். எனது நண்பர் களும் உறவினர்களும் பரமன்.

**9.30** உணர்வும் உணரப்படும் பொருள்களும் வேறு பட்டவை என்ற எண்ணம், அறிவு நம்மைப் பந்தத்தில் ஆழ்த்தித் துன்பத்தைக் கொடுக்கும். இந்த எண்ணத்தில் இருந்து விடுதலை பெறுவது முக்தி.

**10.5** அறிபவன் அறிவால் பந்தப்பட்டுள்ளான். அறிந்து கொள்வதற்கு எதுவும் இல்லை என்ற நிலையில்தான் அவன் விடுதலை பெறுகிறான்.

**10.25** 'நான் பரமன்' என்ற எண்ணம் தியானம். இந்தத் தியானமும் மறைவதுதான் சமாதி.

**10.32** நன்மை தீமை ஆகிய இரண்டையும் கடந்த ஞானி, ஒரு குழந்தையைப் போன்றவன். அவன் தடைசெய்யப்பட்ட செயல்களை அவை பாவகரமானவை என்ற எண்ணத்துடன் செய்யாமல் இருப்பதில்லை. தனக்கு விதிக்கப்பட்ட செயல்களை அவை புண்ணியம் தருபவை என்ற எண்ணத்துடன் செய்வது மில்லை.

**10.35** நீரில் சிற்றலைகள் இருக்கின்றன என்றும் சொல்ல லாம். இல்லை என்றும் சொல்லலாம். அதுபோலப் பரமனில் உலகம் இருகின்றது என்றும் சொல்லலாம். இல்லை என்றும் சொல்லலாம். பரமன் இரண்டிற்கும் அப்பாற்பட்டவன்.

### ஸாராம்சம்

*ஞானியின் வாழ்வு நிறைவானது. ஏதேனும் ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சி நடந்தால் வாழ்க்கை நிறைவு பெறும் என்ற எதிர்பார்ப்புடன்தான் மற்றவர்களது வாழ்க்கை அமைந்திருக்கும். மனதில் தோன்றும் ஆசைகள் நிறை வேறினாலும் நிறைவேறா விட்டாலும் வாழ்வில் எவ்வித மாற்றமும் ஏற்படாது என்பதை ஞானி அறிவான். ஏனெ னில், ஒரு ஆசை நிறைவேறிய மறுகணமே அடுத்த ஆசை அதன் இடத்தைப் பிடித்துக்கொள்வதால் வாழ்வு தொடர்ந்து நிறைவற்றதாகவே இருக்கும்.*

*'திருடன் பிடிபட்டான்' என்ற செய்தியைச் செய்தித் தாளில் வாசிக்கும்பொழுது நாம் திருடனுக்காக வருத்தப் படுவதில்லை. அதுபோல ஞானி, உடலும் மனமும் நான் அல்ல என்பதை உணர்ந்திருக்கும் காரணத்தால் இவற் றின் குறைகளை நினைத்து அவன் வருந்துவதில்லை.*

*ஞானத்துக்காக உலகத்தைத் துறந்தவன் முக்தியிழை வோன். ஞானத்துடன் கூடிய தன்னையே துறந்தவன் முற்றுணர்ந்தோன். மனதில் அனுபவிக்கப்படும் இன்பம், மனதில் புதைந்திருக்கும் அறிவு ஆகியவை எப்போதுமே அளவுக்கு உட்பட்டவை. அனைவரது மனங்களின்*

*உணர்வுக்கு ஆதாரமான பரமனுக்கும் ஒரு குறிப்பிட்ட மனதுக்கும் எவ்வித உறவும் இல்லை என்ற அறிவு, ஞானியின் மனதில் இருப்பதால் அவன் இன்பமயமாக இருப்பான்.*

### பயிற்சிக்காக

1. ஞானியின் வாழ்வு எந்த வகையில் சிறந்திருக்கும்?

### சுயசிந்தனைக்காக

❖ *யோக வசிஷ்டச் சாரம்* (Essence of Yoga Vasishta) *என்ற இரமண ஆசிரமப் புத்தகத்தைப் படிக்கவும்.*



# 189 ஞானியின் ஞானம்

அத்தியாயம் : 4 ● பாதம் : 4 ● சூத்திரம் : 543 - 547

*"நான் பரமன் என்ற அறிவுக்கண்ணை திறந்தவன் இந்த உலகத்தில் உள்ள பொருள்களையெல்லாம் பரமனாகவே பார்த்து அவற்றை அனுபவிப்பான்"* என்று சாந்தோக்கிய உபநிஷத மந்திரம் (8.12.5) ஞானத்தின் தன்மை, பெருமை, பயன்கள் ஆகியவற்றை கூறு கிறது. இந்தக் கருத்தை அஷ்டவக்ர கீதையின் மூலம் இந்தப் பாடம் விளக்குகிறது.

**அஷ்டவக்ரர் கூறுகிறார்:**

**1.4** உனது உடலில் இருந்து நீ வேறுபட்டவன். உணர்வு தான் நீ. இந்த அறிவில் நீ நிலைபெற்று இருந்தால் எப்போதும் அமைதியாகவும் இன்பமாகவும், பந்தங்களில் இருந்து விடுபட்ட வனாகவும் உன்னால் இருக்க முடியும்.

**1.6** சரி-தவறு, இன்பம்-துன்பம் போன்ற இருமைகள் உனது மனதை மட்டுமே சேர்ந்தவை. உனக்கும் அவற்றுக்கும் எந்தவித தொடர்பும் இல்லை. நீ எதையும் செய்பவனும் இல்லை; பலனை அனுபவிப்பவனும் இல்லை. நீ எப்போதும் விடுதலை பெற்றவன்.

**1.7** அனைத்து நிகழ்வுகளுக்கும் நீ வெறும் சாட்சி மட்டுமே என்ற உண்மையை மறப்பதுதான் உன் துன்பங்களுக்குக் காரணம்.

**1.11** ஒருவன் தன்னைத் துன்பங்களில் இருந்து விடுதலை அடைந்தவன் என்று எண்ணினால் அதுவே உண்மை. அதை விடுத்துத் தன்னைப் பந்தப்பட்டவன் என்று கருதினால் அதுதான்

உண்மை. 'நீ எதை நினைக்கிறாயோ அதுவாகவே ஆகிவிடுவாய்' என்ற வாசகம் உண்மையானது.

**1.15.** நீ ஏற்கெனவே அமைதியின் உருவானவன். 'மனதை அமைதிப்படுத்த வேண்டும்' என்று நீ நினைப்பதுதான் உன் துன்பங்களுக்குக் காரணம்.

**1.19** பிரதிபலிக்கப்படும் உருவத்தைத் தன்னுள்ளே கொண்டிருந்தாலும் அதிலிருந்து வேறுபட்டிருக்கும் கண்ணாடியைப்போல உயிருடன் இருக்கும் உடலைத் தன்னுள்ளே கொண்டிருந்தாலும் அதிலிருந்து வேறுபட்டவன் பரமன்.

***ஜனகர் கூறுகிறார்:***

**2.2** நானே இந்த உடலுக்கு உணர்வாகவும் பிரபஞ்சத்துக்கு ஆதாரமாகவும் இருக்கிறேன். எனவே, இந்த உலகம் முழுவதும் என்னுடையது. அல்லது, எதுவுமே என்னுடையது அல்ல.

**2.6** கரும்புச் சாற்றின் சுவை எப்படி அதில் இருந்து எடுக்கப்பட்ட சர்க்கரைக்கும் இருக்கிறதோ அது போல ஆனந்த மயமான என்னில் இருந்து உருவான உலகம் முழுவதும் இன்ப மயமானது.

**2.11** எவ்வளவு ஆச்சரியமானவன் நான்? பிரம்மனில் தொடங்கிக் கடைசிப் புல் வரை அனைத்தும் அழிந்தாலும் அழியா மல் இருக்கும் எனக்குப் பெருமை உண்டாவதாக.

**2.12** எவ்வளவு ஆச்சரியமானவன் நான்? உடலுடன் இருந்தாலும் நான் எங்கும் போவதும் இல்லை. வருவதும் இல்லை. எப்போதும் எல்லாவற்றையும் உள்ளடக்கிய எனக்குப் பெருமை உண்டாவதாக.

**2.13** எவ்வளவு ஆச்சரியமானவன் நான்? என்னைப்போல் புத்திசாலி யாரும் இருக்க முடியாது. என் உடலால் தொடா மலேயே இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் பெற்றெடுத்த எனக்குப் பெருமை உண்டாவதாக.

**2.14** எவ்வளவு ஆச்சரியமானவன் நான்? எதனுடனும் தொடர்பு உடையவனாக இல்லாவிட்டாலும் வாக்காலும் மனதாலும் எட்டக்கூடிய அனைத்தையும் படைத்த எனக்குப் பெருமை உண்டாவதாக.

**2.15** கறைபடியாத துணியான என்மேல் அறியாமையால் சித்தரிக்கப்பட்ட அறிவு, அறியப்படும் பொருள், அறிபவன் ஆகிய மூன்றுமே உண்மையில் இல்லை.

**2.20** இந்த உடல், சுவர்க்கம், நரகம், பந்தம், விடுதலை, பயம் போன்றவை மனதின் கற்பனைகள். உணர்வு மயமான எனக்குச் செய்ய வேண்டியது ஒன்றும் இல்லை.

**2.22** நான் இந்த உடல் அல்ல. இந்த உடல் என்னுடையது அல்ல. நான் உயிரோடு இருப்பவன் அல்ல. நான் உணர்வு மயமானவன். உயிர்வாழவேண்டும் என்ற மனதின் ஆசைதான் துன்பங்களுக்குக் காரணம்.

***அஷ்டவக்ரர் கேட்கிறார்:***

**3.1** 'நான் அழியாத பரமன்' என்ற ஞானத்தை அடைந்த உன் போன்ற ஞானிகளுக்குச் சொத்து சேர்ப்பதில் என்ன சுகம் இருக்க முடியும்?

**3.2** முத்தின் உயர்வை அறியாதவனே வெயிலில் பளபளக்கும் கிளிஞ்சலுக்கு ஆசைப்படுவான். அதுபோல, 'நான் யார்?' என்ற ஞானம் இல்லாதவர்கள் மட்டுமே பொய்யாகக் காட்சி அளிக்கும் பொருள்களுக்காக ஆசைப்படுவர்.

**3.9** விழா எடுக்கப்பட்டாலும் துன்புறுத்தப்பட்டாலும் 'நானே பரமன்' என்ற அறிவுள்ள ஞானி காத்திருக்கவும் மாட்டான்; ஏமாற்றம் அடையவும் மாட்டான்.

**3.10** தன்னுடைய உடலையே மற்றவருடையது என்ற எண்ணத்தில் பார்க்கும் ஞானி எவ்வாறு புகழாலும் இகழாலும் பாதிக்கப்படுவான்?

***அஷ்டவக்ரர் கூறுகிறார்:***

**4.1** வாழ்க்கை என்னும் விளையாட்டை விளையாடும் தன்னை அறிந்த ஞானி, துன்பத்தில் உழலும் குழப்பமடைந்த ஜீவன்களைப்போல இருக்கமாட்டான்.

**4.2** இந்திரன் முதலான தேவர்களும் அடைய ஏங்கும் ஞானத்தை அடைந்தவர்கள் தங்கள் சாதனையை நினைத்துக்கூடப் பரவசப்படுவதில்லை.

**4.4** தானே இந்த உலகம் என்று அறிந்தவர்கள் மனம் போல வாழ்வதை யாரால் கட்டுப்படுத்த முடியும்?

**6.3** எல்லா உயிரினங்களிலும் நான் இருக்கிறேன். எல்லா உயிரினங்களும் என்னுள் இருக்கின்றன. இந்த உயர்ந்த ஞானத்தை அடைந்தவனுக்குத் துறவு, ஏற்றல், மறுத்தல் ஆகிய எதுவும் இல்லை.

### ஜனகர் கூறுகிறார்

**7.2** அளவுகடந்தக் கடலான என்னில், 'உலகம்' என்னும் அலை எழட்டும், விழட்டும். அதனால் எனது அளவு கூடுவதும் இல்லை. குறைவதும் இல்லை.

**7.5** உணர்வுமயமான எனக்கு மாயாஜாலத்தால் செய்யப் பட்ட இந்த உலகத்தில் வேண்டிய, வேண்டாத பொருள்கள் இருப்பதாக எப்படி என்னால் கற்பனை செய்துகொள்ள முடியும்.

### அஷ்டவக்ரர் கூறுகிறார்:

**8.1** மனதில் எதற்காகவாவது ஏங்குவது, எதை நினைத்தாவது வருத்தப்படுவது, எதையாவது மறுப்பது, எதையாவது பற்றிக் கொண்டு இருப்பது, எதை நினைத்தாவது திருப்தி அடைவது, எதை நினைத்தாவது அதிருப்தி அடைவது ஆகியவையே பந்தம்.

**8.2** இவை இல்லாமல் இருப்பது விடுதலை.

**9.2** வாழ வேண்டும் என்ற துடிப்போ, இன்பம் வேண்டும் என்ற ஏக்கமோ, அறிய வேண்டும் என்ற ஆவலோ இல்லாத வர்கள் ஞானிகள்.

**10.7** எவ்வளவுதான் செல்வம், புலன் இன்பங்கள் கிடைத் தாலும் மனம் திருப்தி அடையவே அடையாது.

### ஜனகர் கூறுகிறார்

**12.5** உலகத்துடன் ஒன்றி வாழ்தல் அதன் பின் துறவுபூண்டு தியானம் செய்தல் ஆகிய இரண்டு தவறுகளையும் செய்துவிட்டு இப்போது நான் சரியான ஞானத்தில் நிலைத்து நிற்கிறேன்.

**12.6** எப்படி வேலைகள் செய்வது அறியாமையின் விளைவோ அதுபோலவே வேலைகளைத் துறப்பதும் அறியா

மையின் விளைவே. இந்த உண்மையை உணர்ந்த நான் இப்போது சரியான ஞானத்தில் நிலைத்து நிற்கிறேன்.

**12.7** எண்ணத்துக்கு அப்பாற்பட்ட பரமனைப் பற்றி எண்ண முயற்சி செய்வதன் தவறை உணர்ந்து இந்தப்பயிற்சியை கைவிட்டுவிட்டேன்.

**12.8** இந்த ஞானத்தை அடைந்தவர்கள் வாழ்க்கையின் இலட்சியத்தை அடைந்தவர்கள். அவர்கள் செய்ய வேண்டிய அனைத்துச் செயல்களையும் செய்து முடித்தவர்கள்.

**13.2** சிலவேளைகளில் உடல் உபாதை ஏற்படலாம். சில வேளைகளில் நமது பேச்சு நமக்குத் துன்பத்தைத் தரலாம். சில வேளைகளில் மனம் அலைபாயலாம். இவை எதைப்பற்றியும் கவலைப்படாமல் நான் எனது விருப்பப்படி வாழ்கிறேன்.

**13.3** உண்மையில் நான் எதையும் செய்வதில்லை என்பதை உணர்ந்த நான் தினசரி வாழ்வில் நிகழும் சூழல்களைத் தக்கபடி எதிர்கொள்கிறேன்.

**13.5** நான் நின்றாலோ, நடந்தாலோ அல்லது படுத்துக் கொண்டு இருந்தாலோ எனக்கு எந்த விதமான லாபமோ நஷ்டமோ இல்லை. எனவே, நான் எனது விருப்பப்படி நின்றோ, நடந்தோ, தூங்கியோ வாழ்நாட்களைக் களிக்கிறேன்.

**14.1** தூக்கத்தில் இருந்து விழித்தபின் கனவுகளை நினைவு கூறும் அவசியம் இல்லை. அதுபோலக் காலியான மனதை உடைய ஞானிகளுக்குத் தானாக ஏற்படும் எண்ணங்களைத்தவிர எதையாவது ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை.

***அஷ்டவக்ரர் கூறுகிறார்:***

**15.1** அறிவுக் கூர்மை படைத்த ஒருசிலர் ஆசிரியருடன் நடத்தும் சாதாரண உரையாடல் மூலம் கூட ஞானத்தைப் பெறலாம். வேறு சிலர் வாழ்நாள் முழுவதும் ஆசிரியரிடம் முறையாகப் பாடம் கற்றாலும் திக்குத்தெரியாமல் திண்டாடலாம்.

**15.2** புலன் இன்பத்தில் விருப்பப்படுவது துன்பத்தைத் தரும். புலன் இன்பத்தை வெறுப்பதும் துன்பத்தைத் தரும். புலன்

இன்பத்தில் அக்கறையின்மை விடுதலை. இந்த உண்மையை அறிந்தபின் நீ விரும்பியபடி வாழலாம்.

**15.3** இந்த அறிவு, அறியத்துடிக்கும் ஆவல், அடையத் துடிக்கும் சுறுசுறுப்பு ஆகியவற்றை அடக்கிவிடும். எனவே புகழை யும் பொருளையும் விரும்புவர்கள் இந்த ஞானத்தைத் தவிர்த்து விடுவார்கள்.

**16.1** நீ கணக்கற்ற வேதங்களைப் படிக்கலாம், ஒப்பிக்கலாம். ஆனால் அவை அனைத்தையும் மறக்கும் வரை உன்னால் ஞானத்தில் நிலைபெற முடியாது.

**16.3** மக்கள் தாங்கள் முயற்சி செய்வதால்தான் துன்பம் ஏற்படுகிறது என்பதை அறிவதில்லை. ஒரு சிலர் இந்த வாக்கி யத்தைக் கேட்டதாலேயே நிம்மதி அடைவார்கள்.

**16.4** கண்களை மூடித் திறப்பது கூட ஒரு பெரிய வேலை என்று நினைக்கும் முழுச்சோம்பேறிக்கு மட்டும்தான் இன்பம் சொந்த மானது.

**16.11** சிவா, விஷ்ணு, பிரம்மன் ஆகிய மூவருமே உனது ஆசிரியர்களாக இருந்தாலும் அனைத்தையும் மறக்கும் வரை உன் னால் ஞானத்தில் நிலைபெற முடியாது.

**17.4** அனுபவித்த பொருட்களின் மேல் பற்று இல்லாமலும் அனுபவிக்காத பொருள்களை அடைய ஏங்காமலும் இருப்பவனைக் காண்பது அரிது.

**17.5** உலக இன்பத்துக்கு ஆசைப்படும் பற்றுடையோர்களும் விடுதலை பெற ஆசைப்படும் முக்திவிழைவோர்களும் துன்பப்படு பவர்களே. இந்த இரண்டையும் அடைய ஆசைப்படாதவர்களைக் காண்பது அரிது.

**17.7** தன் வாழ்வில் இருந்து உலகப் பொருட்களை அகற்றிவிட வேண்டும் என்ற ஆசையோ அவை தொடர்வதால் கோபமோ இல்லாமல் வாழ்வு தரும் நிகழ்வுகளை அப்படியே ஏற்றுக்கொள்ப வன் எப்போதும் இன்பமாக இருப்பான்.

**17.8** கிடைத்த ஞானத்தில் நிலைபெற்று, அலைபாயும் மனதைக் காலிசெய்துவிட்டுப் பார்க்கக் கிடைப்பதை பார்த்து, கேட்கக்கிடைப் பதை கேட்டு, முகரக்கிடைப்பதை முகர்ந்து, சுவைக்கக்கிடைப்பதை சுவைத்து, ஞானி இன்பமாக வாழ்வான்.

**17.16** எதையாவது தேடி அலைந்துகொண்டிருந்த நாட்களை முடிவுக்குக் கொண்டுவந்துவிட்டவனுக்கு வலுச்சண்டைக்குப் போவதோ, கருணை புரிவதோ, கர்வமோ, பணிவோ, ஆச்சரியமோ, குழப்பமோ எதுவும் இருக்காது.

**17.17** புலன் இன்பங்களில் தனக்கு அக்கறை இல்லை என்பதை ஞானி வெளியே காட்டிக்கொள்ள மாட்டான். எந்தச் சாதனைகளைச் செய்ய நேர்ந்தாலும் அல்லது தோல்விகளைச் சந்திக்க நேர்ந்தாலும் பற்றுதல் இல்லாத மனதுடன் அவன் தொடர்ந்து புலன் இன்பங்களை அனுபவிப்பான்.

**17.19** 'நான்', 'எனது' என்ற எண்ணங்களில் இருந்து விடுதலை அடைந்தவன், எந்த விதப் பொறுப்பு உணர்வும் இல்லாதவன், உலகே மாயை என்று உணர்ந்தவன், ஆசைகளை அகன்ற மனதை உடையவன், வேலைகள் செய்யும்பொழுதும் சும்மா இருப்பவனாவான்.

**18.16** நான் இந்த உலகத்தில் இருந்து வேறுபட்டவன் என்ற எண்ணம் இல்லாதவன், 'நான் பரமன்' என்ற எண்ணமும் இல்லாதவன்.

**18.18** ஞானி சாதாரண மனிதனைப்போலவே வாழ்ந்தாலும் மற்றவர்களைப்போல மன அமைதிக்கும் அலைபாயுதலுக்கும் உள்ள வித்தியாசத்தைக் கவனிப்பதில்லை.

**18.21** காற்றினால் தூக்கிச்செல்லப்படும் காய்ந்த இலைச் சருகைப்போல வாழ்வின் நிகழ்வுகளில் ஞானி செயல்படுவான்.

**18.33** சாதாரண மக்களைப்போல் இல்லாமல், ஞானி எண்ணங்களின் ஒருங்கிணைப்பு, மனக் குவிதல், எண்ணங்கள் இல்லாமல் இருத்தல் போன்றவற்றுக்காக எந்த முயற்சியையும் செய்யாமல் உறக்கத்தில் நடப்பதுபோலச் செயல்படுவான்.

### ஜனகர் கூறுகிறார்

**19.3** எனது பெருமையில் நிலைத்து இருக்கும் எனக்குக் கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய எதுவுமே கிடையாது. முடிவற்ற காலமும் வெளியும் கூடக் கிடையாது.

**20.8** எப்போதும் குற்றம் அற்று, நிலைத்து இருக்கும் என்னை யாராலும் பரிட்சித்துப் பார்க்க முடியாது. எந்தச் சோதனைகளும், நியமங்களும் என்னைக் கட்டுப்படுத்தாது.

**20.14** இருத்தல்-சூனியம், இருமை-இரண்டற்றத் தன்மை ஆகிய எதுவுமே இல்லாதபோது வேறு என்ன சொல்வது? எனக்கு வார்த்தைகள் எதுவும் இல்லை.

## சாராம்சம்

*இடைவெளியால் உருவான பானை, பொருள்களால் நிரப்பப்படுகிறது. அதுபோல, உணர்வினால் உருவான மனம், எண்ணங்களால் நிரப்பப்படுகிறது. பொருள்களைச் சேமிப்பதற்காகத் தான் பானை. எண்ணங்கள் உலா வுவதற்குத்தான் மனம்.*

*எவ்வளவுதான் முயன்றாலும் பானையில் இருக்கும் வெற்றிடத்தை அதிலிருந்து வெளியேற்ற முடியாது. பானையை உடைத்துவிட்டாலும் வெற்றிடம் தொடர்ந்து இருக்கும். அதுபோல, எவ்வளவுதான் முயன்றாலும் மனதில் இருந்து உணர்வை வெளியேற்றிவிட முடியாது. மரணத்துக்குப்பின்னும் உணர்வு தொடர்ந்து இருக்கும்.*

*அமைதியான ஆனந்தமான அந்த உணர்வுதான் நான் என்பதை உணர்ந்தவர்கள் ஞானிகள். இதை அறி யாதவர்கள், மன அமைதியைத் தேடிகொண்டு இருக்கி றார்கள்.*

*பானையில் சேமிப்பது, பாலா கள்ளா என்பதைப் பானை தீர்மானிப்பதில்லை. இது வேண்டும் அது வேண்டாம் என்ற விருப்பு-வெறுப்பும் பானைக்குக் கிடையாது. அதுபோல ஞானிகளுக்குத் தங்கள் மனதில் என்ன மாதிரியான எண்ணங்கள் இருக்கவேண்டும் என்ற எந்த எதிர்பார்ப்பும் கிடையாது. மனதில் ஏற்படும் அனைத்து எண்ணங்களும் வெறும் கற்பனையே என்பதை அறிந்த ஞானி அவற்றை வேறுபடுத்திப் பார்ப்பதில்லை.*

*அனைத்தும் நானே என்ற ஞானம், எப்போதும் இன்ப மாக வாழ வழி வகுக்கிறது.*

## பயிற்சிக்காக

1. ஞானத்தின் தன்மைகள், பலன்கள் ஆகியவற்றை ஆராய்க.

## சுயசிந்தனைக்காக

❖ *அஷ்டவக்ர கீதையைப் படிக்கவும்.*



# 190 ஞானியின் சக்தி

**அத்தியாயம் : 4 ● பாதம் : 4 ● சூத்திரம் : 548 - 549**

***''பரமனை அறிந்தவன் பரமனைத்தவிர வேறு ஒன்றும் இல்லை என்பதையும் அறிவான். எனவே அவன் எதன் மூலம் எதை அறிந்துகொள்ள வேண்டும்?''*** என்ற பிருஹதாரண்யக உபநிஷத மந்திரத்தின் (**2.4.14**) பொருளைத் தத்தாத்ரேயர் எழுதிய அவதூத கீதையின் வரிகள் மூலம் இந்தப் பாடம் தருகிறது.

ஞானம் பெற்றவுடன் ஞானிக்குத் தெய்வீகச் சக்திகள் ஏதும் கிடைக்காது என்றாலும், மற்றவர்களை ஒப்பிட்டால், உலகத்தில் ஏற்படும் மாற்றங்களை எதிர்கொள்வதில், அவனுக்கு மிகப்பெரிய சக்தி கிடைக்கும்.

***1.1*** கடவுளின் அருள் மூலம் 'நான் பரமன்' என்ற ஞானத்தைப் பெறும் ஞானிகள் எதற்கும் பயப்பட மாட்டார்கள்.

***1.6*** அனைவரது ஆத்மாவாக விளங்கும் அந்தக் கடவுள்தான் நான் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை. நான் புனிதமானவன்; கறை படியாத வானத்தைப்போல நான் இயற்கையாகவே குற்றமற்றவன்.

***1.7*** இன்ப துன்பங்கள் யாருக்கு எப்படி ஏற்படுகின்றன என்பது பிளக்க முடியாத, அழிக்கமுடியாத, அளவற்ற அறிவு உருவான எனக்குத் தெரியவில்லை.

***1.8*** மனம், மொழி, மெய்யால் நான் எதுவும் செய்வது கிடையாது. எனவே, அவை நல்ல செயல்களா தீய செயல்களா என்ற கேள்விக்கே இடம் இல்லை. புலன்களுக்குப் புலப்படாத புனிதமான அறிவின் அமிர்தம் நான்.

**1.11** ஓ, சக்தி வாய்ந்தவனே, எப்போதும் ஒளிமயமாக இருக்கும் உன்னைக் காலமும் இடமும் எப்படிக் கட்டுப்படுத்த முடியும்?

**1.15** பிரிவதும் சேர்வதும் யாருக்கும் கிடையாது. நீ, நான், இந்தப் பிரபஞ்சம் ஆகிய அனைத்தும் உண்மையில் ஒன்றான பரமன் மட்டுமே.

**1.51** தண்ணீரைத் தண்ணீருடன் கலந்தபின் எப்படி எந்த வித்தியாசமும் தெரியாதோ அதுபோல எனக்கும் இந்த உலகத் துக்கும் எந்த வித்தியாசமும் கிடையாது.

**2.5** பிறப்பு-இறப்பு ஆகிய இரண்டிற்கும் அப்பாற்பட்டு எதிலிருந்தும் வேறுபடாமல் எப்போதும் அமைதியாக இருக்கும் நான்தான் அனைத்து உலகங்களுக்கும் ஆதாரமானவன்.

**2.39** தன்னை அறிந்த ஞானி எதையும் வேறுபடுத்திப் பார்ப்ப தில்லை. அவனை எந்தவிதச் சட்டத்திட்டங்களும் பாதிப்பது இல்லை.

**3.9** கர்மப் பலன்கள் அனைத்தையும் அழிக்கும் நெருப்பு நான். வாழ்வின் துயரங்கள் அனைத்தையும் அழிக்கும் நெருப்பு நான். வினைகளுக்கும் துயரங்களுக்கும் அப்பாற்பட்ட எனக்கு உடல் கிடையாது. வானத்தைப்போன்ற வடிவமற்ற அறிவு உரு வானவன் நான்.

**3.10** பாவங்களை எரிக்கும் நெருப்பு நான். குணங்களை எரிக்கும் நெருப்பு நான். பாவங்களுக்கும் குணங்களுக்கும் அப்பாற் பட்ட எனக்குப் பந்தங்கள் எதும் கிடையாது. வானத்தைப் போன்று அனைத்தையும் உள்ளடக்கிய ஒருமித்த அறிவு உரு வானவன் நான்.

**3.14** உலகில் ஏற்படும் மாற்றங்களால் பாதிக்கப்படுவது நான் அல்ல. துயரங்கள் ஏற்படுத்தும் மனச்சோர்வால் பாதிக்கப்படுவது நான் அல்ல. புண்ணியத்தின் விளைவாக ஏற்படும் மன அமைதியும் என்னைச் சேர்ந்தது அல்ல. வானத்தைப் போன்று எதனுடனும் சம்பந்தப்படாமல் என்றும் இருக்கும் அறிவு உருவானவன் நான்.

**3.26** எதுவுமே செய்யாமல் அனைத்தையும் செய்யும் திறன் படைத்தவன் நான். பந்தத்துக்கும் துறவுக்கும் அப்பாற்பட்ட ஆனந்தமயமானவன் நான். பிறப்புக்கும் இறப்புக்கும் அப்பாற்

பட்டு நிரந்தரமாக இருக்கும் அளவற்றவன் நான். வானத்தைப் போன்று முழுமையாக இருக்கும் அறிவு உருவானவன் நான்.

**4.20** நான் அறியாதவனும் அல்ல. அறிந்தவனும் அல்ல. நான் மௌனமாக இருப்பதில்லை. பேசிக்கொண்டும் இருப்ப தில்லை. என்னால் எப்படி விவாதங்களில் பங்கேற்க முடியும். அனைத்துத் துக்கங்களில் இருந்தும் விடுபட்ட எனக்கு உருவம் கிடையாது.

**5.31** இந்தப் பிரபஞ்சம் ஒரு கானல் நீரைப்போன்ற மாயை என்று வேதங்கள் கூறுகின்றன. நான் உண்மையில் இருக்கிறேன் என்று நாம் அனைவரும் உணர்கிறோம். எனவே இருத்தலை இயல்பாகக்கொண்ட நானே இந்தப் பிரபஞ்சத்துக்கு ஆதாரம்.

**6.22** நீ, நான் என்ற பிரிவுகள் எப்போதுமே இருந்ததில்லை. இனம், மொழி, குடும்பம் போன்றவற்றின் அடிப்படையில் மக்க ளைப் பிரிப்பது தவறு. இருப்பதெல்லாம் நான் மட்டுமே. எனவே என்னால் உன்னை என்ன சொல்லி அழைக்க முடியும்.?

**7.2** வாழ்வில் எதையும் அடைய வேண்டும் என்ற இலட்சியமோ, அடையக் கூடாது என்ற பிடிவாதமோ இல்லாத வன் ஞானி. சரி-தவறு என்ற இருமைக்கு அப்பாற்பட்ட திறமை சாலி அவன். அவனால் எந்த உரையாடல்களிலோ அபிப்ராய பேதங்களிலோ பங்கேற்க முடியாது.

**8.1** பல வேறு திவ்யஸ்தலங்களுக்கு புனித யாத்திரை சென்று எங்கும் நிறைந்து இருக்கும் உன்னை அவமரியாதை செய்தேன். தியானம் செய்வதன் மூலம் அமைதியைத் தேடி மன தின் ஆதாரமாக எப்போதும் இருக்கும் உணர்வுமயமான உன்னை அவமரியாதை செய்தேன். வார்த்தைகளுக்கு அப்பாற் பட்ட உன்னைத் துதிப்பாடல்கள் பாடி அவமரியாதை செய்தேன். இந்த மூன்று பாவங்கள் செய்த என்னை நீ மன்னித்துவிடு.

**8.10.** இந்தப்பாடல் வரிகளைப் படித்துப் புரிந்து கொண்ட வர்கள் மீண்டும் பிறப்பதில்லை. தன்னை அறிந்தவர்களுக்கு மறுபிறவி கிடையாது.

**சாராம்சம்**

*ஞானி மிகுந்த சக்திமான். வாழ்வு என்ற புயல் காற்றினால் பாதிக்கப்படாத இமயமலை அவன்.*

உலகத்தைச் சரியான கண்ணோட்டத்தில் பார்க்க அவனுக்கு மட்டுமே தெரியும். எனவே மற்றவர்களைவிட அவனால் சிறப்பாக வாழ முடியும்.

கனவில் நமது வீடு குடிசையாக மாறிவிட்டால் அது குறித்து நாம் வருத்தப்படப் போவதில்லை. அது போலச் சூரியனின் கதிர்கள் குளிர்ந்து விட்டாலோ, சந்திரன் சுட ஆரம்பித்துவிட்டாலோ, நெருப்பு கீழ்நோக்கி எரிந்தாலோ, தண்ணீர் மேல்நோக்கிப் பாய்ந்தாலோ அனைத்தும் மாயை என்று அறிந்த ஞானி ஆச்சரியப்படமாட்டான்.

ஓடும் நீரில் பிரதிபலிக்கும் சூரியன் நகர்வதுபோலத் தெரியும். அதேபோல் மாறும் உலகில் மாறாத பரமன் பிறப்பு-இறப்பு என்ற சுழலில் சிக்கிகொண்டதுபோலத் தோற்றம் அளிக்கும். இதை அறிந்த ஞானி தான் செய்ய வேண்டியது எதுவும் இல்லை என்ற அறிவுடன் செயலாற்றிக் கொண்டு இருப்பான்.

ஐந்து புலன்கள் அனுபவிக்கும் மாயையான உலகம் தனது ஆனந்தமயமான உருவத்தின் பிரதிபலிப்பு என்பதை ஞானி அறிவான். பார்ப்பவை அனைத்தும் பரமன் என்ற அறிவு அவனிடம் இருப்பதால் அவனுக்கு யார் மீதும் வெறுப்பு ஏற்படாது. அனைத்து நிகழ்வுகளும் பரமனின் மாயாசக்தியின் விளைவு என்றும் அவன் அறிவதால் எது எப்படி ஆனாலும் அதனால் பாதிப்பு அடையாமல் இன்பமாக இருக்கும் சக்தி உடையவன் ஞானி.

### பயிற்சிக்காக

1. ஞானியின் சக்திக்குக் காரணம் என்ன?

### சுயசிந்தனைக்காக

❖ தத்தாத்ரேயர் எழுதிய அவதூத கீதையைப் படிக்கவும்.



191

# ஞானியின் நிறைவு

அத்தியாயம் : 4 ● பாதம் : 4 ● சூத்திரம் : 550 - 555

**''தன்னுடைய இராஜ்யத்துக்கு அவனே கடவுளாகி விடுகிறான்''** என்ற தைத்ரீய உபநிஷதத்தின் வாக்கியத்தை (**1.6**) மேற்கோள் காட்டி, ஞானம் பெற்றவுடன் ஞானி முழு நிறைவை அடைந்து விடுகிறான் என்ற கருத்தை, ஆதி சங்கரரின் உபதேசச் சாஹஸ்ரீ நூலில் இருந்து சில பகுதிகளைத் தருவதன் மூலம் இந்தப் பாடம் நிறைவு செய்கிறது.

**17.1** வேறு எதுவுமே இல்லாத காரணத்தால் அனைத்திற்கும் அப்பாற்பட்ட அந்தப் பரமனை அறியவேண்டும்.

**17.4** கர்மகாண்டம், வேதாந்தம் ஆகிய இரண்டையும் உள்ளிட்ட வேதம், வேதங்களைச் சார்ந்த அனைத்து நூல்கள் ஆகியவற்றின் ஒரே நோக்கம் நமக்குப் பரமனை அறிவிப்பதுதான். பரமனை அறிந்து கொள்வதைவிட மேலானதான சாதனை எதுவும் இல்லை.

**18.1** எதிலிருந்து அனைத்தும் உருவானதோ, எதில் அனைத்தும் அடங்குமோ, எது எனது புத்தியின் அனைத்து மாற்றங்களுக்கும் காரணமானதோ அந்த உணர்வு மயமான பரமனுக்கு நான் எனது தலையை வணங்குகிறேன்.

**18.2** தவறான கருத்தைப் போதிக்கும் பல்வேறு மதங்களைச் சேர்ந்தவர்களிடம் இருந்து வேதத்தின் உட்பொருளைச் சிதைவு றாமல் காப்பாற்றி, கூர்மையான கத்தி போன்ற வார்த்தைகளாலும் பிளக்க முடியாத மின்னல் போன்ற தர்க்கங்களாலும் அதை எனக்குப் புரியும் படி உபதேசம் செய்த மிகச்சிறந்த அறிவாளியான எனது குரு வுக்கும் அவரது குருப்பரம்பரைக்கும் நான் தலை வணங்குகிறேன்.

**18.3** 'இருத்தலை மட்டுமே இயல்பாகக் கொண்ட நான் எப்போதும் முக்தி அடைந்தவனாகத்தான் இருக்கிறேன்' என்ற அறிவில் நாம் நிலைபெற முடியாது என்பது உண்மையானால், தாயின் கருணையுடன் வேதம் ஏன் இந்த அறிவை நமக்குப் போதிக்க வேண்டும்?

**18.4** கயிறு என்ற சரியான அறிவை அடைந்ததும் பாம்பு என்ற தவறான அறிவு மறைந்துவிடுவதைப்போல, 'எப்போதும் இருக்கும் பரமனே நீ' என்று போதிக்கும் வேத மந்திரங்களைத் தர்க்கம் மூலம் சோதித்து அறிந்தவுடன் இந்தப் பிரபஞ்சம் மாயை யாக மறைந்துவிடும்.

**18.233** மலர்களில் இருந்து சிறந்த தேனைச் சேகரித்துத் தரும் தேனீயைப்போல வேதங்களில் இருந்து அவற்றின் சாரத்தை எடுத்து எனக்கு அளித்த எனது ஆசிரியருக்கு நான் தலை வணங்குகிறேன்.

### எனக்கும் மனதுக்கும் இடையே நடக்கும் உரையாடல்

**8.1** உலகச் சுகங்களை அனுபவிப்பவனுக்கும் எனக்கும் உள்ள தொடர்பு உனது கற்பனையில் உருவானது, ஓ மனமே! குணங்கள் எதுவும் இல்லாமல் உணர்வு மயமாக இருக்கும் பரமனாகிய எனக்கு உலகச் சுகங்களில் மூலம் எந்தப் பயனும் கிடையாது. எனவே, உனது முயற்சிகள் அனைத்தும் வீண்.

**8.2** வீணாக வேலை செய்துகொண்டு இருக்காமல், பிறப்பு-இறப்புக்கு அப்பாற்பட்டு, இரண்டற்று, பந்தங்கள் ஏதும் இல்லாமல் இருக்கும் என்னைச் சேர்ந்து அமைதியாக இரு.

**8.4-5** செயலுக்கும் விளைவுக்கும் காரண-காரிய உறவு இருப்பதாக நம்பும் மனமே, நீ எதையும் செய்வதில்லை, அனுப விப்பதும் இல்லை. நீ என்னில் இருந்து வேறு பட்டவன் அல்ல. இதை நீ அறிந்துகொண்டால் அனைத்துத் துன்பங்களில் இருந்தும் உனக்கு விடுதலை கிடைக்கும்.

**19.1** மனம்: ஆசைகளே எனது துன்பத்துக்குக் காரணம். ஆசையை அகற்ற விவேகமும் வைராக்கியமும் எனக்குத் தேவை.

**19.2** ஓ மனமே! 'நான்', 'எனது' முதலிய பயன் இல்லாத கற்பனைகளில் நீ உழன்று கொண்டு இருக்கிறாய். நீ செயல் படுவது உனக்காக இல்லை, எனக்காக. நீ எதையும் அறிய

மாட்டாய். எனக்கு எந்த ஆசைகளும் கிடையாது. எனவே, நீ சும்மா இருந்தாலே நலம்.

**19.3** நானே பரமன் என்பதால் நான் எப்போதும் நிறைவு உடையவனுமாக ஆசைகள் அற்றவனுமாக இருக்கிறேன். எப்போதும் நிறைவுடைய எனது நலத்துக்காக நான் எதையும் எதிர்பார்ப்பது கிடையாது. ஆனால் நீ நலமாக இருந்தால் நன்றாக இருக்கும். ஓ மனமே, அமைதியாக இரு.

**19.4** பசியும் தாகமும் பிராணனுக்கு. துக்கமும் அறியாமையும் மனமாகிய உனக்கு. மூப்பும் மரணமும் உடலுக்கு. இவை எதனாலும் பாதிக்கப்படாதவன் நான். எனவே எனக்கு நிறைவைத் தர நீ செய்யும் முயற்சிகள் அனைத்தும் வீணே!

**19.5** ஆழ்ந்த உறக்கத்தில் நீ எதையுமே அறியாமல் அமைதியாக இருக்கிறாய். விழித்தவுடன் அனைத்தையும் தவறாக அறிவதால் அலைபாய்கிறாய். ஐந்து புலன்களால் நீ அறிவது எதுவுமே உண்மை அல்ல என்பதை நீ அறிந்தால் உன்னால் எப்போதும் அமைதியாக இருக்க முடியும்.

**19.6** உனது முயற்சிகள் என்னை எந்த விதத்திலும் பாதிப்பது இல்லை. எந்தப் பந்தமும் மாற்றமும் இல்லாமல் எப்போதும் நிலைத்து இருக்கும் அறிவு உருவானவன் நான். நான் எப்போதுமே நிறைவானவன் என்பதால், நீ சரியான ஞானத்தைப் பெறுவதற்கு முன்பும் பெற்ற பின்பும் எனது நிலை மாறுபடுவதில்லை. எனவே, ஓ மனமே உனது முயற்சிகள் அனைத்தும் வீண்.

**19.7** நான் என்றும் மாற்றம் எதுவும் இல்லாமல் நிறைவாக இருப்பவன். உன்னால் உருவாக்கப்பட்ட உலகம்தான் எப்போதும் மாறிக்கொண்டு இருப்பது. நான் இரண்டற்ற ஒன்றானவன் என்று வேதங்கள் சொல்வதால் உன்னால் உருவாக்கப்பட்ட அனைத்தும் வெறும் கற்பனையே.

**19.8** தர்க்கத்தின் மூலம் ஆராய்ந்து பார்த்தால், உண்மை எப்போதும் அழிவதும் இல்லை, பொய் எப்போதும் தோன்றுவதும் இல்லை என்பது தெரியவரும். எனவே, ஓ மனமே, உனக்குத் தோற்றமும் மறைவும் இருப்பதால் நீ உண்மையில் இருப்பவன் அல்ல.

**19.9-10** என்னைத்தவிர வேறு எதுவும் இல்லை என்ற காரணத்தால் பார்ப்பவன், பார்வை, பார்க்கப்படும் பொருள் ஆகிய

மூன்றுமே உன்னால் என் மீது ஏற்றி வைக்கப்பட்ட பொய்கள். இது இப்படி இருக்க, நான் ஆழ்ந்த உறக்கம், கனவு, விழிப்பு ஆகிய மூன்று நிலைகளிலும் மாறாமல் நிறைவாக இருக்கிறேன். மேலும் அனைத்து மனிதர்களுக்கு உள்ளும் இருப்பது ஒன்றான நான் மட்டுமே. ஓ மனமே, நீதான் ஒன்றான என்னை வேறு படுத்திப் பார்க்கிறாய்.

**19.11** நீ நினைப்பதுபோல் அனைத்தும் வேறானால் அவை தோற்றம், மாற்றம், மறைவு என்ற விதிக்குக் கட்டுப்பட்டவை. இந்த உலகமும் ஒரு நாள் அழிந்து போகும்.

**19.12** யாரும் எனக்குச் சொந்தம் இல்லை. நான் யாருக்கும் சொந்தமானவன் இல்லை. ஏனெனில் நான் இரண்டற்றவன். எப்போதும் இருக்கும் என் மீது பொய்யான இந்த உலகத்தை நீ ஏற்றிவைத்துள்ளாய்.

**19.28** பாற்கடலைக் கடைந்து அமிர்தம் எடுத்த செயலுக்கு ஈடான செயலாக வேதங்களை ஆராய்ந்து இந்த உண்மையை எடுத்துக் கூறிய அனைத்து ஆசிரியர்களையும் நான் வணங்கு கிறேன்.

## சாராம்சம்

*ஆசை என்பது அனைத்து மக்களுக்கும் இயற்கை யாகவே இருக்கிறது. ஆசைப்பட்ட பொருளை அடைந்த பின்னும் ஆசைகள் குறைவதில்லை. அவை வாழ்வின் கடைசி நாள் வரை தொடர்ந்து அதிகரிக்கவும் செய்கிறது. எனவேதான் யாரும் தங்கள் வாழ்வில் நிறைவைக் காண்பதில்லை.*

*வேதம், மக்களின் இந்தக் குறையைத் தீர்த்து அவர்கள் நிறைவு அடையும் வழியைக் காண்பிக்கிறது.*

*முதல் படி: பட்டம், பதவி, பணம், உறவு முதலிய வெளி உலகில் உள்ள பொருள்கள் மேல் ஆசைப்பட்டு அவற்றைப் பெற முயற்சி செய்பவர்கள் பற்றுடையோர்கள். எதற்காகப் பொருள்கள் மேல் ஆசைப்படுகிறோம் என்று ஆராயாமல் இருக்கும் வரை இவர்கள் அடுத்தபடிக்கு முன்னேறுவதில்லை.*

அனைத்து மக்களுக்கும் இயற்கையாக இருக்கும் ஆசை, அவர்களை மேலும் மேலும் செயல்களில் தூண்டி ஆசையை நிறைவு செய்யத் தூண்டுகிறது. செயல் செய்வதன் மூலம் அறிவும் வளர்வதால், கூடிய விரைவில் அவர்கள் தங்கள் முயற்சி எப்போதும் நிறைவைத் தராது என்ற மனப்பக்குவத்தைப் பெறுவார்கள்.

இரண்டாம் படி: சுகம் கிடைக்கும்வரைதான் நமக்குப் பொருள்கள் மேல் ஆசை இருக்கிறது என்பதை உணர்ந்து, பொருள்கள் மூலம் அல்லாது கடவுளை நாடுவதன் மூலம் சுகம் பெற வேண்டும் என்று ஆசைப்படுபவர்கள் முக்தி விழைவோர்கள்.

புராணக்கதைகளைப் படிப்பது, கோவில்களில் உபன்யாசம் கேட்பது போன்ற முயற்சிகளை அவர்கள் செய்யும் போது சுகம் இருக்கும் ஒரே இடம் தான் மட்டுமே என்பதை அவர்கள் அறியும் வாய்ப்பு ஏற்படும்.

மூன்றாம் படி: பொருள்களில் சுகம் இல்லை என்றும் சுகம் தரும் ஒரே பொருள் ஆத்மா என்பதையும் அறியும் முக்திவிழைவோர்கள் ஆத்மாவை அறிய முயற்சி செய்வார்கள்.

ஆத்மா உள்ளே இருப்பது. அதை அடைய வெளியே முயற்சி செய்யக் கூடாது என்ற தவறான போதனைகளைக் கேட்டுச் சிலர், தியானம் செய்வதன் மூலம் ஆத்மாவைப் பற்றிய அறிவைப் பெற முயற்சி செய்வார்கள்.

வெளியே இருக்கும் கண்ணாடியைச் சரியாகப் பார்த்தால் அதன் உள்ளே இருக்கும் தன் முகத்தைப் பார்க்க முடியும். அதுபோல வெளியே இருக்கும் வேதங்களைச் சரியாகப் படித்தால் தன்னை அறிய முடியும்.

முகத்தைப் பார்க்கக் கண்ணாடியைப் பார்ப்பதைத் தவிர வேறு வழியே இல்லை. அது போலத் தன்னை அறிய வேதம் படிப்பதைத் தவிர வேறு வழியே இல்லை. தியானம் செய்வதால் ஆத்மாவைப்பற்றிய அறிவு ஏற்படாது என்பதை இவர்கள் அனுபவத்தில் உணர்ந்த பின் வேதம் படிக்க ஆரம்பிப்பார்கள்.

கண்ணாடி எவ்வளவு விலை என்று அதில் எழுதி இருப்பதைக் கவனித்தால் அதில் முகத்தைப் பார்க்க முடியாது. அதுபோல வேதம் கூறும் பல்வேறு கருத்துக் களில் கவனம் சென்றுவிட்டால் ஆத்மாவை அறிய முடியாது.

நான்காம் படி: ஆத்மா அறிய ஆசிரியர் அவசியம் என்பதை அறிந்த பின் அவரிடம் முறையாக வேதம் படிப்பவர்கள் முற்றுணர்ந்த ஞானிகளாக மாறுவார்கள்.

உலகைப் பற்றி நாம் கற்ற எந்த அறிவும் நமக்குப் பலன் அளிக்க வேண்டும் என்றால் அந்த அறிவைப் பயன்படுத்தி நாம் செயல் புரியவேண்டும். ஆனால், 'நான் பரமன்' என்ற ஞானம் பெற்றவுடனேயே அதன் பலன் நமக்கு கிடைக்க ஆரம்பித்துவிடும்.

ஐந்தாம் படி: ஆத்மாவைப் பற்றிய அறிவு ஏற்படும் இடம் மனம். எந்தவித மாற்றமும் இல்லாமல் எப்போதும் இருக்கும் ஆத்மாவே பரமன் என்ற அறிவு மனதில் நிலைபெற்ற ஞானிகளின் மனதில் ஆசைகள் அனைத்தும் அகன்று நிறைவு பெற்றவர்களாக வாழ்கிறார்கள்.

நிறைவு பெற்ற ஞானிகள், 'நான் ஆனந்தமய மானவன்' என்பதையும் 'நான் மட்டுமே இன்பத்தின் ஒரே ஊற்று' என்பதையும் அறிந்து இன்பமடைவார்கள். உலகம் முழுவதும் இன்பத்தின் பிரதிபலிப்பே என்பதை அறிவதால், கிடைக்கும் பொருள்களை அனுபவித்து ஆனந்தமாக இருப்பார்கள். மேலும், மற்றவர்களைப்போல இன்பத்தைத் தேடி அலையும் அவசியம் தங்களுக்கு இல்லை என்பதை நினைத்து ஞானிகள் மகிழ்வடைவார்கள்.

மாற்றமடையும் உலகில் மாறாமல் இருப்பது நான் மட்டுமே என்ற அறிவான அமிர்தத்தை அருந்திய ஞானிகள் மரணத்தை வென்று நிறைவுடன் வாழ்வார்கள்.

இடம், பொருள், காலம் இவற்றால் கட்டுப்படாத நான் ஆனந்தமானவன் என்பதை அறிந்த ஞானிகள் நிறைவுடன் வாழ்வார்கள்.

அளவற்ற செல்வம் படைத்தவன் செலவு செய்வது பற்றி கவலைப்படுவதில்லை. அதுபோல, அகில உலகமும் தன்னை ஆதாரமாகக்கொண்டுதான் இயங்குகிறது என்பதை அறிந்த ஞானிகள் எவ்விதக் கவலையும் இல்லாமல் நிறைவுடன் வாழ்வார்கள்.

எந்தச் செயலையும் செய்யவேண்டிய கட்டாயமோ எந்தப் பொருளையும் அடையவேண்டிய தேவையோ இல்லாமல் ஞானிகள் எப்போதும் நிறைவுடன் வாழ் வார்கள்.

### பயிற்சிக்காக

1. ஞானியின் நிறைவை விளக்குக.

### சுயசிந்தனைக்காக

❖ *சுவாமி ஜகதானந்தாவால் மொழிபெயர்க்கப்பட்டு இராமகிருஷ்ண மடத்தின் வெளியான உபதேச சாஹஸ்ரீ என்ற புத்தகத்தைப் படிக்கவும்.*

**(பிரம்ம சூத்திரம் நான்கு அத்தியாயங்கள் கொண்டது. ஒவ்வொரு அத்தியாயமும் நான்கு பாதங்கள் கொண்டது. ஞானியின் நிறைவை விவரித்த நான்காவது அத்தியாயத்தின் இந்த நான்காவது பாதத்துடன் பிரம்ம சூத்திரம் முற்றுப் பெறுகிறது.)**



***| பிரம்ம சூத்திரம் ஐந்தாம் தொகுதி முற்றிற்று |***

## ***| பிரம்ம சூத்திரம் முற்றும் |***



பிரம்ம சூத்திரத்துக்கு வெவ்வேறு மொழிகளில், பல்வேறு விளக்க உரைகள் எழுதப்பட்டுள்ளன. இவற்றில் பெரும்பாலானவை கடினமான மொழிநடையில் அமைந்துள்ளன. இந்நிலையில் பிரம்ம சூத்திரம் பாமரனுக்கும் புரிய வேண்டும் என்பதற்காக ஆசிரியர் மேற்கொண்டுள்ள இந்த முயற்சி பாராட்டத்தக்கது.

ஹிந்து தர்மத்தின் அடிப்படை உபதேசங்கள் பற்றி தெரிந்துகொள்ள வேண்டும் என்று நினைப்பவர்களுக்கு - குறிப்பாக, பிரம்ம சூத்திரத்தில் சொல்லப்பட்டுள்ள விஷயங்களை ஓரளவாவது புரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் உள்ளவர்களுக்கு - இந்த நூலை நான் பரிந்துரைக்கிறேன்.

*- ஸ்வாமீ பரமார்த்தாநந்தர்*



அகர உகர மகர எழுத்துக்களின் சேர்க்கையான ஓங்காரம் பரமனைக் குறிக்கும் உயர்ந்த சொல்லாகும். ஓங்காரமானது விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் ஆகிய மூன்று நிலைகளுக்கும் ஆதாரமான மெய்ப்பொருளைக் குறிக்கிறது; வேதங்களின் சாரமாக விளங்குகிறது.

வேதங்கள் விளக்கிக்கூறும் தத்துவங்களை உள்ளவாறு உணர்த்துவதற்காக, பெருங்கருணையோடு பகவான் ஸ்ரீவேத வியாஸர் பிரம்ம சூத்திரங்களை அருளியிருக்கிறார்.

பிரம்ம சூத்திரங்களின் துணைகொண்டு வேத மந்திரங்களின் பொருளை ஒருவர் தெளிவாக அறிந்துகொள்ள முடியும். இந்த சூத்திரங்களின் கருத்துக்களை சுலபமாக விளங்கிக் கொள்ளும் வகையில் எளிய தமிழில் இந்த நூலை படைத்துள்ளார் ஆசிரியர் ஸ்ரீ ராஜா சுப்ரமணியன் அவர்கள். பல ஆண்டுகள் குருவிடம் முறையாக வேதாந்தம் பயின்றவர்.

*- ஸ்வாமீ ஓங்காராநந்தர்*

## பிரம்ம சூத்திரம்

| | |
|---|---|
| முதல் தொகுதி | : பரம ரகசியம் |
| இரண்டாம் தொகுதி | : சத்ய சோதனை |
| மூன்றாம் தொகுதி | : கர்மயோகம் |
| நான்காம் தொகுதி | : ஞானயோகம் |
| ஐந்தாம் தொகுதி | : பரமானந்தம் |